உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அகஸ்தியகுருப்யோநம:

# சைவவேதாந்தம்



ஸ்ரீகாசிவாசி

## செந்திநாதையர்

இயற்றி

---

காரைக்குடி வித்தியாசாலைக்குப் பெரும்பொருளுதவிய

**மகா-௱-௱-ஸ்ரீ மு. த். த. வே. வெள்ளையஞ்செட்டியார்**

அவர்களால்,

---

மதுரை வடக்குமாசிவீதி.

ஸ்ரீராமசந்திரவிலாசம் அச்சியந்திரசாலையில்

அச்சிடப்பட்டது.

1920

# உபோற்காதம்

சைவவேதாந்தமானது சிவபெருமானைப் பிரதிபாதிக்கும் வேதாந்தம் எனவும், சைவசமயிகளுக்குரிய வேதாந்தம் எனவும் பொருட்படும். முழுமுதற்கடவுளாகிய சிவசமயக்கடவுளின் "மேற்றெய்வம் பிறிதில்லை" என அறிந்தாற்றான் அக்கடவுளை வழிபடற்கு நம்மனோர்க்கு ஊக்கமும் அன்பும் உண்டாமாதலின், தாண்டவேசுவர சிவபரத்துவநிரூபணப் பிரகரணத்தை முதலாவதாகவும், அக்கடவுளை வழிபடுதற்கு அங்கங்களாக அமைந்த விபூதி உருத்திராக்ஷங்களை உணர்த்தும் பிரகரணங்களை இரண்டாவதாகவும் மூன்றாவதாகவும், விபூதி உருத்திராக்ஷம் தரித்து ஸ்ரீபஞ்சாக்ஷரோச்சாரணஞ் செய்து சிவலிங்கப் பெருமானை வழிபாடு செய்வது முறையாதலால் ஸ்ரீபஞ்சாக்ஷர சிவலிங்கார்ச்சனைப்பிரகரணங்களை நான்காவதாகவும் ஐந்தாவதாகவும், பிரபஞ்சோற்பத்தியையும் அவ்வுற்பத்திக்குக்காரணமாகிய பதிமுதலிய திரிபதார்த்தவுண்மையையும் உணர்தல் அத்தியாவசியகமாதலின் பிரபஞ்சோற்பத்திப்பிரகரணத்தையும் திரிபதார்த்தப்பிரகரணத்தையும் ஆறாவதாகவும் ஏழாவதாகவும், அத்திரிபதார்த்தங்களுள் தாண்டவேசுவரபதியையும், அவரினின்று வேறுபடாத பராசத்தியையும் உணர்த்தும் பிரகரணங்களை எட்டாவதாகவும் ஒன்பதாவதாகவும், சிவபிரானை உபாசிக்கும் அதிகாரமுடைய பசுவாகிய ஆன்மாவின் இலக்ஷணத்தை உணர்த்தும் ஆன்மப்பிரகரணத்தைப் பத்தாவதாகவும், அவ்வான்மா சிவபிரானை உபாசிக்கு முறையையும் சிவோஹம்பாவனை செய்வதையும் உணர்த்தும் சிவோபாசனைப்பிரகரணத்தையும் சோகம்பாவனைப்பிரகரணத்தையும் பதினோராவதாகவும் பனிரண்டாவதாகவும், சிவபிரானை அண்டத்தினும் பிண்டத்தினும் வழிபடுதலை உணர்த்தும் அண்டபிண்டோபாசனைப்பிரகரணத்தைப் பதின்மூன்றாவதாகவும், உபாசனையின் பயனாகச்சிவலோகம் எய்தும் என்பது உணர்த்தப் பரப்பிரஹ்மசிவலோகப்பிரகரணத்தைப் பதினான்காவதாகவும், வேதநெறியும் சைவநெறியும் ஒரே முடிவாயிருத்தலின் சைவவேதாந்த சித்தாந்த சமரசப்பிரகரணத்தைப் பதினைந்தாவதாகவும், வேதாந்தத்தெளிவாஞ் சைவசித்தாந்த பேரின்பசிவபோகநிலையை உணர்த்தும் சைவவேதாந்தசார சைவசித்தாந்தப்பிரகரணத்தைப் பதினாறாவதாகவும் அமைத்து ஆனந்ததாண்டவேசுவரசிவபெருமான் திருவருளை முன்னிட்டு இப்புஸ்தகத்தை என் சிற்றறிவுக்கெட்டியவாறு இயற்றினேன்.

திருப்பரங்குன்றம்.
25. 8. 1920

இங்ஙனம்,
ஸ்ரீகாசிவாசி-செந்திநாதையர்.

உ

# விஷயாநுக்கிரமணிகை

| எண் | விஷயம் | பக்கம் |
|---|---|---|
| | **பதினைந்தாவது** | |
| // | **சைவவேதாந்த சித்தாந்தசமரசப்பிரகரணம்.** | 344 |
| | **பதினாறாவது** | |
| | **சைவவேதாந்தசாரசைவசிந்தாந்தப்பிரகரணம்** | 347 |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவவேதாந்தம்

## முதலாவது

## தாண்டவேசுவரசிவபரத்துவநிரூபணப்பிரகரணம்

[இப்பிரகரணம் சிருஷ்டியாதி பஞ்சகிருத்திய அதிகாரமுடைய மும்பத்தாறுந் தத்துவத்திலுள்ள தாண்டவேசுவரராகிய சிவபிரானே அனைத்துக்கும் மேலானவர் என நிரூபிக்கின்றது.]

### (க) உபநிடதப்பாகுபாடு.

(1) புண்ணிய பூமியாகிய பரதகண்டத்தின்கண்ணே வழங்கிவரும் சமயங்கள் யாவும் அவைதிகம் வைதிகம் என இருவகைப்படும். ஈண்டு அவைதிகசமயங்கள் எனக் கொள்ளப்பட்டன பௌத்தசமயம், ஜைனசமயம், கிறிஸ்துசமயம், மகமதுசமயமுதலியனவே. வைதிகசமயங்கள் எனக் கொள்ளப்பட்டன சைவம், ஏகான்மவாதம், வைஷ்ணவம், மத்துவம் என்பனவே. இந்நான்கு சமயங்கட்கும் ஆதாரமாயுள்ளன வேதோபநிடதமுதலியனவே. சிவபெருமானையுற்றும், ஏகான்மாவையுற்றும், நாராயணரையுற்றும் விரித்தும் சுருக்கியும் கூறும் புராணங்களும் புராணபாகங்களும் பலசில உளவாமாறுபோல, சிவபெருமானையுற்றும், ஏகான்மாவையுற்றும், நாராயணரையுற்றும் விரித்தும் சுருக்கியும் கூறும் உபநிடதங்கள் பலசில உளவாகின்றன.

### (உ) முத்திற உபநிடதங்கள்.

(2) சிவபெருமானையுற்றுக் கூறும் உபநிடதங்கள் ஈசாவாசியம், கேநம், கடம், பிரசினம், முண்டகம், மாண்டூக்கியம், தைத்திரீயம், ஐதரேயம், சாந்தோக்கியம், பிருகதாரண்ணியம்

சுவேதாசுவதரம், பிருகஜ்ஜாபாலம், ஜாபாலம், சரபம், காலாக்கினிருத்திரம், கைவல்லியம், நிருசிம்மோத்திரதாபினி, மைத்திராயணம், கௌஷீதகிப்பிராஹ்மணம், அதர்வசிரசு, அதர்வசிகை, சிவசங்கற்பமுதலியவைகளேயாம். ஏகான்மாவையுற்றுக் கூறும் உபநிடதங்கள் சர்வசாரம், நிராலம்பம், தேஜோவிந்துமுதலியவைகளேயாம். நாராயணரையுற்றுக் கூறும் உபநிடதங்கள் நாராயணம், திரிபாதவிபூதிநாராயணம், சுபாலமுதலியவைகளேயாம். மத்துவரும் வைஷ்ணவரைப்போல நாராயணர்க்கே பரத்துவஞ் சாதிப்பர்.

## (௩) முக்கியோபநிடதங்கள்.

---

(3) வியாசரருளிய பிரஹ்மசூத்திரம் எனப்படும் உத்தரமீமாஞ்சைக்குப் பாஷ்யஞ் செய்யுங்கால் ஏகான்மவாதகுரவர் சர்வசாரமுதலிய உபநிடதங்களையும், வைஷ்ணவகுரவர் நாராயணமுதலிய உபநிடதங்களையும் பிரமாணமாகக்கொண்டு உதகரிக்காது, சைவர்க்குரிய ஈசகேநமுதற் சுவேதாசுவதரம் இறுதியாகிய உபநிடதங்களையே முழுமையும் பிரமாணமாகக்கொண்டு உதகரித்திருக்கின்றார்கள். ஆகலின், அவர்கள்கருத்துப்பிரகாரம் இந்த ஈசகேநமுதலிய உபநிடதங்களே முக்கிய உபநிடதங்கள் எனப் பெறப்பட்டது.

## (௪) கற்பிதோபநிடதம்.

---

(4) இராமர் என்பார் இராவணசங்காரஞ் செய்யுமாறு அவதரித்த தசரதகுமாரரேயாம். இராமருக்கு மூலகாரணராயுள்ளவர் நாராயணர்.

(5) அசங்க்யாதாச்ச காலாக்யா அசங்க்யாதா: பிதாமஹா: ।
ஹரயச்சாப்யஸங்க்யாதா ஏக ஏவ மகேச்வர: ।।

(6) "எண்ணிறந்த காலர்களும், எண்ணிறந்த பிரமாக்களும், எண்ணிறந்த நாராயணர்களும் (ஒழிந்துவிடச்) சிவபெருமான் ஒருவரே (எஞ்சி) உளராயினர்" என்று இலிங்கபுராணம் கூற,

நூறுகோடிபிரமர்களொழிந்தொ
ராறுகோடிநாராயணரங்ஙனே
யேறுகங்கைமணலெண்ணிலிந்திர
ரீறிலாதவனீசனொருவனே.

தேவாரமும் அங்ஙனமே கூறிற்று. விசுவேசுவரப்பெருமான் சிவ தத்துவத்தினின்று சகளீகரித்த அஷ்டத்திரிம்சத்கலாசத்திரூப கன்மசாதாக்கியசகளநிஷ்களசதாசிவநாயனாராம் என்க. இவரி னின்று சகளமூர்த்தியார் உதிப்ப, இவரினின்று சந்திரசேகரர் முதலிய இருபத்தைந்து கேவலமூர்த்தங்கள் தோற்றிய; பசு வர்க்கத்துட் பிரளயாகலரிற் பக்குவமுடையவர் ஸ்ரீகண்டருத் திரமூர்த்தி. இந்த ஸ்ரீகண்டருத்திரமூர்த்தியினாலே பிரமவிஷ் ணுக்களாயினோர் தத்தஞ் சிருஷ்டியாதி கிருத்தியங்களிலே பிர வர்த்தியுற்றுநிற்பர். விஷ்ணுவினுடைய அம்சராய், தண்டகா ரண்ணியத்திலே அகஸ்தியமகாமுனிவரால் உபதேசிக்கப்பட்டுச் சிவபெருமானிடத்து வேண்டியவரம் பெற்றோராய், சிவபெரு மானைத் தலைவராகக்கொண்டு அசுவமேதயாகஞ் செய்தோராய், பதினாயிரம் வருஷமாத்திரம் பூமியிலிருந்தோராயுள்ள தசரத குமாரராகிய இராமரை உத்தேசித்து

(7) ஸ்ரீராமஸ்ய மநும் காச்யாம் ஜஜாப விருஷபத்வஜ:।
மந்வந்தரஸஹஸ்ரைஸ்து ஜபஹோமார்ச்சநாதிபி:।
தத: ப்ரசந்நோ பகவாந் ஸ்ரீராம: ப்ராஹ சங்கரம்।
வ்ருணீச்வ யதபீஷ்டம் தத் தாஸ்யாமி பரமேச்வர॥

(8) "விசுவேசுவரர் காசியிலே ஸ்ரீராமமந்திரத்தை * ஆயி ரம் மநுவந்தரம் ஹோம அர்ச்சனைகளோடு செபித்தார்; அப் போது ஸ்ரீராமர் சந்தோஷமுடையராய் விசுவேசுவரர்க்குக் கூறியதாவது:— உனக்கு இஷ்டமாகிய வரத்தைக் கேள் கொடுப்பேன் என்றார்; (அதற்கு விசுவேசுவரர் எந்தச் செந்து வேனும் எனது காசிக்ஷேத்திரத்திலேனும், மணிகர்ணிகையிலே னும், கங்காதீரத்திலேனும் இறக்குங்கால், அந்தச் செந்துவுக்கு முத்தி கொடுத்தல்வேண்டும் என்று ஸ்ரீராமரைப் பிரார்த்திக்க,

* ஆயிரம் மநுவந்தரம் தேவமானத்தால் எண்பத்தைந்துகோடி வருஷங் களும் மீதி வருஷங்களுமாம்; மநுஷ்யமானத்தால் முப்பதினாயிரகோடி வருஷங்களும் மீதி வருஷங்களுமாம்.

அதற்கு ஸ்ரீராமர் உனது க்ஷேத்திரத்திலேனும், மற்றெவ்விடத்திலேனும் இறக்கும் கிருமிகீடமுதலியவனைத்தும் உடனே முத்தி அடைந்தனவாகும்)" என்று கூறியதாக இராமோத்தரதாபினியுபநிடதத்திற் கூறப்பட்டுள்ளது. சகளநிஷ்களவடிவினராகிய விசுவேசுவரர் எங்ஙனம் தாழ்ந்த மானிடவர்க்கத்தினராகிய இராமரைப் பூசிப்பார்? இராமர் விசுவேசுவரரேயாமாயின், ஒரு விசுவேசுவரர் மற்றொரு விசுவேசுவரரைப் பூசிப்பாரா? பதினொயிரம் வருஷம் பூமியிலிருந்த இராமரை ஆயிரம் மநுவந்தரம் எங்ஙனம் விசுவேசுவரர் பூசித்தாரோ? இது யுக்திக்குத்தானும் பொருத்தமில்லையே! ஆகலின், இந்த இராமோத்தரதாபினி போன்ற உபநிடதங்கள் சில கற்பிதமேயாம்.

(9) காஞ்சிபுரத்திருந்த உபநிடதப்பிரஹ்மம் எனப்படும் சந்நியாசியாரால் உபநிடதங்களுக்கு நேர்ந்த கெடுதிகள் அளப்பில என்ப. உபநிடத இதிகாசபுராணாதிகளிற் சுலோகங்கள் தொலைக்கப்படாமலும், திரிக்கப்படாமலும், புதுக்கதைகளும் புதுவிஷயங்களும் புகுத்தப்படாமலும் தூய்தாயிருப்பக்காண்டல் அரிதாமன்றே!

## (ரு) பிரஹ்மசூத்திர அதிகரணங்கள் நீக்கப்பட்டமை.

---

(10) ஆனந்தமயாதிகரணத்துக்கு நான்கு சூத்திரங்களே உளவாகவும், இதராநுப்பத்தியதிகரணத்துக்குள்ள நான்கு சூத்திரங்களையுஞ் சேர்த்து ஆனந்தமயாதிகரணத்துக்கு எட்டுச் சூத்திரங்கள் இருப்பனவாக ஏகான்மவாதகுரவர் நீட்டினர் இன்னும் இங்ஙனம் அதிகரணங்கள் நீட்டப்பட்டும் திரிக்கப்பட்டும் போயின.

## (சு) ஏகான்மவாதகுரவர் பிரஹ்மசூத்திரங்களையுற்றுக் கூறுவதைப் பூருவபக்ஷஞ்செய்தல்.

(11) "ஜந்மாத்யஸ்ய யத:" இத்யாரப்ய "ச்ருதத்வாச்ச" இத்யேவமந்தைஸ் சூத்ரைர் யாந்யுதாஹ்ருதாநி வேதாந்தவாக்யாநி தேஷாம் சர்வஜ்ஞஸ் சர்வசக்திரீச்வரோ ஜகதோ ஜந்மஸ்திதி லய காரணமித்யேதஸ்யார்த்தஸ்ய ப்ரதிபாதகத்வம் ந்யாய பூர்வகம் ப்ரதிபாதிதம் I கதிசாமாந்யோபந்யாசேந ச ஸர்வே வேதாந்தாச் சேதநகாரணவாதிந இதி வ்யாக்யாதம் II

(12) "எங்கிருந்து இதன் சிருஷ்டிமுதலியன" என்று (உத்தரமீமாஞ்சை க-ம் அத்தியாயத்து க-ம் பாதத்து க-ம் சூத்திரத்திற்) றொடங்கிச் "சுருதியிற் கூறப்படலானும்" என்னும் (க-ம் அத்தியாயத்து க-ம் பாதத்து கக-ம் சூத்திரம்) இறுதியாயுள்ள § பதினொரு சூத்திரங்களில், எந்த வாக்கியங்கள் உதாகரிக்கப்பட்டிருக்கின்றனவோ, அவைகள் உலகத்துச் சிருஷ்டி திதி சங்காரங்களுக்குச் சர்வஞ்ஞரும் சர்வசக்திமானுமாகிய ஈசுவரரே காரணர் என்று நியாயபூருவமாகப் பிரதிபாதிக்கப்பட்டன என்றும், ஒரே படித்தாக நோக்குங்கால் வேதாந்தவாக்கியமனைத்தும் ஒரு சேதனப்பொருளையே காரணமாகவுடைத்தாயிருக்கின்றன என்று முன்னரே நிரூபணஞ் செய்யப்பட்டது என்றும், கக-ம் சூத்திரத்துக்குப் பின்னுள்ள சூத்திரங்களிற் கூறப்பட்டன யாவை எனின், பிரஹ்மத்துக்கு நிர்க்குணம் சகுணம் என இரண்டு ரூபங்கள் இருக்கின்றன என்றும், வெவ்வேறு உபாசனைகள் வெவ்வேறு பலத்தைக் கொடுக்கின்றன என்றும், சில உபாசனைகள் முத்தியைக் கொடுக்கின்றன என்றும், சில உபாசனைகள் கிரமமுத்தியைக் கொடுக்கின்றன என்றும், சில உபாசனைகள் கர்மத்திற் சித்தியடையுமாறு செய்கின்றன என்றும், குணவிசேஷமாயுள்ளன உபாதிபேதங்களினால் எய்திய என்றும் ஏகான்மவாதகுரவர் கூறுவது யுக்தமன்றெனக் காட்டுதும்:—

(க) வியாசரது ஐஞ்ஞூற்று நாற்பத்தைந்து சூத்திரங்களும் சகுணபரத்தனவாம். இந்தச் சூத்திரங்களுக்கு ஆதாரமாய்நின்ற ஈசகேநாதி முக்கியோபநிடதங்களும் சகுணபரத்தனவேயன்றி நிர்க்குணபரத்தன அன்று. நிர்க்குணப் பிரஹ்மம் என ஓர் பிரஹ்மம் இவ்வுபநிடதங்களிற் பேசப்படவில்லை. முதற்சூத்திரத்திலே வியாசர் எடுத்துக்கொண்ட பிரஹ்மம் நிர்க்குணப்பிரஹ்மமேயாமாயின், அதற்கு இலக்ஷணம் கூறப்போந்த இரண்டாஞ் சூத்திரத்தினால் அந்த முதற்சூத்திரப்பிரஹ்மம் சிருஷ்டி திதி சங்காரங்களுக்குக் காரணமாகிய

§ ப்ரதிஜ்ஞாவிரோதாத் | "பிரதிஜ்ஞைக்கு விரோதமுறலான்" என்னும் க-ம் அத்தியாயத்து க-ம் பாதத்து கூ-ம் சூத்திரம் ஏகான்மவாதகுரவரால் நீக்கப்பட்டமையின், க. க. கஉ-ம் சூத்திரமானது க. க. கக-ஆகக் கொள்ளப்பட்டது. வியாசசூத்திரங்கள் ருசரு. இவற்றிற் சில அக்குரவரால் நீக்கப்பட்டும், சில பிரிக்கப்பட்டும்போய்ச் சூத்திரங்கள் ருருரு-ஆகப் பெருக்கப்பட்டும் போயின.

பிரஹ்மமாயன்றே முடிந்தது. சிருஷ்டியாதிகளுக்குக் காரணமாகிய பிரஹ்மம் ஏகான்மவாதிகள் கருத்துப்பிரகாரம் (மாயோபாதிக கற்பித) சகுணப்பிரஹ்மமேயாம். மாயோபாதிகளுகாது 36-ம் தத்துவமாகிய சிவதத்துவத்தின்பாற்பட்ட சகுணப்பிரஹ்மத்தை உபாசகர்கள் உபாசிப்பதினால் எய்தும் பயன் பலாத்தியாயத்தில் (அதாவது, உபாசகர்கள் பிரஹ்மத்தை உபாசித்தலால் எய்தும் பயன் கூறும் ௪-ம் அத்தியாயத்து ௪-ம் பாதத்து இறுதி உ௨-ம் சூத்திரத்தில்) அறிவுறுத்தப்பட்டது. உபாசகர்கள் பிரஹ்மலோகமாகிய சிவலோகத்துக்குப்போய் * மீண்டு சென்னத்தின்கண் வாராதநெறியைத் தலைப்படுவர் என்று சாந்தோக்கியோபநிடதத்து இறுதி மந்திரம் கூறுகின்றது. அம்மந்திரத்தை ஆதாரமாய்க்கொண்ட வேதாந்தசூத்திரத்து இறுதியிலும் அங்ஙனமே கூறப்படுகின்றது. சூரவர் கருத்தின்படி போக்குமீட்சியில்லாத முத்தியை ஏகான்மவாதிகள் அடைவாரென்னில், வியாசபகவான் சூரவர் கருத்துப்பிரகாரம் (வேதாந்த சூத்திரத்து ௪-ம் அத்தியாயத்து ௨-ம் பாதத்து க௨-ம், க௩-ம் சூத்திரங்களின்கீழ்) ஆர்த்தபாகர் விஷயத்தில் உதகரிக்கப்பட்ட

(b) ‡ அத்ரைவசமவநீயந்தே I

(c) "இங்கேதான் பிராணன்கள் கூடுகின்றன" என்னும் சுருதியை ஆதாரமாய்க்கொண்டு நிர்க்குணோபாசகர்களுக்குச் சாதகமாகச் சூத்திரஞ் செய்திருக்கலாம். அப்போது நிர்க்குணப்பிரஹ்மமே முதற்சூத்திரத்திற் பிரதிபாதிக்கப்பட்டது என்றும், இறுதிச் சூத்திரத்திற் போக்குமீட்சியில்லாத முத்தி கூறப்பட்டது என்றும் அறியப்படும். அங்ஙனம் கூறப்படாமையின் முதற்சூத்திரத்துப் பிரஹ்மம் மாயோபாதியில்லாத சகுணப்பிரஹ்மமே என்றும், அந்தச் சகுணப்பிரஹ்மத்தை உபாசித்தலாற் சாரூப்பிய முத்தி சிவலோகத்தில் உபாசகனுக்கு

---

* இச்சுருதிப்பொருளையே உத்தரவேதம்

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி

என்று கூறிற்று.

‡ பிருகதாரண்யகோபநிடதத்து ௩. ௨. கக-ற் குறிக்கப்பட்ட இம்மந்திரம் வித்துவான் விஷயமன்று, பின் அவித்துவான் விஷயமே. இங்ஙனம் நீலகண்டபாஷ்யத்துப் பிரஹ்மசூத்திர உபக்கிரமணிகை ௫௪௩-ம் பிரிவினும், தமிழ் மொழிபெயர்ப்பின் ததாபீத்தியதிகரணத்தினும் (௪. ௨. க௩.) விளக்கப்பட்டுள்ளது. ஆண்டாண்டுக் காண்க.

எய்தும் என்றும் கோடற்பாற்று. முதற் பதினொரு சூத்திரங்களுள்ளே எல்லாம் எய்தியவாகக் குரவர் வரைந்தமை சூத்திரங்கள் தமது கருத்துப்பிரகாரம் நிர்க்குணபரத்தனவாயிராது. மேலே கூறியவாறு சகுணபரத்தனவாயிருத்தல் ஓர் காரணம்.

(d) ஆனந்தமயோப்யஸாத் (க. க. கங)

(e) "(சிவபெருமான்) ஆனந்தமிகுதியுடையர் அப்பியாசத்தினால்" என்ற சூத்திரத்தை வியாசர் கருத்துக்கு மாறாகப் பிரஹ்மத்துக்கு ஆனந்தம் இல்லை என்று மாறுபட எழுதினமை மற்றோர் காரணம்.

(f) விகாரசப்தாந்நேதிசேந்ந ப்ராசுர்யாத் ।

(g) "விகாரசப்தமுண்மையின் ஆனந்தமயம் பிரஹ்மம் அன்றாம் எனின், அன்று; அது (மயம்) மிகுதிப்பொருட்டாதலின்" என்னும் சூத்திரத்துப் "பிராசுர்ய"சப்தத்துக்குவியாசர்கருத்துக்கு மாறாக விகாரார்த்தங்கொண்டு மிகுதிப்பொருள் கொள்ளாமை மற்றோர் காரணம்.

(h) சுகவிசிஷ்டாபிதாநாதேவச ।

(i) "அவர் ஆனந்தகுணவிசிஷ்டமுடையராகவே கூறப்படலானும்" என்னும் சூத்திரத்துக்கு அடுத்த சூத்திரமாகிய

(j) அத ஏவ ஸ ப்ரஹ்ம (க. உ. கரு.)

(k) "(ஆனந்த குணவிசிஷ்டமுடையராகக் கூறப்படும்) அந்த நியாயத்தினால், அவர் பிரஹ்மம்" என்னும் சூத்திரம் நீக்கப்பட்டமை மற்றோர் காரணம்.

(l) க-ம் அத்தியாயத்து உ-ம் பாதத்து கூ-ம் சூத்திரத்தினும், க-ம் அத்தியாயத்து உ-ம் பாதத்து உ0-ம் சூத்திரத்தினும், உ-ம் அத்தியாயத்து க-ம் பாதத்து உஉ-ம் சூத்திரத்தினும் சிவான்மபரமான்மாக்களின் பேதஞ் சொல்லியவிடத்து, கடாகாய மகாகாயங்கொண்டு சிவான்மபரமான்மாக்களுக்குப் பேதம் இல்லை என்று சூத்திரக்கருத்துக்கு மாறாகக் குரவர் எழுதினமை மற்றோர் காரணம்.

(m) ஙு-ம் அத்தியாயத்து ஙு-ம் பாதத்தில் உற்கீதவித்தை, பிராணவித்தை, சாண்டில்லியவித்தை, வியாகிருதிவித்தை, மண்டலவித்தை, புருஷவித்தை, உதஸ்தவித்தை;

சகோளவித்தை, வைசுவாநரவித்தை, தகரவித்தை என்னும் பலவகை வித்தைகள் கூறப்பட்டனவேயன்றி நிர்க்குணோபாசனை கூறப்படாமை மற்றோர் காரணம்.

(n) முக்தர்க்கு எய்துவனவாகிய குணங்கள் குரவர் இல்லை என்று சொல்வதற்குப் பதிலாக உண்டென்பாராய் (சு-ம் அத்தியாயத்து ச-ம் பாதத்து எ-ம் சூத்திரத்தில்) அங்கீகரிக்க நேர்ந்துவிடும் என்பது மற்றோர் காரணம்.

(o) பிரஹ்மசூத்திரத்து ச-ம் அத்தியாயத்து உ-ம் பாதத்து கஉ-ம் சூத்திரம் இரண்டாகப் பிளக்கப்பட்டமையும், பிளக்கப்பட்ட இரு பாகங்களும் கஉ-ம், கரு-ம் சூத்திரங்களாக நிறுத்தப்பட்டமையும், பிருகதாரணியத்து * ஆர்த்தபாகர் விஷயத்துச் சுருதிகள் குரவர் கருத்துப்பிரகாரம் வித்துவான் விஷயமாகத் திரித்துணர்த்தப்பட, ஏனைய அறிஞர்களெல்லாம் அதனை அவித்துவான் விஷயமாகக் கொள்வாரென்ற கபடத்தனம் மற்றோர் காரணம்.

## (எ) பிரஹ்மசூத்திர சைவபாஷ்யத்திற் சிலபாகம் நீலகண்ட சிவாசாரியர் கருத்துக்கு முரணுறத் திரிக்கப் பட்டமை.

---

வேதாந்தசூத்திரசைவபாஷ்யத்து ஜந்மாத்தியதிகரணத்தின் (க. க. உ) கீழ்

(13) ப்ரஹ்மண: கதாசிதபி ந நிர்விசேஷ த்வமித்ய நேக சித்தம் I

(14) "ஓர்காலும் பிரஹ்மம் நிர்விசேஷம் (நிர்க்குணம்) அன்று எனச் சித்தித்தது" என்றும், தத்துவசமாதிகரணத்தின் (ரு. ரு. ச0.) கீழ்

---

* ஆர்த்தபாகர்விஷயம் வித்துவான் விஷயமன்றென்று நீலகண்ட சைவபாஷ்யத்தமிழ்மொழிபெயர்ப்பின் ச-ம் அத்தியாயத்து உ-ம் பாதத்து கஉ-ம் சூத்திரக்குறிப்புரையில் விளக்கியிருக்கின்றேம். ஆண்டுக் காண்க.

(15) பூர்வோக்தம்ஸவிசேஷமேவப்ரஹ்மஸ்வரூபம் முக்தப்ராப்யம்। ஸகுணைவ வாத: பரவித்யா। கிஞ்ச வசநமேவ ஸகுணம் மோக்ஷபலம் ப்ரகாசயதி। அதஸ் ஸகுணமேவ ப்ரஹ்மஸ்வரூபம் முக்தப்ராப்யம் பலமிதி॥

(16) "முன்னர்க் கூறப்பட்ட சவிசேஷப்பிரஹ்மசோரூபமே முக்தனால் அடையற்பாற்று"; "பரவித்தை சகுணமே"; "மேலும், மோக்ஷபலம் சகுணமென்றே வசனமுஞ் சாதிக்கின்றது"; "ஆகலின், சகுணப்ரஹ்மசோரூபமே முக்தனால் அடையற்பாலதாம் பயன்" என்றும், அம்சாதிகரணத்தின் (உ.ங. சஉ)கீழ்

(17) ப்ரஹ்மண ஏவாஜ்ஞாநஜ்ஜீவபாவகல்பநே பஹு சுருதிவிரோதாதிதோஷப்ரஸக்திர் துர்வாரா।

(18) "பிரஹ்மந்தானே அஞ்ஞானத்தினாற் சீவான்மாவாகின்றது என (ஏகான்மவாதோபநிடதங்களுக்கு இணங்கக்) கொள்ளின் (அது முக்கியோபநிடதங்களிலுள்ள) அநேக சுருதிகளுக்கு விரோதமாதன்முதலிய தோஷங்களுட்படுத்தலை நீக்கக்கூடாமையாயிருக்கின்றது" என்றும் ஏகான்மவாதத்தை நீலகண்டசிவாசாரியர் கண்டித்திருக்கின்றார். அங்ஙனம் கண்டித்திருந்தவிடத்தும் அநியமாதிகரணத்தின் (ங. ங. ஙஉ) கீழேபாஷ்யத்து இறுதியில்

(19) கேசிதாஹு:। அநியம: ஸர்வேஷாமுபாஸகாநாமர்ச்சிராதிகதௌ நியமாபாவ:। ததாஸதி சுருதிஸ்மிருதிப்யாமவிரோத இதி। தத்ராபி ந தோஷ:। நிரங்வயோபாஸகாநாம் ததபேக்ஷாபாவாதிதி।

(20) "சிலர் பின்வருமாறு சூத்திரத்தை மொழிபெயர்க்கின்றார்கள்:—எல்லா உபாசகர்களுக்கும் ஒளிமார்க்கம் நியமம் இல்லை; அங்ஙனமாயின் சுருதிஸ்மிருதிகளுக்கு விரோதமில்லை; அதினாற் றோஷமும் இல்லை; நிர்க்குணோபாசகர்களுக்கு அது அபேக்ஷையின்றாமாதலின்" என்றும், ததாபீத்யதிகரணத்தில் (ச. உ. கங)

(21) கேசிந் நிரங்வயோபாஸகாநாமிஹ சரீரஸ்யாந்த ஏவ முக்திரித்யர்ச்சிராதிகதிர்நியமதாமாஹு:।

(22) "நிர்க்குணோபாசகர்களுக்குச் சரீரத்தின் முடிவிலே தான் முத்தி என்றும், ஆதலின் ஒளிமார்க்கம் நியமம் இல்லை என்றும் சிலர் கூறுகின்றார்கள்" என்றும், அர்ச்சிராதிகரணத்தில் (ச. ந. க)

(23) நிரங்வயோபாஸகாநாம் நார்ச்சிராதிரிதிகேசித்।

(24) "நிரங்வயோபாசகர்களுக்கு ஒளிமார்க்கம் இல்லை என்று சிலர் கூறுகின்றனர்" என்றும்,

(25) அன்னமயம், (பிராணமயம், மநோமயம், விஞ்ஞான மயம்) என்பவைகளுக்கு ஆதாரமாயும், பிரமவிஷ்ணு உருத்திர ஈசுரர்களுக்குக் காரணராயுமுள்ள ஆனந்தமயராகிய சதாசிவர்க்குக் காரணமாயுள்ளதும், பரமசிவன் என்று சொல்லப்படுவதுமாகிய பிரஹ்மம் (ஆன்மா) என ஏகான்மவாதச் சார்புற ஆனந்தமயாதிகரணத்தில் (1. 1. 16) (அங்யேபுந:) "சிலர் கூறுகின்றனர்" என்றும்

(26) அத்ரகேசிதாஹு:। "வேறு சிலர் கூறுகின்றனர்" என்றும் தொடங்கி நீலகண்டபாஷ்யத்தினும் சிவார்க்கமணிதீபிகையினும் வரையப்பட்டன முற்றுந் தவறும் என்க.

## (அ) சிவார்க்கமணிதீபிகை ஆனந்தலகரி என்பவற்றிற் செய்யப்பட்டமாறுபாடு.

---

(27) அநூத்ய த்வைதமத்வைதம் ப்ரதிபாதயதி ச்ருதி:। ஸ்மிருதிநாஞ்ச புராணாநாம் பாரதாதேஸ் ததைவச। ததா சைவாகமாதீநாம் தர்க்காணாஞ்ச த்விஜோத்தமா:। அத்வைதநிஷ்டதை வோக்தா ந த்வைத பரதா ஸதா॥

(28) "பிராஹ்மணோத்தமர்களே! துவைதத்தை அநுவதித்து அத்துவைதத்தினைப் பிரதிபாதிக்கின்றது சுருதி; ஸ்மிருதிகளுக்கும், புராணங்களுக்கும், அவ்வாறே பாரதாதிகளுக்கும், அவ்வாறே சைவாகமமுதலியவற்றுக்கும், தர்க்கங்களுக்கும் அத்துவைதபரத்துவமே கூறப்பட்டது; துவைதபரத்துவம் எப்போதும் இல்லை" என்று சூதுசெய்யப்பட்ட சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டத்து நகூம் அத்தியாயத்திற் பொய்யுரை எழுதி, அதனை அநுசரித்து

(29) யத்யப்யத்வைத ஏவ ச்ருதிசிகரகிராமாகமாநாஞ்ச நிஷ்டா ஸாகம் ஸர்வை: புராணஸ்ம்ருதிநிகரமஹாபாரதாதி ப்ரபந்தை:। தத்ரைவ ப்ரஹ்மஸூத்ராண்யபிச விம்ருசதாம் பாந்தி விச்ராந்திமந்தி ப்ரத்நைராசார்யரத்நைரபி பரிஜக்ருஹே சங்கராத்யைஸ்ததேவ॥

(30) "புராணம், ஸ்மிருதி, மகாபாரதமுதலிய பிரபந்தங்கள் அனைத்தினோடு சுருதிமுடிவாகிய உபநிடதங்கட்கும், ஆகமங்கட்கும் அத்துவைதமே நிஷ்டையாம்; அந்த அத்துவைதத்திலே பிரஹ்மசூத்திரங்களும் நிச்சயத்தைக் காட்டி விசிராந்தி அடைகின்றன; பழமையாகிய சங்கரர்முதலிய ஆசாரியரத்தினங்களாலும் அதுவே (அத்துவைதமே) செவ்விதாகக் கொள்ளப்பட்டுள்ளது" என்று சிவார்க்கமணிதீபிகையின் முதலிலே அப்பயதீக்ஷிதர் எழுதியதாக வரையப்பட்டுள்ளது. சிவார்க்கமணிதீபிகையின் மாத்திரமா! இதனை அநுசரித்து ஆனந்தலகரியின் சஎ-ம் சுலோகத்தில்

(31) சுத்தாத்வைதேஹி சர்வச்ருதிசிகரகிராமாகமாநாஞ்சநிஷ்டா ஸாகம் ஸர்வை: புராணஸ்ம்ருதிநிகரமஹாபாரதாதி ப்ரபந்தை:।தத்ரைவ ப்ரஹ்மஸூத்ராண்யபிச விம்ருசதாம் பாந்தி விச்ராந்திமந்தி (த்யக்தம் தத் பாஷ்யகாரைரிஹ கதமிதி சேந்நைவ தத் த்யக்தமார்யை:)॥

(32) "சுத்தாத்துவைதமாகிய நிர்க்குணோபாசனையிலே தான் சமஸ்த வேதோபநிடதங்களுக்கும், ஆகமங்களுக்கும், சமஸ்தபுராணஸ்மிருதிகளுக்கும், மகாபாரதமுதலியவைகளுக்கும் முடிவாம்; அங்கேதான் பிரஹ்மசூத்திரங்களும் முடிவை அடைகின்றன" என்று அப்பயதீக்ஷிதர் எழுதியதாக வரையப்பட்டுள்ளது. இங்ஙனம் ஆனந்தலகரியின் அநேக சுலோகங்களும் வியாக்கியானங்களும் மாற்றப்பட்டுள்ளன. பிரஹ்மசூத்திரசைவபாஷ்யத்திலே நீலகண்டசிவாசாரியரது சொந்த அபிப்பிராயம்போல ங. ங. ஙஉ-னும், ச. உ. கஉ-னும், ச. ங. க-னும் நுழைக்கப்பட்டவைகள் ஆனந்தலகரியின் சஎ-ம், சஅ-ம் சுலோகவியாக்கியானங்களினுங் கொளுவப்பட்டுள்ளன. இங்ஙனம் நீலகண்டபாஷ்யத்துக்குப் பாஷ்யமாய்ப்போந்த சிவார்க்கமணிதீபிகையின் ங. ங. ஙஉ-ந் சூத்திரதீபிகை இறுதியினும்,

ச உ. கங-ஞ் சூத்திர தீபிகை இறுதியிலும், ச. ங. க-ஞ் சூத்திர தீபிகை இறுதியிலும் "கேசித்" என்றதற்றொடக்கத்தனவாகக் கொளுவப்பட்டவை யனைத்தும் மூழுப்பிழையாம் என்க.

## (கூ) சிவாத்துவைத நிர்ணயமாறுபாடு.

---

(33) அப்பயதீக்ஷிதர் நீலகண்டசிவாசாரியரது பாஷ்யமே சங்கரபாஷ்யத்தினும் சிறந்ததென்று சத்தியரூபமாகச் "சிவாத்துவைதநிர்ணயம்"என ஓர் நூல் எழுதியிருக்கின்றார். உற்கிருஷ்டமாக எழுதப்போந்தவர் அபகிருஷ்டமாக எழுதுவாரா! நீலகண்டசிவாசாரியர் எழுதியதாக அநியமாதிகரண (ங. ங. ஙஉ) பாஷ்யத்தில் எழுதப்பட்டதை

(34) நிரங்வயோபாஸகாநாமிஹைவமுக்தி:1

(35) நிர்க்குணோபாசர்களுக்கு இங்கேதான் முத்தி" என்று முதற்கண்ணே அப்பயதீக்ஷிதர் "சிவாத்துவைதநிர்ணய"த்தில் எழுதியதாக வரையப்பட்டுள்ளது. நீலகண்டசிவாசாரியர்

(36) சக்தி: சிவச்ச ஸச்சப்தப்ரக்ருதிப்ரத்யயோதிதௌ1

(37) "சத்தியும் சிவனும் சச்சப்தத்தின் பிரகிருதியும் பிரத்தியயமுமாம்" என்று தமது பாஷ்யத்தில் எழுதியிருக்க,

(38) சக்தி: சிவச்ச நத்வந்த்வப்ரக்ருதிப்ரத்யயோதிதௌ1

(39) "சத்தியும் சிவனும் துவந்துவமில்லாத பிரகிருதியும் பிரத்தியயமுமாம்" என்று சச்சப்தத்தை எடுத்துவிட்டு "நதுவந்துவம்" என்று மாற்றிச் "சிவாத்துவைதநிர்ணய"த்தில் எழுதப்பட்டுள்ளது. சத்தியும் சிவனும் எனப்பொருள்படும் சத்பதத்தை நிர்விசேஷம் (நிர்க்குணம்) என்றும்,

(40) சர்வஜ்ஞத்வஸர்வசக்தித்வாதிகம் ஸர்வம் கல்பிதம்1

(41) "முற்றறிவு முற்றுத்தொழிலாதிய அனைத்தும் கற்பிதம்" என்றும், கருடபாவனையைக் கற்பிதம் என்றும், இங்ஙனம் அநேகபிரகாரமாகச் "சிவாத்துவைதநிர்ணயம்" திரிவுசெய்யப்பட்டுள்ளது. முப்பத்தாறும் தத்துவத்தினாய், பரப்பிரகிருதிப்பாலராய், தாண்டவேசுவரராய், தம்மிடத்து முக்திபச்

சுருதிப்பொருளனைத்தும் முடியப்பெறுபவராயுள்ள சிவபெருமானைக் குறித்துப்பேசும் சைவபாஷ்யத்தினும் மூலப்பிரகிருதிப்பாலதாயுள்ள சிவான்மப்பிரஹ்மத்தில் எய்தப்பெறும் ஏகான்மவாதபாஷ்யம் உயர்வாகுமோ! **நீலகண்டபாஷ்யம் சாத்திய** பாஷ்யமேயாக, சங்கரபாஷ்யம் சாதனபாஷ்யமாய் முற்றும் என்க. அங்ஙனம் தத்துவத்தின் தொகையும் விரிவும் அறியாதவர்கள் சங்கரபாஷ்யத்தைச் சாத்தியபாஷ்யம் என்றும், நீலகண்டபாஷ்யத்தைச் சாதனபாஷ்யம் என்றுந் திரிவுற மயங்கி "ஆனந்தலகரி"யினும் "சிவாத்துவைதநிர்ணய"த்தினும் எழுதி வைத்தார்கள்.

(42) அரியமாதிகரணாதிபாஷ்யகதைர் நிரங்வயோபாஸகாநாமிஹைவ முக்தி:। ப்ராமாணிகாநாம் நிர்விசேஷஸ்ய பரப்ரஹ்மணஸ்தத்வாவபோதார்த்தம் தஸ்யைவ ஸாதகாநுக்ரஹாய ஸவிசேஷரூபாபந்நஸ்ய நிகிலகல்யாணகுணகணதிவ்யமங்களவிக்ரஹவிசேஷவிசிஷ்டஸ்ய மத்யமாதிகாரிகர்த்தவ்யாபேதோபாஸகார்த்தம் ஸ்ரீகண்டாசார்யாணாமேவ பாஷ்யமுபாதேயமிதி॥

(43) "அரியமாதிகரண (௩. ௩. ௩௨) முதலிய சில பாஷ்யவாக்கியங்களினால் நிர்க்குணோபாசகர்களுக்கு இவ்விடத்திற்றானே முத்தி; பிராமாணிகர்களுக்கு நிர்க்குணப்ரஹ்மத்தை அறிவிக்கும்பொருட்டும் சாதகாநுக்கிரகார்த்தமாய் அதே பரவஸ்துவுக்கமைந்த சவிசேஷரூபமான நிகிலகல்யாண குணகண திவ்யமங்கள விக்கிரகத்தை மத்திமாதிகாரிகள் (தானென) அபேதோபாசனை செய்வதற்கும் ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் பாஷ்யமே கொள்ளற்பாற்று" என்று சிவாத்துவைத நிர்ணயத்து இறுதியில் வரையப்பட்டுள்ளது. இங்ஙனம் "சிவாத்துவைதநிர்ணயம்" முழுமையும் ஏகான்மவாதபரமாக மாற்றப் பட்டிருப்பறிக.

---

## (௧௦) சிவதத்துவவிவேக மாறுபாடு.

சிவபெருமான் ஆன்மதத்துவ வித்தியாதத்துவ சிவதத்துவங்கட்குமேலுளார் என்றுணர்த்த

(44) சிவதத்வாதி பூம்யந்தம் சரீராதி கடாதிச। வ்யாப்யாதிஷ்டதி சிவஸ்ததோ விஷ்ணுருதாஹ்ருத:॥

(45) "சிவதத்துவமுதற் பிருதிவியீறாக (முப்பத்தாறு தத்துவங்களையும்) சரீராதிகளையும் கடாதிகளையும் சிவபெருமான் வியாபித்து நிற்றலின் விஷ்ணு எனப்பட்டார்" என்ற சுலோகத்தை அப்பயதீக்ஷிதர் "த்விஜாநாம் காயத்ரீ" என்ற சுலோகத்தின் கீழ் உதகரித்திருந்தாராக, அதனாற் சிவதத்துவ விவேகத்துச் சுலோகங்கள் முழுமையினும் பிரதிபாதிக்கப்பட்ட சிவபெருமான் முப்பத்தாறும் தத்துவத்தினர் எனப் பெறப்படுவதேயாகவும்

(46) குணதீதோபி ஸகுண இவ மாயாசபலித:।

(47) "குணங்களைக் கடந்தோய் எனினும் மாயையினைத் தோய்தலாற் குணமுடையவன் போல்" என்று மூன்றும் சுலோகத்தை மாற்றி அதனோடுநில்லாது,

(48) சித்ப்ரதிபிம்போபாதிபூதயா வித்யாத்மகயா மாயயா பிம்பஸ்தாநீயத்வோபஹிதோவிமலசத்வப்ரதாநத்வேநாவித்யோபாதிபிந்நயா மாயயா ப்ரதிபிம்பபாவேந உபஹித இதிவார்த்த:।

என்று அம்முப்பத்தாறும் தத்துவசிவபெருமானை மூலப்பிரகிருதிப்பாற்பட்ட கற்பித ஈசுரனாகக் கொள்ளுமாறு வியாக்கியானத்தையும் மாற்றிவைத்தார்கள். இங்ஙனம் அப்பய தீக்ஷிதர் துரியராகக் காட்டப்போந்த ஈசுவரரை மூலப்பிரகிருதி விமலசத்துவப் பிரதானராகிய ஈசர் எனக் கொள்ளின், அவரால் உதகரிக்கப்பட்ட உபநிடதங்கள் புராணங்கள் இதிகாசங்கள் ஸ்மிருதிகள் ஆகமங்கள் என்பவற்றிற் பேசப்பட்ட ஈசுவரரும் அங்ஙனமாவார் என்று நினைந்தார்போலும்! இந்த விமலசத்துவப்பிரதானராகிய ஈசுவரரல்லர் நமது முப்பத்தாறுந் தத்துவத்தினராகிய தாண்டவேசுவரசதாசிவப்பெருமானாகிய சிவபெருமானும் என்க.

## (கக) பாத்துமபுராணத்தினின்று சிவகீதை முதலியன நீக்கப்பட்டமை

(49) ஏகான்மவாதபண்டிதர்களிடத்திலும் வைஷ்ணவ பண்டிதர்களிடத்திலும் இதிகாசபுராணங்கள் விசேஷித்து உள வாயிருந்தன. வைஷ்ணவர்களுள்ளே ஒருவரோ இருவரோ பலரோ ஏகான்மவாதத்தைத் தூஷித்தும், பலவாறு சிவபெருமானை நிந்தித்தும், * சிவகீதையையும் வேதசாரசகச்சிரநாமத்தையும் பெயர்த்தெடுத்துவிட்டும் புதுச்சுலோகங்கள் புகட்டியும் பாத்துமபுராணத்தைத் திரித்துவிட்டார்கள்.

---

POONA:—ANANDASRAMA.
4th May 1896

*DEAR SIR,

Thank you so much for your favour of the 22nd Ultimo. Tradition speaks of Shivageeta as part of the Padmapurana, but of the 30 and odd Mss. of the purana collated by us for our edition there was not even one that gave the Shivageeta. Consequently we did not think it proper to include it in our edition. The contents of the Padmapurana are given in a series of Slokas in the Brihannaradiya, and there only we find the mention of the Shivageeta as part ef the Padmapurana. No Mss. give the same. We intend however some times to publish the Shivageeta as a supplementary volume to our edition of the Padmapurana Hoping to be excused for the delay in sending this reply.

Yours faithfully
H. N. APTE.

தங்களுடைய சென்ற மாசத்து 22உ கடிதம் பெற்றோம்; பாத்துமபுராணத்தது சிவகீதை என்று பரம்பரையாகச்சொல்லுகின்றார்கள்; நாம் பாத்துமபுராணத்தைத் திருத்தி அச்சுக்குக் கொடுத்தற்குமுன் ஒத்துப்பார்க்குமாறு சேர்க்கப்பட்டிருந்த கையெழுத்துப்பிரதிகள் முப்பதுக்கு மேலுள்ளவைகளுள் ஒரு

## (௧௨) சூதசங்கிதையின் மாறுபாடு.

(50) ஏகான்மவாதிகள்பொருட்டு ஏகான்மவாதகுரவர் தாம் தமோபநிடதங்களுக்குச் செய்த ஏகான்மவாதபாஷ்யத்துக்கு உபப்பிருங்கணமொன்று வேண்டுமெனக்கொண்டு சூதசங்கிதையைப் *பதினெட்டுத்தரம் படித்து அதிற்போந்த பிரஹ்மகீதையை முற்றும் மாற்றியும், தத்துவவிசாரணைக்குரிய பல சுலோகங்களை அங்கங்கே திரிவுபடுத்தியும், சிவபிரானது அவிநாபாவசத்தியாராகிய உமையம்மையாரை )(ஜடசத்தி ‡மோகரூபிணி என்றும், விஞ்ஞானம் பிரஞ்ஞானமுதலிய ()அருட்சத்தியாரது பதினெட்டுத் திருநாமங்களை அந்தக்கரணவிருத்திகள் என்றும், சிதம்பரசத்தியாரின் திருநாமங்களாகிய தகராகாய

---

பிரதியிலேனும் சிவகீதையைக் கண்டிலேம்; பாத்துமபுராணத்தில் அடங்கிய விஷயப்பெயர்கள் பிருகந்நாரதீயபுராணத்திற் காணப்படுகின்றன; அங்ஙனம் பெயர்மாத்திரம் காணப்பட்டுக் கையெழுத்துப்பிரதி ஒன்றிலும் காணப்படாததாகக் கிடந்த சிவகீதையை மற்றோர்காற் பாத்துமபுராணம் பதிப்பிக்குமிடத்து, அதன் இறுதியில் அநுபந்தமாகச் சேர்த்து அச்சிட எண்ணியிருக்கின்றேம். இங்ஙனம்,

தங்கள் அன்புள்ள

H. N. ஆப்தே.

*ஏகான்மவாதகுரவர் சூதசங்கிதையைப் பதினெட்டுத்தரம் படித்தமையை "மகாவுக்கிரவீரபத்திராஸ்திர"த்து ௮-ம் பிரிவுமுதல் ௧௬-ம் பிரிவிறுதியாயுள்ள ஆறு பிரிவுகளிற் காண்க.

)(உமையம்மையாரை ஜடசத்தி என்றமையைச் சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டத்து ௧௩-ம் அத்தியாயத்து ௪௨-ம் சுலோகத்திற் காண்க.

‡மோகரூபிணீ என்றமையைச் சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டத்து ௩௪-ம் அத்தியாயத்து ௨௧-ஞ் சுலோகத்திற் காண்க.

()அருட்சத்தியாரின் திருநாமங்களை அந்தக்கரணவிருத்தி என்றமையைச் சூதசங்கிதையஞ்ஞவைபவகண்டத்துப்பிரஹ்மகீதை ௩-ம் அத்தியாயத்து ௧௧-ம் சுலோகமுதல் ௨௪-ம் சுலோகம் இறுதியாயுள்ள [illegible] சுலோகதாற்பரியதீபிகைகளிற் காண்க.

§வியோமத்தை அவித்தை, அஞ்ஞானம், அவ்வியாகிருதம், மாயை, ஜடசத்தி என்றும், சீவான்ம பரமான்மாக்கள் இரண்டையும் உணர்த்தும் இருமொழிகளையும் *க்ஷேத்திரஞ்ஞன் சத்துவம் என்றும், ‡சாமியம் என்றதைக் கடாகாய மகாகாயம்போல் வதோர் ஐக்கியம் என்றும், அத்துவாவைச் சம்சாரகதி என்றும் தமது ஏகான்மவாத உபநிடதங்களுக்கியையக் கற்பித்துப் புகட்டியிருக்கின்றார்.

## (௩௩) சங்கரதிக்விஜயக்கூற்று.

---

(51) இதி யுக்தி சதோபபிரும்ஹிதார்த்தைர் வசனை: ச்ருத்யவரோதஸௌவிதல்லை:। யதிராத்மமதம் ப்ரஸாத்யசைவம் பரக்ருத்தர்சநதாருணைரஜைஷீத்। விஜிதோயதி பூப்ருதா ஸ சைவஸ் ஸகர்வேண விசருஜ்யச ஸ்வபாஷ்யம்। சரணம் ப்ரதிபேதிவாந் மஹர்ஷிர் ஹரதத்தமுகை: ஸஹாதமசிஷ்யை:। யமிநாம்ருஷபேண நீலகண்டம் ஜிதமாகர்ணய மநீஷிதுர்யவர்யம்। ஸஹஸோதயநாதய: கவீந்த்ரா: பரமாத்வைதமுஷச்ச கம்பிரேஸ்ம॥

(52) "இங்ஙனம் அநேக யுக்திகளோடியைந்து நிறைந்த அர்த்தங்களையுடையனவாய்ச் சுருதிக்கு விரோதமிலாத வாக்கியங்களினாற் சங்கராசாரியர் தமது மதத்தைச் சாதித்து சைவத்தைப் பரபக்ஷத்தில் நிறுத்தவல்ல கடினவாக்கியங்கள்கொண்டு செயித்தாரென்றும், அந்த யதிராஜாவாகிய சங்கராசாரியரால் செயிக்கப்பட்ட சைவர் (நீலகண்டசிவாசாரியர்) தமது பாஷ்

§வியோமத்தை அவ்வியாகிருதம், மாயை, அஞ்ஞானமுதலியவாகக் கூறினமையைச் சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டத்துப் பிரஹ்மகிதை ௩-ம் அத்தியாயத்து ௩௧-ம் சுலோகதீபிகைகளிற் காண்க.

*சீவான்மபரமான்மாக்களை க்ஷேத்திரஞ்ஞன் சத்துவம் என்றமையை ஏகான்வாதகுரவரது பிரஹ்மசூத்திரபாஷ்யத்து ௧-ம் அத்தியாயத்து ௨-ம் பாதத்து ௧௨-ம் சூத்திரபாஷ்யத்தினும், ௧-ம் அத்தியாயத்து ௩-ம்பாதத்து எ-ம் சூத்திரபாஷ்யத்தினுங் காண்க.

‡ சாமியம் என்றதை ஐக்கியம் என்றமையைச் சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டத்துப் பிரஹ்மகிதை எ-ம் அத்தியாயத்து எ௩-ம் சுலோகத்திற் காண்க.

யத்தை எறிந்துவிட்டுக் (கருடனுக்கு எதிர்ப்பட்ட சர்ப்பம் போலத்) தமதுகர்வத்தை ஒழித்துத்(தலைவணங்கித்) தமது அர தத்தர்முதலிய சீடர்களோடு மகர்ஷியாகிய சங்கராசாரியரைச் சரணடைந்தார் என்றும், முனிவர்களுள்ளே சிரேஷ்டராகிய சங் கராசாரியரால் விவேகிகளுட் சிறந்த நீலகண்டசிவாசாரியர் செயிக்கப்பட்டதை உதயனாசாரியர் முதலிய கவிசிரேட்டர்கள் கேள்வியுற்று விரைந்து பரமாத்துவைதத்தை (ஏகான்மவாதத் தை) அங்கீகரித்தவராய் நடுங்கினர்கள்" என்றும் மாதவீயசங் கரவிஜயத்து கரு-ம் சர்க்கத்து எ0, எக, எஉ-ம் சுலோகங்களிற் காணப்படுகின்றது. வாதம் நிகழ்ந்தமையை உணர்த்தும் சுலோ கங்கள் அந்த அத்தியாயத்து ௩௩-ம் சுலோகமுதல் சுகூ-ம் சுலோகம் இறுதியாயுள்ளனவே. அந்த வாதப்போரைப் படித்த மாத்திரத்தில் நீலகண்டசிவாசாரியர் எழுதிய பாஷ்யத்தைப் படித்த எம்போலிகளுக்குளதாய ஏகான்மவாதகண்டனஞானாந் தானும் அந்நீலகண்டசிவாசாரியர்க்கு இருந்ததாகப் புலப்பட வில்லை. சகலவேதாகம சாஸ்திரவல்ல நீலகண்டசிவாசாரியர் சங்கராசாரியரது கடினவாக்கியங்களுக்கு எப்படிப் பொருள் செய்யவல்லார்!! நன்று! நன்று!! ஆகலின், இவையனைத்தும் கற்பனையேயாம்.

(53) கஅ-ம் பிரிவிற் கண்டவாறு "பிரஹ்மந்தானே அஞ் ஞானத்தினுற் சீவான்மா ஆகின்றது என (ஏகான்மவாதோப நிடதங்களுக்கு இணங்கக்) கொள்ளின், (அது முக்கியோபநிட தங்களிலுள்ள) அநேகசுருதிகளுக்கு விரோதமாதன்முதலிய தோஷங்களுக்குட்படுதலை நீக்கக்கூடாமையா யிருக்கின்றது" என அம்சாதிகரணத்தினும் (2. 3. 42) பிறவிடங்களினும் ஏகான் மவாதத்தைக் கண்டித்த நீலகண்டசிவாசாரியரைக் கடினவாக்கி யங்களால் ஏகான்மவாதகுரவர் செயித்தாரென்றமை முற்றுந் தவறேயாம்.

## (கச) இராமாநுஜாசாரியர் சங்கராசாரியரை செயித்தாரென்றமை.

---

(54) சங்கராசாரியர் பிறத்தற்கு நெடுங்காலத்துக்குமுன் னே திருவவதாரஞ் செய்து தமது சைவபாஷ்யத்தை யாண்டும்

பரவச்செய்த சிவாத்துவைதசிகாமணியாகிய நீலகண்டசிவாசாரியரைச் சங்கராசாரியர் காலத்தினராக்கி, அங்ஙனம் ஆக்கினமை யோடமையாது அவரைக் கோகர்ணத்திற் கண்டு சங்கராசாரியர் வாதப்போரில் செயித்தாரென்று வரையப்பட்டிருக்கின்றது. நீலகண்டசிவாசாரியர்மாத்திரமா? பிரஹ்மருத்திரகர்த்தாவாகிய வியாசரும் சங்கராசாரியரோடு வாதித்து அவரை செயிக்கமுடியவில்லை என்றும் எழுதப்பட்டிருக்கின்றது. வியாசரைமாத்திரமா? காசிவிசுவேசுவரப்பெருமான்றானும் சங்கராசாரியரை செயிக்க முடியவில்லை என்று எழுதிவைக்கப் புகுந்தால், ஏட்டுப்பிரதிகள் ஏன் இங்ஙனம் பொய் எழுதுகின்றீர்கள், எழுத இடம் கொடுக்கமாட்டேம் என்று எதிர்த்து வாதிக்கும் வன்மையுடையனவாமோ!! இக்கதைகளையெல்லாம் யார் அங்கீகரிப்பார்! அங்ஙனம் சங்கராசாரியர் காலத்துக்கு மிகமிக நீடியகாலத்துக்கு முன்னிருந்த நீலகண்டசிவாசாரியரைச் சங்கராசாரியர் காலத்துக்கு இழுத்துவைத்து அவரைச் சங்கராசாரியர் செயித்ததாக ஒப்புக்கொள்ளும் ஏகான்மவாதிகள் இராமாநுஜர்க்கு அறுநூறு வருஷங்களுக்கு முன்னிருந்த சங்கராசாரியரை இராமாநுஜர்காலத்துக்கிழுத்துவைத்து இவரை இராமாநுஜர் வாதப்போரில் செயித்தாரெனக் கூறும் முன்வரும் பவிஷ்யத்புராணக்கதையையும் தடையின்றி ஒப்புக்கொள்ளவேண்டுமன்றோ.

(55) ஏகதா ராமசர்மா வை பதம்ஜலிமடே ஸ்தித:। தீர்த்தாத் தீர்த்தாந்தரம் ப்ராப்த: புரீம் காசீம் சிவப்ரியாம்। சங்கராசார்யமாகம்ய சதசிஷ்யஸமந்வித:। சாஸ்த்ரார்த்தம் க்ருதவாந் ரம்யம் க்ருஷ்ணபக்ஷோ ஹரிப்ரிய:। சங்கராசார்யவிஜிதோ விஜ ஜிதோ நிசி பீருக:। ஸ்வகேஹம் புநராயாத: சங்கரைர் வாக்சரைர் ஹத:। ராமாநுஜஸ்து தச்ச்ருத்வா ஸர்வசாஸ்த்ரவிசாரத:। ப்ராத்ருசிஷ்யைச்ச ஸஹித: புரீம் காசீம் ஸமாயயௌ। வாதோ வேதாந்தசாஸ்த்ரேச தயோச்சாஸீந் மஹாத்மநோ:। சங்கர: சிவபக்ஷச்ச க்ருஷ்ணபக்ஷ: ஸவை த்விஜா:। மாஸமாத்ரேண வேதாந்தே தர்சிதஸ் தேந வை ஹரி:। வாசுதேவ: ஸவை நாம ஸச்சிதாநந்தவிக்ரஹ:। வாசுதேவ: ஸ வை ஜ்ஞேயோ வசுஷ்வம்சேந தீவ்யதி। சங்கரோ லஜ்ஜிதஸ் தத்ர பாஷ்யசாஸ்த்ரே ஸமாகத:। பக்ஷமாத்ரம் சிவை: சூத்ரைர் வர்ணயாமாஸ வை சிவம்। ராமாநுஜேந தத்ரைவ பாஷ்யே ஸம்தர்சிதோ ஹரி:। ததாது சங்கராசார்யோ

லஜ்ஜிதோ நம்ரகந்தர:॥ சுக்லாம் பரதரோ பூத்வா கோவிந்தோ நாம நிர்மலம்॥ ஜஜாப ஹ்ருதி சுத்தாத்மா சிஷ்யோ ராமாநுஜஸ்ய வை॥

(56) "பதஞ்சலிமதத்தினராகிய இராமசர்மா என்பவர் ஓர்கால் தீர்த்தங்கடோறுஞ் சென்றவராகிச் சிவனுர்க்குப் பிரியமாகிய காசிக்ஷேத்திரத்தை அடைந்தார்; அங்கே நூறு சீடர்களோடு வந்த சங்கராசாரியரிடத்துக் கிருஷ்ணபக்கத்தினரும் அரிப்பிரியருமாகிய அந்த இராமசர்மா எய்தி சாஸ்திரார்த்தம் குறித்து வாதஞ்செய்தார்; சங்கராசாரியரால் செயிக்கப்பட்டு, அவர் வாக்குப் பாணங்களால் அடியுண்டு பயந்து இராப்போதிலே தமது வீட்டுக்குமீண்டுவிட்டார்; தமது (தமையனுராகிய இராமசர்மா செயிக்கப்பட்ட சமாசாரத்தைக்) கேள்வியுற்ற சகலசாஸ்திர வல்லுநராகிய இராமாநுஜர் தமது சகோதரர் முதலிய மற்றைய சீடர்களோடு காசிப்பட்டணஞ் சார்ந்தார்; அந்த மகான்கள் இருவர்க்கும் வேதாந்த சாஸ்திரத்தில் வாதம் நேர்ந்தது; சங்கராசாரியர் சிவபக்கத்தினராகவும், இராமாநுஜர் கிருஷ்ணபக்கத்தினராகவுமாகி ஒருமாசகாலம் வாதஞ் செய்யுங்கால், அந்த இராமாநுஜரால் வேதாந்தம் நாராயணரையே பொருளாகக்கொண்டது என நிரூபிக்கப்பட்டது; அவர் சச்சிதானந்த ரூபியாகிய வாசுதேவர் என்று பிரசித்தமுடையர்; சீவர்களில் அம்சத்தினுற் பிரகாசிக்கின்றவர் யாரோ, அவர் வாசுதேவர் என்று அறியற்பாலர்; இராமாநுஜர் வாதித்தவிஷயத்திற் சங்கராசாரியர் இலச்சையடைந்து பாஷ்யத்தை எடுத்துக்கொண்டு பதினைந்து தினம் சிவசூத்திரங்களினுலே சிவனை வர்ணித்தார்; அந்தப் பாஷ்யத்திலே இராமாநுஜரால் அரியானவர் நன்முக வர்ணிக்கப்பட்டார்; அப்போது சங்கராசாரியர் இலச்சையடைந்து (கருடனுக்கு முன் எதிர்ப்பட்ட சர்ப்பம்போலத்) தலைகுனிந்துகொண்டார்; சுக்கிலாம்பரதராய் நிர்மலமாகிய கோவிந்தநாமத்தை இதயத்தில் செபித்துச் சுத்தான்மாவாய் இராமாநுஜர்க்குச் சீடராயினுர்" என்று பவிஷ்யத்புராணத்து ௩. ௧௪. ௬௨-ஞ் சுலோக முதலாகக் கூறப்பட்டிருக்கின்றது.

(57) பிரஹ்மசூத்திரங்கள் நாராயணரைப் பரம்பொருளெனக் கூறிய என்று ஒவ்வாப் பாஷ்யஞ்செய்த இராமாநுஜர், சிவசப்தத்தையேனும் சிவபக்ஷத்தையேனும் ஓரிடத்தும் காட்டாது ஏகான்மவாதபாஷ்யஞ் செய்த சங்கராசாரியரை செயித்தார் என்றமை முற்றுந் தவறேயாம். பவிஷ்யத்புராணத்தில் இராமாநுஜரைக் கற்பித்துப் புகழ்ந்தெழுதிய வைஷ்ணவக்கவிஞர் சங்கரபாஷ்யத்தைக் கனவிலும் படித்தவரல்லர் என வெளியாகின்றது.

## (கரு) வியாசர் சங்கராசாரியரைப் புகழ்ந்தாரெனல்.

(58) கங்காநதிதீரத்திலே சங்கராசாரியரோடு வேதவியாசர் வாதித்து செயிக்கமுடியாது போயவிடத்தும், அவர் (வியாசர்) சங்கராசாரியரிடத்திருந்து பாஷ்யத்தை வாங்கிப் பார்த்துவிட்டுச் சங்கரரைநோக்கி, "சங்கரரே! நீவிர்போலும்! இன்றேல் எமது கருத்தினை உள்ளவாறு வெளிப்படுத்தலாற்றீர்!" என்று கூறியதாகச் சங்கரவிஜயத்திற் காணப்படுகின்றது.

## (கசு) சரசுவதியினால் இராமாநுஜர் புகழப்பட்டாரெனல்.

இராமாநுஜர் நீலகண்டசிவாசாரியர்க்குப் பிற்பட்டவரென்பது எவரும் ஒப்புக்கொண்ட விஷயமேயாக,

(59) கப்யாஸம் புண்டரீகமேவாக்ஷிணீ1

என்னும் சாந்தோக்கியசுருதி பிரஹ்மசூத்திரத்து க-ம் அத்தியாயத்து க-ம் பாதத்து உக-ம் சூத்திரத்தின் கீழ் உதகரிக்கப்பட்டிருப்பதேயாக, அச்சுருதிப்பொருள் யாதெனறு திக்குவிஜயஞ்செய்யப்போந்தகாலத்து இராமாநுஜரைச் சாரதாபீடத்துச் சரசுவதி வினவ, அதற்கு அவர் நீலகண்டபாஷ்யத்து க-ம் அத்தியாயத்து க-ம்பாதத்து உக-ஞ் சூத்திரபாஷ்யத்திற் குறிககப்பட்டவாறு "கம் என்பது ஜலம், கபி என்பது அந்த ஜலத்தைக் கிரணங்களினாற் பானஞ் செய்கின்ற சூரியன், கப்யாசம் என்பது அந்தச் சூரியனால் மலர்ந்த தாமரைப்புஷ்பம், இதனை நிகர்த்த

நேத்திரங்களையுடையர்" என்றற்றொடக்கத்த அர்த்தத்தை ஒப்பித்துவிட, சரசுவதியானவர் இராமாநுஜர் கூறிய சுருதிப்பொருள் நீலகண்டபாஷ்யத்திற் கண்டபொருள் என உணரமாட்டாது, இராமாநுஜரை நோக்கி "நீவிர் இந்தச் சுருதிக்கு வாஸ்தவார்த்தம் கூறினமையின், உமக்கு ஸ்ரீபாஷ்யகாரர் என்னும் திருநாமம் எய்துக என்றும், அவர் (சரசுவதியானவர்) பாஷ்யத்தைத் தமது சிரசில் வைத்து ஸ்ரீபாஷ்யம் என அதற்குப் பெயரிட்டார் என்றும் காணப்படுகின்றது.

## (கஎ) பவிஷ்யத்புராணம் மத்துவாசாரியரைப் புகழ்ந்தமை.

---

(60) தம் க்ருத்தோ பகவாந் நந்தீ சங்கரஸ்யாபராதநு:। அப்ரவீத் தத்ர தத்ரக்ஷோ தசாநநமுபஸ்திதம்। யஸ்மாத் வாநரரூபம் மாமவஜ்ஞாய தசாநந। அசநீபாதஸங்காசமபஹாஸம் ப்ரமுக்தவாந்। தஸ்மாந்மத்வீர்யசம்யுக்தா மத்ரூபஸமதேஜஸ:। உத்பத்ஸ்யந்தி வதார்த்தம் ஹி குலஸ்ய தவ வாநரா:॥

(61) "சங்கரருடைய மற்றோர் சரீரம்போலுள்ள நந்தீசுவர பகவான் கோபமுற்று எதிரினின்ற இராவணனை நோக்கி, இராவணா! யாதுகாரணம்பற்றி என்னைக் குரங்குருபி என்று அவமதித்து இடித்தொனியோடு பரிகாசஞ் செய்தனையோ, அந்தக் காரணத்தினால் எனது வீரியத்தினின்று தோற்றியவைகளாய், என்னை நிகர்த்த வன்மையுடையனவாயுள்ள குரங்குகள் உன் குலத்தை நாசமாக்கும்பொருட்டுப் பிறக்கப்போகின்றன" என்று கூறினாராக இராமாயண உத்தரகாண்டத்து கசு-ம் சர்க்கத்திற் காணப்படுகின்றது. படவே, பவிஷ்யத்புராணத்து ந. கங-ற் "கேசகேசரி என்பான் முகத்தில் உருத்திரதேஜஸ் உண்டாயிற்று என்றும், அஞ்சனாதேவியைக் கபிசிரேஷ்டனாகிய கேசகேசரி அநுபவித்தான் என்றும், அப்போது வாயு இக்கேசரியின் சரீரத்திற் பிரவேசித்திருந்தான் என்றும், உருத்திரர் வானர முகத்தினோடும் சிவந்த வர்ணத்தோடும் புத்திரனாகப் பிறந்தார் என்றும், குரூபியாயிருந்தமைநோக்கித் தாய் அவ்வானர முகத்தினரை மலையடியில் விட்டுப்போயினாள் என்றும், இந்த வானரர் சூரியனைப் பிடித்தார் என்றும், அதனாற் சூரியன் நடுங்

கினன் என்றார், சூரியனைக் காக்க இராவணன் சென்று வானரரின் வாலைப் பிடித்து முஷ்டியுத்தஞ் செய்யத் தொடங்க, வானரரும் சூரியனைவிட்டு இராவணனோடு ஒருவருஷகாலம் யுத்தஞ் செய்து இராவணனைச் சோர்வடையச் செய்தார் என்றும், அப்போது இராவணனது தந்தையாகிய விசிரவசுமுனிவர் வேதமந்திரங்கொண்டு அவரை மகிழச்செய்தார் என்றும், அதனால் அவர் இராவணனை விடுத்துவிட்டுப் பம்பாநதிக்கரையிலே கட்டைபோலிருந்து தபசுசெய்தார் என்றும், அதனால் அவர் ஸ்தாணு என்னும் பெயருடையராயினர் என்றும், இராவணனை முஷ்டியினால் அடித்தமையின் அநுமார் எனப்பட்டார் என்றும், பிரமாவானவர் அநுமாரைநோக்கி உருத்திரவைவசுவதமன்வந்தரத்தில் இருபத்தெட்டாவது திரேதாயுகத்தில் நாராயணர் இராமராக அவதாரஞ் செய்யப்போகின்றார், அவருக்கு நீ பக்தனாவாய் என்று கூறினர் என்றும் காணப்படுகின்றது. இந்த அநுமாருடைய அம்சர் மத்துவாசாரியர் என்றும், அவர் (மத்துவாசாரியர்) சூரியாம்சர் என்றும் பவிஷ்யத்புராணத்து ங. அ-ற் கூறப்படுகின்றது.

(62) இந்த மத்துவாசாரியர் இமாசலத்துக்குப் போய் வியாசமுனிவரை வணங்கி அவரிடத்திலே ஞானோபதேசம் பெற்று அவரது ஆஞ்ஞாப்பிரகாரம் உபநிடதங்களுக்கும் பிரஹ்மசூத்திரங்களுக்கும் பகவத்கீதைக்கும் அவ்வியாசமுனிவரது சொந்த அபிப்பிராயத்தைப் பாஷ்யரூபமாகப் பிரகடனஞ் செய்தார் என்றும் வரையப்பட்டிருக்கின்றது.

## (கஅ) பாஷ்யங்களுக்கு யோக்கியதாபத்திரங் கொடுத்தவர்களின் கருத்து முரணுறல்.

(63) சங்கராசாரியரும், இராமாநுஜாசாரியரும், மத்துவாசாரியரும் எழுதிய பாஷ்யங்கள் ஒன்றுக்கொன்று விரோத அபிப்பிராயமுடையனவாய்க் காணப்படுவனவேயாக, மேலே உரைத்தவாறு சங்கராசாரியர்க்கு யோக்கியதாபத்திரம் கொடுத்த வியாசர்க்கும், இராமாநுஜர்க்கு யோக்கியதாபத்திரம் கொடுத்த சரசுவதிக்கும், மத்துவாசாரியர்க்கு உபதேசித்த வியாசர்க்கும் அப்பாஷ்யங்கள் மூன்றும் சத்தியப்பொருள் போதிந்தனவாக எங்ஙனம் இசைந்தனவோ! அறிஞர்காள் யூகிப்பீராக.

## (கக) சிவரகசியம் மாறுபடப் புனைந்தமை.

(64) பவிஷ்யத்புராணத்தில் மத்துவர் இராமாநுஜர் சங்கரர் முதலாயினோரையுற்றுப் பண்டிதர் மூவர் புதுச்சுலோகங்கள் படைத்துப் புகுத்திவைத்தாற்போலவே, † சிவரகசியத்து கூ-ம் அம்சத்து கசு-ம் அத்தியாயத்திற் சங்கராசாரியரைப் பற்றிச் சிவன் பார்ப்பதியார்க்குச் சொன்னார் என்பது முதலியவாகக் கூறப்பட்டமையுமாம். இங்ஙனம் கூர்மபுராணம் வாயுபுராண முதலியவைகளில் அவரையுற்றுக் கூறப்பட்டனவும் அத்தன்மையவே.

(65) தசோபநிடதங்களுக்கு இணங்கவும், தேவாரதிருவாசகாதி திருவருட்பாக்களுக்கு இணங்கவும், இதிகாச புராணோபப்பிருங்கணங்களுக்கு இணங்கவும் சிவபெருமானைப் பரம்பொருளாகக்கொண்டு பிரஹ்மசூத்திரத்துக்குச் சத்தியபாஷ்யஞ் செய்த நீலகண்டசிவாசாரியரைக் குறித்துச் சிவரகசியத்திலேனும் பவிஷ்யத்புராணத்திலேனும் கூறப்படாமைக்குக் காரணம் என்னை என்றும், சிவபெருமானைப் பரம்பொருள் எனக்கொள்ளாது சீவான்மாவையே பரமான்மபரப்பிரஹ்மம் என்று ஒவ்வாப்பாஷ்யஞ்செய்த ஏகான்மவாதகுரவரையுற்றுச் சிவரகசியத்திற் புகழ்ந்து கூறப்பட்டமைக்குக் காரணம் என்னை என்றும் விவேகிகள் யோசிப்பாராக.

## (உo) சீவான்மாவும் பரமான்மாவும் பொய் ஆக்கப்பட்டமை.

(66) த்வா சுபர்ணா ஸயுஜாஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே| தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்யநச்நந்யோ பிசாகசீதி||

(67) "பிரியா நண்பினையுடைய இரு பட்சிகள் ஒரே விருக்ஷத்தைப்பற்றியுள்ளன; அவற்றில் ஒன்று இனிய பழத்தை

---

† C. N. கிருஷ்ணசாமிஐயர் என்பார் தாம் எழுதிய "ஸ்ரீசங்கராசாரிய" என்னும் ஆங்கில புஸ்தகத்திலே சங்கராசாரியரைப்பற்றிச் சிவரகசியத்து கூ-ம் அம்சத்தில் எழுதப்பட்ட விஷயம் இடையிற் புகுத்தப்பட்டதோர் சாரமில்லா விஷயம் என்று வரைந்திருக்கின்றார்.

உண்கின்றது; மற்றது உண்ணுது பார்த்துக்கொண்டிருக்கின்றது" என்று முண்டகோபநிடதமானது சீவான்ம பரமான்மாக்களை இரண்டாகக்கொண்டு உண்ணும் பட்சியைப் புருஷன் என்றும், சுவதந்திரஹீநன் என்றும், உண்ணுத பட்சியை ஈசன் என்றும், ஈசனது (சிவபெருமானது) மகிமையை அவன் பார்க்குங்காற் சோகமிலனுகின்ருன் என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

(68) த்வௌ சுபர்ணௌ சரீரேஸ்மிந் ஜீவேசாக்யௌ ஸஹ ஸ்திதௌ। தயோர் ஜீவ: பலம் புங்க்தே கர்மணோ நமஹேச்வர:। யதாகாசோகடாகாசமஹாகாசப்ரபேதத:। கல்பித: பரசிஜ்ஜீவ: சிவரூபேண கல்பித:॥

(69) "இரண்டு அழகிய பட்சிகள் இந்தச் சரீரத்தில் சீவன் என்றும் ஈசன் என்றும் நிற்குங்கால் அவற்றுட் சீவன் கன்மபலத்தைப் புசிக்கின்றது; மகேசுவரர் புசிக்கின்றிலர்; எப்படி ஆகாசம் கடாகாசம் எனவும், மகாகாசம் எனவும் பேதமுடைத்தாயிருக்கின்றதோ, அங்ஙனம் பர அறிவானது சீவரூபமாயும் சிவரூபமாயும் கற்பிக்கப்பட்டிருக்கின்றது" என்று சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டத்துப் பிரஹ்மகீதை எ-ம் அத்தியாயத்திற் கூடலேகனஞ் செய்யப்பட்டிருக்கின்றது. இதற்கு இணங்க,

(70) த்வா சுபர்ணௌ சரீரேஸ்மிந் ஜீவேசாக்யௌ ஸஹ ஸ்திதௌ। தயோர் ஜீவ: பலம் புங்க்தே கர்மணோ ந மஹேச்வர:। கடாகாசமடாகாசௌ யதாகாச ப்ரபேதத:। கல்பிதௌ பரமௌ ஜீவசிவரூபேண கல்பிதௌ॥

(71) "சரீரத்திலே சீவனும் ஈசுவரனுமாகிய இரண்டு அழகிய பட்சிகள் இருக்குங்கால், அவற்றுள்ளே சீவன் கன்மபலத்தைப் புசிக்கின்றது; மகேசுவரன் புசிக்கவில்லை; ஆகாசமானது கடாகாசம் எனவும் மடாகாசம் எனவும் கற்பிக்கப்பட்டுச் சீவரூபமாகவும் சிவரூபமாகவும் கற்பிக்கப்பட்டிருக்கின்றன" என்று உருத்திரகிருதயோபநிடதத்திலும், இதே விஷயம் இதே பிரகாசம் அன்னபூர்ணியுபநிடதத்திலும் சொல்லப்பட்டுச் சீவேசுவரர்கள் பெரய் எனக் கூறப்பட்டார்கள்.

(72) வேதசிரசுகளாகிய உபநிடதங்களை இதிகாசபுராண வாயிலாக உபப்பிருங்கணஞ் செய்க எனப் பாரதேதிகாசபுராணங்களிற் கூறப்பட்டிருக்கவும், தசோபநிடதங்களுக்கு மற்றைய உபநிடதங்கள்கொண்டு ஏகான்மவாதபக்கமுறப் பொருள் செய்யத்தக்கவாறு (மேலே விளக்கிக் காட்டியவாறு) அநேக உபநிடதங்களையெல்லாம் அலைத்துத் திரித்து ஏகான்மபரத்தனவாக ஆக்கிவைத்தார்கள். ஆகலின், இவ்வுபநிடதங்களும் பிரஹ்மகீதையும் சைவர்க்குப் பயன்படுவன அன்றும் என்க.

## (உக) ஆனந்தமுடையர் சிவபெருமான்.

---

(73) ஏகான்மவாதிகளுடைய சர்வசாரோபநிடதத்திற் கூறப்பட்ட அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் என்னும் ஐங்கோசங்களும் மூலப்பிரகிருதிப்பாற்பட்ட சீவான்மப்பிரஹ்மத்தில் முற்றி நின்றுவிட்டன.

(74) தைத்திரீயோபநிடதத்திற்கூறப்பட்ட அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் ஐந்தனுள்ளே ஆனந்தம் பரப்பிரஹ்மசிவபிரானுக்கு உள்ளது என்றும், பிரஹ்மசூத்திரசைவபாஷ்யத்தினால் (க. க. கச) விஞ்ஞானமயம் ஆனந்தமயம் என்பவற்றிலுள்ள **மயம்** என்பது மிகுதிப்பொருட்டாம் என்றும், விஞ்ஞானமயம் அறிவுமிகுதியையுடைய ஆன்மாவின்மேற்றும் என்றும் ஆனந்தமயம் என்றது ஆனந்த மிகுதியுடைய பிரஹ்மத்தின்மேற்றும் என்றும் அறியப்படுகின்றது. படவே, சீவான்மப்பிரஹ்மத்துக்கு ஏகான்மவாத சர்வசாரோபநிடதப்பிரகாரம் ஆனந்தமில்லாதொழிகின்றது. சிவதத்துவத்தினராகிய **தாண்டவேசுவரசதாசிவப்பெருமானுக்**குத் தைத்திரீயோபநிடதத்தினும் வேதாந்தசூத்திரத்தினும் (க. க. கச) கூறப்பட்டவாறு ஆனந்தம் உளதாம் என்றும் ஓர்க.

## (உஉ) முப்பத்தாறு தத்துவங்கள்.

---

(75) ப்ருதிவீச ப்ருதிவீமாத்ராசாபச்சாபோமாத்ராச தேதேஜச்ச தேஜோமாத்ரா ச வாயுச்ச வாயுமாத்ராசாகாசச்

சாகாசமாத்ரர்ச சட்சுச்ச த்ரஷ்டவ்யஞ்ச ச்ரோத்ரஞ்ச ச்ரோதவ்யஞ்ச க்ராணஞ்ச க்ராதவ்யஞ்ச ரசச்ச ரசிதவ்யஞ்ச த்வக்ச ஸ்பர்சயிதவ்யஞ்ச வாக்ச வக்தவ்யஞ்ச ஹஸ்தௌசாதாதவ்யஞ்சோபஸ்தச்சாநந்தயிதவ்யஞ்ச பாயுச்ச விசர்ஜயிதவ்யஞ்ச பாதௌச கந்தவ்யஞ்ச மநச்ச மந்தவ்யஞ்ச புத்திச்ச போத்தவ்யஞ்சாஹங்காரச்சாஹங்கர்த்தவ்யஞ்ச சித்தஞ்ச சேதயிதவ்யஞ்ச।

(76) கால: ஸ்வபாவோ நியதிர்யத்ருச்சா பூதாநி யோநி: புருஷ இதி சிந்த்யம்।

(77) சிவம் சக்திச்ச சாதாக்யமீசம் வித்யாக்யமேவச।

(78) "பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் (என்னும் மகாபூதம் ஐந்தும்;) கந்தம், இரசம், ரூபம், பரிசம், சப்தம் (என்னும் சூக்குமபூதம் ஐந்தும்); உபஸ்தம், பாயுரு, பாணி, பாதம், வாக்கு (என்னும் கன்மேந்திரியம் ஐந்தும்); ஆக்கிராணம், சிங்நுவை, சட்சு, துவக்கு, சோத்திரம் (என்னும் ஞானேந்திரியம் ஐந்தும்); மனம், புத்தி, சித்தம், அகங்காரம் (என்னும் அந்தக்கரணம் நான்குமாகச்) சேர்ந்த **ஆன்மதத்துவம்** இருபத்தினான்கும்,

(79) காலம், கலை, நியதி, இராகம், வித்தை, மாயை, புருடன் என்னும் **வித்தியாதத்துவம்** ஏழும்,

(80) சிவதத்துவம், சத்திதத்துவம், சாதாக்கியதத்துவம், ஈசுவரதத்துவம், சுத்தவித்தியாதத்துவம் என்னும் **சிவதத்துவம்** ஐந்துமாகச் சேர்ந்த முப்பத்தாறு தத்துவங்களும் சுருதியிற் கூறப்பட்டனவாம். ஆன்மதத்துவம் வித்தியாதத்துவம் சிவதத்துவம் என்னும் முத்தொகுதித் தத்துவங்களும் முறையே பிரசினோபநிடதத்து சு-ம் பிரசினத்து அ-ம் மந்திரத்திலும், சுவேதாசுவதரோபநிடதத்து க-ம் அத்தியாயத்து உ-ம் மந்திரத்திலும், பிருகஜ்ஜாபாலோபநிடதத்து சு-ம் பிராம்மணத்து கசு-ம் மந்திரத்திலும் காணப்படுகின்றன,

(81) ப்ருதிவ்யாதிச சப்தாதி வாகாத்யம் பஞ்சகம் புந:।
ச்ரோத்ராத்யஞ்ச (சிர: பார்ச்வப்ருஷ்டோதரசதுஷ்டயம்।
ஜங்காஞ்ச யோஜயேத் பச்சாத்) த்வகாத்யம் (தாதுசப்தகம்)।

மநச்சித்தஞ்ச புத்திச்சாஹங்க்ருதி: க்யாதிரேவச।
(சங்கல்பஞ்ச குண: பச்சாத) ப்ரக்ருதி: புருஷஸ்ய து।
அந்தரங்கதயா தத்வபஞ்சகம் ப்ரகீர்த்திதம்।
நியதி: காலராகச்ச வித்யாச ததநந்தரம்।
கலாச பஞ்சகமிதம் மாயோத்பந்நம் முநீச்வர।
மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந் மாயாச்ருதிரிதீரிதா।
தஜ்ஜாந்யேதாநி தத்வாநி ச்ருத்யுக்தாநி நஸம்சய:।
கால: ஸ்வபாவோ நியதிரிதிச ச்ருதிரப்ரவீத்।
ஏதத் பஞ்சகமேவாஸ்ய பஞ்சகஞ்சுகமுச்யதே।
அஜாநந் பஞ்ச தத்வாநி வித்வாநபி விமூடதீ:।
வித்யாதத்வமிதம் ப்ரோக்தம் சுத்தவித்யாமஹேச்வரௌ।
சதாசிவச்ச சக்திச்ச சிவச்சேதந்து பஞ்சகம்।
சிவதத்வமிதம் ப்ரஹ்மந் (ப்ரக்ஞாநப்ரஹ்மவாக்யத:)॥

(82) "பிருதிவிமுதலிய (பூதங்கள் ஐந்தும்), சப்தமுதலிய (சூக்குமபூதங்கள் ஐந்தும்,) வாக்குமுதலிய (கன்மேந்திரியங்கள் ஐந்தும்), சோத்திரமுதலிய (ஞானேந்திரியங்கள் ஐந்தும்), மனம் சித்தம் புத்தி அகங்காரம் (என்னும் அந்தக்கரணம் நான்கும்), (பிரகிருதியும்) ஆகச் சேர்ந்த இருபத்தினன்கும் ஆன்மதத்துவம் எனப்படும்; (1) புருடனுக்கு (2) நியதி (3) காலம் (4) இராகம் (5) வித்தை (6) கலை என்னும் தத்துவங்கள் ஐந்தும் அந்தரங்கமாகக் கூறப்பட்டன; இவை (7) மாயையினின்று உண்டாயின; அம்மாயையினின்று உண்டாகிய ஆறு தத்துவங்களும் சந்தேகமின்றிச் சுருதியிற் சொல்லப்பட்டனவாம்; இதுபற்றியே (சுவேதாசுவதர) சுருதியானது "கால: ஸ்வபாவோநியதி:" என்றறற்றொடக்கத்ததாகக் கூறிற்று; இந்த (நியதி காலம் இராகம் வித்தை கலை என்னும்) ஐந்துமே புருஷனுக்குப் பஞ்சகஞ்சுகம் எனப்படும்; இந்த ஐந்து தத்துவங்களை அறியாதவன் வித்துவானாயினும் மூடனே; இங்ஙனம் மாயை புருஷன் காலம் நியதி கலை வித்தை இராகம் என்னும் வித்தியாதத்துவம் (ஏழும்) கூறப்பட்டன; சுத்தவித்தை ஈசுவரம் சாதாக்கியம் சத்தி சிவம் என்னும் ஐந்தும் சிவதத்துவங்களாம்.

(83) ‡ ஆன்மதத்வமதோபாகே வித்யாதத்வஞ்ச மத்யமே।
ததக்ரே சிவதத்வந்து க்ரமாத் தத்வானி சந்தி ஹி॥

(84) ஆன்மதத்துவம் அடிக்கண்ணும், வித்தியாதத்துவம் நடுக்கண்ணும், சிவதத்துவம் முதற்கண்ணும் முறையே உள்ளன" என்று ஜாபாலோபநிடதம் கூறுகின்றது.

(85) போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா சர்வம் ப்ரோக்தம் த்ரிவிதம் ப்ரஹ்மமேதத்।

(86) "போக்கியம், போக்தா, பிரேரிதாரர் (உனற்றுபவர்) என்பவற்றை அறிந்தால் மூவிதமாயுள்ள இந்த எல்லாத் * தத்துவமும் சொல்லப்பட்டதாயிற்று" என்று சுவேதாசுவதரோபநிடதத்திற் (க. கஉ) காணப்படுகின்றது.

(87) யோக்தா போக்யம் ப்ரேரயிதா மந்தவ்யம் த்ரிவிதம் ஸ்ம்ருதம்
நாத:பரம் விஜாநத்பிர் வேதிதவ்யம் ஹி கிஞ்சந॥

(88) போக்கியம் போக்தா உனற்றுபவர் என்னும் மூன்றாகக் கொள்ளப்படுவது அறியற்பாற்று; அறிஞர்களால் இதன்மேல் அறியற்பாலதொன்றுமில்லை" என்று வாயுசங்கிதை பூருவபாகத்து ௪-ம் அத்தியாயத்து ௭௩-ம் சுலோகத்திற் காணப்படுகின்றது.

(89) அத தத்வசமூஹஞ்ச த்ரிவிதம் ச்ருணு பார்வதி।
சதுர்விம்சதணூநாஞ்ச அசுத்தம் போக்யகாண்டகம்।
ஆத்மதத்துவமிதி க்யாதம் வித்யாதத்வமத ச்ருணு।
தத்வம் மிச்ரமகாக்யஞ்ச போககாண்டந்து சப்தகம்।
சுத்தவித்யேச சாதாக்யம் சக்தி: சிவமிதி ஸ்ம்ருதம்।
ப்ரேரகம் சுத்ததத்வாக்யம் ஸ்வதந்த்ரம் சிவவிக்ரஹம்
அசுத்தம் சதுர்விம்சதி: சுத்தாசுத்தஞ்ச ஸப்தகம்।
நித்யம் சுத்தஞ்ச பஞ்சைதே ஷட்த்ரிம்சத்தத்வரூபகம்॥

‡ இராஜகோபாலராயராற் சுக்கிலஞு பங்குனிமீ மதுரை வாணிவிலாசயந்திரசாலையில் அச்சிடப்பட்ட ஆலாசியமான்மியத்து ௨௩௪-ம் பக்கத்துக் குறிப்புரையினும், வேதார்த்தமுறைத்த ௨௨-ம் அத்தியாயத்து ௫௬-ம் சுலோகத்தினும் காண்க.

* பிரஹ்மம் என்னும் மொழிக்குத் தத்துவம் என்னும் பொருளிருத்தலின் அங்ஙனம் பொருள் கொள்ளப்பட்டது.

(90) "உமையே! மூன்று பிரகாரமாயுள்ள தத்துவசமூகத்தைக் கேட்குதி; ஆன்மாக்களுக்குள்ள இருபத்திநான்கு தத்துவம் அசுத்ததத்துவம் எனவும், போக்கியகாண்டம் எனவும்படும்; இது ஆன்மதத்துவம் எனப் பெயர்பெறும்; இதன் பின்னர் வித்தியாதத்துவத்தைக் கேட்குதி; இது மிசிரதத்துவம் எனவும், ஏழு தத்துவம் அடங்கிய போககாண்டம் எனவும்படும்; சுத்தவித்தை ஈசுவரம் சாதாக்கியம் சத்திதத்துவம் சிவதத்துவம் என்னும் ஐந்தும் சுத்ததத்துவம் எனப்படுகின்ற சுவதந்திர சிவவடிவமாகிய பிரேரகாண்டம் எனப்படும்; இருபத்திநான்கு தத்துவமும் அசுத்த தத்துவம் எனவும், ஏழுதத்துவமும் சுத்தாசுத்ததத்துவம் எனவும், ஐந்துதத்துவமும் என்ஞான்றும் சுத்ததத்துவம் எனவும்படும்; இவை முப்பத்தாறு தத்துவசமூகமாம்" என்று சிவபெருமான் உமையம்மையார்க்குக் கூறியதாகச் சிந்தியாகமம் கூறுகின்றது. அரு-ம் பிரிவிற்கண்ட சுவேதாசுவதரோபநிடதசுருதியானது ஆன்மதத்துவ வித்தியாதத்துவ சிவதத்துவங்களை உணர்த்தியதாமெனச் சிந்தியாகமம் தெளிவுற விளக்கிற்று.

(91) ஐந்துசுத் தத்தின் கீழேழ் சுத்தாசுத் தம்ம சுத்தந்
தந்திடும் புமான்கீ ழெண்மூன் றுயதத் துவஞ்சீ வர்க்கு
வந்திடும் பிரேர காண்ட மருவுபோ கசவித் திரத்தோ
டந்தமி லணுக்க ளுக்குப் போக்கிய காண்ட மாமே.

(92) இத்தத்துவமுப்பத்தாறனுள் முன் ஐந்தும், நடுவணேழும், பின் இருபத்திநான்கும் முறையே சுத்தம், மிச்சிரம், அசுத்தம் எனவும், பிரேரகாண்டம் போகசவித்திருகாண்டம் போக்கியகாண்டம் எனவும் காரணக்குறிபெற்று முத்திறப்படும் என்பதாம" என்று சகலாகமபண்டிதர் சிவஞானசித்தியாரில் அருளிச்செய்தார். இங்ஙனம் தத்துவசந்திரிகையினும் போக்கியகாண்டம் போககாண்டம் பிரேரகாண்டம் என்னும் மூன்றும் கூறப்பட்டுள்ளன.

(93) ப்ருத்வ்யாத்யாத்மதத்வாந்தமாத்மதத்வமுதீரிதம்।
வித்யாதத்வாதி மாயாந்தம் வித்யாதத்வமுதீரிதம்।
தஸ்யோர்த்வம் சிவதத்வந்து தத்வத்ரயமுதாஹ்ருதம்॥

(94) பிருதிவிமுதற் புருஷதத்துவம் இறுதியாக ஆன்ம தத்துவம் சொல்லப்பட்டது; வித்தியாதத்துவமுதல் மாயாதத் துவம் இறுதியாக வித்தியாதத்துவம் கூறப்பட்டது; இதற்குமே ளுள்ளது சிவதத்துவம்; இங்ஙனம் மூவகைத் தத்துவம் கூறப் பட்டது" என்று சிந்தியவிசுவாகமத்தில் உரைக்கப்பட்டது.

## (உரு) ஆன்மதத்துவத்திலேதான் ஆன்மப்பிரஹ்மம்.

---

(95) ஆத்மைவசாத்மதத்வஸ்ய ஸர்வதத்வப்ரபு: ஸ்ம்ருதம்।

(96) "ஆன்மதத்துவத்தின் (சீவ)ஆன்மாவானவன் சர்வதத் துவங்களுக்கும் தலைவனாகப் (பிரஹ்மமாகக்) கொள்ளப்படுகின் றான்" என்று சுப்பிரபேதாகமம் கூறுகின்றது. இது நிர்க்கு ணோபாசகர்களுடைய முடிந்த இடம் என்றார்கள். இந்த நிர்க் குணோபாசகர்களுடைய நிர்க்குணப்பிரஹ்மபாவனை கீழ்ச்சகு ணப்பிரஹ்மோபாசனைக்கும் அத்தியாசிரமபாசுபதசகுணப் பிரஹ்மோபாசனைக்கும் நடுக்கணுள்ளது என "வீரபத்திராஸ் திர" முதலிய புஸ்தகங்களால் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. கீழ்ச்சகுணப்பிரஹ்மத்தினால் ஆசிரயிக்கப்படுவது இரண்டாவதா கிய நிர்க்குணப்பிரஹ்மோபாசனை; நிர்க்குணப்பிரஹ்மோபாசனை யினால் ஆசிரயிக்கப்படுவது மூன்றாவதாகிய அத்தியாசிரமசகுணப் பிரஹ்மோபாசனையாம். நிர்க்குணப்பிரஹ்மோபாசனையானது ஈசு வரகீதையிற் கூறப்பட்டவாறு சாங்கியயோகம் எனவும், நிர்ப்பீஜ யோகம் எனவும், கூர்மபுராணத்திற் கூறப்பட்டவாறு கர்மயோ கம் எனவும் கூறப்படும். கர்மயோகிகளாகிய நிர்க்குணோபாசகர் களுக்கு மீளப்பிறவி (புநராவர்த்தி) உண்டு என்பது

(a) தேஹிநாம் கர்மநிஷ்டாநாம் புநராவர்த்தனம் ஸ்ம் ருதம்।

என்னும் விசேஷசுருதியினால் அறியப்படும். அங்ஙனமாகவும் ச. ச. ௨௨-ம் சூத்திரபாஷ்யத்தில் ஏகான்மவாதகுரவர் கூறுவது:-

(b) ஸம்யக்தர்சநநிஷ்ட்டஸ்ய தமஸாந்து நித்யசித்தநிர்வா ண பராயணாநாம் சித்தைவாநாவிருத்தி:। ததாச்ரயணேநைவ ஹி சகுணசரணாநாமப்யநாவிருத்திசித்திரிதி॥

"நன்றாகப் (பிரஹ்ம) சாக்ஷாத்காரம்பண்ணி, அதனால் மனவிருளை அகற்றினவராய் நித்தியசித்த நிர்வாணபராயணர்க்கு (நிர்க்குணோபாசகர்களுக்கு) மீளப்பிறவி (புநராவர்த்தி) இல்லை என்பது சித்தித்தது; அந்த நிர்வாணத்தை (நிர்க்குணோபாசனையை) ஆசிரயித்தலாற் சகுணோபாசகர்களுக்கும் மீளப்பிறவி (புநராவர்த்தி) இல்லை என்பது சித்தித்தவாறாயிற்று." ஆகவே, நிர்க்குணோபாசகர்களுக்கும் கீழ்ச்சகுணோபாசகர்களுக்கும் மீளப்பிறவி இல்லை என்பது ஏகான்மவாதகுரவர் கருத்தாய் முடிந்தது. நிர்க்குணோபாசகர்களால் ஆசிரயிக்கப்படுகின்ற அத்தியாசிரம சகுணப்பிரஹ்மோபாசகர்க்குத்தான் மீளப்பிறவி இல்லை என்று சாந்தோக்கிய சுருதியும் (8. 15. 1) வேதாந்தசூத்திரமும் (4. 4. 22) கூறுகின்றன. அங்ஙனமாகவும் மீளப்பிறவியிற் செலுத்துகின்ற நிர்க்குணோபாசகர்களுக்கும், அதனை ஆசிரயிக்கின்ற கீழ்ச்சகுணோபாசகர்களுக்கும் எங்ஙனம் மீளப்பிறவி இல்லையாகும்!

## (உச) கலாதிதத்துவம் தீபத்தை நிகர்த்தமை.

---

(97) தேந ப்ரதீபகல்பேந ததாச்சந்நசிதேரணோ:।
ப்ரகாசயத்யேகதேசம் விதார்ய திமிரம் கநம்॥

(98) தீபத்தை நிகர்த்த கலாதத்துவத்தினாலே (அனந்தேசுவரர்) மலத்தினால் மறைக்கப்பட்ட அறிவுருப ஆன்மாவின் ஆணவவிருளை ஏகதேசத்திற் பிரகாசிக்கச்செய்கின்றார்" என்று மிருகேந்திராகமம் கூறுகின்றது. இங்ஙனம் ஆன்மாவின் ஞான இச்சாக்கிரியைகளைக் கலாதிதத்துவவிளக்குவாயிலாக ஏகதேசத்திற் பிரகாசிக்கச் செய்து, பாசத்துக்குரிய ஆன்மதத்துவத்தின் போக்கியப்பொருள்களில் உன்முகமாக அவ்வான்மாவைப் பிரவிருத்திக்கச் செய்தலின் வித்தியாதத்துவம் எனப் பெயர் படைத்தது.

## (உரு) ஆன்மா போக்கிய வஸ்துக்களைத் துய்த்தல்

---

(99) அநாதிராசயோபேத: ப்ரேரிதச்ச கலாதிநா।
போக்தேத்யேவம் புமாந்ப்ரோக்தோ புங்க்தே ப்ரக்ருதிஜாந்குணாந்॥

(100) "அநாதி (மூலமல) ஆசையோடு கூடி, அதுகாரணமாக (வித்தியாதத்துவத்துக்குரிய) கலாதிதத்துவங்களால் உளுற்றப்பட்டுப் போக்தா எனவும், புமான் எனவும் உரைக்கப்பட்டு, ஸ்தூலப்பிரகிருதிப்பாற்பட்ட போக்கியவஸ்துக்களைத் துய்க்கின்றான்" என்று மதங்காகமம் கூறுகின்றது. போக்கியப்பொருள்களைப் போக்தாவாகிய ஆன்மா புசிக்குமாறு செலுத்துபவர் சிவதத்துவத்தின்பாலராகிய உமாபதியாமாதலின், அவர் பிரேரிதாரர் எனப்பட்டார்.

## (உசு) வைஷ்ணவர்க்குரிய தத்துவங்கள்.

(101) வைஷ்ணவர்க்குரிய சுபாலோபநிடதத்து கூ-ம் கண்டத்துக் கூறப்பட்ட பிருதிவியாதி தத்துவங்களும், அங்ஙனம் வைஷ்ணவபுராணத்து க-ம் அம்சத்து உ-ம் அத்தியாயத்திற் காணப்படும் தத்துவங்களும், ஏகான்மவாதிகட்குரிய வராகோபநிடதத்து க-ம் அத்தியாயத்திலும், சூதகீதை உ-ம் அத்தியாயத்து ௩-ம் சுலோகமுதலிய மூன்று சுலோகங்களினும் காணப்படும் தத்துவங்களும், நாநாசீவவாதக்கட்டளையிற் கூறப்பட்ட தத்துவங்களும் ஆன்மதத்துவத்தில் அடங்கிநின்றன.

## (உஎ) தத்துவங்கள் ஏகான்மவாதிகட்குக் குறைவுறவும் சைவர்களுக்கு விரிவுறவும் கூறப்பட்டமை.

(102) ஸாங்க்யயோகப்ரஸித்தாநி தத்வாந்யபிச காநிசித்।
சிவசாஸ்த்ரப்ரஸித்தாநி ததோந்யாந்யபி க்ருத்ஸ்நச:॥

(103) "சில தத்துவங்கள் மாத்திரம் † சாங்கியயோகத்திற் பிரசித்தமாயுள்ளன; அவற்றின் வேறாகிய தத்துவமனைத்தும் சிவசாஸ்திரங்களாகிய சைவோபநிடதங்களினும் சைவாகமங்களினும் பிரசித்தமாயுள்ளன" என்று வாயுசங்கிதை பூருவபாகத்து உ௫-ம் அத்தியாயத்து க௫-ம் சுலோகம் கூறுகின்றது.

† இதனை ஈசுவரகீதையினும் சித்தாந்தலேசசங்கிரகத்தினுங் காண்க.

(104) வைஷ்ணவர்களும் ஏகான்மவாதிகளும் சாங்கிய மதாநுசாரமாக வரையப்பட்ட உபநிடதங்களினும் புராணங்களினும் கூறப்பட்ட தத்துவம் இருபத்திநான்கையுமே முடிந்த தத்துவங்களாகக்கொண்டமையால், அவர்கட்கு வித்தியாதத்துவ சிவதத்துவங்களின் உண்மை புலப்படாதுபோயிற்று. இதுபற்றியே "தத்துவமுப்பத்தாறுஞ் சிவசாஸ்திரங்களிலொழிய மற்றைச் சாஸ்திரங்களில் இல்லை" என்று மறைஞானதேசிகர் முதலாயினோர் வரைந்தார்கள்.

## (உ அ) தத்துவவியாபகம்.

---

(105) பூமேர் தசகுணம் தோயம் தோயாதக்நிஸ்ததோநில:।
அநிலாச்சாயமாகாசச்சாஸ்த்ரேஸ்மிந் பாரமேச்வரே।
ஆகாசாச்சாப்யஹங்காரஸ்தஸ்மாச்ச பரதோமஹாந்।
மஹத: பரதோ ஜ்ஞேயம் குணாநாம் த்ரிதயம் முநே।
குணத்ரயாத் ப்ரதாநாக்யம் தத்வம் சதகுணோத்தரம்।
சததோத்தரகுணநிஸ்யு: சேஷாண்யுக்தாநி சாசநே।
மாயாந்தாநிது தத்வாநி தேப்யஸ்தூர்த்வம் ஸஹஸ்ரதா।
யாவத்ஸதாசிவம் தத்வம் தத்பரம் லக்ஷயா ஸ்திதம்।
சதுஷ்கம் சக்திபர்யந்தம் ததோமேய: பர: சிவ:॥

(106) "(பிருதிவிதத்துவம் நூறுகோடி யோசனைப் பிரமாணம் உள்ளது); இதிற் பத்துமடங்கு அப்புதத்துவம்; இதிற் பத்துமடங்கு அக்கினி; இதிற் பத்துமடங்கு வாயு; இதிற் பத்துமடங்கு ஆகாசம்; இதிற் பத்துமடங்கு அகங்காரம்; இதிற் பத்துமடங்கு புத்தி; இதிற் பத்துமடங்கு குணம்; இதில் நூறுமடங்கு இராகம்; இதில் நூறுமடங்கு வித்தை; இதில் நூறுமடங்கு நியதி; இதில் நூறுமடங்கு கலை; இதில் நூறுமடங்கு காலம்; இதில் நூறுமடங்கு அசுத்தமாயை; இதில் ஆயிரமடங்கு சுத்தவித்தியாதத்துவம்; இதில் ஆயிரமடங்கு ஈசுவரதத்துவம்; இதில் ஆயிரமடங்கு சாதாக்கியதத்துவம்; இதில் இலக்ஷமடங்கு சத்திதத்துவம்; இதிலும் அளப்பரிதாய வியாபகத்தினர் (சிவதத்துவத்தினராகிய மகாருத்திர தாண்டவேசுர) பரமசிவனாம்" என்று மதங்கபாரமேசுவராகமம் கூறுகின்றது. இதற்கிசைந்தே தணிகைப்புராணம்

இராயிரந்தண்டங்குரோசமேகுரோசமிரட்டிசேர்ந்தது கெவியூதி
குரோசநான்குறல்யோசனையது நூறுகோடிமண்ணண்டத்தினளவை
தராதலமுதலாந்தத்துவக்கண்டந்தனித்தனியாயிரகோடி
விராவுமண்முதலாவொன்றனுக்கொன்றுவிளம்பியவளவைமிக்குறுமால்.

பகுதியினளவும்பதின்மடங்கென்றும்பகுதியிற்சதமடங்கராக
நிகழராகத்தின்வித்தைவித்தையினுநியதியந்நியதியிற்காலந்
தொகுதியுதத்தோடயுதங்காலத்திற்சூழ்தருங்கலைகலைதன்னிற்
றகுமொருகோடிமாயைமேல்வித்தைதானதிற்கோடிமேலயுதம்.

சுத்தவித்தையினவ்வளவுநாதாந்தஞ்சொன்முறையேறுமிவ்வனைத்து
வித்தகன்விளையாட்டாகவாக்கியதான்மெத்தியவுயிர்த்தொகையோடு
மத்திறநிற்கமண்ணிரேண்டத்தமைந்தபல்லுலகத்தினளவும்
கைத்தலங்கனிபோற்காட்டுதுமெனத்தீங்கலைமுனிமகிழவேளியம்பும்.

கூறுகின்றது.

## (உக) அநிருத்தர்முதலிய மூவரும் பிரமாதி மூவரெனப்படல்.

---

(107) ஏகா பகவதீமூர்த்திர் ஜ்ஞாநரூபா சிவாமலா।
வாசுதேவாபிதாநா ஸா குணாதீதா சுநிஷ்கலா।
த்விதீயாருத்ரசம்ஞா ஸ்யாத் தாமசீ சேஷஸம்ஜ்ஞிதா।
நிஹந்தி ஸகலம் சாந்யா வைஷ்ணவீ பரமாதநு:।
ஸத்வோத்ரிக்தா த்ருதீயாந்யா ப்ரத்யும்நேதிச ஸம்ஜ்ஞிதா।
ஜகத் ஸ்தாபயதே ஸர்வம் ஸா விஷ்ணுப்ரக்ருதிர் த்ருவா।
சதுர்த்தீ வாசுதேவஸ்ய மூர்த்திர் ப்ரஹ்மேதி ஸம்ஜ்ஞிதா।
ராஜசீ சாநிருத்தாக்யா புருஷ: ஸ்ருஷ்டிகாரிகா॥

(108) இராசதகுணத்தினையுடைய சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமாவானவர் அநிருத்தர் எனப்படுவார் என்றும், சாத்துவிக குணத்தினையுடைய காத்தற்கடவுளாகிய விஷ்ணுவானவர் பிரத்தியும்நர் எனப்படுவார் என்றும், தாமதகுணத்தினையுடைய சங்காரகர்த்தாவாகிய உருத்திரர் சேஷராகிய சங்கர்ஷணர் எனப்படுவார் என்றும், இம்மூவர்க்கும் துரியராய் நின்றார் குணாதீதராகிய நிஷ்கள மங்கள வாசுதேவராகிய நாராயணர் என்றும் கூர்மபுராணத்திற் கூறப்படுவதாக அப்பயதீக்ஷிதர் வரைந்திருத்தலின், அநிருத்தர் முதலிய மூவரும் முறையே பிரமவிஷ்ணு உருத்திரர் எனப்படுவார் என்றும், இம்மூவர்க்கும் துரியராய்

நின்றார் நாராயணப்பிரஹ்மம் என்றும் உணர்க. பிரமா விஷ்ணு உருத்திரர் என்னும் மூவர்க்கும் துரியராய் உள்ளார் நாராயணர் என்று காணப்படும் இடங்கடோறும், அம்மூவரும் பிரம விஷ்ணு உருத்திரர் எனப் பெயர்படைத்த அநிருத்தர் பிரத்தியும்நர் சங்கர்ஷணரேயாம் என்று உண்மை கடைப்பிடிக்க.

பிருதிவிமுதலிய இருபத்தினான்கு தத்துவமும் ஒடுங்கப் பெறும் பிரளயம் மகாப்பிரளயம் என்று விஷ்ணுபுராணம் கூறுகின்றது.

(109) நாஹோநராத்ரிர் ந நபோ பூமிர் நாசீத் தமோ ஜ்யோதிரபூந் நசாந்ய்த்।..........................ப்ரஹ்மபுமாந் ததாசீத்॥

(110) "அப்போது பகலும் இல்லை, இரவும் இல்லை, ஆகாசமும் இல்லை, பூமியும் இல்லை, இருளும் இல்லை, பிறவும் இல்லை, பிரஹ்மமாகிய புருஷர் (நாராயணர்) இருந்தார்" என்று விஷ்ணு புராணத்து க-ம் அம்சத்து உ-ம் அத்தியாயமும்,

(111) நைவேஹ கிஞ்ச நாக்ர ஆசீதமூலா அநாதாரா இமா: ப்ரஜா ஜாயந்தே திவ்யோ தேவ ஏகோநாராயண:।

(112) ஈண்டு முதற்கண்ணே ஒன்றும் இருந்திலது; மூலமின்றியும் ஆதாரமின்றியும் பிரஜைகள் உதிக்கின்றார்கள்; திவ்ய தேவராகிய நாராயணர் ஒருவரே இருந்தார்" என்று சுபாலோபநிடதமும்,

(113) நாராயண ஆசீந் ந ப்ரஹ்ம நேசாநோ நாக்நிஷோமௌ நேமே த்யாவா ப்ருதிவீ।

(114) "நாராயணர் இருந்தார்; பிரமா இருந்திலர்; ஈசானர் இருந்திலர்; அக்கினி சோமர்கள் இருந்திலர்; இவ்வாகாயமும் பூமியும் இருந்தில" என்று மகோபநிடதமும் கூறுகின்றன. கூறவே, பிரமா ஈசானர் எனப்பட்டோர் க0எ-ம், க0அ-ம் பிரிவுகளிற் கண்ட அநிருத்தரும் சங்கர்ஷணருமேயாம். நாராயணர் உண்ட உலகமும், அவர் வாமனரூபங்கொண்டு அளந்த உலகமும் பிரதானமாகிய பிரகிருதிக்குமேற் சென்றவாறின்றும் என உணரற்பாற்று. விஷ்ணுபுராணத்தில் மகாப்பிரளயம் எனப்பட்

டது சைவபுராணப்பிரகாரம் அவாந்தரப்பிரளயமேயாம், வித்தியாதத்துவங்களும் சிவதத்துவங்களும் அவற்றில் அடங்கிய புவனங்களும் புவனேசுவரர்களும் ஒழியப்பெறுமையினாலாம். அவை க0சு-ம் பிரிவிற் குறிக்கப்பட்ட மகாருத்திரதாண்டவேசுவர சிவபிரானால் ஒடுங்கப்பெறும் காலமே மகாப்பிரளயம் எனப்படும்.

## (ங0) பிரமாதி மூவரும் தம்முண் மாறுபட்டமை.

---

(115) த்ரயஸ்தே காரணாத்மானோ ஜாதா:ஸாக்ஷாந் மஹேச்வராத்
சராசரஸ்ய விச்வஸ்ய சர்க்கஸ்தித்யந்தஹேதவ:।
பித்ரா நியமிதா: பூர்வம் த்ரயோபி த்ரிஷு கர்மசு।
ப்ரஹ்மா ஸர்க்கே ஹரிஸ்த்ராணே ருத்ர: ஸம்ஹரணே புந:।
ததாப்யந்யோந்யமாத்ஸர்யாதந்யோந்யாதிசயாசிந:।
தபஸா தோஷயித்வா ஸ்வம் பிதரம் பரமேச்வரம்।
ப்ரஹ்மநாராயணௌ பூர்வம் ருத்ர: கல்பாந்தரேஸ்ருஜத்।
கல்பாந்தரே புநர் ப்ரஹ்மா ருத்ரவிஷ்ணூ ஜகந்மய:।
விஷ்ணுச்ச பகவாந் ருத்ரம் ப்ரஹ்மாணமஸ்ருஜத் புந:।
நாராயணம் புநர் ப்ரஹ்மா ப்ரஹ்மாணஞ்ச புநர்பவ:।
ஏவம் கல்பேஷு கல்பேஷு ப்ரஹ்மவிஷ்ணுமஹேச்வரா:।
பரஸ்பரேண ஜாயந்தே பரஸ்பரஜயைஷிண:।
தத்தத் கல்பாந்த வ்ருத்தாந்தமதிக்ருத்யமஹர்ஷிபி:।
தாநி தாநி ப்ரணீதாநி வித்வாந் தத்ர ந முஹ்யதி॥

(116) "இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமாகிய இவ்வுலகத்திற் சிருஷ்டி ஸ்திதி சங்காரங்களுக்கு ஏதுவாகிய காரணன்மாக்கள் மூவரும் மகேசுவரரினின்று நேராக உதித்தனர்; பிரமா படைப்பினும், அரி அளிப்பினும், உருத்திரர் அழிப்பினுமாக மூவரும் முத்தொழிலினும் பிதாவினால் முதற்கண்ணே நியமிக்கப்பட்டனர்; அங்ஙனம் நியமிக்கப்படினும் ஒருவரோடொருவர் பொறாமைமேற்கொண்டு, தம்முண் மேம்படக் கருதினோராய், உருத்திரர் தமது தாதையாகிய சிவபிரானைத் தவத்தினால் மகிழ்வித்து ஓர் கற்பத்திலே பிரமா நாராயணர் என்னும் இருவரையும் படைத்தனர்; பின்பு பிரமா மற்றோர் கற்பத்திலே

நாராயணர் உருத்திரர் என்னும் இருவரையும் படைத்தனர்; பின்பு விஷ்ணு (மற்றோர் கற்பத்திலே) உருத்திரர் பிரமா என்னும் இருவரையும் படைத்தனர்; இங்ஙனம் கற்பங்கடோறும் பிரமா, விஷ்ணு, உருத்திரர் என்பார் ஒருவரை மற்றொருவர் வெல்ல நினைந்து ஒருவர்பால் ஒருவர் பிறக்கின்றனர்; பெரிய இருஷிகள் அவ்வக்கற்ப விருத்தாந்தங்களைக் கொண்டு அவ்வச் சரித்திரங்களைக் கூறினர்; அறிவினையுடையான் அவைபற்றி மோகமெய்தான்" என்று வாயுசங்கிதை பூருவபாகத்து கக-ம் அத்தியாயம் கூறுகின்றது.

## (ஈக) பிரமாவின் நெற்றியில் தோன்றினவர் நீலலோகிதருத்திரர்.

---

(117) அத தத்ராஸதஸ்தஸ்ய சதுர்வக்த்ரஸ்ய தீமத:।
லலாட: ப்ரபவ: புத்ர: சிவ ஆகாத் யத்ருச்சயா॥

(118) "மிகுந்த புத்திமானாகிய நான்கு முகத்தினையுடைய பிரமா அங்கே இருந்தபோது, அவரது நெற்றியினின்று தோன்றிய சிவன் (உருத்திரர்) சுவேச்சையாக வந்தார்" என்று மகாபாரதசாந்திபருவத்து ஈ௫௦-ம் அத்தியாயத்திற் காணப்படுகின்றது.

(119) கல்பாதாவாத்மநஸ்துல்யம் சுதம் ப்ரத்யாயதஸ் தத:।
ப்ராதுராசீத் ப்ரபோரங்கே குமாரோநீலலோஹித:।
ருதந்வை ஸுஸ்வரம் ஸோத த்ரவந்ச த்விஜசத்தம।
கிம் ரோதிஷீதி தம் ப்ரஹ்மா ருதந்தம் ப்ரத்யுவாச வை।
நாம தேஹீதி தம் ஸோத ப்ரத்யுவாச ப்ரஜாபதிம்।
ருதஸ்த்வம் தேவ நாம்நாசி மாரோதீர் தைர்யமாவஹ॥

(120) "கற்பகாலத்துத் தொடக்கத்திலே பிரமாவானவர் தமக்குச் சமானமாகிய குமாரனைப் பெறல்வேண்டும் என்று தியானித்துக்கொண்டிருக்குங்கால், நீலலோகிதருத்திரர் பிரமாவின் (லலாட) அங்கத்தில் உதித்து இனிய தொனியோடு அழுதுகொண்டோடினர்; பிரமா அவரை நோக்கி, குமாரனே! ஏன் அழுகின்றனை என, அதற்கு அவர் எனக்கு நாமதேயம் கொடும் என்றார்; அது கேட்டுப் பிரமா தேவனே! உருத்திரன் என்னும்

நாமதேயத்தோடு பிரசித்தனாய் இருக்கின்றனே; அழுகை ஒழி; தைரியமாய் இரு என்றார்; பின்னரும் பெயர் கொடுக்கவேண்டும் என்று அழுங்காற் பவன் சர்வன் ஈசானன் பசுபதி பீமன் உக்கிரன் மகாதேவன் என்னும் (கoசு-ம் பிரிவிற் கூறப்பட்ட மகாருத்திர சிவனார்க்குரிய) நாமங்களைக் கொடுத்தாராக விஷ்ணு புராணத்து க-ம் அம்சத்து அ-ம் அத்தியாயத்திலும், வாயு புராண பூருவபாகத்து உஎ-ம் அத்தியாயத்திலும், மார்க்கண்டேயபுராணத்து ருஉ-ம் அத்தியாயத்திலும், கூர்மபுராண பூருவ பாகத்து கo-ம் அத்தியாயத்திலும்

(121) அநபஹதபாப்மா வா அஹமஸ்மி நாமதேயானி மே தேஹி ।

(122) "நான் பாவமற்றவனாக இருக்கவில்லை; எனக்கு நாமதேயங்கள் கொடும்" என்று வாசசநேய சதபதப்பிராஹ்மணத்து சு-ம் காண்டத்து க-ம் பிரபாடகத்து ங-ம் பிராஹ்மணத்து எ-ம் கண்டிகையினும், இருக்குவேத சாங்காயனப் பிராஹ்மணத்தினும் காணப்படுகின்றது. படவே, இங்கே கூறப்பட்ட உருத்திரர் ககஎ-ம், ககஅ-ம் பிரிவுகளிற் குறிக்கப்பட்ட பிரமாவின் நெற்றியிற்றோற்றிய நீலலோகிதருத்திரரேயாம்.

## (ஙஉ) நாராயணர் நெற்றியினின்று லோகபாலருத்திரர் பிறந்தமை.

---

(123) தம் ஹந்துமுத்யதௌ கோரௌ தாநவௌ மது கைடபௌ । தயோர் வ்யதிக்ரமம் த்ருஷ்ட்வா க்ருத்தஸ்ய பவதோ ஹரே: । லலாடாஜ்ஜாதவாந் சம்பு: சூலபாணிஸ் த்ரிலோசந: ।।

(124) "பிரமாவைக் கொல்லுமாறு துஷ்ட அசுரர்களாகிய மது கைடபர் என்னும் இருவருடைய அக்கிரமத்தைக் கண்டு கோபமுற்ற அரியினது (நாராயணரது) நெற்றியினின்று முக்கண்ணரும் சூலபாணியுமாகிய சம்பு (உருத்திரர்) உதித்தார்" என்று மகாபாரத வனபருவத்து கஉ-ம் அத்தியாயத்திலும்

(125) பரமாத்மந் பரந்தாம ஸ்ரீபதே பூபதே ப்ரபோ । த்வத்க்ரோதசம்பவோருத்ரஸ் தமஸா ச ஸமாவ்ருத: ।।

(126) "பரமான்மாவே! பரந்தாமனே! ஸ்ரீபதியே! பூப தியே! பிரபுவே! தமசினுலே சூழப்பட்ட உருத்திரர் உமது கோபத்தினல் உண்டாயினர்" என்று லிங்கபுராணத்துப் பூருவ பாகத்து ௩௬-ம் அத்தியாயத்தினும் கூறப்பட்ட உருத்திரர் ஸ்தாணுருத்திரரேயாம்; இவர் லோகபாலருத்திரர் எனவும்படுவர்.

(127) யஸ்ய ப்ரஸாதஜோ ப்ரஹ்மாருத்ரச்ச க்ரோத ஸம்பவ:

(128) "அவரது (நாராயணரது) பிரசாதத்தினற் பிரமா உதித்தார்; (அவரது) கோபத்தினின்று உருத்திரர் பிறந்தார்" என்று மகாபாரத சாந்திபருவத்து ௩௪௧-ம் அத்தியாயத்து ௧௨-ம் சுலோகம் கூறுகின்றது. இதுபற்றியன்றே,

(129) நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே। நாராயணாத் ருத் ரோ ஜாயதே।

(130) "நாராயணரினின்று பிரமா பிறக்கின்றார்; நாராய ணரின்று உருத்திரர் பிறக்கின்றார்" என்று நாராயணோபநிடதம் கூறுகின்றது.

## (௩௩) நீலலோகிதருத்திரர் நாராயண பக்தரெனப்படல்.

(131) தவ பக்தி: ஸதைவாஸ்து பக்தராஜோ பவாம்ய ஹம்। ஸர்வே லோகா ப்ருவந்த்யேவமயம் பக்த: ஸதைவ ஹி॥

(132) உம்முடைய (நாராயணருடைய) பக்தி எனக்கு (உருத்திரர்க்கு) எப்போதும் இருப்பதாக; நான் பக்தர்களுள் ளே இராஜாவாயிருக்கின்றேன்; சமஸ்த ஜனங்களும் இந்த உரு த்திரன் விஷ்ணுபக்தன் என்று எப்போதுஞ் சொல்வாராக" என்றற்றொடக்கத்தனவாகப் பதுமபுராணத்தினும், பிரமகை வர்த்தபுராணத்தினும், அக்கினிபுராணத்தினும், பிறவிடங்களி னும் கூறப்படுகின்றது. இங்ஙனம் விஷ்ணுவை உயர்வாகவும் சிவனை (உருத்திரனைப்) பக்தராகவும் கூறப்படுமிடங்களினெல் லாம், நாராயணருடைய இலாடத்திற்றோற்றிய ஸ்தாணுருத்திரரே ஆண்டுக் கூறப்பட்டார் என்றும், ௧0௬-ம் பிரிவிற் குறிக்கப் பட்ட சிவதத்துவத்தின்பாலராகிய துரிய தாண்டவேசுவர மகாருத்திரரன்றும் என்றும் உண்மை கடைப்பிடிக்க.

நாரயணன் இலாடத்திற் றோன்றினமையின் [illegible] என [illegible] அங்ஙனம் பக்தனென்றல் நீலலோகிதருத்திரர் [illegible] இருக்கின்றமை உணர்க. துரிய மூர்த்தியாகிய சிவனை அறியாதவர் [illegible]

## (௩௪) ஏகான்மவாதிகள் ஆன்மப்பிரஹ்மத்தைப் பல பெயர்களாற் கூறுதல்.

---

(133) ஏகான்மவாதத்தையுற்றுப் பேசுமிடங்களினெல்லாம் ஞானேந்திரியம், கன்மேந்திரியம், சப்தாதி, பூதாதி, அந்தக்கரணம் என்னும் இருபத்தினான்கு தத்துவங்களையும் கடந்து மூலப்பிரகிருதிப்பாற்பட்டுள்ள ஆன்மப்பிரஹ்மத்தை ஆன்மா என்றும், சத்து என்றும், அச்சுதன் என்றும், வாசுதேவன் என்றும், உருத்திரன் என்றும், சிவம் என்றும் பலநாமங்கள்கொண்டு புராணமுதலியன கூறுகின்றன. அப்பெயர்கள் கூறப்படுமிடங்களாவன:—

(134) ஏகமேவாத்விதீயம் சதித்யாஹ ச்ருதிராதராத்।

(135) "ஒரே அத்துவிதீய சத்து இருந்தது என்று சுருதி ஆதரத்தோடு கூறிற்று" என்று பிரஹ்மகீதை கூறியவிடத்துச் சத்து என்னும் பெயர்கொண்டும்,

(136) ஏக: ஸமஸ்தம் யதிஹாஸ்தி கிஞ்சித் ததச்யுதோ நாஸ்தி பரம் ததோந்யத்।

(137) "இங்கு யாதொன்று உளதோ அது முழுமையும் அச்சுதன் ஒருவனே" என்று விஷ்ணுபுராணம் **அச்சுதன்** என்னும் பெயர்கொண்டும்,

(138) வாசுதேவாபிதேயஸ்ய ஸ்வரூபம் பரமாத்மந:।

(139) "சகலஜகத்தும் வாசுதேவன் என்னும் பெயருடைய பரமான்மாவின் சொரூபமாம்" என்று அவ்விஷ்ணுபுராணம் வாசுதேவர் என்னும் பெயர்கொண்டும் ஆன்மப்பிரஹ்மம் ஆங்காங்குக் கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் விஷ்ணு உருத்திரர் என்போரைச் சமப்படுத்திக் கூறுமிடங்களினெல்லாம், மூலப்பிரகிருதிப்பாற்படாநின்ற ஆன்மப்பிரஹ்மமே அங்ஙனம் பல பெயர்களாற் கூறப்பட்டதென ஓர்க. எங்ஙனமெனிற் கூறுதும்:—

(140) "பிரமா விஷ்ணு உருத்திரன் என்னும் மூவர்க்கும் விலக்ஷணமாயுள்ள பொருள் **பிரஹ்மம்** அல்லது பிரஹ்மத்தின் பரியாயநாமமான சிவன் என்றும், பிரஹ்மம் எப்போதும் உள்ளது, மூவர் ஒருகாலத்தில் உள்ளவர் என்றும், அஃதாவது

தோன்றுதற்கு முன்னரும் ஒடுங்குதற்குப் பின்னரும் இல்லாதவர் என்றும், இங்ஙனம் மூவரையும் ஒருவர்க்கொருவர் மேலானவர் எனச் சொல்லிப் **பரமான்மசொரூபமான சிவனை** மூவர்க்கும் துரியர் என்றும், உருத்திரர்க்கும் விஷ்ணுவுக்கும் அதிஷ்டானம் பிரஹ்மமானதாலும், அந்தப் பிரஹ்மமே சிவனானதாலும், அதிஷ்டானமாகிய சிவனும் மாயாசகிதரான விஷ்ணுவும் ஒன்றென்றும் கூறுவர். ஒரே எடையுள்ள பொன்னாற் கிரீடம் ஒன்றும் சிலம்பு ஒன்றும் செய்விப்பின், அங்ஙனஞ் செய்யப்பட்ட கிரீடத்துக்கும் சிலம்புக்கும் தாரதம்மியம் எங்ஙனமோ, அங்ஙனமே உருத்திரனுக்கும் விஷ்ணுவுக்குமாம் என்றும், இதனால் உருத்திரனுக்கும் விஷ்ணுவுக்கும் ஏற்றக்குறைவு ஏற்படுகின்றது என்றும், பொன்னும் சிலம்பும் எங்ஙனம் ஒன்றோ, அங்ஙனமே சிவனும் விஷ்ணுவும் ஒன்றுமென ஏற்படுகின்றது என்றும், காரியங்களில் ஒன்றுக்கொன்று பேதமிருப்பினும் காரியத்துக்கும் காரணத்துக்கும் அபேதஞ் சொல்லலாம் என்றும், இந்த அர்த்தத்தைக்கொண்டே

(141) சிவாய விஷ்ணுரூபாய சிவரூபாய விஷ்ணவே।
சிவஸ்ய ஹ்ருதயம் விஷ்ணுர் விஷ்ணோச்ச ஹ்ருதயம் சிவ:।
யதா சிவமயோ விஷ்ணுரேவம் விஷ்ணுமய: சிவ:॥

(142) "விஷ்ணுரூபராயுள்ள சிவனுக்கும், சிவரூபராயுள்ள விஷ்ணுவுக்கும் (நமஸ்காரம்); சிவனுடைய இருதயம் விஷ்ணு; விஷ்ணுவினுடைய இருதயம் சிவன்; எங்ஙனம் விஷ்ணு சிவமயமாயுள்ளாரோ, அங்ஙனம் சிவனும் விஷ்ணுமயமாயுள்ளார்" என்று ஸ்கந்தோபநிடதம் கூறிற்று என்றும் ஏகான்மவாதிகள் கொள்வர். இவர் இங்ஙனம் கொள்ளும் கொள்கைகளெல்லாம் ௯௫-ம், ௯௯-ம் பிரிவுகளிற் கூறப்பட்ட சீவான்மாவின்மேலனவாம் என்க. இந்தச் சீவான்மாவையே அவ்வேகான்மவாதத்தினர் பிரஹ்மமாகிய சிவன் என்று கூறுவர். இங்ஙனம் வைஷ்ணவரேனும் ஏகான்மவாதிகளேனும் முறையே சிவனை விஷ்ணுவுக்குத் தாழ்த்தியேனும், விஷ்ணுவையும் சிவனையும் சமப்படுத்தியேனும் கூறுமிடங்களினெல்லாம், அக்கூற்றுக்கள் ஆன்மதத்துவத்தைப்பற்றி நின்றனவேயன்றி முப்பத்தாறும் தத்துவத்தினராகிய தாண்டவேசுவர சிவபிரானைச் சிறிதும் பற்றியவாறின்றாம் என்று ஓர்ந்து அறிஞர் மயங்கார் என்க.

இதனைத் ஸ்காந்த உபநிருங்கணம் நமனையும்
பரமென்றுன்னி [illegible] சிறப்புறச்செய்யும், வெம்மைமொ
[illegible] வீழ்வர், தம்மைய [illegible]
[illegible]

## (கரு) சிவபெருமான் நீலகண்டமெய்தினமைக்குப் பொய்க்காரணம் கூறினமை.

(143) ததார பகவாந் கண்டே மந்த்ரமூர்த்திர் மஹேசவர:I
ததா ப்ரப்ருதி தேவஸ்து நீலகண்ட இதி ச்ருதி:II

(144) மந்திரமூர்த்தியாகிய மகேசுவரர் (ஸ்ரீகண்டநாயனர்) விஷத்தைக் கண்டத்திலே தரித்தார் என்றும் அக்காலந்தொடுத்துச் சிவன் **நீலகண்டர்** எனப்படுகின்றார் எனச் சுருதி கூறியது" என்று மகாபாரத ஆதிபருவத்து கஅ-ம் அத்தியாயத்து சச-ம் சுலோகம் கூறுகின்றது. அங்ஙனமாகவும், மகாபாரத சாந்திபருவத்து ௩சஉ-ம் அத்தியாயத்து கக0-ம் சுலோகத்திலும் அரிவம்சத்திலும் "தக்ஷனுடைய யாகத்தில் நாராயணர்க்கும் உருத்திரர்க்கும் யுத்தம் விளைந்ததாகவும், அப்போது நாராயணர் உருத்திரருடைய கழுத்தைத் தமதுகையினாற்பிடித்ததாகவும், அதனால் அவருடைய கண்டத்திற் கருநிறம் எய்தியதாகவும், அதுபற்றி அவர் நீலகண்டர் எனப்பட்டார்" என்றும் கூறப்பட்டிருக்கின்றது. இது வாய்மையேயாமாயின், விஷ்ணு செயமடைந்து தக்கயாகம் அழியாது முற்றுப்பெற்றிருத்தல் வேண்டுமன்றோ. அஃதின்மையால் அவை படைத்துக்கொண்ட மொழியேயாம். சமுத்திரமதனகாலத்துக் கிளர்ந்த நஞ்சை உண்டமையால் நீலகண்டம் எய்தியது என்று மேலே கூறினமைக்கு முரணுறலானும், யாகத்தை அழிக்கச்சென்றவர் வீரபத்திரரேயன்றி உருத்திரரன்றுமாதலினாலும், அது பொருந்தாதாம் என்க.

## (கசா) சிவபெருமானது வில்லு முரிந்ததென்றமை.

(145) இராமாயணத்துப் பாலகாண்டத்து எரு-ம் சர்க்கத்திலே விஷ்ணுவுக்கும் உருத்திரருக்கும் விரோதத்தைப் பிரமாவானவர் பிறப்பித்தார் என்றும், மயன் உண்டாக்கிய இரு வில்லையும் விஷ்ணுவும் உருத்திரரும் தாங்கி யுத்தஞ் செய்தார்கள் என்றும், அக்காலையில் அவ்வுருத்திரர் தாங்கிய வில்லு முரிந்துபோயது என்றும் கூறப்படுகின்றது. அந்த வில்லு மயனு

டைய வில்லாமன்றி அது உருத்திராது சொந்த வில்லன்றும் என்றும், இருவரும் காரியகுணமூர்த்திகளாம் என்றும் கவனிக்கற்பாற்று.

## (௩எ) சிவபெருமானது லிங்கம் சபிக்கப்பட்டதென்றமை; விநாயகபுராணப் பொய்க்கதை.

---

(146) சிவாகமங்களிலே சிவனாது லிங்கம் பஞ்சப்பிரஹ்ம மந்திரசொரூபமென்று கூறப்பட்டிருந்தவிடத்தும், தாருகாவனத்து இருஷிகள் ஓமத்தினின்று கிளர்வித்த பாம்பு முதலியவற்றையெல்லாம் சிவபிரான் பிக்ஷாடனமூர்த்தியாய்நின்று செயித்து இருஷிகள் கன்மத்தினுற் கடவுளின்றி முத்தியடையலாம் என்னும் அவ்விருஷிகளுடைய மீமாஞ்சைக்கொள்கையைத் தவறென்று ஸ்தாபித்திருந்தவிடத்தும், அவரது லிங்கத்தைப்பற்றி அசப்பியமானகதை கூர்மபுராண உத்தரபாகத்து ௩அ-ம் அத்தியாயத்தினும், காளிகாகண்டத்தினும் நுழைக்கப்பட்டிருக்கின்றது. இது சைவவிரோதிகளாற் சைவத்தைத் தூஷிக்குமாறு புதிதாகப் படைத்துச் சேர்க்கப்பட்ட கதைகளாம் என யூகிக்கற்பாற்று.

(147) இங்ஙனம் விநாயகபுராணத்தில் ஓர் அசுரன் விநாயகர்தலையைச் சேதித்தான் என்று எழுதப்பட்டமையும் சாஸ்திரவிருத்தமான போலிக்கதையாம் என்று உணர்க.

## (௩அ) வாணாசுரன் கோட்டையைச் சிவபெருமான் காத்தாரெனல்.

---

(148) பசுக்களாகிய எங்கள் மனைவி புத்திரர் முதலாயினோரைக் காக்கவேண்டுமென்று சிவலிங்கஸ்தாபனஞ் செய்து பூசிக்குங்கால், அந்தப் போலிப்பூசைக்கிசைந்து திருவருள்பாலித்து எங்களையெல்லாம் காத்து வாழ்விக்கும் சிவபிரான் தம்மை நாடோறும் ஆயிரம் கைகளாற் பூசித்த வாணாசுரன் பிரார்த்தனைக்கிசைந்து அவனது கோட்டைவாசலில் நிருமிக்கப்பட்ட ஆலயத்தில் அமர்ந்து அவ்வாணாசுரனுக்கு அநுக்கிரகஞ் செய்தார். இங்ஙனஞ் செய்தமை பக்தவாத்சல்லியத்தினாலேயாம்.

அதுபற்றி எம்பெருமானுக்குக் குறைவு என்னை!! சர்வவியா பகராகி அங்கங்கே அன்பர்களுக்கு அருள்செய்யும் சிவபெருமான் வாணாசுரன்கோட்டைவாசலில் அமர்ந்து, அவனுக்கநுக்கிரகஞ் செய்துவந்தமையை இழிவுபடுத்தி வாணாசுரன்கோட்டையைச் சிவன் மானுடவேலைக்காரன்போலக் காத்தார் எனல் அடாதாம் என்க. இவ்வுண்மையை விரிவுற வடமொழி ஸ்காந்தபுராண உபதேசகாண்டத்து அ0-ம் அத்தியாயத்திற் காண்க.

## (ருக) சிவபெருமானைத் தூஷித்தற்குச் சமாதானம்.

---

(149) வைஷ்ணவேஷு புராணேஷு யோபஹர்ஷஸ்து த்ருச்ய
ருத்ரஸ்யாசௌ ஹரஸ்யாஸ்ய விபூதிரேவ கேவலம்||[தே]

(150) "வைஷ்ணவ புராணங்களினும் (பிறவிடங்களினும்) சிவன் எனப்படும் உருத்திரர் (விஷ்ணுவிடத்திற் பக்திசெய்தாரென்றுவது, விஷ்ணுவை அபிஷேகஞ்செய்து ராஜாவாகப் பிரதிஷ்டைசெய்து வணங்கினரென்றுவது) அபகர்ஷமுடையராய்க் கூறப்படுமிடங்களில், அவர் துரியசிவனாது கேவலம் விபூதியாம் (காரியருத்திரராம்)" என்று பராசரபுராணம் சமாதானம் கூறுகின்றது. மேலும்,

பிறையணிசடைமுடிப்பிரான்றன்காதைக
ளிறையுமோர்மறுவிலயாவுமேன்மையே
மறைபலசான்றுளவாய்மையேயவை
யறிஞர்கணுடியேயவற்றைக்காண்கவே.

சொல்லியபுராணமாந்தொகையுளீசனை
யல்லவர்காதைகளனையர்செய்கையு
னல்லனவிரித்திடுநவைகண்மாற்றிடு
மில்லதுமுகமனலெடுத்துக்கூறுமே.

புல்லினரேனையர்புராணந்தேரினுஞ்
சிவகதைபுணர்கிலரென்னிற்றீருமோ
வவர்மயலரசனையடைந்திடாரெனி
ரெவரெவராக்கமுமினிதுபோலுமால்.

"சிவபுராணக்கதைகள் சிறிதும் மறுவில்லாதன; அவை எவையும் பெருமைபடைத்தனவாம்; அவற்றுக்குச் சான்றுயுள்ளன வேதங்கள்; அவ்வுண்மையை அறிஞர் வேதங்களில் ஆராய்ந்து உணர்ந்துகொள்வாராக; சிவபுராணங்களை விடுத்து ஏனைய விஷ்ணுபுராணமுதலியன அவ்வத் தேவர்கள் செய்த செய்கைகளுள்ளே நல்லனவாயுள்ளன சிறிதாயிருப்பின் அவற்றை விரித்துப் பேசும்; அவர்களிடத்திற் குற்றங்கள் காணப்படின் மறைத்துவிடும்; அவற்றை மறைத்துவிடுதலோடமையாது இல்லாத கதைகளையும் முகமனாக எடுத்துக்கூறும்; உலகிலுள்ளார் விஷ்ணுபுராணமுதலியவைகளைப் படித்திருந்தாலும், அவர்கள் சந்தேகங்கள் சிவபுராணங்களைப் படித்தாலன்றித்தீரா; எங்ஙனமெனின் அரசனுடைய அகண்டைசுவரியத்தைப் போய்ப் பாராத ஒவ்வொருவனும் தன்தன் செல்வத்தையே பெரிதென்று எண்ணுமாறுபோலாம்" என்று கச்சியப்பசிவாசாரியர் அருளிய திருவாக்குகளானும் சமாதானம் நாடிக்கொள்க.

## (௧0) இருக்குவேதத்தைப்பற்றிச் சிலரது அபிப்பிராயம்.

---

(151) மோக்ஷமூல (***Max Muller***) பண்டிதரும் பிறரும் இருக்கு வேதத்தைப்பற்றி முன்வருமாறு சொல்லுகின்றார்:—

ஆரியர்களுடைய நான்கு வேதங்களுள்ளும் தலையாயது இருக்குவேதம் என்றும், அது ஆங்கில நூதன சாலைகளில் வைக்கப்பட்ட புஸ்தகசாலைகளினெல்லாம் முதலாம் ஸ்தானத்தை வகித்துக்கொண்டது என்றும், கிறிஸ்துபிறக்க ஆயிரக்கணக்காகிய வருஷங்களுக்கு முன்னே அவ்வேத மந்திரங்கள் வியாச முனிவரால் வகுக்கப்பட்டுள்ளன என்றும், லௌகிகசுகத்தின் பொருட்டு வேண்டற்பாலனவாகிய செல்வம் ஜயமுதலிய அவ்விருக்குவேதத்திற் கூறப்பட்டுள்ளன என்றும், அம்மந்திரங்களின் பொருளை அறிதல் மகாகடினம் என்றும், இருக்குவேதத்திலே **கந்தாரர், கீகடர், மகதர், அங்கர்** முதலிய நாற்பது ஜாதியார் பெயர்கள் காணப்படுகின்றன என்றும், முன்வரும் ஆரியர் தாசர் என்னும் இருதிறத்தாருள்ளே **ஆரியர்** வெண்ணிறத்தினர் என்றும், **தாசர்** கருநிறமுடையர் என்றும், ஆரியர் இந்திரனையும் அக்கினியையும் வழிபட்டுவருவாராக, தாசர் என்போர் அந்த இந்

திர அக்கினிவழிபாட்டுக்கு விரோதிகளாய், பில்லிசூனியங்களுக்குரிய பேய்த்தெய்வங்களை வழிபட்டுவந்தார் என்றும், ஆரியர் தாசர் என்னும் இருதிறத்தாரும் பொற்கோட்டை வெள்ளிக் கோட்டை இருப்புக்கோட்டைகளிலேதான் வசித்துவந்தார்கள் என்றும், இந்திரன் தன்னை வழிபட்டுவந்த திவோதாசன் என்பான்பொருட்டுத் தாசர்க்குரிய நூறுகோட்டைகளைத் தகர்த்தெறிந்தான் என்றும், பிருகஸ்பதி என்பவர் ஆரியர்க்குரிய ஆடுமாடுகளைக் கவர்ந்துகொண்டுவந்து அடைத்துவைத்த தாசருடைய கற்கோட்டைகளைத் தகர்த்தார் என்றும், தாசர் என்போர் தமது பேய்த்தெய்வங்களின்பொருட்டு எருமைகளையும் ஆடுகளையும் வெட்டிப் பலிசெலுத்திப் பலிபீடங்களிலே இரத்தம்வடியுமாறு செய்வார்கள் என்றும், ஆரியர் தமது அக்கினி வழிபாட்டின்பொருட்டுச் சேமித்துவைத்திருந்த நைவேத்தியங்களைத் தாசர் அபகரித்து உண்டுவிடுகின்றார்கள் என்றும், வேத நிகண்டுடையார் தாசர் என்பதற்கு வைதிக கிருத்தியங்களை நாசஞ்செய்பவர் என்பது பொருள் என வரைந்துள்ளார் என்றும், சாயனாசாரியர் ஆரியராவார் (வேதமந்திரங்கொண்டு) ஸ்துதிப்பவர் எனக் கூறுகின்றார் என்றும், பாஞ்சாலதேசத்தினும் கங்கையின் மேற்பாகத்துள்ள கணவாய்களினும் வசித்த ஜனங்களுக்கு அரசர்கள் இருந்தார்கள் என்றும், அவ்வரசர்கள் பெயர்களுள்ளே இட்சுவாகு என்னும் பெயர் காணப்படுகின்றது என்றும், அவ்வரசர்கள் ஆயிரம் ஸ்தம்பங்களும் ஆயிரம் வாசல்களுமுடைய கோட்டைகளில் வசித்தார்கள் என்றும், இருப்பு ஸ்தம்பங்களினாலே தாங்கப்பட்டுச் சுவர்ணத்தினால் அலங்காரஞ்செய்யப்பட்டுள்ளன அவர்கள் சிங்காசனங்கள் என்றும், இராஜசபையிலுள்ளோர்கள் மந்திரிமார் பொற்கவசங்களையும் சுவர்ண அங்கிகளையும் தரித்துத் தம்மைப் புடைசூழ்ந்து செல்ல, கீர்த்தனஞ் செய்வோர் வாழ்த்த, ஒற்றர்கள் ஆஞ்ஞையைத் தாங்கிச் செல்ல, கவுரவநிலையங்கிகளைப் பூண்டு அரசர்கள் அவைக்களத்துச் செல்வார்கள் என்றும், கம்பளங்களிற் பிரபுக்கள் உட்கார்ந்திருந்து இராஜாங்க விஷயங்களை ஆலோசிக்குமிடத்து, அரசன் சொல்வதே சுவர்ணவாக்காகக் கொள்ளப்படுகின்றது என்றும், கவிராயர்களெல்லாம் வாழ்த்தெடுப்ப, அரசர்கள் ஓர்கால் முத்துக்களால் அலங்காரஞ் செய்யப்பட்ட யானைகளிலேனும், மற்றோர்காற் குதிரைகளால் இழுக்கப்படும் இரதங்களிலேனும் செ

ல்வார்கள் என்றும், அங்ஙனஞ் செல்லுங்காற் சாரதி இரதத்தின் வலப்புறத்தினும், அரசர் இடப்புறத்தினும் இருப்பார்கள் என்றும், அரசர்களுக்கு இராஜகுமாரர்கள் உளர் என்றும், அவர்களுக்கு அரசர்கள் அளவிறந்த பொருள்களைச் சம்மானிப்பார்கள் என்றும், அங்ஙனம் பிரபுக்களுக்கும் இரதங்கள் குதிரைகள் உள்ளன என்றும், பிரபுக்களும் முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட நான்கு குதிரைகள் பூண்டு இழுக்கும் இரதங்களிலே செல்வார்கள் என்றும், சிலபிரபுக்கள் வேண்டியவாறு கொடுக்கும் தாராளகுணமுடையவர்கள் என்றும், ஏனையோர் அங்ஙனம் அல்லர் என்றும், கொடாதவனுடைய வீடு வீடன்று என்றும், துஷ்ட சுவாபமுடைய சிலர் பாலிலே ஸ்நானஞ்செய்து பிரகாசமாகிய ஆபரணங்களைத் தரித்து, பொற்சங்கிலிகளைத் தரிப்பார் என்றும், செல்வமெல்லாம் சகடக்கால்போல நிலையில்லாதன என்றும், சனங்களெல்லாம் வேளாண்மை செய்வார்கள் என்றும், கலப்பைகள் இரண்டு எருதுக்களால் இழுக்கப்படுவன என்றும், உழும்போதெல்லாம் உழவர்கள் பாடுகின்றார்கள் என்றும், விதைத்தற்கு முன்னே உழவுசாலை நெய்யும் தேனுங்கொண்டு பூசிவிடுகின்றார்கள் என்றும், வாய்க்கால் வழியாகவே நீர் பாய்ச்சப்படுகின்றது என்றும், தானியம் விளைந்தபோது அரிவாள் கொண்டே வயலை அறுப்பார்கள் என்றும், மூன்று கதிர்க்கட்டைத் தமது வயலைக் காத்த கந்தர்வம் என்னும் தெய்வத்தின் பொருட்டு வேறாக வைப்பார்கள் என்றும், நான்கு கதிர்க்கட்டுகள் வீட்டுத்தெய்வத்தின்பொருட்டு வீட்டிலே தூக்கப்படுகின்றன என்றும், இடையர்கள் ஆடுமாடு மேய்ப்பவர்கள் என்றும், பசுக்களின்பொருட்டு நீர்த்தொட்டிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன என்றும், தத்தம் தொழில்கள் செய்யும் தச்சர், கொல்லர், தட்டார், கன்னார், செம்மார், வைத்தியர், நாவிதர், வலைஞர் முதலாயினோர் உளர் என்றும், வியாதியைக் கொல்பவன் வைத்தியன் என்றும், பலவகையாகிய நோய்களின் பெயர்களும் மருந்துகளும் காணப்படுகின்றன என்றும், பிராமணர் புரோகிதர்முதலியோரும் உளராயினர் என்றும், அத்தியாபகர்கள் வேதமந்திரங்களை நெட்டுருச்செய்யுமாறு தம் சீடர்களுக்குச் சொல்லிக் கொடுக்கின்றார்கள் என்றும், விருந்தினர் உபசரிக்கப்படுகின்றார் என்றும், விருந்தினன் தன் கிருகத்துக்கு வருவானேல் அவனை விருந்து செய்வோன் முழுக்காட்டி அவனுக்கு விருந்தளித்து

விட்டபின்னர்த்தான் தான்போசனம் செய்வான் என்றும், பிரஹ்மசாரி (சன்னியாசி எனப்படும்) முனிவரும் கூறப்பட்டுள்ளார் என்றும், முனிவருட்சிலர் திகம்பரராய் ஒழுக ஏனையோர் அழுக்கேறிய வற்கலைநிறமுடைய வஸ்திரம் தரிப்பவர்கள் என்றும், நீண்டசடையுடையராயுள்ளார் என்றும், விவாகஞ் செய்யுமுறையெல்லாம் இருக்குவேதத்து ௧0-ம் மண்டலத்து அ௫-ம் சூக்தத்திற் கூறப்பட்டுள்ளன என்றும், மணவாட்டி அழகிய அங்கிதரித்துக் கண்களுக்கு அப்பியஞ்சனமிட்டுத் தோழிமாரோடு ஸ்திரீதனப் பொக்கிஷங்கொண்டு மூடுவண்டியிலிவர்ந்து தனக்கு நியமிக்கப்பட்ட மணவாளன் வீட்டுக்குச் செல்லுகின்றாள் என்றும், யாகபசுவைப் பந்தனஞ் செய்யுமாறும் அதனைக் கொல்லுமாறுங் கூறப்பட்டுள்ளன என்றும், அத்தியயனத்தினாலும் யாகத்தினாலும் மழை உலகத்தில் வருஷிக்கின்றது என்றும், அக்கினிதான் ஆரியர்க்கு முக்கிய தெய்வம் என்றும், மேலுஞ் சூரியன் பூஷன் வாயு உஷா மருத்துக்கள் சோமன் யமன் வருணன் இந்திரன் துவஷ்டா அதிதி பிருகஸ்பதி பிரஜாபதி முதலியோர் இந்துக்களுக்குரிய தெய்வங்களாம் என்றும், இந்திரனுக்கு விரோதியாயுள்ளான் விருத்திராசுரன் என்றும், நகுஷர் என்போர் அக்கினி வழிபாட்டுக்கு விரோதிகளாம் என்றும், வயோதிபம் சரீரத்தைக் கெடுத்தல்போல இந்திரன் ஐம்பதினாயிரம் கிருஷ்ணர் எனப்படும் அசுரரை வதைத்தான் என்றும், ஆதலால் இந்தியாவிற் பிராமணர் முதலிய சாதியார் எத்தனையோ வேற்றரசர்கள் எத்தனையோ ஜைனர் எத்தனையோ புத்தர்கள் முதலியோராற் கலக்குண்டவிடத்தும் இமாசலம்போலச் சலிப்பின்றி அநேக ஆயிரவருஷங்களாக இருக்குவேத முதலியவற்றிற் கூறப்பட்டவாறு தத்தம் ஒழுக்கங்களிற் குறைவுபாடின்றி ஒழுகுகின்றார் என்றும், உருத்திரர் என்பவர் சடையுடையார் என்றும், செந்நிறமுடையர் என்றும், தோலுடையுடையவர் என்றும், சங்காரஞ் செய்பவர்" என்றும் அப்பண்டிதர்கள் எழுதியிருக்கின்றார்கள்.

(152) மற்றோர்பண்டிதர் விஷ்ணு என்பவர் இந்திரன், வருணன், மருத்துக்கள், வாயு, ஆதித்தியன் என்பவர்களோடு ஒருங்கு கணிக்கப்படுகின்றாரன்றி, அந்த விஷ்ணு எல்லோர்க்கும் ஆதிக்கியராகக் கூறப்பட்டிலர் என்றும், ஆனால் மூன்று அடியினால் உலகத்தை அளந்தவரென்று மாத்திரம் இருக்குவேதத்திற்

(க.உஉ.கஎ, கஅ) கூறப்பட்டிருக்கின்றது என்றும் கூற, சாயணு சாரியர் இங்ஙனம் அளந்தமை அவரது திரிவிக்கிரமாவதாரத் தைச் சுட்டியது என்று கூறுகின்றார்.

## (சுக) அரிதாய்த் தேடியபொருள் மிக மதிப்புடையது.

(153) சமுத்திரத்தில் ஆழ்ந்துகிடக்கும் இரத்தினங்க ளைச் சுழியோடி எடுக்க அறியாது, கடற்கரையிலேயுள்ள விலை யில்லாத அற்பப்பொருள்களையே பெரும்மதிப்புடைப் பொருள் களாமெனக்கொண்டுமதிக்கும் அறிவிலிகள் போல, இருக்குவேத மகோததியிற் கிடக்கும் இரத்தினங்களை எந்தெந்தக் கருவிகொ ண்டு எடுக்கவேண்டுமோ, அந்தந்தக் கருவிகொண்டு ஆராய்ந் தெடுக்கமாட்டாது, மேலே வெளிப்படையாய்க்கிடந்த விஷயங் களைச் சிரமமின்றி எடுத்துக்காட்டி மகிழ்ந்து பாராட்டிக்கொள் ளுகின்றார்கள்.

(154) பூமிக்குள்ளே மறைந்துகிடக்கும் திரவியங்கள் அஞ்சனங்கொண்டு பார்ப்பவர்க்கே புலப்படும். சமுத்திரத்திற் கிடக்கும் சிப்பிமுத்துக்கள் அடியிலே சுழியோடிப் பார்த்தவர்க் கே கிட்டும். பிரயாசையோடு இடைவிடா முயற்சியினுற் கிட் டும் பொருள்களே அளவிறந்து விலைமதிக்கப்படுகின்றன.

(155) இருக்குவேதத்தை எத்தனையோதரம் எத்தனை யோகாலமாக ஓதிவருபவரும், அச்சிட்டுவருபவரும், பாஷ்யஞ் செய்தோரும் லௌகிகவிஷயங்களைக் கூறினர்களேயன்றி, ஆன் மாவை ஈடேற்றுதற்குரிய **மெய்ப்பொருள்** அங்குளதென அறிய ஆற்றலில்லாதவராய்ப் போனமையை நோக்க மிகுதியும் ஆச்சரியமாயிருக்கின்றது.

## (சுஉ) இதிகாசபுராணங்களைக்கொண்டு வேதத்துக்குப் பொருள் செய்யவேண்டும்.

(156) இதிஹாஸபுராணுப்யாம் வேதம் ஸமுபப்ருஂஹயேத்।
பிபேத்யல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரஹரிஷ்யதி॥

(157) "இதிகாசபுராணங்கொண்டு வேதத்துக்குப் பொருள் செய்க; வேதமானது தன்னை (இதிகாசபுராணங்களை நாடாத) அற்பகேள்வியுடையான் (நேர்ந்தவாறு பொருள்செய்து) கொன்று போடுவானோ எனப் பயப்படுகின்றது" என்று வேதவியாச மகா முனிவர் மகாபாரதம்வாயிலாக உரைத்திருப்பாராக, அதனைப் பொருட்படுத்தாதுபோனமையாற் பாஷ்யகாரர் தத்தம் மனசுக்கு இயைந்தவாறு திரிவுப்பொருள் செய்து வைத்தார்.

(158) வேதமந்திரங்களின் பொருளைச் சிறிது விரித்து விளக்குவன ஆரணியங்கள், பிராஹ்மணங்கள், உபநிடதங்கள் என்பனவாம்; இவற்றினுஞ் சிறந்து பொருளைப் பெரிதும் விளக்குவன இதிகாசபுராணங்களாம்; இவற்றினுஞ் சிறந்து பாஷ்யரூபமாய் நின்று பொருள்விளக்குவன சிவாகமங்களாம். ஆகவே, வேதமானது குடகுதேசத்து மலையிலே ஊற்றெடுக்கும் ஆதிகாவேரியையும், ஆரணியங்கள் முதலியன பகண்டஸ்தலத்துக்குச் சமீபத்திற் செல்லும் காவேரியையும், இதிகாச புராணங்கள் ஸ்ரீரங்கபட்டணத்துக்குச் சமீபத்திற் செல்லும் காவேரியையும், ஆகமங்கள் திருவானைக்காவுக்குச் சமீபத்திற் செல்லும் அகண்டகாவேரியையும் நிகர்ப்பனவாம்.

## (௩௩) பரமபதம் சிவஸ்தானமே.

---

(159) தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய:।
திவீவ சக்ஷுராததம்।

(160) "அந்த விஷ்ணுவினுடைய (சிவனுடைய) பரமாகாயபதத்தைக் கண்ணானது ஆகாயத்தில் இருத்தப்பட்டாற் போலப் பெரியோர்கள் எக்காலமும் பார்க்கின்றார்கள்" என்று இருக்குவேதத்திற் (க. உஉ. கஅ) கூறப்படுகின்றது.

(161) சிவோமஹேச்வரச்சைவ ருத்ரோவிஷ்ணு: பிதாமஹ:।
ஸம்சாரவைத்ய: ஸர்வஜ்ஞ: பரமாத்மேதி முக்யத:।

(162) "சிவன், மகேசுவரன், உருத்திரன், விஷ்ணு, பிதாமகர், சம்சாரவைத்தியர், சர்வஞ்ஞர், பரமாத்துமா (என்னும் அஷ்டநாமங்களும்) முக்கியமாகச் (சிவபெருமானுக்குச் செல்லும்)" என்று வாயுசங்கிதை பூருவபாகத்து உஅ-ம் அத்தியாயத்து உஉ-ம் சுலோகம் கூறுகின்றது.

(163) சிவதத்வாதி பூம்யந்தம் சரீராதி கடாதிசl
வ்யாப்யாதிதிஷ்டதி சிவஸ்ததோ விஷ்ணுருதாஹ்ருத:ll

(164) "சிவதத்துவமுதற் பிருதிவியீறுகச் சரீரமுதலியவற்றையும் கடமுதலியவற்றையும் வியாபித்து அதிஷ்டித்து நிற்றலிற் சிவன் விஷ்ணு எனப்படுவர்" என்று வாயுசங்கிதை பூருவபாகத்து உஅ-ம் அத்தியாயத்து ҧகூ-ம் சுலோகம் கூறுகின்றது. ஆகலின், "விஷ்ணுவின் பரமபதம்" என்றது சிவனாது (பரமாகாய) பரமபதம் எனப் பொருள் கொள்ளப்படும். அத்துவா என்னுஞ் சொல்லுக்கொண்டும் அது சிவனாது பரமபதம் எனப் பொருள்கொள்ளப்படும் என்றுணர்த்த கடவல்லியுபநிடதமானது

(165) ஸோத்வந: பாரமாப்நோதி தத்விஷ்ணோ: பரமம் பதம்l

(166) (முக்தனாகிய) அவன் (அறுவித) அத்துவாவின் கரைக்கண்ணதாகிய சிவனாருடைய (பரமாகாய) பரமபதத்தை அடைகின்றான்" என்று கூறுமாற்றால், அத்துவாவின் கரைக்கண்ணது (பரமவியோம) பரமபதமாம் எனப் பெறப்படுகின்றது.

(167) ஊர்த்வமூலோர்வாக் சாக ஏஷோச்வத்த: ஸநாதந:l

(168) "வேர் மேலாயும், சாகைகள் கீழாயும்(வளரும்) பழைய அரசமரம் ஒன்று உளது" என்னும் கடோபநிடதத்து சூ-வது வல்லியின் க-ம் மந்திரம் அத்துவாவையும், பரமாகாயபரமபதத்தையும் குறிக்கின்றது. பரமபதத்தைப் பரமவியோமம் என்பது

(169) யோகிநாமம்ருதம் ஸ்தாநம் வ்யோமாக்யம் பரமம் பதம்l

(170) "(தியான) யோகிகளுடைய அமிர்த (சிவ)ஸ்தானம் வியோமம் எனப்படுகின்ற பரமபதமாம்" என்று கூர்மபுராண பூருவபாகத்து உ-ம் அத்தியாயத்திற் காணப்படுகின்றது. அமிர்தம் என்றது சிவனார் திருநாமம். இது

(171) ஏதாநி ஹவா அம்ருதஸ்ய நாமதேயாநிl

(172) "இவை அமிர்தத்தின் (சிவத்தின்) பெயர்கள்" என்னும் ஜாபாலோபநிடதத்தினால் அறியப்படுகின்றது. வியோமம் என்பதும், ஆகாயம் என்பதும் பராசத்தியாரின் திருநாமங்களாம் என்பது

(173) மாஹேச்வரீசக்திரநாதிசித்தா வ்யோமாபிதாநா திவிராஜ தீவ।

(174) "அநாதிசித்தராயுள்ள வியோமம் எனப் பெயர் படைத்த சிவசத்தியார் ஆகாயத்திற் பிரகாசித்தல்போல" என்னும் கூர்மபுராண உத்தரபாகத்து ௩அ-ம் அத்தியாயத்தினுலும்,

(175) யஸ்ய ஸா பரமாதேவீ சக்திராகாசஸம்ஜ்ஞிதா।

(176) "யாதொருவருடைய பரமதேவியாகிய சத்தியானவர் ஆகாசம் எனப் பெயர் படைத்தார்" என்னும் கூர்மபுராண உத்தரபாகத்து ௩க-ம் அத்தியாயத்தினுலும் பெறப்படும்.

(177) கலாதத்வஞ்ச புவநம் வர்ணம் பதமத: பரம்।
மந்த்ரச்சேதி ஸமாசேந ஷடத்வா பரிபட்யதே॥

(178) "அத்துவாவானது மந்திரம், பதம், வர்ணம், புவனம், தத்துவம், கலை என அறுவகைப்படும்" என்று வாயுசங்கிதை உத்தரபாகத்து கரு-ம் அத்தியாயத்து உ-ம் சுலோகம் கூறுகின்றது. மந்திரம், பதம், வர்ணம் என்னும் மூன்று அத்துவாவும் சப்தாத்துவா எனவும், புவனம், தத்துவம், கலை என்னும் மூன்று அத்துவாவும் அர்த்தாத்துவா எனவும்படும். இது,

(179) தத்ரசப்தாஸ்த்ரயோத்வாநஸ்த்ரயச்சார்த்தா: ஸமீரிதா:।
மந்த்ராத்வாச பதாத்வாச வர்ணாத்வாசேதி சப்தத:।
புவநாத்வாச தத்வாத்வா கலாத்வா சார்த்த: க்ரமாத்॥

என்னும் வாயுசங்கிதை பூருவபாகத்து உரு-ம் அத்தியாயத்து அ-ம், க௦-ஞ் சுலோகங்களினுற்றெளியப்படும். இவ்வறுவித அத்துவாக்களுள்ளே தத்துவாத்துவாவானது

(180) சிவதத்வாதி பூம்யந்தம் தத்வாத்வா ஸமுதாஹ்ருத:।

(181) "சிவதத்துவமுதற் பிருதிவிதத்துவம் இறுதியாகிய முப்பத்தாறும் தத்துவாத்துவா எனப்படும்" என்று வாயுசங்கிதை உத்தரபாகத்து கரு-ம் அத்தியாயத்து ச-ம் சுலோகம் கூறுகின்றது. மந்திரம் ஈசானமுதற் பதினொன்று எனவும், பதம் வியோமவியாபினிமுதல் எண்பத்தொன்று எனவும், வர்ணம் அகாரமுதல் ஐம்பத்தொன்று எனவும், புவனம் காலாக்கினிமுதல் இருநூற்றிருபத்திநான்கு எனவும், தத்துவம் சிவ

தத்துவமுதல் முப்பத்தாறு எனவும், கலை நிவிர்த்திமுதல் ஐந்து எனவும் சித்தாந்தசாராவளியில் உதகரித்த ஆகமசுலோகங்களால் அறியப்படுகின்றது. விஷ்ணுசப்தம் கசுஙுஎம் கசுசஎம் இலக்கங்களிற் கூறியவாறு முப்பத்தாறு தத்துவங்களையும், வியாபித்த சிவபெருமானையும், அத்துவாக்களுள் ஒன்றாகிய தத்துவாத்துவா (கஅ0-ம் பிரிவில்) முப்பத்தாறு தத்துவங்களையும் குறிக்கின்றன. குறிக்கவே, அறுவித அத்துவாவின் கரைக்கண்ணதாகிய சிவபெருமானது பரமபதத்தைப் (பரமாகாய பராசத்தியாரை) பெரியோர்கள் எப்போதும் பார்க்கின்றார்கள் என்று இருக்குவேத மந்திரத்துக்குப் பொருள் செய்யப்படும். கடவல்லியிற்போந்த அத்துவாசப்தத்துக்குச் சம்சாரகதி என்னு பொருள்கோடல் ஒவ்வாது; யாதினாலெனின்,

(182) அத்வநாமத்வபதே ச்ரேஷ்டஸ்யாத்வந: பாரமசியl

(183) "(அறுவித) அத்துவாக்களுள்ளே அத்துவபதியாயுள்ளவரே! முக்கியமாகிய அத்துவாவின் (பிரணவத்தின்) எல்லையை அடைவிக்கின்றேன்" என்னும் மந்திரப்பிரசிநோபநிடதத்தினாலும்,

(184) அத்வாதீதம் துரீயாக்யம் நிர்வாணம் பரமம் பதம்l

(185) "அத்துவாக்களுக்கு அதீதமாயும், துரியம் எனப்பெயர்படைத்ததாயுமுள்ள நிர்வாணமாகிய (சிவனாது) பரமாகாயபரமபதம்" எனவும்,

(186) அத்வநாமத்வபதி மத்வவிதோவதந்தி தஸ்மை நம: ஸகலலோக விலக்ஷணாயl

(187) "அத்துவாக்களுக்கு அத்துவபதியாயுள்ளவர் என்று அத்துவாக்களை அறிந்தவர்கள் சொல்லுகின்றார்களோ, உலகத்துக்கு விலக்ஷணமாகிய அவர்க்கு நமஸ்காரம்" எனவும் கூறும் வாயுசங்கிதையினாலும் வலியுறுத்தப்படுமாதலின் என்க.

(188) விஷ்ணுவினுடைய பரமபதம் என்று சுபாலோபநிடதப்பிரகாரம் கொள்ளவேண்டில், உ0கூ-ம் பிரிவிற் கூறியவாறு ஆன்மதத்துவப் பிரதிஷ்டாகலையிற் பிரகிருதிப்பாற்பட்ட விஷ்ணுவினுடைய பரமபதம் என வைஷ்ணவர்கள் அறிவார்களாக.

(189) ஜ்ஞாதம் யேந நிஜம் ரூபம் கைவல்யம் பரமம் பதம்।

(190) "எவனால் வாஸ்தவமாகிய ஆன்மசொரூபம் அறியப்பட்டதோ, அதுவே கைவல்லியபரமபதம்" என்று ஏகான்மவாத யோகசிகோபநிடதமும்,

(191) தந்மநோ விலயம் யாந்தி தத்விஷ்ணோ: பரமம்பதம்।

(192) "மனசானது லயிக்கப்பெறுவது விஷ்ணுவின் பரமபதம்" என்று ஏகான்மவாத மண்டலப்பிராஹ்மணோபநிடதமும் கூறியபொருளும் மூலப்பிரகிருதிப்பாற்பட்ட ஆன்மப்பிரஹ்மத்தில் முற்றிய என்று ஏகான்மவாதிகள் அறிவார்களாக.

(193) இருக்குவேதத்து க-ம் மண்டலத்து உஉ-ம் சூக்தத்து உ0-ம் மந்திரத்துக்கு முன்னுள்ள கசு-ம், கஎ-ம், கஅ-ம் மந்திரங்களும், சாமவேதத்து கூ-ம் பிரபாடகத்து கசு-ம் மந்திரத்துக்கு முன்னுள்ள கரு-ம், கச-ம் மந்திரங்களும், பின்னுள்ள கஅ-ம் மந்திரமும் விஷ்ணுவின் திரிவிக்கிரமாவதாரத்தைச் சுட்டிய என்றும், அதனால் உ0-ம் மந்திரத்துப் பரமபதம் திரிவிக்கிரமரது (விஷ்ணுவினது) பரமபதம் எனக் கொள்ளவேண்டும் என்றும் சொல்வது (195-ம் 196-ம் பிரிவுகளின்படி) பொருந்தாது. ஆதலின், இருக்குவேதத்து க-ம் மண்டலத்து உஉ-ம் சூக்தத்து உ0-ம் மந்திரத்துக்கு முன்னுள்ள கசு-ம், கஎ-ம், கஅ-ம் மந்திரங்களும், சாமவேதத்துள்ள கூ-ம் பிரபாடகத்துச் சொற்றிரிவில்லாது போந்த அந்த கரு-ம், கச-ம் மந்திரங்களும் பின்னுள்ள கஅ-ம் மந்திரமும் கற்பனு மந்திரங்களாம். சுக்கிலயசுர்வேதம் உத்தரதேசத்திலே பெரும்பான்மையோரால் நிரந்தரம் யாண்டும் அத்தியயனஞ் செய்யப்படுவதொன்றாகலானும், கிருஷ்ணயசுர்வேதமும் அவ்வாறே தக்ஷிணதேசத்தில் அத்தியயனஞ் செய்யப்படுவதொன்றாகலானும் கருசு-ம் பிரிவின் மந்திரம் காணப்படும் அச்சுக்கிலயசுர்வேதத்து சு-ம் அத்தியாயத்து ரு-ம் மந்திரத்துக்கும், கிருஷ்ணயசுர்வேதத்து ச-ம் காண்டத்து உ-ம் பிரசினத்து கூ-ம் அநுவாகத்து ௩-ம் மந்திரத்துக்கும் முன்னுள்ளது பின்னுவது அந்த மூன்று மந்திரங்களையுஞ் சேர்க்க அவகாசமில்லாமற்போயிற்று.

(194) அம்மூன்று மந்திரங்களும் விஷ்ணுவின் வாமனாவதாரத்தைச் சுட்டிய என்றும், அதனால் விஷ்ணுவின் பரமபதம் என்றது சிவனாரது பரமாகாயபரமபதம் அன்று என்றும் கொள்ளின்,

(195) ப்ரஹ்ருத்யோரசி ஹஸ்தேந நிபாத்யோத்க்ருத்யச த்வசம்।
ஆத்மந: கஞ்சுகத்வேந ததாவாநீலகோமளம்।
தஸ்யாஸ்த்யபி மஹத்தீர்க்கம் கங்காளாக்யம் ததௌ கரே॥

(196) "கையினால் அந்தத் திரிவிக்கிரமர் மார்பின்கண்ணே ஓர் அறை அறைந்து, அவரைக் கீழே வீழ்த்தி மிக்க நீல கோமளமாகிய அவரது தோலை உரித்துத் தமக்குச் சட்டையாகத் தரித்து, நீண்ட கங்காளத்தைத் தமது திருக்கரத்திற் கொண்டார்" என ஸ்காந்த உபதேசகாண்டம் கூறுகின்றமையானும், இங்ஙனம் வாமனாவதாரரின் தோலைச் சட்டையாகவும், கங்காளத்தைக் கையிலே ஓர் ஊன்று கோலாகவுங்கொண்டு, அவர் மாமிசங்களைத் தமது திருமேனியிற் பூசிக்கொண்டு, தெற்குமுகமாய்க் கங்காளேசுவரர் என்னும் திருநாமத்தோடு நிலவுவது சிறுபுலியூர் என்னும் ஸ்தலத்திற் பிரத்தியக்ஷமாய்க் காணப்படலானும், விஷ்ணுவின்பரமபதம் என்றது திரிவிக்கிரமரது வைகுண்ட பதமாகாதாம்; அது மிகுதியும் கீழ்ப்பட்ட பிரகிருதிப்பாலதாமாதலினாலும், மீளப்பிறவியிற் செலுத்துவதொன்றாகலானும், பரமபதம் என்றது பரப்பிரகிருதிப்பாற்பட்ட உ00-ம் பிரிவிற் கூறப்பட்டவாறு அநுக்கிரகசக்கரத்துச் சிவனாரது பரமபதமேயாம்.

## (சச) ஐந்து கலாசக்கரங்கள்.

---

(197) பஞ்சரே சக்ரே பரிவர்த்தமாநே தஸ்மிந்நாதஸ்துர் புவநாநி விச்வா।

(198) (சிருஷ்டியாதி) பஞ்ச (கிருத்திய அவயவங்களாகிய) ஆரங்களைத் (தனித்தனியேகொண்ட ஐந்து) சக்கரங்கள் மேன்மேல் வியாபித்துள்ளன என்றும், அவற்றிற் (காலாக்கினி புவனமுதல் அநாசிருதைபுவனம் இறுதியாகிய) சமஸ்தபுவனங்களும் நிலையுறுவன" என்று இருக்குவேதம் (க. கசுச. கங) கூறுகின்றது.

(199) அநுக்ரஹமயம் சக்ரம் சாந்த்யதீதகலாமயம்।
சதாசிவாதிஷ்டிதஞ்ச பரமம் பதமுச்யதே॥
ஏததேவ பதம் ப்ராப்யம் யதீநாம் பாவிதாத்மநாம்।
சதாசிவோபாஸகாநாம் ப்ரணவாசக்தசேதஸாம்।
ஏததேவ பதம் ப்ராப்ய தேந ஸாகம் முநீச்வரா:।
புக்த்வா சுவிபுலாந் போகாந் தேவேந ப்ரஹ்மரூபிணா।
மஹாப்ரலயஸம்பூதௌ சிவசாம்யம் பஜந்தி ஹி।
தே ப்ரஹ்மலோக இதிச ச்ருதிராஹ ஸநாதநீ।
ஐச்வர்யம் ஸதாசிவஸ்யாபி ஸமஷ்டிரிதமேவ ஹி।
ஸர்வைச்வர்யேண ஸம்பந்ந இத்யாஹாதர்வணீ சிகா।
ஸர்வைச்வர்யப்ரதாத்ருத்வமஸ்யைவ ப்ரவதந்தி ஹி।
ஸதாசிவ: ஸமஷ்டி: ஸ்யாதாகாசாதிபதி: ப்ரபு:।
அஸ்யைவ வ்யஷ்டிதாபந்நம் மஹேசாதி சதுஷ்டயம்।
ஸதாசிவசஹஸ்ராம்சாந்மஹேசஸ்ய ஸமுத்பவ:।

(200) (ஈசானத்துக்குரிய) சாந்தியதீதகலாமயமாகிய சக்கரம் அநுக்கிரகமயமாயுள்ளது; ‡ தாண்டவேசுவர சதாசிவராலே அதிஷ்டிக்கப்பட்ட பரமபதம் என்று சொல்லப்படுகின்றது; யதிகளாகிய உபாசகர்களுக்கு இந்தப் பதமே அடையத்தக்கது; (தாண்டவேசுவர) சதாசிவோபாசகர்களும் பிரணவத்திருத்திய அறிவுடையோர்களும் இந்தப் பதத்தை அடைந்து, அவரோடு விரிவாகிய போகங்களைப் புசித்து, தேவராகிய (சதாசிவப்) பிரஹ்மரூபத்தோடு வசிக்கின்றார்; மகாப்பிரளய காலத்திலே சிவசாமியத்தை அடைகின்றார்கள்; இதுபற்றியே அவர்கள் பிரஹ்மலோகத்திலே என்றது நித்தியமாகிய சுருதி; (தாண்டவேசுவர) சதாசிவருடைய ஐசுவரியம் சமஷ்டியாகக் கூறப்படுகின்றது;

‡ பதி: ஸதாசிவோ ஜ்ஞேயோ மந்த்ராத்மா மந்த்ரவிக்ரஹ:।
சர்வமந்த்ராதிபச்சாஸௌ ஸ்ருஷ்டி ஸம்ஹாரககாரக.॥

"பதியாவார் சதாசிவர்; இவர் மந்திரான்மாவும், மந்திரவடிவினரும், சர்வமந்திரங்களுக்கும் அதிபரும், சிருஷ்டி (திதி) சங்கார (திரோபவ அநுக்கிரகம்) என்னும் பஞ்சகிருத்தியங்களைச் செய்பவருமாயுள்ளார்" என்று சர்வஞ்ஞானோத்தரம் கூறினமை தாண்டவேசுவர சதாசிவரையே யாம். மேலும், "தேவாரம் வேதசாரம்" என்னும் புஸ்தகத்து ௩௮௩-ம் பக்கத்துச் சிவபெருமானுக்குள்ள வடிவம் மூன்றனுள்ளே, இத்தாண்டவேசுவர சதாசிவப்பெருமானது வடிவம் சூக்ஷுமவடிவமாம்.

சர்வைசுவரியத்தோடு கூடினவர் என்று அதர்வசிகை கூறிற்று; ஐசுவரியமனைத்தையும் கொடுக்குந்தன்மை இவர்க்கே கூறப்படுகின்றது; (திருச்சிற்றம்பல) ஆகாசாதிபதிப்பிரபுவாகிய சதாசிவரே (தாண்டவேசுவரரே) சமஷ்டியாகக் கொள்ளப்படுகின்றார்; அவருடைய வியஷ்டியை அடைந்தவர் மகேசுவரர்முதலிய நால்வருமேயாம்; சதாசிவருடைய ஆயிரத்திலொருபங்கினராகிய மகேசுரர் தோற்றினர்" என்று கைலாசசங்கிதை கூறுகின்றது.

(201) தஸ்மிந் ஹம்ஸோ ப்ராம்யதே ப்ரஹ்மசக்ரே।

—சுவேதாசுவதரோபநிடதம், க. சு.

(202) ஹம்சோநாம ஸதாசிவ:।

—காரணாகமம்.

(203) "அந்தப் பிரஹ்ம (அநுக்கிரக) சக்கரத்திலே ஹம்சர் எனப்படும் (தாண்டவேசுவரராகிய) சதாசிவப்பிரஹ்மம் சரிக்கின்றது" என்று சுவேதாசுவதரோபநிடதமும் காரணாகமமும் கூறுகின்றமையால், அநுக்கிரகசக்கரம் பிரஹ்மசக்கரம் எனப்படும்.

(204) திரோபாவாத்மகம் சக்ரம் பவேச்சாந்திகலாமயம்।
மஹேச்வராதிஷ்டிதஞ்ச பதமேதததுத்தமம்।
அஸ்யைவ வ்யஸ்டிரூபம் ஸ்யாதீச்வராதி சதுஷ்டயம்।
ஈசோவிச்வேச்வர: பச்சாத் பரமேசஸ்தத:பரம்।
ஸர்வேச்வர இதிதந்து திரோதாசக்ரமுத்தமம்।
மஹேச்வர ஸஹஸ்ராம்சாத்ருத்ரமூர்த்திரஜாயத॥

(205) "(தற்புருஷத்துக்குரிய) சாந்திகலை திரோதானசக்கரம்; அதனை அதிஷ்டிப்பவர் மகேசுவரர்; அவருக்கு ஈசர், விசுவேசுவரர், பரமேசுவரர், சர்வேசுவரர் என நான்கு வியூகர் உளர்; அவர் அச்சக்கரத்திலே திரோதானத்தொழிலேயன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வர்; மகேசுவரருடைய ஆயிரத்தில் ஒரு கூறாக உருத்திரமூர்த்தி பிறந்தார்" என்றும்,

(206) ஸம்ஹாராக்யமிதம் சக்ரம் வித்யாரூபகலாமயம்।
அதிஷ்டிதஞ்ச ருத்ரேண பதமேதந் நிராமயம்।
அஸ்யைவ வ்யஷ்டிரூபம் ஸ்யாச்சிவாத்யத சதுஷ்டயம்।
சிவோஹரோம்ருடபவௌ விதிதஞ்சக்ரமத்புதம்।
ஸம்ஹ்ருதாவபி ஸ்ருஷ்ட்யாதி க்ருத்யாநாம் பஞ்சகம் விபோ:।
ருத்ரமூர்த்தே: ஸஹஸ்ராம்சாத் விஷ்ணுரேவாபவஜ்ஜநி:॥

(207) "(அகோரத்துக்குரிய) வித்தியாகலை சங்காரசக்கரம்; அதனை அதிஷ்டிப்பவர் உருத்திரர்; அவருக்குச் சிவன், அரர், மிருடர், பவர் என்னும் நான்கு வியூகர் உளர்; அவர் அச்சக்கரத்திற் சங்காரத்தொழிலையன்றி ஏனைய நான்கு கிருத்தியங்களுஞ் செய்வார்; உருத்திரமூர்த்தியின் ஆயிரத்திலொருபங்காய் விஷ்ணு தோற்றினார்" என்றும்,

(208) ஸ்திதிசக்ரமிதம் ப்ரஹ்மந் ப்ரதிஷ்டாரூபமுத்தமம்।
ஜநார்த்தநாதிஷ்டிதஞ்ச பரமம் பதமுச்யதே।
நமாசக்தியுதோவாமே ஸர்வரக்ஷாகரோமஹாந்।
அஸ்யைவ வாசுதேவாதி சதுஷ்கம் வ்யஷ்டிதாம் கதம்।
வாசுதேவோநிருத்தச்ச தத: ஸங்கர்ஷண: பர:।
ப்ரத்யும்நச்சேதி விக்யாதம் ஸ்திதிசக்ரமிதம் பரம்।
ஸ்திதாவபிது ஸ்ருஷ்ட்யாதி க்ருத்யாநாம் பஞ்சகம் விபோ:।
வைஷ்ணவாநாமிதம் சக்ரம் ஸாலோக்யாதி பதப்ரதம்।
விஷ்ணோரேவ ஸஹஸ்ராம்சாத் ஸம்பபூவ பிதாமஹ:॥

(209) "(வாமதேவத்துக்குரிய) பிரதிஷ்டாகலை ஸ்திதிசக்கரம்; அதனை அதிஷ்டிப்பவர் விஷ்ணு; இது அவரது பரமபதம்; அவருக்கு வாசுதேவர், அநிருத்தர், பிரத்தியும்நர், சங்கர்ஷணர் என நான்கு வியூகர் உளர்; அவர் அச்சக்கரத்திற் காத்தற்றொழிலையன்றி ஏனைய நான்கு தொழில்களுஞ் செய்வார்; விஷ்ணுவின் ஆயிரத்தில் ஒருபங்கிலிருந்து பிரமாவானவர் உற்பத்தியாயினர்" என்றும்,

(210) நிவ்ருத்திரூபமாக்யாதம் ஸ்ருஷ்டிசக்ரமிதம் புதை:।
பிதாமஹாதிஷ்டிதஞ்ச பதமேதத்தி சோபிதம்।
ஹிரண்யகர்ப்பாத்யஸ்யைவ வ்யஷ்டிரூபம்சதுஷ்டயம்।
ஹிரண்யகர்ப்போத விராட் புருஷ: கால ஏவச।
ஜகத்ச்ருஷ்டாவபி முநே க்ருத்யாநாம் பஞ்சகம் விபோ:।
அஸ்மிந்நபி சதுஷ்கேது சகாராணும் ப்ரணவோ பவேத்।
மஹேசாதி க்ரமாதேவ கௌண்யா வ்ருத்யா ஸவாசக:।
இதம் கலு ஜகச்சக்ரம் ச்ருதிஸ்ம்ருதவைபவம்।
பஞ்சாரம் சக்ரமிதி ஹி ஸம்ததாதி ச்ருதிரிதம் முநே।
ஸ்ருஷ்ட்யாதி பஞ்சாவயவம் பஞ்சாரமிதி கத்யதே।
பரிதோ வர்த்ததே யஸ்மாத் தஸ்மாச்சக்ர மிதீரிதம்॥

(211) "(சத்தியோசாதத்துக்குரிய) நிவிர்த்திகலை சிருஷ்டி சக்கரம்; இதனை அதிஷ்டிப்பவர் பிரமா; அவருக்கு இரணியகருப்பர், விராட்டு, புருஷர், காலர் என நான்கு வியூகர் உளர்; அவர் அச்சக்கரத்திற் சிருஷ்டித்தொழிலேயன்றி ஏனைய நான்கு தொழில்களும் செய்வார்; இந்த மகேசன் உருத்திரன் விஷ்ணு பிரமா என்னும் நால்வருடைய சக்கரங்களுக்கும் பிரணவம் உளது; மகேசர்முதலிய நால்வருக்கும் கௌணவிருத்தியினால் அது வாசகமாய்ப்போந்தது; இந்த ஜகத்சக்கரமானது சுருதியிற் கேட்கப்பட்ட வைபவமாம்; **பஞ்சாரம் சக்கரம்** என்று சுருதியானது ஸ்துதிக்கின்றது; சிருஷ்டிமுதலிய ஐந்து அவயவமும் பஞ்சாரம் என்று சொல்லப்படுகின்றது; (நிவிர்த்திகலாசக்கரத்துக்குமேற் பிரதிஷ்டாகலாசக்கரமும், இதற்குமேல் வித்தியாகலாசக்கரமும், இதற்குமேற் சாந்திகலாசக்கரமும், இதற்குமேற் சாந்தியதீத கலாசக்கரமும்) உளவாதலினாற் **சக்கரம்** எனச் சொல்லப்படுகின்றது" என்றும் கைலாசசங்கிதை கூறுகின்றது.

(212) எ௬-ம் பிரிவுமுதல் ௬௬-ம் பிரிவிறுதியாக வேதத்திலும், புராணத்திலும், சிவாகமத்திலும் பிரதிபாதிக்கப்பட்ட தத்துவம் முப்பத்தாறும் ஈண்டுக் கவனிக்கற்பாற்றும். அநுக்கிரகசதாசிவசக்கரத்திற் சத்திதத்துவசிவதத்துவங்களும், திரோதான மகேசுவரசக்கரத்திற் சதாசிவதத்துவம், மகேசுவரதத்துவம், சுத்தவித்தியாதத்துவம் என்னும் மூன்று தத்துவங்களும், சங்காருத்திரசக்கரத்தில் அசுத்தமாயைமுதற் புருஷதத்துவம் இறுதியாகிய ஏழு தத்துவங்களும், ஸ்திதிக்குரிய விஷ்ணுசக்கரத்திற் புத்திதத்துவமுதல் அப்புதத்துவம் இறுதியாகிய இருபத்துமூன்று தத்துவங்களும், பிரமாவுக்குரிய சிருஷ்டிசக்கரத்திற் பிருதிவிதத்துவம் ஒன்றுமாகிய முப்பத்தாறும் அடங்கினறவாறு தேர்க.

## (௫௫) அநுக்கிரகசக்கரத்துச் சதாசிவ தாண்டவேசுவரரே அதர்வசிகையில் ஈசானர் எனப்படல்.

---

(213) த்யாதீதேசாநம் ப்ரத்யாயிதவ்யம் ஸர்வமிதம் ப்ரஹ்மவிஷ்ணு ருத்ரேந்த்ராஸ்தே ஸம்ப்ரஸூயந்தே1 ஸர்வாணி சேந்த்ரியாணி ஸஹபூதைர் ந காரணம் காரணாநாம் தாதா த்யா

நா காரணந்து த்யேய: ஸர்வைச்வர்ய ஸம்பந்ந: ஸர்வேச்வர: சம்புராகாசமத்யே||

(214) மிகவும் தியானிக்கற்பாலராகிய ஈசானரைத் தியானிக்க; அந்தப் பிரமவிஷ்ணு உருத்திர இந்திரர்களாகிய இவரெல்லாம் உற்பத்தியாகின்றனர்; எல்லா இந்திரியங்களும் பூதங்களுடனே கூட (உற்பத்தியாகின்றன); காரணமும் காரணங்களைப் படைத்தோரும் கருதினோருமாகியவர் (உற்பவித்தல்) இன்று; காரணமும் சர்வைசுவரிய சம்பன்னரும், சர்வேசுவரரும், சம்புவுமாகியவரே ஆகாயமத்தியிற் றியானிக்கற்பாலர்" என்று அதர்வசிகை கூறிற்று.

(215) ஈண்டு ஈசானரைத் தியானிக்க என்றமையால் கசகூ-ம், உ00-ம் பிரிவுகளிற் கூறப்பட்ட அநுக்கிரகமய சக்கரத்துச் (தாண்டவேசுவர) சதாசிவரைத் தியானிக்க என்றும், "பிரமவிஷ்ணு உருத்திர இந்திரர்களாகிய இவரெல்லாம் உற்பத்தியாகின்றனர்" என்றமையால், உக0-ம், உகக-ம் பிரிவுகளிற் கண்ட நிவிர்த்திகலாசக்கரத்துக்குரிய பிரமாவும், உ0அ-ம், உ0கூ-ம் பிரிவுகளிற் கண்ட பிரதிஷ்டாகலாசக்கரத்துக்குரிய விஷ்ணுவும், உ0சு-ம், உ0எ-ம் பிரிவுகளிற் கண்ட சங்காரசக்கரத்துக்குரிய உருத்திரரும், உ0ச-ம், உ0ரு-ம் பிரிவுகளிற் கண்ட திரோபவசக்கரத்துக்குரிய மகேசுவரரும் († இந்திரரும்) உற்பத்தியாகின்றனர் என்றும் அறியப்படுகின்றது. இந்த ஈசானர் உ00-ம் இலக்கத்திற் கண்டபிரகாரம் சாந்தியதீதகலா சக்கரத்தினர் எனவும், இவர் (திருச்சிற்றம்பல) ஆகாசாதிபதியாகிய சதாசிவர் எனவும், அவருடைய பதம் பரமபதம் எனவும், சர்வைசுவரியத்தோடு கூடினவர் அதர்வசிகையிற் கூறப்பட்ட ஈசான தாண்டவேசுவர * சதாசிவர் எனவும் உணர்க.

---

† இந்திரர் என்னும் மொழி ஈசுவரர் (மகேசுவரர்) மேற்று என்பதைப் "பஞ்சரத்தினஸ்துதி"யின் உ-ம் சுலோக வியாக்கியானத்திற் காண்க.

* சதாசிவர் சிவதத்துவத்தினர் என்பது திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரது நன்மாமணா பாடியருளிய "தத்துவவிளக்க"த்து உகூ-ம் திருச்செய்யுளால் அறிக. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் "பொன்றையவிலங்கொளி"என்ற தேவாரத்தில் "ஆடலேசிணைப்பதேசியமமே"என்று தாண்டவேசுவரரது திருநடனத்தையே தியானிப்பதாக அருளினார்; சேக்கிழார்பெருமானும் "நின்று நீயாடல் செய்கை நினைப்பதே நியமமாகுமென்று பூம்புகலிமன்னரின் றமிழ்ப்பதிகம்பாட" என்று அருளிச்செய்தார்.

## (சசு) அநுக்கிரக சக்கரத்துச் சிவபெருமானையுற்று இருக்குவேதம் கூறினமை.

(216) ஹிரண்யகர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே பூதஸ்ய
ஜாத: பதிரேக ஆஸீத்। ஸதாதார ப்ருதிவீம்
த்யாமுதேமாம் கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥
—இருக்குவேதம், க0. கஉக. க.

(217) (பொன்னைத் தம்மகத்துட் கொண்டமையால்) இரண்ணியகருப்பர் எனப்படும் பிரஜாபதி (பசுப)தியாகிய (தாண்டவேசுவர சிவபெருமான்) முதற்கண்ணே இருந்தார்; பூதமனைத்துக்கும் ஒரே பதியாக இருந்தார்; பின்னரும் அவர் இந்தப் பிருதிவியையும் அந்தரிக்ஷத்தையும் தாங்குகின்றார்; (அங்ஙனமாயின்) எந்தத் தேவர்பொருட்டு அவிசுகொண்டு வழிபடுவோம்" எனவும்,

(218) ய ஆத்மதா பலதா யஸ்ய விச்வ உபாஸதே
தே ப்ரசிஷம் யஸ்ய தேவா:। யஸ்ய சாயாம்ருதம்
யஸ்ய ம்ருத்யு: கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥
—இருக்குவேதம், க0. கஉக. உ.

(219) "எவர் ஆன்மாக்களுக்குப் பிதாவாயுள்ளாரோ, பலத்துக்குத் தாதாவாயுள்ளாரோ, எவருடைய உற்கிருஷ்டமாகிய ஆஞ்ஞாசத்தியை உலகமெல்லாம் உபாசிக்கின்றனவோ, அங்ஙனம் தேவர்களும் அவருடைய ஆஞ்ஞையைப் பிரார்த்திக்கின்றார்களோ, எவருக்கு அமிருதத்துவமும் மிருத்தியுவும் சாயைபோலப் (வசப்பட்டுளவோ), (அங்ஙனமாயின் இந்தச் சிவபெருமானைவிடுத்து) எந்தத் தேவர்பொருட்டு அவிசுகொண்டு வழிபடுவோம்" எனவும் இருக்குவேதம் கூறுகின்றது.

(220) அவருடைய ஆஞ்ஞை என்றமையாற் பராசத்தி பெறப்பட்டது.

(221) ய: ப்ராணதோ நிமிஷதோ மஹித்வைக இத்ராஜா ஜகதோ பபூவ। ய ஈசே அஸ்ய த்விபத: சதுஷ்பத: கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥
—இருக்குவேதம், க0, கஉக. ௩.

(222) "எவர் (சிவபெருமான்) விழிப்பனவும் தூங்குவனவுமாகிய பிரபஞ்சத்துக்குத் (தம்) மகிமையினால் ஒரு (அத்துவிதியராய்) இராஜாவாய் இருந்தாரோ, எவர் காணப்படுகின்ற இருகாலும் நாற்காலுமுடையவற்றைப் (பசுக்களை) ஆளுகின்றவராய் உளரோ (அங்ஙனமாயின், இந்தச் சிவபெருமானைவிடுத்து) எந்தத் தேவர்பொருட்டு அவிசுகொண்டு வழிபடுவோம்" என இருக்குவேதம் கூறுகின்றது.

(223) ஏஷாமீசே பசுபதி: பசூநாம் சதுஷ்பதா முதச த்விபதாம்।

(224) "நாற்காலும் இருகாலுமுடைய பசுக்களைப் பசுக்களுக்குப் பதியாயுள்ளார் ஆளுகின்றார்" என யசுர்வேதம் (ரு. க. ச. ரு.) கூறுகின்றமையின், அவர் பசுபதி எனப்பட்டார்.

(225) யஸ்ய மே ஹிமவந்தோ மஹித்வா யஸ்ய ஸமுத்ரம் ரஸயா ஸஹாஹு:। யஸ்யேமா: ப்ரதிசோ யஸ்ய பாஹு
கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥

—இருக்குவேதம், க0. கஉக ச.

(226) இந்த மலைகளெல்லாம் எவருடைய (பசுபதியுடைய) ஐசுவரியம் என்று கூறுகின்றார்களோ, நதியோடு கூடிய சமுத்திரமனைத்தும் எவரது பாக்கியம் என்று கூறுகின்றார்களோ, இந்த (அக்கினிதிக்குமுதல் ஈசானதிக்கிறுதியாகிய) கோணத்திசையனைத்தும் எவருடைய புயங்கள் என்று கூறுகின்றார்களோ, (அந்தப் பசுபதியாகிய சிவபெருமானை விடுத்து) எந்தத் தேவர்பொருட்டு அவிசுகொண்டு வழிபடுவோம்" எனவும்,

(227) யேந த்யௌருக்ரா ப்ருதிவீ ச த்ருஹ்ளா யேந ஸ்வ: ஸ்தபிதம் யேந நாக:। யோ அந்தரிக்ஷே ரஜஸோ விமாந:
கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥

—இருக்குவேதம், க0. கஉக. ரு.

(228) "எந்தப் (பசுபதியினால்) அந்தரிக்ஷமானது இறுகி உள்ளதோ, பிருதிவியானது எவரால் திடமாக்கப்பட்டதோ, எவராற் சுவர்க்கம் கீழேவிழாது ஸ்தம்பமாய் நிறுத்தப்பட்டதோ, ஆதித்தியனும் அந்தரிக்ஷமும் எவரால் ஸ்தம்பிக்கப்பட்டனவோ, எவர் அந்தரிக்ஷத்திலுள்ள உலகத்தின் அளவை அறிந்தாரோ, (இந்தப் பசுபதியைவிடுத்து) எந்தத் தேவர்பொருட்டு

அவிசுகொண்டு வழிபடுவோம்" என இருக்குவேதம் கூறு கின்றது.

(229) வேதாந்தசூத்திரத்து க-ம் அத்தியாயத்து ங-ம் பாதத்து கூ-ம், க௦-ம் சூத்திரங்களில் இப்பொருள் அடங்கி நின்றவாறு தேர்க.

(230) யம் க்ரந்தஸீ அவஸா தஸ் தபானே அப்யைக்ஷதாம் மநஸா ரேஜமாநே। யத்ராதிஸூர உதிதோ விபாதி கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥

—இருக்குவேதம், க௦. கஉக. கூ.

(231) "இரக்ஷணார்த்தம் அழுகின்றனவாகிய ஆகாயமும் பூமியும் (பசுபதியினாற்) சிருஷ்டிக்கப்பட்டுத் தைரியமடைந்த போது எந்தப் பசுபதியை அவை அருளினால் நோக்கினவோ, அப்போது (அவ்விரண்டும்) பிரகாசித்தபோது ஆதாரமாயுள்ள பசுபதியிடத்திற் சூரியன் பிரகாசிக்கின்றதோ, (இந்தப் பசுபதியை விடுத்து) எந்தத் தேவர்பொருட்டு அவிசுகொண்டு வழிபடுவோம்" என இருக்குவேதம் கூறுகின்றது.

(232) இம்மந்திரம் "அவருடைய பிரகாசத்தினால் ஈதெல்லாம் பிரகாசிக்கின்றன" என்னும் கடவல்லி (ரு. கரு) மந்திரத்தின் பொருளை அடக்கிநின்றது.

(233) ஆபோஹயத்ப்ருஹதீர்விச்வமாயந்கர்ப்பம் ததாநா ஜநயந்தீரக்நிம்। ததோ தேவாநாம் ஸமவர்த்ததாஸுரேக: கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥

—இருக்குவேதம், க௦. கஉக. எ.

(234) "பெரிய அக்கினியைக் கர்ப்பமாகப் பிறப்பித்துத் தாங்குகின்றனவாய அப்புக்கள் உலகத்தை அடக்கியிருந்தபோது, தேவர்களுக்குப் பிராணனாயுள்ள (அசு எனப்படும்) பராசத்தியாகிய ஒன்று உளதாயிற்றே, (அப்பசுபதியைவிடுத்து) எந்தத் தேவர்பொருட்டு அவிசுகொண்டு வழிபடுவோம்" என இருக்குவேதம் கூறுகின்றது.

(235) இங்கே அசு என்றது ஐதரேயோபநிடதத்திற் (ரு. உ) காணப்படும் பராசத்தியாரின் பதினெட்டு நாமங்களுள் ஒன்று.

(236) ய: சித்ராபோமஹிநா பர்யபச்யத்தக்ஷம் ததாநா ஜநயந்தீர் யஜ்ஞம்। யோ தேவேஷ்வதிதேவ ஏக ஆசீத் கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥

—இருக்குவேதம், க0. கஉக. அ.

(237) "எவர் வலிமையைத் தாங்கியனவாய் யஞ்ஞத்தைப் பிறப்பிப்பனவாயுள்ள அப்புக்களைக் கண்டாரோ, எவர் தேவர்களுள்ளே மகாதேவராக உளராயினரோ, (இந்த மகாதேவனை விடுத்து) எந்தத் தேவர்பொருட்டு அவிசுகொண்டு வழிபடுவோம்" எனவும்,

(238) மாநோ ஹிம்சீஜ்ஜநிதா ய: ப்ருதிவ்யா யோவா திவம் ஸத்யதர்மா ஜஜாந। ய: சாபச்சந்த்ரா ப்ருஹதீர் ஜஜாந கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥

—இருக்குவேதம், க0. கஉக. கூ.

(239) "எவர் பிருதிவிக்குத் தாதாவாய் உள்ளாரோ, எவர் சத்தியதருமராயிருக்கின்றாரோ, எவர் அந்தரிக்ஷலோகங்களை உண்டாக்கினாரோ, எவர் அப்புக்களையும் பெரிய சந்திரனையும் உண்டாக்கினாரோ, எவர் நம்மை இம்சிக்கமாட்டாரோ (இந்தச் சிவபெருமானை விடுத்து) எந்தத் தேவர்பொருட்டு அவிசுகொண்டு வழிபடுவோம்" எனவும்,

(240) ப்ரஜாபதே நத்வதேதாந்யந்யோ விச்வா ஜாதாநி பரிதா பபூவ। யத் காமாஸ்தே ஜுஹுமஸ் தந்நோ அஸ்து வயம் ஸ்யாமபதயோ ரயீணாம்॥

—இருக்குவேதம், க0. கஉக. க0.

(241) "பசுபதியே! உம்மைவிட்டுப் பிறரொருவரிலரோ, இந்தப் படைக்கப்பட்ட உலகமனைத்தும் உம்முள்ளே அடங்கியுள்ளனவோ, உம்மிடத்தில் எதை விரும்புகின்றேனோ அதைக் கொடுப்பீராக" எனவும் இருக்குவேதம் கூறுகின்றது.

## (சஎ) புவனங்களுக்குத் தலைவர் சிவபெருமான்.

இந்த அநுக்கிரகசக்கரத்துச் சிவபெருமானையே

(242) புவநஸ்யயஸ்பதி:।

—இருக்குவேதம், கO. கஉஅ. எ.

(243) "புவனபதி" எனவும்,

(244) புவநஸ்ய ராஜா।

இருக்குவேதம், கO. கஅஅ. உ.

"புவனத்துக்கு இராஜா" எனவும்,

(245) புவநஸ்ய பிதரம்।

—இருக்குவேதம், சு. சகூ. கO.

(246) "புவனத்துக்குப் பிதாவை" எனவும் இருக்குவேதம் கூறுகின்றது.

## (சஅ) சிவபெருமான் பொன்வண்ணர்.

ய: சுக்ர இவ ஸூர்யோ ஹிரண்யமிவ ரோசதே।
ச்ரேஷ்டோ தேவாநாம் வஸு:॥

(247) "எந்த உருத்திரர் சூரியனை ஒத்த ஒளியினராய்ப் பொற்பிரகாசத்தினராயுள்ளாரோ, அவர் தேவர்களுள்ளே சிரேஷ்டராகிய சிவபெருமான்" என இருக்குவேதம் (க. சங. ரு) கூறுகின்றது.

## (சகூ) சிவபெருமான் சடையுடையர்.

(248) அயம் ஸோம: கபர்த்திநே।

(249) "இந்தச் சோமலதைச் சாறுனது சடையுடைய உருத்திரர் (சிவபெருமான்) பொருட்டுப் பாய்கின்றது" என இருக்குவேதம் (கூ. கூஎ. கக) கூறுகின்றது.

"பொன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ண

## (௫௦) சிவபெருமான் சர்வவியாபகர்.

(250) விச்வத: சட்சுருதவிச்வதோமுகோவிச்வதோபாகுருத
விச்வத: பாத்। ஸம்பாஹுப்யாம் தமதி ஸம்பதத்ரைர்
த்யாவா பூமீ ஜநயந் தேவ ஏக:॥

(251) "எங்கும் கண்ணையும், எங்கும் முகத்தையும், எங்கும் கையையும், எங்கும் அடியையுமுடையராய்த் தமது கரங்களினாலும் சிறகுகளினாலும் மண்ணையும் விண்ணையும் இயைத்துப் படைப்பவர் அந்தக் கடவுள் ஒருவரேயாம்" என இருக்குவேதம் (௧௦. ௮௧. ௩) கூறுகின்றது.

## (௫௧) சிவபெருமான் பல திருநாமங்களினாற் கூறப்படுபவர்.

(252) இந்த்ரம் மித்ரம் வருணமக்நிமாஹுரதோ திவ்ய:
சுபர்ணோ கருத்மாந்। ஏகம் ஸத்விப்ரா பஹுதா வதந்த்
யக்நிம் யமம் மாதரிச்வாநமாஹு:॥

(253) "பெரியோர் ஏகரைச் § சத்து என்றும், இந்திரன் என்றும், மித்திரன் என்றும், வருணன் என்றும், அக்கினி என்றும், திவ்ய நல்ல இறகுகளையுடைய கருடன் என்றும், யமன் என்றும், மாதரிச்வான் என்றும் பலநாமங்களினாற் கூறுகின்றார்" என இருக்குவேதம் (௧. ௧௬௪. ௪௬) கூறுகின்றது.

(254) ப்ரசாசிதாரம் ஸர்வேஷாமணீயாம்ஸமணோரபி।
ருக்மாபம் ஸ்வப்நதிகம்யம் வித்யாத் தம் புருஷம் பரம்।
ஏதமேகே வதந்த்யக்நிம் மநுமந்யே ப்ரஜாபதிம்।
இந்த்ரமேகே பரே ப்ராணமபரே ப்ரஹ்மசாச்வதம்॥

---

§ சத்தி: சிவச்ச ஸச்சப்த ப்ரக்ருதிப்ரத்யயோர்திதௌ॥
"சத்தியும் சிவனும் சத்து என்னும் பதத்தின் பிரகிருதியும் பிரத்தியயமுமாகக் கூறப்பட்டனர்" என்னும் அபியுக்தருத்தியினாற் சத்து என்றது சத்தியையும் சிவனையும் உணர்த்தும். இந்தச் சத்தையே உத்தரவேதமுடையார்

ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு

என்னும் திருக்குறளில் உள்ளது எனக் கூறினர்.

(255) "(பிருகதாரணியோபநிடதம் கூறுமாறு) சேதனுசேதனப்பிரபஞ்சத்தைத் தமது ஆஞ்ஞையினுல் ஆளுகின்ற அக்ஷரப்பிரஹ்மமும், (கடவல்லியுபநிடதமும் கைவல்லியோபநிடதமும் கூறுமாறு) அணுவுக்கணுவாகிய தாதாவும், (முண்டகோபநிடதமும் இருக்குவேதமும் கூறுமாறு) பொன்வண்ணரும், ஈசரும், (சாந்தோக்கியோபநிடதம் கூறுமாறு) சொப்பனத்திலே அடையற்பாலதாகிய சிவன்ருள் எனப்படும் சத்தும், (பிரசினோபநிடதம் கூறுமாறு) தகராகாயத்தின்கண்ணேயுள்ள புருஷரும் பரருமாகப் புகழப்படும் ஏகரைச் சிலர் அக்கினி என்றும், வேறு சிலர் பிரஜாபதி என்றும், வேறு சிலர் இந்திரன் என்றும், வேறு சிலர் பிராணன் என்றும், சிலர் சாசுவதமாகிய பிரஹ்மம் என்றும் கூறுவர்" என்று மநுதர்மசாஸ்திரம் கூறுகின்றமையின், சிவபெருமான் இருக்குவேதத்தில் அக்கினிமுதலிய பெயர்களாற் கூறப்படுகின்ருர் எனத் தெளிவுறப் புலப்படுகின்றது.

(256) தேவேஷ்வதிதேவ:1

—இருக்குவேதம், க0. கஉக. அ.

(257) ("அக்கினி இந்திரன்முதலிய) தேவர்களுக்கு அவர் அதிதேவர் (எனவே மகாதேவர்)" எனவும்,

(258) ஸவிதா பச்சாத் சவிதா புரஸ்தாத் ஸவிதோத்தராத் சவிதாதராத்தாத்1

—இருக்குவேதம், க0. ங௬. க௪.

(259) "சவிதாவாகிய சூரியன் பின்புறத்துள்ளான்; முன்புறத்துள்ளான்; மேற்புறத்துள்ளான்; கீழ்ப்புறத்துள்ளான்" எனவும்,

(260) ப்ருஹஸ்பதிர் ந: பரிபாது பச்சாதுதோத்தரஸ்மாதத ராத்..............1 இந்த்ர: புரஸ்தாதுதமத்ய தோந:...........11

—இருக்குவேதம், க0. ௪ங. கக.

(261) "பிருகஸ்பதி பக்கங்களிலிருந்தும், மேற்புறத்திருந்தும், கீழ்ப்புறத்திருந்தும் நம்மைக் காக்க; இந்திரன் முற்புறத்திருந்தும் நடுப்புறத்திருந்தும் நம்மைக் காக்க" எனவும்,

(262) அக்நிர் முதா திவ: ககுத்பதி: ப்ருதிவ்யா அயம்।

—இருக்குவேதம், அ. சச. கக.

(263) "அக்கினியானது தலையாய்ச் சுவர்க்கத்தின் பாலது; அந்த அக்கினி பிருதிவிக்குப் பதியாயுள்ளது" எனவும்,

(264) அதிதிர் த்யௌரதிதிரந்தரிக்ஷமதிதிர் மாதா ஸ பிதா ஸ புத்ர:।

—இருக்குவேதம், க. அகூ. க0.

(265) "அதிதியானது சுவர்க்கம்; அதிதி அந்தரிக்ஷம்; அதிதி மாதா, பிதா, புத்திரன்" எனவும் இருக்குவேதம் கூறுகின்றது. ஈண்டு அதிதி எனப்பட்டவர் சூரியனிற் கிரணம்போலச் சிவபிரானினின்று வேறுருத பராசத்தியார் என்க.

(266) இங்ஙனம் சூரியன், பிரகஸ்பதி, இந்திரன், அக்கினி என்போர்க்கு இராப்போது பகற்போதுகளாகிய எக்காலமும் முன் பின் மேல் கீழ் எங்கும் வியாபித்து, நம்மைக் காத்தல் முடியாதாமாதலின், அங்ஙனம் காக்குந்தன்மை சிவபெருமான் ஒருவர்க்குச் செல்லுமாதலின், சூரியன் முதலியவாகக் கூறப்பட்டவர் சிவபெருமானேயாம். ஆகலின், சிவபெருமானே (மேலே உருச-ம், உருரு-ம் பிரிவுகளில் மனுதர்மசாஸ்திரம் கூறியவாறு) இருக்குவேதத்திற் பல திருநாமங்களாற் கூறப்பட்டார்.

## (ருஉ) சிருஷ்டிக்குமுன்னர்ச் சிவபெருமான் ஒருவரே உளர்.

---

(267) நாஸதாஸீந் நோ ஸதாஸீத்।

—இருக்குவேதம், க0. கஉகூ. க.

ததேகம் (ஆஸீத்)

—இருக்குவேதம், க0. கஉகூ. உ.

(268) "சத்தும் இல்லை; அசத்தும் இல்லை; அந்த ஒரே பொருள்மாத்திரம் இருந்தது" என்று இருக்குவேதம் கூறுகின்றது.

(269) சத்தும் இல்லை, அசத்தும் இல்லை என்றமையின், சத்தும் அசத்துமாகிய பசுபாசங்களுடைய சொரூபசத்து நிஷேதிக்கப்படவில்லை; பின் நாமரூபவிபாகத்துக்கு அருகமாகிய ஸ்தூலரூபமே நிஷேதிக்கப்பட்டது இதனை நீலகண்ட பாஷ்யத்திற் (க உ. கூ) காண்க. எனவே, பதிபசுபாசங்கள் அநாதிக்கண்ணவெனப் பெறப்பட்டது.

(270) ததேகம் தஸ்மாதந்யம் ந பர: கிஞ்சந ஆஸ।

—இருக்குவேதம், ௧௦. ௧௨௯. ௨.

(271) "அந்த ஒன்றே இருந்தது; அதனை விட்டு மற்றொன்றிருந்திலது" எனவும்,

(272) காமஸ்ததக்ரே ஸமவர்த்தத।

—இருக்குவேதம், ௧௦. ௧௨௯. ௪.

(273) "காமம் எனப்படும் பராசத்தி அதற்குச் (சிருஷ்டிக்கு) முன்னர் இருந்தது" எனவும் இருக்குவேதம் கூறுகின்றது.

(274) ஐதரேயோபநிடதத்து ௫-ம் கண்டத்து ௨-ம் மந்திரத்திற் காமம் என்னும் பெயர் பராசத்தியின் பதினெண் நாமங்களுள் ஒன்றாகக் காணப்படுகின்றது.

(275) யதாதமஸ்தந்ந திவா ந ராத்ரிர் நஸந்நசாஸந்
சிவ ஏவ கேவல:। தத்க்ஷரம் தத்ஸவிதுர்வரேண்யம்
ப்ராஜ்ஞாச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ॥

(276) "எப்போது இருள் உளதாய், பகலுமின்றி இரவுமின்றிச் சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ, அப்போது சிவன் ஒருவரே இருந்தார்; அந்தச் (சிவ) சூரியனுடைய அந்த அழியாத முக்கியப்பொருளாகிய பிரஞ்ஞை எனப்படும் பழைய பராசத்தி உதித்தார்" எனச் சுவேதாசுவதரம் கூறுகின்றமையின், இருக்குவேதத்தில் ஏகர் எனக் கூறப்பட்டவர் சிவபெருமானே எனவும், அவரினின்று பின்னர்த் தோற்றியவர் பராசத்தி எனவும் பெறப்பட்டது.

(277) இங்கே பிரஞ்ஞை என்னும் மொழி ஐதரேயோபநிடதத்திற் (௫. ௨) காணப்படும் பராசத்தியாரின் பதினெண் நாமங்களுள் ஒன்றாம். சத்தும் இல்லை, அசத்தும் இல்லை என்றமையாற் பசுபாசங்களின் வியத்திநிலை நிஷேதிக்கப்பட்டது எனவும், சொரூபநிலை நிஷேதிக்கப்படவில்லை எனவும் உணர்க.

(278) § அர்வாக் தேவா அஸ்ய விஸர்ஜநேநாதா கோவேத யத ஆபபூவ।

(279) "சிருஷ்டிக்குப் பின்னர்த்தான் தேவர்கள் உளராயினர்; இது எங்கிருந்து பிறந்தது என யார் அறிவார்" என இருக்குவேதம் (கO. கஉகூ. சு) வினவுகின்றது.

(280) § யோ ஸ்யாத்யக்ஷ: பரமே வ்யோமந் ஸோ அங்கவேத யதிவா ந வேத।

(281) "பரமவியோமத்துள்ள அந்த அத்தியக்ஷராகிய அவரே அதனை அறிவார்; மற்றெவரும் அறியார்" என எ-ம் மந்திரம் உத்தரம் இறுத்தது. அந்தப் பரமவியோமத்துள்ள அத்தியக்ஷர் யாரெனின்,

(282) ய ஏஷோந்தர்ஹ்ருதய ஆகாசஸ்தஸ்மிந் சேதே ஸர்வஸ்ய வசீ ஸர்வஸ்யேசாந: ஸர்வஸ்யாதிபதி:।

(283) "எது இதயத்துள் ஆகாசமாய் (திருச்சிற்றம்பலமாய்) இருக்கின்றதோ, அதில் அனைத்தையும் வசீகரிப்பவரும், அனைத்துக்கும் அதிபதியும், அனைத்துக்கும் ஈசானருமாயினர் அமர்கின்றார்" என்று பிருகதாரணியம் கூறுமாற்றால், பரமவியோமத்தினர் ஈசானர் எனப் பெறப்படுகின்றது. அந்த ஈசானர் உகரு-ம், உகச-ம் பிரிவுகளிற் காணப்பட்ட அநுக்கிரகசக்கரத்து (அதர்வசிகை கூறுமாறு) ஈசானராம் என்க.

## (ரு) பரமாகாயத்து அத்தியக்ஷர் ஈசானராகிய நிருத்தமூர்த்தி.

(284) ஈசாநம் ந்ருத்த ரூபந்து பஞ்சமந்த்ராத்மகம் பரம்।
ப்ரஹ்மரந்த்ரே சிவம் வித்யா தூர்த்வே ந்ருத்தம் விசிந்தயேத்।
த்வாதசாந்தாத் பரோபஸ்மாததிரூட்மஸ்திதோ விது:।
ஆநந்தந்ருத்தக: ஸாக்ஷாத்தேவ தேவோ ஜகத்குரு:॥

---

§ இம்மந்திரங்கள் தைத்திரீய யசுர்வேதபிராஹ்மணத்திலும் (உ அ. கூ. எரு, எசு) காணப்படுகின்றன.

(285) "பஞ்சமந்திரான்மகபராகிய ஈசானரைத் தாண்டவேசுவரர் என்றும், பிரஹ்மரந்திரத்திலே (சாதாக்கியதத்துவத்துச்) சிவன் உளராயினர் என்றும் அறிக; அவர்க்கு மேலுள்ள (சமஷ்டிரூபசதாசிவ) தாண்டவேசுவரரைத் தியானிக்க; துவாதசாந்தத்துக்கு மேலுள்ளாராதலின் அவர் அதிசூக்குமவடிவினர் என அறிகின்றார்கள்; அவர் நேரே தேவதேவரும் ஜகத்குருவுமாகிய ஆனந்ததாண்டவேசுவரராம் (நிருத்த மூர்த்தியாம்)" என்று காரணாகமம் கூறுகின்றது. கூறவே, இருக்குவேதத்துக் கூறப்பட்ட பரமாகாயத்து அத்தியக்ஷர் சூக்குமவடிவினராகிய சமஷ்டிரூப மகாசதாசிவ தாண்டவேசுவரர் என்றும், அவர் முப்பத்தாறும் தத்துவத்தினர் என்றும் உணர்க.

(286) ஸாதாக்யஸ்ய ததூர்த்வேது விந்யஸேந் ந்ருத்தரூபகம்।

(287) "(முப்பத்தினான்காம்) தத்துவத்தினராகிய சதாசிவநாயனார்க்குமேல் தாண்டவேசுவரரை நியசிக்க" என்று தொடங்கி,

(288) ப்ரஹ்மதத்வமதோந்யஸ்ய விஷ்ணுதத்வம் ததூர்த்வத:।
தத்பரம் ருத்ரதத்வஞ்ச தத ஊர்த்வம் மஹேச்வரம்।
ஸாதாக்யதத்வம் தந்மூர்த்நி பிந்துதத்வமத: பரம்।
ததூர்த்வம் நாததத்வஞ்ச சக்திதத்வமத: பரம்।
தத்பரம் சிவதத்வஞ்ச பூஜயேஜ் ஜ்ஞாநமூர்த்திகம்।
ஸர்வகாரணதேவேசம் த்யாத்வா தாண்டவமீச்வரம்।
ஆவாஹயேத் ததோதேவம் புஷ்பஹஸ்தம் சுகாஸந:॥

(289) "பிரமாவுக்குமேல் விஷ்ணு; அவருக்குமேல் உருத்திரர்; அவருக்குமேல் மகேசுவரர்; அவருக்குமேற் சதாசிவர்; அவருக்குமேல் விந்து; அதற்குமேல் நாதம்; அதற்குமேற் சத்தி; அதற்குமேற் (சிருஷ்டி திதி சங்காரம் என்னும்) அனைத்துக்கும் காரணரும், தேவநாயகரும், ஞானமூர்த்தியுமாகிய (சிவதத்துவ) * தாண்டவேசுவரர்; அவரைச் சுகாசனத்திருந்து புஷ்பத்தைக் கையிற்கொண்டு (சாதாக்கியதத்துவத்துச் சதாசிவரில்) ஆவாகனஞ் செய்க" என்று மகுடாகமம் கூறிமுடிக்கின்றது.

---

* சிருஷ்டியாதி பஞ்சகிருத்திய அதிகாரஞ்செய்யும் தாண்டவேசுவர சதாசிவர்க்கு இருப்பிடமாகிய சிவதத்துவமானது காரியமனைத்தும் தனக்குள்ளே லயித்து அடங்கியபோது லயதத்துவம் எனவும் பெயர் பெறும்.

(290) ஆகவே, காரணாகமமும் மகுடாகமமும் ஒருங்கு சதாசிவதாண்டவேசுவரரையே முப்பத்தாறும் தத்துவமுடிவி னுள்ள பராகாசயத்து அத்தியக்ஷர் என்று கூறுகின்றன.

## (௩௪) தாண்டவேசுவரராவார் ஈசர் ஈசுவரர் ஈசானர் எனக் கூறப்படுதல்.

(291) தாண்டவேசுவரசிவபிரானை ஈசாவாசியம், பிருக தாரணியம், கடவல்லி, சுவேதாசுவதரம், மைத்திராயணம், மகா நாராயணம், அதர்வசிரசு, முண்டகமுதலிய முக்கியோபநிடதங் கள் ஈசர் என்றும், ஈசானர் என்றும், ஈசுவரர் என்றும் கூறுகின் றன. அவை வருமாறு:—

(292) அத கஸ்மாதுச்யதே ஈசாந: ய: ஸர்வாந்லோகாநீ
சத ஈசநீபிர் ஜநநீபிச்ச பரமசத்திபி:............।
தஸ்மாதுச்யதே ஈசாந:।

(293) "ஈசானர் என ஏன் கூறப்படுகின்றார்? சமஸ்த லோகங்களையும் ஆளும் சத்திகளாயும் உண்டாக்கும் சத்திகளாயு முள்ள பரமசத்திகளினாலே ஆளுகின்றாரோ, அவர் ஈசானர் எனப் படுகின்றார்" என்று அதர்வசிரோபநிடதம் ஈசானசப்தத்துக் குப் பொருள் கூறுகின்றது. பரப்பிரகிருதிப்பாற்பட்ட ஈசானர் இதயத்தின்கண்ணே அங்குஷ்டப்பிரமாணத்தினராய் இருக்கின் றார் என்றும், அவர் ஈசானர் எனப்படுவார் என்றுங்கொண்டு

(294) அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி।
ஈசாநோ பூதபவ்யஸ்ய..................................।।

(295) "இறந்த காலத்துக்கும் எதிர்காலத்துக்கும் ஈசா னராய் அங்குஷ்டமாத்திரராயுள்ள புருஷர் (தாண்டவேசுவரர்) ஆன்மாவின் மத்தியிலே நிற்கின்றார்" என்று கடோபநிடதம் (௪. ௧௨) கூறுகின்றது.

(296) பராத்பரம் புரிசயம் புருஷமீக்ஷதே।

(297) "பரத்துக்குப் பரமாய்த் தகரபுண்டரீகபுரியின் கண்ணே உள்ள புருஷரைக் காண்கின்றான்" என்று பிரசிநோப நிடதத்தில் (௫ ௫) தகரவித்தியாவிஷயம் பேசுமிடத்திற் புருஷர் என்று கூறப்பட்டுள்ளது. தமது சத்திகளாகிய ஈசானசத்தி களைக்கொண்டு தாண்டவேசுவரர் நம்மை ஆளுகின்றமையின், அவர் ஈசானர் எனவும் பட்டார்;

(298) பஞ்சவக்த்ரம் தசபுஜம் த்விபாதம் வ்ருத்தமத்யகம்।
அங்குஷ்டமாத்ரமசலம் சுத்ததத்வம் நவாத்மகம்॥

(299) "ஐந்து முகமுடையராயும், பத்துப் புயமுடையராயும், இரண்டு பாதமுடையராயும், விருத்தமத்தியிலுள்ளவராயும், அங்குஷ்டமாத்திரராயும், அசலராயும், சுத்ததத்துவத்தினராயும், (பிரமா விஷ்ணு உருத்திரர் மகேசுவரர் சதாசிவர் விந்து நாதம் சத்தி சிவம் என்னும்) நவதத்துவசொரூபராயும் உள்ளாரை" என்று † மகுடாகமம் கூறுகின்றமையின், அவர் அங்குஷ்ட அளவினராகக் கடவல்லியினும் அம்மகுடாகமத்தினும் கூறப்பட்டார்.

---

† (உ௬உ-ம், உ௬௩-ம் பிரிவுகளிலே கடோபநிடதத்திற் பிரதிபாதிக்கப்பட்ட) ஈசானர் (உ௬அ-ம், உ௯௯-ம் பிரிவுகளில்) ஐம்முகமுடையர் எனவும், பத்துப் புயமுடையர் எனவும், இரண்டு பாதமுடையர் எனவும்' விருத்தமத்தியில் உள்ளவர் எனவும், அங்குஷ்ட அளவினர் எனவும் மகுடாகமம் கூறிற்று. வேதவியாசமஹாமுனிவரும் தமது உத்தரமீமாஞ்சை எனப்படும் வேதாந்தசூத்திரத்தில்

சப்தாதேவ ப்ரமித: (க. ௩. உ௩)

"(கடோபநிடதத்துள்ள) சுருதிபற்றியே (ஈசானர் அங்குஷ்ட அளவினராக) அளக்கப்பட்டவர்" எனக் கூறினர். நீலகண்டசிவாசாரியர் அவ்வீசானரை (உ௩-ம், உ௯௪-ம் பிரிவுகளிற் கண்டவாறு) அதர்வசிரோபநிடதத்திற் கூறப்பட்ட "ஆகாசமத்தியிலுள்ள (திருச்சிற்றம்பலத்துள்ள) சம்பு" எனக் கூறினர். அப்பயதீக்ஷிதயோகியாரும் அவ்வீசானரையுற்றுச் சிகரிணிமாலையில்

நிபந்தூ:ஸௌத்ராணாம்।

என்றதற்றொடக்கத்த சுலோகத்தினால் விளக்கினர். சிவஞானசுவாமிகள் அச்சுலோகப்பொருளைப் "பிறங்கயமாகும் புருடனங்குட்டப்பிரமிதி" என்றற்றொடக்கத்த செய்யுளால் விளக்கினர். சேக்கிழார்பெருமான் பெரிய புராணமுழுமையினும் தாண்டவேசுவர சதாசிவப்பெருமானைக் கூறுமிடங்களிலெல்லாம், அவரை "அம்பலத்தாடுவான்" "தாண்டவப்பெருமான்" "சிற்பரவியோமமாகுந்திருச்சிற்றம்பலத்துணின்று பொற்புடனடஞ்செய்கின்றபூங்கழல்" என்றற்றொடக்கத்தனவாகக் கூறினர். ஞானயோகிகளால்மாத்திரம் தியானிக்கப்படும் ஆதிசத்திசமேத அதிசூக்குமவடிவினராய் முப்பத்தாறும் தத்துவத்திலுள்ள தாண்டவேசுவரரே அன்பர்களுக்கு அநுக்கிரகிக்குமாறு சிவகாமிசமேத நடேசராய் எழுந்தருளினார் என்க. இவர் முப்பத்திரண்டாம் முப்பத்துமூன்றும் தத்துவத்து மகேசுவரவடிவம் இருபத்தைந்தனுள் ஒருவராம் என்க.

(300) ஈச என்னும் கிரியாபதம்

சுவேதாசுவதரம், ௧. ௧௦-னும்
ஷை ௩. ௧-னும்
ஷை ௪. ௧௩-னும்
ஷை ௫. ௧-னும்
ஷை ௬. ௨-னும்
ஷை ஷை ௧௭-னும்
மகாநாராயணத்திலும், அதர்வசிகையிலுங் காணப்படுகின்றது.

(301) ஆளுகின்றவர் எனப் பொருள்படுகின்ற ஈசர் என்னும் பதம் ஈசாவாசியோபநிடதத்திலும்,
சுவேதாசுவதரம் ௧. ௮-னும்,
ஷை ௧. ௯-னும்,
ஷை ௩. ௭-னும்,
ஷை ஷை ௨௦-னும்,
ஷை ௪. ௭-னும்,
ஷை ௫. ௩-னும்,
மைத்திராயணம் ௬. ௧௮-னும்,
முண்டகோபநிடதம் ௩. ௧. ௩-னும்,
மகாநாராயணத்திலும், அதர்வசிகையிலும் காணப்படுகின்றது.

(302) ஆளும் பராசத்தியாராகிய ஈசநீ என்னும் பதம் சுவேதாசுவதரம் ௩. ௧-னும், அதர்வசிகையிலுங் காணப்படுகின்றது.

(303) ஈசுவரர் என்னும் பதம்
சுவேதாசுவதரம் ௬. ௭-னும்,
மகாநாராயணம் ௨. ௬௨. ௪௭-னும்,
அதர்வசிகையிலுங் காணப்படுகின்றது.

(304) ஈசானர் என்னும் பதம்
பிருகதாரணியம் ௪. ௪. ௧௫-னும்,
ஷை ஷை ௨௨-னும்,
௫. ௬. ௧-னும்,
௬. ௩. ௫-னும்,
கடோபநிடதம் ௪. ௫-னும்,
ஷை ஷை ௧௨-னும்,
சுவேதாசுவதரம் ௩. ௧௨-னும்,
ஷை ௪. ௧௧-னும்,
ஷை ஷை ௧௫-னும்,
ஷை ஷை ௧௭-னும்,
மைத்திராயணம் ௬. ௮-னும்,
ஷை ௭ ௧-னும்,
மகாநாராயணத்திலும், அதர்வசிகையிலும் காணப்படுகின்றது. படவே, எங்களையெல்லாம் ஆட்டி வாழ்விக்கின்ற தாண்டவேசுவரச் சிவப்பிரஹ்மமே ஈசாவாசியமுதலிய முக்கிய உபநிடதங்களிற் புகழப்பட்டார் என்க. ஒரே புருஷன் குணமுடையவனாகவும் குணமிலனாகவுங் கொள்ளப்படாமைபோல, ஒரே பிரஹ்மமானது நிர்க்குணமாகவும் சகுணமாகவும் கொள்ளப்படுவதில்லை. ஏகான்மவாதிகள் கொள்கை ஈசாவாசியமுதலிய முக்கியோபநிடதங்களிற் சிறிதும் பேசப்படவில்லை என்று உறுதியாய் அறிந்துகொள்க.

(305) ருசோசுஷரே பரமே வ்யோமந் யஸ்மிந் தேவா அதிவிச்வே நிஷேது:। யஸ்தந்ந வேத கிம்ருசா கரிஷ்யதி ய இத்தத் விதுஸ்த இமே ஸமாஸதே॥

(306) "இருக்குவேதத்துள்ளதாய், தேவர்கள் வசிக்கப் பெறுவதாயுள்ள அழியாத பரமாகாயத்துள்ள (மெய்ப்)பொருளை அறியாதவன் எவனோ, அவனுக்கு அவ்வேதத்தினாற் பயனென்? அதனை அறிபவர்களே கிருதார்த்தர்களாய் அமர்கின்றார்கள்" என்று இருக்குவேதத்தினும் (க. கசுச. நகூ), சுவேதாசுவதரத்தினும் (ச. அ) கூறப்பட்டுள்ளது. இங்ஙனம் பரமாகாயவிஷயம் இருக்குவேதத்து க. கசுச. நச—னும், க. கசுச. சக—னும், ச. ருO. ச—னும், கO. ரு எ-னும், கO. கஉகூ. எ-னும் (கிருஷ்ணசுக்கில) யசுர்வேதங்களினும், சாமவேதத்தினும், உபநிடதங்களினுங் கூறப்படுகின்றது.

## (ருரு) தகரவித்தை.

(307) ஸைஷா பார்க்கவீ வாருணீவித்யா பரமே வ்யோமந் ப்ரதிஷ்டிதா।

(308) "இந்தத் (தகராகாய)வித்தை (வருணனாற்) பிருகு வாருணிக்கு (உபதேசிக்கப்பட்டது); அது பரமவியோமத்தில் (திருச்சிற்றம்பலத்தில்) நிறுத்தப்பட்டது" என்று தைத்திரீயோபநிடதம் (ந. கூ. க) கூறுகின்றது.

## (ருகூ) திருச்சிற்றம்பலம் அனைத்தினும் பெரிது.

(309) யாவாந் வா அயமாகாசஸ்தாவாநேஷோந்தர்ஹ்ருதய ஆகாச உபே அஸ்மிந் த்யாவாப்ருதிவீ அந்தரேவ ஸமாஹிதே உபாவக்நிச்ச வாயுச்ச ஸூர்யாசந்த்ரமஸாவுபௌ வித்யுந் நக்ஷத்ராணி யச்சாஸ்யேஹாஸ்தி யச்ச நாஸ்தி ஸர்வம் ததஸ்மிந் ஸமாஹிதமிதி।

(310) "இந்தப் (புறத்துள்ள) ஆகாயம் எவ்வளவு பெரிதோ, அவ்வளவு பெரிதாயுள்ளது (அகத்தே) இதய (தகர) ஆகாசம்; ஆகாசம் பூமி இரண்டும் அதனுள் அடங்கிய; அக்கினி வாயு இரண்டும், சூரியன் சந்திரன் இரண்டும், மின்னல் நக்ஷத்திரம் இரண்டும், அவரைப் (பரப்பிரஹ்மசிவபிரானைப்) பற்றி எதெது

உண்டோ, அவைகளும் அதனுள் (தகர) ஆகாயத்துள் (திருச்சிற்றம்பலத்துள்) அடங்கிய" என்று சாந்தோக்கியம் (அ. க. ௩) கூறுகின்றது.

## (௫எ) திருச்சிற்றம்பலத்துக்குக் கேடில்லை.

(311) நாஸ்ய ஜரயைதஜ் ஜீர்யதி ந வதேநாஸ்ய ஹந்யத ஏதத் ஸத்யம் ப்ரஹ்மபுரமஸ்மிந் காமா: ஸமாஹிதா:।

(312) "அது தகராகாசம் (திருச்சிற்றம்பலம்) ஜரையினால் ஜீரியாது; சரீரம் கொல்லப்படின், அது கொல்லப்படாது; இது தகராகாசம் (திருச்சிற்றம்பலம்) சத்தியமாய்ப் பிரஹ்மபுரம்; இதில் வேண்டியபோகமனைத்தும் அமைந்துள்ளன" என்று சாந்தோக்கியம் (அ. க. ௫) கூறுகின்றது.

## (௫அ) சிதம்பரசத்தியே அனைத்துக்கும் காரணம்.

(313) அஸ்ய லோகஸ்ய கா கதிரித்யாகாச இதி ஹோவாச ஸர்வாணி ஹவா இமாநி பூதாந்யாகாசாதேவ ஸமுத்பத்யந்த ஆகாசம் ப்ரத்யஸ்தம் யந்தி।

(314) "இந்த உலகத்தின் மூலம் (கதி) யாது? என, ஆகாயம் என்றார்; இந்தச் சென்றுக்களெல்லாம் ஆகாயத்திலே (சிதம்பரசத்தியிலே) நின்று தோன்றி, ஆகாயத்துக்கே (சிதம்பரசத்திக்கே) போகின்றன" என்று சாந்தோக்கியமும் (க. கூ. க),

(315) யத்ரைஷ ஏதத் ஸுப்தோ பூத்ய ஏஷ விஜ்ஞாநமய: புருஷஸ்ததேஷாம் ப்ராணாநாம் விஜ்ஞாநேந விஜ்ஞாநமாதாய ய ஏஷோந்தர்ஹ்ருதய ஆகாசஸ்தஸ்மிஞ் சேதே।

(316) "நித்திரை செய்யுங்கால் இந்த அறிஞனாகிய ஆன்மா பிராணவிஞ்ஞானவாயிலாக விஞ்ஞானத்தைப் பற்றிக்கொண்டு இதயத்துள்ள ஆகாயத்திலே நித்திரை செய்கின்றான்" என்று பிருகதாரணியமும் (உ. க. கஎ),

(317) ஸ்வப்நாந்தம் மே ஸோம்ய விஜாநீஹீதி யத்
ரைதத் புருஷ: ஸ்வபிதி நாம ஸதா ஸோம்ய
ததா ஸம்பந்நோ பவதி।

(318) "சோமிய! சொப்பனத்தியல்பை என்னிடத்து அறிகுதி; ஓர் புருஷன் நித்திரை செய்யுங்கால், அவன் சத்தோடியைந்தவனாகின்றான்" என்று சாந்தோக்கியமும் (சு. அ. க),

(319) கோ ஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத்। யதேஷ ஆகாச
ஆநந்தோ ந ஸ்யாத்।

(320) "இந்தத் திருச்சிற்றம்பலம் ஆனந்தமாகாவிடின், யார் சுவாசிப்பார், யார் பிழைப்பார்" என்று தைத்திரீயமும் (உ. எ. க) கூறுகின்றன.

## (ருகூ) திருச்சிற்றம்பலத்துள்ள தாண்டவேசுவரர் அறியற்பாலர்.

(321) யதிதமஸ்மிந் ப்ரஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேச்ம
தஹரோ ஸ்மிந்நந்தராகாசஸ்தஸ்மிந்யதந்தஸ்ததந்வே
ஷ்டவ்யம் தத்வாவ விஜிஜ்ஞாஸிதவ்யமிதி।

(322) "இந்தப் பிரஹ்மபுரத்திலே (சரீரத்திலே) தகர புண்டரீக வீடு (உள்ளது); இந்தத் தகரபுண்டரீகவீட்டினுள்ளே தகராகாயம் (திருச்சிற்றம்பலம்) உள்ளது; இத்தகராகாயத்துள்ளே உள்ளது (தாண்டவேசுவரப்பிரஹ்மம்) தேடற்பாற்று, அறியற்பாற்று" என்று சாந்தோக்கியமும் (அ. க. க),

(323) ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித் யஸ்யைஷ மஹிமா புவி।
திவ்யே ப்ரஹ்மபுரே ஹ்யேஷ வ்யோம்ந்யாத்மா ப்ரதிஷ்டித:।
மநோமய: ப்ராணசரீரநேதா ப்ரதிஷ்டிதோந்நே ஹ்ருதயம்
ஸந்நிதாய। தத்விஜ்ஞாநேந பரிபச்யந்தி தீரா ஆநந்தரூப
மம்ருதம் யத் விபாதி॥

(324) "எவர் சர்வஞ்ஞரோ, எல்லாம் அறிந்தவரோ, இவ்வுலகில் இந்த மகிமை எவருடையதோ, அவர் (தாண்டவேசுவரர்) பிரஹ்மபுரத்திலே (சரீரத்திலே) பரமாகாயத்தில் (திருச்சிற்றம்பலத்தில்) இருப்பவரன்றோ; அவர் ஞானமயர், பிராணனையும்

சரீரத்தையும் செலுத்துபவர்; (அன்ன) சரீரத்துள்ள இதயசமீபத்தில் இருக்கின்றார்; அறிஞர்கள் அருண்ஞானத்தினால் ஆனந்தரூபராய் விளங்கும் சிவபிரானை அறிகின்றார்கள்" என்று முண்டகோபநிடதமும் (உ. உ. எ),

(325) ஆகாசோ வை நாம நாமரூபயோர் நிர்வஹிதா
தே யதந்தரா தத் ப்ரஹ்ம ததம்ருதம் ஸ ஆத்மா1

(326) "ஆகாயம் (சிதம்பரசத்தி) எனப்பட்டவர் நாமரூபங்களைப் படைப்பவர்; இவையனைத்தும் அடங்கியிருக்கப்பெறுவது பரப்பிரஹ்மம்; அது சிவன்; அது பரமான்மா" என்று சாக்தோக்கியமும் (அ. கச. க) கூறுகின்றன.

### (கூ0) தாண்டவேசுவரர் தகராகாயத்துட்கிடத்தலாற் புருஷர் எனப்படுவர்.

---

(327) ய: புநரேதம் த்ரிமாத்ரேணைவோமித்யேதே
நைவாக்ஷரேண பரம் புருஷமபித்யாயீத ஸ தேஜஸி ஸூர்யே
ஸம்பந்நோயதா பாதோதரஸ்த்வசா விநிர்முச்யத
ஏவம் ஹவை ஸ பாப்மநா விநிர்முக்த: ஸ ஸாமபி
ருந்நீயதே ப்ரஹ்மலோகம் ஸ ஏதஸ்மாஜ் ஜீவகநாத்பராத்
பரம் புரிசயம் புருஷமீக்ஷதே1

(328) "எவன் மூன்று மாத்திரையையுடைய இந்த ஓம் என்னும் அக்ஷரவாயிலாகவே பரம புருஷராகிய சிவபெருமானைத் (தாண்டவேசுவரரைத்) தியானிக்கின்றானோ, அவன் ஒளியையும் சூரியனையும் அடைந்தவனாகின்றான்; சர்ப்பம் தன்தோலினின்று விடுபட்டாற்போல, அவன் பாவத்தினின்று விடுறுகின்றான்; அவன் சாம(கானங்களினாலே) வழிகாட்டப்படுகின்றான்; சீவகனராகிய இரண்ணியகருப்பரினும் (பிரமாவினும்), பரராய் உற்கிருஷ்டராயுள்ள நாராயணரினும், பரமோற்கிருஷ்டராய்ப் பிரஹ்மபுரத்தின் (சரீரத்தின்)கண்ணே அந்தரியாமியாய்ச் சயனித்தலிற் புருஷர் எனப்படும் சிவபிரானைத் (தாண்டவேசுவரரைக்) காண்கின்றான்" என்று பிரசிநோபநிடதமும் (ரு. ரு),

(329) புர: சக்ரே த்விபத: ஸ பக்ஷீ பூத்வா புருஷ ஆவிசத்...1
அயம் புருஷ: ஸர்வாசு பூர்ஷு புரிசயோ நைநேந
கிஞ்சநாவ்ருதம் நைநேந கிஞ்சநாஸம்வ்ருதம்11

(330) "அவர் (சிவபிரான்) முதற்கண்ணே இருகாற் சரீரங்களைப் (பசுக்களைப்) படைத்தார்; அவர் நாற்காற்சரீரங்களைப் (பசுக்களைப்) படைத்தார்; அவர் முதற்கண்ணே ஓர் டட்சியாகி, (பின்) புருஷராகிச் சரீரங்களிற் பிரவேசித்தார்; இந்தப் புருஷர் எல்லாச் சரீரங்களினும் கிடப்பவர் (ஆதலிற்) புருஷர் எனப்படுகின்றார்); அவரால் மூடப்படாதது யாதும் இல்லை, நிறைக்கப் படாதது யாதும் இல்லை" என்று பிருகதாரணியமும் (உ. ரு. கஅ) கூறுகின்றது.

## (கூக) உலகினர் திருச்சிற்றம்பலவரை அறிகிலர்.

---

(331) ஹிரண்யநிதிம் நிஹிதமக்ஷேத்ஜ்ஞா உபர்யுபரிஸஞ்சரந்தோ ந விந்தேயுரேவமேவேமா: ஸர்வா: ப்ரஜா அஹரஹர் கச்சந்த்ய ஏதம் ப்ரஹ்மலோகம் ந விந்தத்யந்ருதேந ஹி ப்ரத்யூடா:I

(332) க்ஷேத்திரத்தைத் (தேசத்தை) அறியாத சனங்கள் (பூமிக்குள்ளே) மறைப்புண்டு கிடந்த பொற்பண்டாரத்துக்கு மேலே தினந்தோறுஞ் சஞ்சரித்தும் அதனைக் காணுதவாறு போல, பிரஜைகளெல்லாம் தினந்தோறும் இந்தப் பிரஹ்மலோகத்தைத் (திருச்சிற்றம்பலத்தை) அடைந்தும் அஞ்ஞானத்தினல் மேற்கொள்ளப்பட்டாராகி அதனை அறிந்திலரன்றோ" என்று சாந்தோக்கியோபநிடதம் (அ ங. உ) கூறுகின்றது.

## (கூஉ) அறுக்கிரகசக்கரத்துத் திருச்சிற்றம்பல தாண்டவேசுவரர் உபாசிக்கற்பாலர்.

---

(333) தஹரம் விபாப்மம் பரவேச்மபூதம் யத் புண்டரீகம் புரமத்யஸம்ஸ்தம்I தத்ராபி தஹரம் ககநம் விசோகஸ் தஸ்மிந் யதந்தஸ் ததுபாஸிதவ்யம்II

(334) "(பிரஹ்ம) புரமத்தியிலே இருப்பதாய்ப் பாவமிலதாயுள்ள தகரபுண்டரீகவீடு என எது உண்டோ, அதிற் சோகமிலதாகிய தகராகாசம் (திருச்சிற்றம்பலம்) உள்ளது; அதிலுள்ள (பரப்பிரஹ்மசிவமானது) உபாசிக்கற்பாற்று" என்று தைத்திரீய ஆரணியகமும் (கO. கக. உச),

(335) ஆகாசோ ஹவை நாம நாமரூபயோர் நிர்வஹிதா தே யதந்தரா தத்ப்ரஹ்ம ததம்ருதம் ஸ ஆத்மா।

(336) "ஆகாயம் (சிதம்பரசத்தி) எனப்பட்டவர் நாமரூபங்களைப் படைப்பவர்; இவையனைத்தும் அடங்கியிருக்கப்பெறுவது பரப்பிரஹ்மம்; அது சிவம்; அது பரமான்மா" என்று சாந்தோக்கியோபநிடதமும் (அ. கச. க),

(337) ஸ்வப்நாந்தம் மே ஸோம்ய விஜாநீஹீதி யத்ரைதத் புருஷ: ஸ்வபிதி நாம ஸதா ஸோம்ய ததா ஸம்பந்நோ பவதி।

(338) "சோமிய! சொப்பனத்தியல்பை என்னிடத்து அறிகுதி; ஓர் புருஷன் நித்திரை செய்யுங்கால், அவன் சத்தோடியைந்தவனாகின்றான்" என்று சாந்தோக்கியோபநிடதமும் (சு. அ. க),

(339) யத்ரைஷ ஏதத் சுப்தோபூத் ய ஏஷ விஜ்ஞாநமய: புருஷஸ் ததேஷாம் ப்ராணாநாம் விஜ்ஞாநேந விஜ்ஞாநமாதாய ய ஏஷோந்தர்ஹ்ருதய ஆகாசஸ்தஸ்மிஞ்சேதே।

(340) "நித்திரை செய்யுங்கால் இந்த அறிஞனாகிய ஆன்மா பிராணவிஞ்ஞானவாயிலாக விஞ்ஞானத்தைப் பற்றிக்கொண்டு இதயத்துள்ள ஆசாயத்திலே நித்திரை செய்கின்றான்" என்று பிருகதாரணியோபநிடதமும் (உ. க. கஎ) கூறுகின்றன.

## (கூகூ) திருச்சிற்றம்பலவரை அறிந்தவன் துன்பமிலன்.

---

(341) ஸர்வே பாப்மாநோ தோ நிவர்த்தந்தேபஹதபாப்மாஹ்யேஷ ப்ரஹ்மலோகஸ் தஸ்மாத் வா ஏதம் சேதும் தீர்த்வாந்தஸ்சநந்தோ பவதி வித்த: ஸந்நவித்தோ பவத்யுபதாபீ ஸந்நநுபதாபீ பவதி தஸ்மா ஏதம் ஸேதும் தீர்த்வாபி நக்தமஹரேவாபிநிஷ்பத்யதே சக்ருத்விபாதோஹ்யேஷ ப்ரஹ்மலோக:।

(342) "பாவிகளெல்லாம் அவ்வணையை அடையமாட்டாது மீண்டுவிடுகின்றார்; இந்தப் பிரஹ்மலோகம் பாவமில்லாததன்றோ; ஆதலின், அந்தச் சேதுவைக் கடந்தவன் குருடனாயின் குருடிலனாகின்றான்; இரணமுடையனாயின் இரணமிலனாகின்றான்; துன்புடையனாயின் துன்பிலனாகின்றான்; அந்தச் சேதுவைக் கடப்பின் இரவானது பகலாகின்றது; பிரஹ்மலோகம் ஒருங்கு (யாவர்க்கும்) பிரகாசிக்கின்றமையின்" என்று சாந்தோக்கியோபநிடதம் (அ. ௮. ௨) கூறுகின்றது.

## (௬௪) காயத்திரிப்பொருள் சிவபெருமான்.

(343) தத் ஸவிதுர் வரேண்யம் பர்க்கோ தேவஸ்ய தீமஹி
தியோ யோந: ப்ரசோதயாத்॥

(344) "சிவசூரியனுக்கு மத்தியிலே இருக்கின்ற யாதொரு பர்க்கர் தாண்டவேசுவர சிவபிரான் எங்களுடைய புத்திமுயற்சிகளைச் செலுத்துகின்றாரோ, அந்த முக்கியப்பொருளைத் தியானிக்கின்றோம்" என்று இருக்குவேதம் (௩. ௬௨. ௧௦) கூறுகின்றது.

(345) தேவஸ்ய ஸவிதுர் மத்யே யோ பர்க்கோ நோ திய:க்ரமாத்।
ப்ரசோதயாத் தத் வரேண்யம் தீமஹீத்யந்வய: க்ரம:॥

(346) "சிவசூரியன் மத்தியிலுள்ள எந்தப் (பர்க்கராகிய) சதாசிவர் எங்களுடைய புத்திமுயற்சிகளைச் செலுத்துகின்றாரோ, அந்த முக்கியப்பொருளைச் (சதாசிவரைத்) தியானிக்கின்றோம்" என யாஞ்ஞவற்கியர் கூறுகின்றமையின் 344-ம் பிரிவுப் பொருள் வலியுறுத்தப்படுகின்றது. சிவஞானசுவாமிகள்

உணர்ந்துளோருளத்தகரபுண்டரீகமுந்துவாதசாந்தமுமும்பர்
வணங்குமாதித்தமண்டலநடுவுநான்மறைகளின்முடிவுஞ்சி [ம்
ரிணங்குசோமலோகமுந்திருவம்பலத்திடமுந்தென்குளத்தூர்வா
குணங்கடந்தவர்சிறப்பிடமாமெனக்கூறிடுமறைநூலே

என்ற செய்யுளில், "ஆதித்தமண்டலநடு"விலுளர் எனக் கூறினர். இங்ஙனமே கச்சியப்பசிவாசாரியரும் கூறினமை நீலகண்ட சைவபாஷ்யத்தமிழ்மொழிபெயர்ப்பின் ௨௦௪-ம் பக்கத்துக் குறிப்புரையிற் காண்க.

(347) இங்கே கூறப்பட்ட பர்க்கர் நம்மையெல்லாஞ் சேலுத்துகின்றவராதலின், அவர் ஆட்டுபவர் எனவும், ஆடுபவர் எனவும் கொள்ளப்படுகின்றார். இதுபற்றியே, இருக்குவேதத்து ௨-ம் மண்டலத்து ௩௫-ம் சூக்தத்து ௨-ம் மந்திரம் பரதர் (கூத்தர்) என்று கூறிற்று. பரதர் என்பது தாண்டவேசுவரர் மேற்று என்று "சுருதி சூக்திமாலை" ௯௪-ம் சுலோகம் கூறுகின்றது.

(348) சிவார்க்கசக்திதீதித்யா ஸமர்த்தீக்ருதசித்த்ருசா ।
சிவம் சக்த்யாதிபி: ஸார்த்தம் பச்யத்யாத்மா கதா வ்ருகி: ॥

(349) "சிவசூரியனுடைய பராசத்தியொளியினால் வன்மையாக்கப்பட்ட ஞானக்கண்ணினால் ஆன்மாவானவன் சத்தியோடு கூடச் சிவத்தைப் பார்க்கின்றான்; பாசம் நீங்கிப்போயிற்று" என்று நிச்சுவாசகாரிகை கூறுகின்றது.

(350) ஆகமப்பிரகாரம் அந்தக் காயத்திரி மந்திரத்துக்குப் பொருள் செய்யுங்கால் "எந்தச் சிவசூரியனது (ஞான இச்சாக் கிரியா) சத்தியாகிய ஒளியானது எங்கள் ஞான இச்சாக் கிரியாசத்திகளைச் செலுத்துகின்றதோ, அந்த முக்கியப்பொருளை (அஃதாவது அந்தப் பராசத்தியொளியைத்) தியானிக்கின்றேம்" என்பது காயத்திரியின் பொருளாய்ப் போந்தது.

(351) இருக்குவேதத்து

| மண்டலம். | சூக்தம். | மந்திரம். | மண்டலம். | சூக்தம். | மந்திரம். |
|---|---|---|---|---|---|
| ௧ | ௩௫ | ௨-னும் | ௸ | ௸ | ௯-னும் |
| ௸ | ௭௩ | ௸-னும் | ௸ | ௸ | ௭-னும் |
| ௸ | ௧௨௩ | ௸-னும் | ௫ | ௪௨ | ௩-னும் |
| ௸ | ௧௨௪ | ௧-னும் | ௸ | ௮௨ | ௧-னும் |
| ௸ | ௧௫௭ | ௧-னும் | ௸ | ௸ | ௪-னும் |
| ௸ | ௧௮௯ | ௧-னும் | ௸ | ௸ | ௫-னும் |
| ௨ | ௧ | ௭-னும் | ௸ | ௸ | ௯-னும் |
| ௸ | ௩௮ | ௧-னும் | ௸ | ௸ | ௮-னும் |
| ௸ | ௩௯ | ௯-னும் | ௭ | ௧௫ | ௧௨-னும் |
| ௩ | ௨௰ | ௫-னும் | ௸ | ௩௫ | ௧௰-னும் |
| ௸ | ௩௩ | ௬-னும் | ௸ | ௩௮ | ௧-னும் |
| ௸ | ௯௨[illegible] | ௧௰-னும் | ௸ | ௸ | ௩-னும் |
| ௪ | ௪௩ | ௨-னும் | ௸ | ௪௰ | ௧-னும் |
| ௸ | ௪௪ | ௨-னும் | ௸ | ௪௫ | ௸-னும் |
| ௸ | ௫௩ | ௧-னும் | ௸ | ௸ | ௩-னும் |

| மண்டலம். | சூக்தம். | மந்திரம். | மண்டலம். | சூக்தம். | மந்திரம். |
|---|---|---|---|---|---|
| ௬ | ௫௨ | ௬-னும் | ௬ | ௩௪ | ௮-னும் |
| ௬ | ௯௩ | ௬-னும் | ௬ | ௯௪ | ௭-னும் |
| ௬ | ௭௯ | ௧-னும் | ௬ | ௮௭ | ௧௮-னும் |
| ௬ | ௮௩ | ௧௦-னும் | ௬ | ௯௩ | ௯-னும் |
| ௮ | ௭௫ | ௫-னும் | ௬ | ௧௦௦ | ௯-னும் |
| ௯ | ௯௭ | ௨௫-னும் | ௬ | ௧௭௪ | ௩-னும் |
| ௬ | ௧௧௦ | ௯-னும் | ௬ | ௧௭௫ | ௧-னும் |
| ௧௦ | ௧௨ | ௮-னும் | ௬ | ௬ | ௪-னும் |
| ௬ | ௧௭ | ௪-னும் | | | |

தேவசவிதாவாகிய (தாண்டவேசுரர்) சிவசூரியனார் பிரகாசிப்பாராயினர். இக்காயத்திரி மந்திரமானது கிருஷ்ணயசுர்வேதத்தினும் (௧. ௫ ௯. ௪), சுக்கிலயசுர்வேதத்தினும் (௩௦. ௨; ௩௯. ௩); சாமவேதத்தினும் (உத். ௭. ௧௦), பிருகதாரணியோபநிடதத்தினும் (௯. ௩. ௯) காணப்படுகின்றது.

## (௯௫) சிவபெருமானுக்கு நமஸ்காரம்.

(352) ஸௌமநஸாய ருத்ரம் நமோபி: தேவமசுரம் துவஸ்ய।

(353) "சித்தசுத்தியின்பொருட்டு மிகுந்த பலத்தினையுடைய * உருத்திரரைச் (சிவபிரானை) நமஸ்காரங்களினால் வழிபடுக" என்று இருக்குவேதம் (௫. ௪௨. ௧௧) கூறுகின்றது.

## (௯௬) சிவபெருமான் வீரர்.

(354) § சிவபெருமான் காமனைத் தகித்தமையானும், திரிபுரதகனஞ் செய்தமையானும், தக்கனுடைய யாகத்தை அழித்தமையானும், அந்தகாசூரன் ஜலந்தராசூரன் என்போரை வதைசெய்தமையானும் வீரர் என்று இருக்குவேதத்திற் (௨. ௩௩. ௧) புகழப்பட்டார்.

---

* ருத்ரம் ரோதகம் த்ராவயதீதி ருத்ர:।

(சம்சாரசாகரத்திலே அமிழ்ந்தி வருந்தி அழுகின்ற ஆன்மாக்களுடைய) அழுகையை நீக்குதலினால் உருத்திரர் எனப்படுவர்.

§ காமதகனம் திரிபுரசங்காரமுதலிய நிக்கிரகத்தொழில்களும் பாணாசுரன்கோட்டைவாயிலில் அவனுக்கருளுமாறு எழுந்தருளியிருந்தன்முதலிய அநுக்கிரகத்தொழில்களும் ஸ்ரீகண்ட ருத்திரநாயனாராற் செய்யப்பட்டனவேனும் அவை சிவதத்துவதாண்டவேசுவர சிவபெருமானுக்கும் உரியனவாம் என்று வாயுசம்கிதை கூறுகின்றது. [illegible]

## (௬௭) சிவபெருமான் யாகாதிபதி

(355) சிவபெருமானை யாகாதிபதி என்று இருக்குவேதத்து ௧-ம் மண்டலத்து ௪௩-ம் சூக்தத்து ௪-ம் மந்திரத்திலும்,

(356) ஆவோ ராஜாநமத்வரஸ்ய ருத்ரம்..........அவ
சே க்ருணுத்வம்।

(357) "யஞ்ஞத்துக்கு இராஜாவாக உங்களைக் காக்கும் பொருட்டு உருத்திரரை நாடுக" என்று இருக்குவேதத்திலும் (௪. ௩. ௧), பஞ்சமகாயஞ்ஞம், அஷ்டகாசிராத்தம், பார்வணசிராத்தம், சிரவணாகர்மம், பிரத்தியவரோகணம், சூலகவம், அசுவயுஜீகர்மம் என்னும் ஏழு பாகயஞ்ஞமும், அக்கினிஷ்டோமம், அத்தியக்கினிஷ்டோமம், உக்தி, ஷோடசி, வாஜபேயம், அதிராத்திரம், உக்தோர்யாமம் என்னும் ஏழு சோமயஞ்ஞமும், ஆக்கிநேயம், ஆதேயம், தர்சபூர்ணமாசாக்கினிகோத்திரம், ஆக்கிரயணம், சாதுர்மாசியம்; நிரூடபசுபந்தம், சௌத்திராமணி என்னும் ஏழு ஹவியஞ்ஞமுமாகிய இருபத்தொரு யஞ்ஞத்துக்கும் தலைவர் சிவபெருமான் என்று கொண்டன்றே:

(358) த்ரி: ஸப்தயத்குஹ்யாநி த்வே இத்பதாவிதந் நிஹிதா..।

(359) "இரகசியமாகிய இருபத்தோரு யாகங்களும் உம்மிடத்திலேதான் வைக்கப்பட்டன" என்று இருக்குவேதத்திற் (௧. ௭௨. ௬) கூறப்பட்டுள்ளது.

## (௬௮) சிவபெருமான் பசுபதி.

சிவபெருமான் திரிபுரசங்காரஞ் செய்யப்போந்தவிடத்துச் சிவபெருமானது பாணத்துக்கு அக்கினி, சந்திரன், விஷ்ணு என்போர் முறையே பாணத்தின் அடிப்பாகமாகவும், நடுப்பாகமாகவும், நுனிப்பாகமாகவும் அமைந்தனர் என்றும், தேவர்களெல்லாஞ் சிவபெருமானையே

(360) பசூநாம்பதி:।

"பசுக்களுக்குப் பதி" எனக் கொண்டாரென்றும் கிருஷ்ணயசுர் வேதத்து சு-ம் காண்டத்து உ-ம் பிரபாடகத்து ௲-ம் அநுவாகத்து உ-ம் மந்திரம் கூறுகின்றமையானும், உபதேசகாண்டமுதலிய உபப்பிருங்கணங்களிற் சிவபெருமானது தேருக்குப் பிரமா சாரதியாகவும், மற்றையதேவர்கள் தேரின் உறுப்புக்களாகவும் பாணமாகவும் அமைந்தார்களாகக் கூறப்படலானும்,

(361) அக்நி: பசுராசீத்1 வாயு: பசுராசீத்1 ஆதித்ய: பசுராசீத்1

"அக்கினி பசுவாயிருந்தான்; வாயு பசுவாயிருந்தான்; ஆதித்தியன் பசுவாயிருந்தான்" என்று கிருஷ்ணயசுர்வேதத்து ரு-ம் காண்டத்து எ-ம் பிரபாடகத்து உசு-ம் அநுவாகம் கூறுகின்றமையானும், உபலக்ஷணையினால் வருணன், மித்திரன், இந்திரன், பிருகஸ்பதி, சோமன், (நாராயணரை உணர்த்தும்) விஷ்ணுமுதலிய தேவர்களெல்லாம் பசுக்களேயாக, சிவபெருமான் ஒருவரே பசுபதி என்னப்பட்டார் என்க.

## (சுசு) அகோரத்திருமேனி சிவத்திருமேனி.

சிவபெருமானுக்கு அகோரந்திருமேனி சிவத்திருமேனி என இரண்டு திருமேனிகள் உண்டு. இது

(362) யாதே ருத்ர சிவாதநூரகோராபாபகாசிநீ1

என்னும் யசுர்வேதத்து ச-ம் காண்டத்து ரு-ம் பிரபாடகத்து க-ம் அநுவாகத்து க-ம் மந்திரத்தினால் அறியப்படுகின்றது. அவற்றுள், முன்னையது தம்மை வழிபடும் அன்பர்களுடைய சம்சாரரோகத்தை நீக்கிச் சிகிற்சை செய்வது; பின்னையது அருளைக்கால் அவர்க்குப் பசுத்துவத்தைக் கெடுத்துச் சிவத்துவத்தை விளைப்பது. சத்திரமிட்டறுத்தன்முதலிய கொடுந்தொழில்கள் வைத்தியன்மாட்டுளவேனும், வியாதியாளர் அவனையே சரண்புகுவர். அதுபோல, சம்சாரரோகத்தினால் வருந்தும் உயிர்கள் அதன் நிவிர்த்திப்பொருட்டு உருத்திராகோரத்திருமேனியை வணங்கி ஸ்ரீருத்திர மந்திரங்களினாற் சாந்தியை விரும்புவர், சிவத்துவத்தின் பொருட்டுச் சிவத்திருமேனியைச் § சமகமந்திரங்களினால் உவப்பிப்பர்.

---

§ யசுர்வேதம், ச. எ. உ. க.

## (எ0) இருக்குயசுர்வேத சிவசப்தம்.

(363) ஸ்தோமம் வோ அத்ய ருத்ராய சிக்கஸே க்ஷயத் வீராய நமஸா திதிஷ்டந | யேபி: சிவ: ஸ்வவாம் ஏவயாவபிர் திவ: சிஷக்தி ஸ்வயசா நிகாமபி: ||

(364) "குதிரைகளோடு செல்லும் மருத்துக்களோடு கூடிப் பந்துவும் சுவகீர்த்தியுமுடைய சிவபெருமான் கைலாசத்தினின்று போந்து யஞ்ஞஞ் செய்யும் யஜமானர்களுக்கு உதவிபுரிகின்றார்; ஆகலின், இருத்துவிக்குக்களே! நீங்கள் இந்த வேள்வியில் நியதமாகிய பற்றுடைய மருத்துக்களோடு கூடினவரும், சத்துருக்களை வென்றவரும், யுத்தத்திலே வலிமைபூண்டவருமாயுள்ள உருத்திரரைச் (சிவபெருமானை) நமஸ்கரித்து ஸ்தோத்திரஞ் செய்யுங்கள்" என்று இருக்குவேதமும் (க0. கூ௨. கூ),

(365) சிவோநாமாஸி |

(366) "சிவனெனுநாமமுடையீர்" என்று சுக்கிலயசுர்வேதமும் (௩. சுங) கூறுகின்றன.

## (எக) ஈச் ஈசர் ஈசானர் உருத்திரர் புருஷர் சிவன் பிரஹ்மம் என்னும் திருநாமங்கள்.

(367) ஈச் என்றது ஈசாவாசியத்திலும்; ஈசர் என்றது சுவேதாசுவதரத்திலும், முண்டகோபநிடதத்திலும், மகாநாராயணத்திலும், அதர்வசிகையிலும்; ஈசானர் என்றது சுவேதாசுவதரத்திலும், பிருகதாரணியத்திலும், கடோபநிடதத்திலும், மைத்திராயணியுபநிடதத்திலும், அதர்வசிரசிலும், அதர்வசிகையிலும்; உருத்திரர் என்றது இருக்குவேதத்திலும், சுவேதாசுவதரத்திலும், புருஷர் என்றது பிருகதாரணியத்திலும், பிரசினோபநிடதத்திலும், சாந்தோக்கியத்திலும்; ‡ சிவன் என்றது மாண்டூக்கியோபநிடதத்திலும், முண்டகோபநிடதத்திலும், சுவேதாசுவதரோபநிடதத்திலும்; பிரஹ்மம் என்றது பிருகதாரணியமுதலிய உபநிடதங்களிலும், பரப்பிரஹ்மசிவபிரானுக்குத் திருநாமங்களாகக் காணப்படுகின்றது.

‡ சிவன் என்னும் திருநாமம் வேதாந்தசூத்திர சைவபாஷ்யத்து அக்கினிஹோத்திராதிகரணத்து (௪. க. கசு) முண்டகோபநிடதசுருதியிற் காணப்படுகின்றது.

## (எஉ) பிரஹ்மம் என்றது சிவனார் திருநாமம்.

(368) பிரஹ்மசூத்திரசைவபாஷ்யத்து அந்தாதிகரணத்தினும் (க. க. உஉ), அந்தர்யாமியதிகரணத்தினும் (க. உ. சகூ), காரியாதிகரணத்தினும் (ச ௩. கக), அமிர்தம் என்னும் மொழி சிவபெருமான் திருநாமம் எனக் கூறப்படுகின்றது.

(369) தத் ப்ரஹ்ம ததேவாம்ருதமுச்யதே।

(370) "அது பிரஹ்மம் அதுவே (அமிர்தம்) சிவம்" என்று கடோபநிடதத்திற் (ரு. அ; கூ. க) கூறப்படுகின்றது.

(367) ப்ரஹ்மேதி சிவசக்த்யோஸ்து ஸர்வாத்மத்வமிதிஸ்புடம்

(371) "சிவனாரதும் சத்தியாரதும் சர்வாத்துமகத்துவமே பிரஹ்மம் எனல் வெளிப்படை" என்று கைலாசசங்கிதையிற் (கக. சO) கூறப்படுகின்றது.

(372) ஏகோ ஹி நாமபேதைஸ்து ஸ்தித: ஸ பரமேச்வர:।
ப்ருஹத்வாத் ப்ருஹ்மணத்வாச்ச சிவோ ப்ரஹ்மைவ யோகத:॥

(373) "ஏகராகிய பரமேசுவரரே நாமபேதங்களினால் நிலையுற்றனர்; மேன்மையினாலும் பெருமையினாலும் யோகப்பெயராற் பிரஹ்மம் எனப்படுவது சிவபெருமான்" என்று பராக்கியாகமத்தினும்,

(374) ஸச்சிதாநந்தரூபீ ய: ஸதஸத் வ்யக்திவர்ஜித:।
ஸ சிவ: ஸர்வக: ஸத்பிர் ப்ரஹ்மசப்தேந சப்தித:॥

(375) "சச்சிதானந்தரூபியாய்ச் சேதனாசேதனப் பிரபஞ்சத்துக்கு வேறாய், வியாபகராயுள்ள சிவபெருமான் பிரஹ்மசப்தத்தினாற் கூறப்படுகின்றார்" என்று அஜிதாகமத்தினும்,

(376) சிவம் பராத்பரம் ப்ரஹ்மமப்ரமேயமநூபமம்।
சுத்தத்வாச்ச சிவம் ப்ரோக்தம் ஸ்வயம் தச்ச பராத்பரம்।
ப்ருஹத்வாத் ப்ரஹ்மரூபாச்ச ப்ரஹ்மமித்யபிதீயதே॥

(377) "அளக்கவொண்ணாததாய், உவமனில்லாததாய், பராத்பரமாயுள்ள பிரஹ்மமானது சிவம்; அது சுவயமே பராத்பரமாயும் சுத்தமாயுமிருத்தலிற் சிவம் எனப்படும்; மேன்மையினாலும் பேருருவமுடைமையானும் அது பிரஹ்மம் எனப்படும்" என்று காரணாகமத்தினும் வாதுளாதி ஆகமங்களினும் கூறப்படலானும், பிரஹ்மமே திராவிடசுருதிகளிற் சிவன் எனப்படுகின்றது.

---

# இரண்டாவது

# விபூதிப் பிரகரணம்.



[இப்பிரகரணம் வேதம், உபநிடதம், ஆகமம், போதாயன சூத்திரம், ஸ்மிருதி, இதிகாசம், புராணம் என்பவற்றிற் பிரதிபாதிக்கப்பட்ட விபூதி விஷயத்தைத் தொகுத்துக் கூறுகின்றது.]

## (க) வேதம்.



(1) அக்நேர்பஸ்மாஸி|
"அக்கினியின் (வீரியமாகிய) பஸ்மம் ஆகின்றீர்" என்று யசுர் வேதத்துத் தைத்திரீயப்பிராஹ்மணத்தினும் (க. உ. க. கஎ),

(2) கார்ஹபத்யாத் பஸ்மாதாய|
"கார்ஹபத்திய அக்கினியினின்று விபூதியை எடுத்து" என்று யசுர்வேதத்துத் தைத்திரீயப்பிராஹ்மணத்தினும் (க. ச. ரு. கசு) கார்ஹபத்தியாக்கினிக்கும் ஆஹவநீயாக்கினிக்கும் நடுவிலே நாய் தாண்டிப்போனால், அந்தத் தோஷசாந்திக்காக அது தாண்டின இடத்திலே

(3) பஸ்மநா பதமபி வபதி சாந்த்யை|
"சாந்தியின்பொருட்டு விபூதிகொண்டு இடத்தைத் தெளிக்கின்றான்" என்று யசுர்வேதத்துத் தைத்திரீயப்பிராஹ்மணத்தினும் (க. ச. ரு. கசு) பிரதிபாதிக்கப்பட்டுள்ளது.

## (உ) உபநிடதம்.



(4) வாயுரநில மம்ருத மதேதம் பஸ்மாந்தம் சரீரம்|
"பஸ்மம் என்னும் மொழியை அந்தத்திலே கொண்ட * வாயுரிதி பஸ்ம (வாயு என்பது பஸ்மம்), அநிலமிதிபஸ்ம (அநிலம் என்பது பஸ்மம்), அம்ருதமிதிபஸ்ம (அமிர்தம் என்பது பஸ்மம்) (என்றற்றொடக்கத்த ஆறு மந்திரங்களினால் அபிமந்திரிக்கப்பட்ட பஸ்

* வேதமந்திரங்கொண்டும் ஆகம அநுஷ்டானமந்திரங்கொண்டும் விபூதியை அபிமந்திரித்துத் தரித்தன்முதலியன சைவத்துவிஜர்க்கும் மஹா சைவர்க்கும், வேதமந்திரமாத்திரங்கொண்டு அங்ஙனம் தரித்தன்முதலியன துவிஜர்க்கும், ஆகம அநுஷ்டானமந்திரமாத்திரங்கொண்டு அங்ஙனம் தரித்தன்முதலியன ஏனையோர்க்கும் உரியனவாம்.

மத்தினுற்) சரீரத்தைப் (பூசுக. எனவே, †பாசுபதவிரதத்தை அநுஷ்டிக்க)” என்று ஈசாவாசியோபநிடதத்து கஎ-ம் மந்திரத்தினும், அங்ஙனம் பிருகதாரணியோபநிடதத்து ரு-ம் அத்தியாயத்து கரு-ம் பிராஹ்மணத்து க-ம் மந்திரத்தினும் கூறப்படுகின்றது.

(5) தேஷாமேவைதாம் ப்ரஹ்மவித்யாம் வதேத சிரோவ்ரதம் விதிவத் யைஸ்து சீர்ணம்।

“எவர்களால் (அதர்வ) சிரசிற் கூறப்பட்ட விதிப்படி (விபூதிதரிக்கும்) §சிரோவிரதம் எனப்படும் (பாசுபத விரதம் விதிப்பிரகாரம் அநுஷ்டிக்கப்பட்டதோ, அவர்களுக்கே பிரஹ்மவித்தையைக் கூறுக” என்று முண்டகோபநிடதத்தினும் (ங. உ. கக),

(6) பூத்யை ந ப்ரமதிதவ்யம்।

* “விபூதி (பாசுபதவிரதம்) புறக்கணிக்கற்பாற்றன்று” என்று தைத்திரீயோபநிடத்த்தினும் (க. கக. க)

(7) ப்ரஹ்மஹ ச்வேதாச்வதரோதவித்வாநத்யாச்ரமிப்ய: பரமம் பவித்ரம் ப்ரோவாச।

“பின்னர்ச் சுவேதாசுவதரமுனிவர் பரமபவித்திரமாகிய பிரஹ்ம (ஞானத்தை) (அதர்வசிரசிற் கூறப்பட்டவாறு அநுஷ்டித்த பாசுபதர்களாகிய) அத்தியாசிரமிகளுக்கு (நீறுபூசியமுனிவர்களுக்கு) உபதேசித்தார்” என்று சுவேதாசுவதரோபநிடதத்தினும் (சு. உக),

---

† தாண்டவேசுவர சிவப்பிரஹ்மஞானத்துக்கு அங்கமாகப் பாசுபத விரதம் அநுஷ்டிக்கவேண்டுமென்பது ஸ்ரீநீலகண்டசிவாசாரியரருளிய சைவபாஷ்யத்துப் பாசுபதவிரதாதிகரணத்தினும் (ங. ௪. ௪அ, ௪௯), சிவார்க்கமணிதீபிகையின் பாசுபதவிரதாதிகரணத்தினும் (ங.௪.௪அ.௪௯), வாயுசங்கிதை பூருவபாகத்து உகூ-ம் அத்தியாயத்தினும், வைதிகசுத்தாத்துவித சைவசித்தாந்தத் தத்துவப்பட விஞவிடை கசுச-ம் பிரிவுமுதலியவைகளினுங் காண்க.

§ சிரோவிரதம் விபூதிதரிக்கும் பாசுபதவிரதத்துக்குப் பெயரானமையை இப்பிரகரணத்து சுடு, சுசு, சுஎ, சுஅ-ம் பிரிவுகளின் உபப்பிருங்கணங்களிற் காண்க.

* விபூதி பாசுபதவிரதத்துக்குப் பெயரானமையை இப்பிரகரணத்து சுடு-ம் பிரிவிற் காண்க.

(8) அத்யாச்ரமஸ்த: ஸகலேந்த்ரியாணி நிருத்ய।
"விதிப்படி (விபூதி பூசும்) §அத்தியாசிரமம் எனப்படும் பாசுபதவிரதம் அநுஷ்டித்தவனுய்ச் சகல இந்திரியங்களையும் அடக்கி" என்று கைவல்லியோபநிடதத்து ௫-ம் மந்திரத்தினும்,

(9) அக்நிரிதி பஸ்ம வாயுரிதி பஸ்ம ஜலமிதிபஸ்ம ஸ்தலமிதி பஸ்ம வ்யோமேதி பஸ்ம ஸர்வம் ஹவா இதம் பஸ்ம। வ்ரதமிதம் பாசுபதம் யத் பஸ்மநாங்காநி ஸம்ஸ்ப்ருசேத்। தததேதத் பாசுபதம் பசுபாசவிமோக்ஷணுய।

"அக்கினி என்பது பஸ்மம், வாயு என்பது பஸ்மம், ஜலம் என்பது பஸ்மம், *ஸ்தலம் என்பது பஸ்மம், வியோமம் என்பது பஸ்மம்; ஈதெல்லாம் பஸ்மம்; (இங்ஙனம் அபிமந்திரிக்கப்பட்ட) பஸ்மங்கொண்டு அங்கங்களைப் பூசுக; இது பாசுபதவிரதம்; பசுவினின்று (ஆன்மாவினின்று) பாசத்தை நீக்கும்பொருட்டுள்ளது இந்தப் பாசுபதம்" என்று அதர்வசிரோபநிடதத்தினும்,

(10) யத் த்ரவ்யம் ததாக்நேயம் பஸ்ம ஸத்யோஜாதாதி பஞ்சப்ரஹ்மமந்த்ரை: பரிக்ருஹ்யாக்நிரிதி பஸ்ம வாயுரிதி பஸ்ம ஜலமிதி பஸ்ம ஸ்தலமிதி பஸ்ம வ்யோமேதி பஸ்மேத்யநேநாபி

---

§ அத்தியாசிரமம் பாசுபதவிரதத்துக்குப் பெயரானமையை இப்பிரகரணத்து ௪௪-ம், ௪௯-ம் பிரிவுகளிற் காண்க.

* (இந்தப் பிரிவிலுள்ள மந்திரத்தையும் ௧௨-ம் பிரிவிலுள்ள மந்திரத்தையும் இயைத்து நோக்குங்கால்) ஸ்தலம் என்பது பஸ்மம் என்றமையால் நிவிர்த்திகலை பஸ்மம் (நீறு) என்றும், ஜலம் என்பது பஸ்மம் என்றமையாற் பிரதிஷ்டாகலை பஸ்மம் (நீறு) என்றும், அக்கினி என்பது பஸ்மம் என்றமையால் வித்தியாகலை பஸ்மம் (நீறு) என்றும், வாயு என்பது பஸ்மம் என்றமையாற் சாந்திகலை பஸ்மம் (நீறு) என்றும், வியோமம் என்பது பஸ்மம் என்றமையாற் சாந்தியதீதகலை பஸ்மம் (நீறு) என்றும், சர்வம் பஸ்மம் (நீறு) என்றமையால் நிவிர்த்திகலைமுதல் சாந்தியதீதகலை இறுதியாகிய ஐங்கலைகளில் அடங்கிய பிரணவத்தோடுகூடிய மந்திரம் பதினொன்றும், பதம் எண்பத்தொன்றும், அக்ஷரம் ஐம்பத்தொன்றும், புவனம் இருநூற்றிருபத்தினன்கும், தத்துவம் முப்பத்தாறுமாகியவனைத்தும் பஸ்மம் (நீறு) என்றும், அவையனைத்தும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருளிய "மந்திரமாவது நீறு" என்றற்றொடக்கத்த தேவாரத்திருப்பதிகத்துக்கு அகஸ்தியமகாமுனிவர் பரையின்வடிவாறு என்றருளியவாறு சிவபெருமானினின்று வேறுறாத பராசத்தியயாம் என்று அறியற்பாற்று

மந்த்ரய மாநஸ்தோக இதி சமுத்த்ருத்ய மாநோமஹாந்தமிதி ஜலேந ஸம்ஸ்ருஜ்ய த்ரியாயுஷமிதி சிரோலலாடவக்ஷஸ்கந்தேஷு த்ர்யாயுஷைஸ் த்ரியம்பகை: ஸ்த்ரிசக்திபிஸ் திர்யக் திஸ்ரோ ரேகா: ப்ரகுர்வீத‌। வ்ரதமேதச்சாம்பவம் ஸர்வேஷு வேதேஷு வேதவாதிபிருக்தம் பவதி।..........................................
அஸ்ய ப்ரதமா ரேகா ஸா கார்ஹபத்ய: சாகாரோ ரஜோ பூர்லோக: ஸ்வாத்மா க்ரியாசக்திர் ருக்வேத: ப்ராத: ஸவநம் மஹேச்வரோ தேவதேதி। யாஸ்ய த்விதீயா ரேகா ஸா தக்ஷிணாக்நிருகார: ஸத்வமந்தரிக்ஷமந்தராத்மாசேச்சா சக்திர் யஜுர்வேதோ மாத்யந்திநம் ஸவநம் ஸதாசிவோ தேவதேதி। யாஸ்ய த்ருதீயா ரேகா ஸாஹவநீயோ மகாரஸ்தமோ த்யௌர்லோக: பரமாத்மா ஜ்ஞாநசக்தி: ஸாமவேதஸ்த்ருதீயஸவநம் மஹாதேவோ தேவதேதி।

"எது திரவியமோ, அது அக்கினியினலாய பஸ்மம்; சத்தியோ சாதமுதலிய பஞ்சப்பிரஹ்ம மந்திரங்களால் எடுத்து, அக்கினி என்பது பஸ்மம், வாயு என்பது பஸ்மம், ஜலம் என்பது பஸ்மம், ஸ்தலம் என்பது பஸ்மம், வியோமம் என்பது பஸ்மம் என்னும் மந்திரங்களால் அபிமந்திரித்து மாநஸ்தோக என்ற மந்திரத்தைச் சொல்லி (விபூதியை) எடுத்து, மாநோமஹாந்தம் என்ற மந்திரத்தைச்சொல்லி ஜலம் விட்டு, திரியாயுஷம் திரியம்பகம் திரிசக்தி என்ற மந்திரங்கள்கொண்டு தலை, நெற்றி, மார்பு, புயம் இரண்டு என்பவைகளில் முக்குறிகள் குறுக்கே அமையப் பூசுக; இது வேதவாதிகளாற் சமஸ்தவேதங்களினும் சொல்லப்பட்ட சாம்பவவிரதம்;.................................................
(நெற்றிமுதலிய ஸ்தானங்களிலே இடப்படும் விபூதி முக்குறிகளின்) முதலாவது குறி கார்கபத்தியத்தையும், (பிரணவத்தின்) அகாரத்தையும், ரஜோகுணத்தையும், பூலோகத்தையும், சுவாத்துமாவையும், கிரியாசத்தியையும், இருக்குவேதத்தையும், பிராதச்சவனத்தையும், மகேசுவரரையும் குறிக்கும் என்றும்; இரண்டாவது குறி தக்ஷிணக்கினியையும், உகாரத்தையும், சத்துவகுணத்தையும், அந்தரிக்ஷத்தையும், அந்தரான்மாவையும், இச்சாசத்தியையும், யசுர்வேதத்தையும், மாத்தியந்தினசவனத்தையும், சதாசிவத்தையும் உணர்த்தும் என்றும்; மூன்றாவது குறி ஆகவநீயத்தையும், மகாரத்தையும், தமோகுணத்தையும், தியுலோகத்தை

யும், பரமான்மாவையும், ... சத்தியையும், சாமவேதத்தையும், மூன்றாவது சவனத்தையும், மகாதேவரையும் (உணர்த்தும்)" என்றும் காலாக்கினிருத்திரோபநிடதத்திலும்,

(11) ஸத்யோஜாதமித்யாதி பஞ்ச ப்ரஹ்மமந்த்ரைர் பஸ்மஸங்க்ருஹ்யாக்னிரிதி பஸ்ம வாயுரிதி பஸ்ம ஜலமிதி பஸ்ம ஸ்தலமிதி பஸ்ம வ்யோமேதி பஸ்ம தேவா பஸ்ம ருஷயோ பஸ்ம। ஸர்வம் ஹவா ஏததிதம் பஸ்ம।

"சத்தியோசாதமுதலிய பஞ்சபிரஹ்ம மந்திரங்கள் சொல்லி விபூதியை எடுத்து, அக்கினி என்பது பஸ்மம், வாயு என்பது பஸ்மம், ஜலம் என்பது பஸ்மம், ஸ்தலம் என்பது பஸ்மம், ஆகாயம் என்பது பஸ்மம் தேவர்கள் பஸ்மம், இருஷிகள் பஸ்மம், இவையனைத்தும் பஸ்மம் என்று பஸ்மஜாபாலோபநிடதத்திலும்,

(12) ஸத்யோஜாதாத் ப்ருதிவீ। தஸ்யா: ஸ்யாந்நிவ்ருத்தி:। தஸ்யா: கபிலவர்ணா நந்தா। தத்கோமயேந விபூதிர் ஜாதா। வாமதேவாதுதகம்। தஸ்மாத் ப்ரதிஷ்டா। தஸ்யா: க்ருஷ்ணவர்ணா பத்ரா தத்கோமயேந பஸிதம் ஜாதம்। அகோராத் வஹ்நி:। தஸ்மாத் வித்யா। தஸ்யா ரக்தவர்ணா சுரபி:। தத்கோமயேந பஸ்ம ஜாதம்। தத்புருஷாத் வாயு:। தஸ்மாச்சாந்தி:। தஸ்யா: ச்வேதவர்ணா சுசீலா। தஸ்யா கோமயேந க்ஷாரம் ஜாதம்। ஈசாநாதாகாசம்। தஸ்மாச்சாந்த்யதீதா। தஸ்யா: சித்ரவர்ணா சுமநா:। தத்கோமயேந ரக்ஷா ஜாதா। விபூதிர் பஸிதம் பஸ்ம க்ஷாரம் ரக்ஷேதி பஸ்மநோ பவந்தி பஞ்ச நாமாநி। பஞ்சபிர் நாமபிர் ப்ருசமைச்வர்யகாரணாத் பூதி:। பஸ்ம ஸர்வாகபக்ஷணாத்। பாஸநாத் பஸிதம்। க்ஷாரணாதாபதாம் க்ஷாரம்। பூதப்ரேதபிசாச ப்ரஹ்மராக்ஷஸாபஸ்மார பவபீதிப்யோபிரக்ஷணாத்ரக்ஷேதி।

"சத்தியோஜாதத்தினின்று பிருதிவி, இதினின்று நிவிர்த்தி, இதினின்று கபிலவர்ணமாகிய நந்தை, இதின் கோமயத்தினால் விபூதி பிறந்தது; வாமதேவத்தினின்று உதகம், இதினின்று பிரதிஷ்டை, இதினின்று கிருஷ்ணவர்ணமாகிய பத்திரை, இதின் கோமயத்தினாலே பசிதம் பிறந்தது; அகோரத்தினின்று வன்னி, இதினின்று வித்தை, இதினின்று இரக்தவர்ணமாகிய சுரபி, இதின் கோமயத்தினாலே பஸ்மம் பிறந்தது; தற்புருஷத்தினின்று வாயு,

இதினின்று சாந்தி, இதினின்று சுவேதவர்ணமாகிய சுசீலை, இதின் கோமயத்தினாலே க்ஷாரம் பிறந்தது; ஈசானத்தினின்று ஆகாசம், இதினின்று சாந்தியதீதை, இதினின்று சித்திரவர்ணமாகிய சுமனை, இதின் கோமயத்தினாலே இரக்ஷை பிறந்தது; விபூதி பசிதம் பஸ்மம் க்ஷாரம் இரக்ஷை எனப் பஸ்மத்துக்கு ஐந்து திருநாமங்கள் எய்திய; ஐசுவரியத்தைக் கொடுக்குங் காரணத்தினாற் பூதி எனவும், சமஸ்தபாவங்களையும் போக்குதலாற் பஸ்மம் எனவும், பிரகாசித்தலாற் பசிதம் எனவும், ஆபத்தைப் போக்குதலால் க்ஷாரம் எனவும், பூதப்பிரேதபிசாசபிரஹ்மராக்ஷஸ அபஸ்மாரபவபீதிகளினின்று காத்தலால் இரக்ஷை" எனவும் பிருகஜ்ஜாபாலோபநிடதத்து க-ம் பிராஹ்மணத்தினும்,

ஆதாரசக்த்யாவத்ருத: காலாக்நிரயமூர்த்வக:।
ததைவ நிம்நக: ஸோம: சிவ சக்திபதாஸ்பத:।
சிவச்சோர்த்வமய: சக்திரூர்த்வசக்திமய: சிவ:।
ததித்தம் சிவசக்திப்யாம் நாவ்யாப்தமிஹகிஞ்சந।
அஸக்ருச்சாக்நிநா தக்தம் ஜகத் தத் பஸ்மஸாத் க்ருதம்।
அக்நேர் வீர்யமிதம் ப்ராஹு ஸ்தத்வீரியம் பஸ்ம யத்தத:॥

"ஆதாரசக்தியினாலே தாங்கப்பட்டது மேலே உள்ள காலாக்கினி; அந்த ஆழத்திலே உள்ள சோமமானது சிவசத்திபதாஸ்பதமாயுள்ளது; சிவன் மேலும் சத்தி கீழும், சத்தி மேலும் சிவன் கீழுமாக இங்ஙனம் சிவசத்திகளினாலே வியாபிக்கப்படாதது யாதும் இல்லை; அடிக்கடி அக்கினியினாலே தகிக்கப்படும் ஜகத்தானது பஸ்மமாய்ப்போகின்றது; இதனை அக்கினியின் வீரியம் என்றும், இந்த வீரியத்தைப் பஸ்மம் என்றும் கூறுவர்" என்று பிருகஜ்ஜாபாலோபநிடதத்து உ-ம் பிராஹ்மணத்தினும்,

(13) அத சதுர்விதம் பஸ்மகல்பம்। ப்ரதமமநுகல்பம்। த்விதீயமுபகல்பம்। உபோபகல்பம் த்ருதீயம்। அகல்பம் சதுர்த்தம்। அக்நிஹோத்ரஸமுத்பூதம் விரஜாநலஜமநுகல்பம்। வநே சுஷ்கம் சக்ருத் ஸங்க்ருஹ்ய கல்போக்தவிதிநா கல்பிதமுபகல்பம் ஸ்யாத்। அரண்யே சுஷ்ககோமயம் சூர்ணீக்ருத்யாநுஸங்க்ருஹ்ய கோமூத்ரை: பிண்டீக்ருத்ய யதா கல்பம் ஸம்ஸ்க்ருதமுபோபகல்பம்। சிவாலயஸ்தமகல்பம் சதகல்பஞ்ச।

"நால்வகையாயுள்ளது விபூதிகற்பம்:—முதலாவது அநுகற்பம், இரண்டாவது உபகற்பம், மூன்றாவது உபோபகற்பம், நான்காவது அகற்பம்; அக்கினிஹோத்திரத்தில் உண்டாயதும் விரஜாக்கினியில் எய்தியதும் அநுகற்பம்; காட்டிலே உலர்ந்து கிடந்த கோமயத்தைக் கொணர்ந்து கிருகியசூத்திரவிதிப்படி ஆக்கப்பட்ட விபூதி உபகற்பம், வனத்திலுள்ள காய்ந்த கோமயத்தைச் சூர்ணஞ் செய்து கிருகியசூத்திரவிதிப்படி கோமூத்திரங்கொண்டு உருட்டி ஆக்கப்பட்ட பஸ்மம் உபோபகற்பம், சிவாலயத்துப் பஸ்மம் அகற்பம் எனவும் சதகற்பம் எனவும்படும்" என்று பிருகஜ்ஜாபாலோபநிடதத்து ௩-ம் பிராஹ்மணத்தினும்,

(14) தேநாஸ்த்ரமந்த்ரேணாங்காநி மூர்த்தாதீந்யுத்தூலயேந் மலஸ்நாநமிதம்|

—பிருகஜ்ஜாபாலம், பிராஹ்மணம், ௪.

"அந்த அஸ்திரமந்திரங்கொண்டு சிரசுமுதலிய அங்கங்களைப் பஸ்மத்தினால் உத்தூளனஞ் செய்க; இது மலஸ்நானம் எனப்படும்" என்றும்,

(15) ஈசாநேதி சிரோதேசம் முகம் தத்புருஷேண து| ஊருதேசமகோரேண குஹ்யகம் வாமதேவத:| ஸத்யோஜாதேந வை பாதௌ ஸர்வாங்கம் ப்ரணவேந து| ஆபாததலமஸ்தகம் ஸர்வாங்கம் தத உத்தூல்யாசம்ய வஸநம் தௌதம் ச்வேதம் ப்ரதாரயேத் விதிஸ்நாநமிதம்|

—பிருகஜ்ஜாபாலம், பிராஹ்மணம், ௪.

"ஈசானமந்திரங்கொண்டு சிரசையும், தற்புருஷமந்திரங்கொண்டு முகத்தையும், அகோரமந்திரங்கொண்டு தொடைகளையும், வாமதேவமந்திரங்கொண்டு குஹ்யத்தையும், சத்தியோசாதமந்திரங்கொண்டு கால்களையும், பிரணவமந்திரங்கொண்டு சர்வாங்கங்களையும், (இங்ஙனம்) பாதமுதற் சிரசு இறுதியாகச் சர்வாங்கங்களையும் உத்தூளித்து, ஆசமித்து, வெளுத்த வெள்ளிய வஸ்திரத்தைத் தரிக்க; இது விதிஸ்நாநம் எனப்படும்" என்றும்,

(16) பஸ்மமுஷ்டிம் ஸமாதாய ஸம்ஹிதாமந்த்ரமந்த்ரிதாம்| மஸ்தகாத் பாதபர்யந்தம் மலஸ்நாநம் புரோதிதம்|

—பிருகஜ்ஜாபாலம், பிராஹ்மணம், ௪.

"(ஈசானமுதல் அஸ்திரம் இறுதியாயுள்ள பதினொரு) சங்கிதா மந்திரங்கொண்டு மந்திரிக்கப்பட்ட ஒரு பிடி விபூதிகொண்டு சிரசுமுதற் பாதபரியந்தம் (பூசுதல்) முன் (கச-ம் பிரிவிற்) சொல்லப்பட்ட மலஸ்நாநம் எனப்படும்" என்றும்,

(17) ஈசாநே பஞ்சதா பஸ்ம விகிரேந் மூர்த்நி யத்நத:| முகே சதுர்த்தவக்த்ரேண அகோரேணுஷ்டதா ஹ்ருதி| வாமேந குஹ்யதேசே து த்ரிதசஸ்தாநபேதத:| அஷ்டாவந்தேந ஸத்யேந பாதாவுத்தூல்ய யத்நத:|

—பிருகஜ்ஜாபாலம், பிராஹ்மணம், ச.

"ஈசானத்துக்குள்ள ஐந்து பிரகாரமாயுள்ள (கலாசத்தி) விபூதியைப் பிரயத்தினத்தோடு சிரசினும், 'தற்புருஷமுகத்துக்குள்ள நால்வகைக் (கலாசத்தி) விபூதியை நெற்றியினும், அகோரத்துக்குள்ள அஷ்ட(கலாசத்தி) விபூதியை இதயத்தினும், வாமதேவத்துக்குரிய பதின்மூவகைக் (கலாசக்தி) விபூதியைக் குஹ்யத்தினும், சத்தியோசாதத்துக்குரிய எண்வகைக் (கலாசத்தி) விபூதியைப் பாதத்தினுமாக உத்தூளனஞ்செய்து" என்றும்,

(18) ஸந்த்யாத்வயே நிசீதே ச ததா பூர்வாவஸாநயோ:| சுப்த்வா புக்த்வா பய: பீத்வா க்ருத்வா சாவச்யகாதிகம்| ஸ்த்ரியம் நபும்ஸகம் க்ருத்ரம் பிடாலம் பகமூஷிகம்| ஸ்ப்ருஷ்ட்வா த்தாவிதாநந்யாந் பஸ்மஸ்நாநம் ஸமாசரேத்|

—பிருகஜ்ஜாபாபாலம், பிராஹ்மணம், ச.

"இரண்டு சந்தியாகாலங்களினும், இராப்போதினும், காலையினும், மாலையினும், நித்திரைசெய்த பின்னும், போசனஞ் செய்த பின்னும், அவசியகருமமுதலியன முடித்தபின்னும் (பஸ்மஸ்நானஞ் செய்க); ஸ்திரீயையும், நபுசும்சகனேயும், இராசாளியையும், பூசனையையும், கொக்கையும், எலியையும், ஏனையவற்றையும் தீண்டிற் பஸ்மஸ்நானஞ் செய்க" என்றும்,

(19) தேவாக்நிகுருவ்ருத்தாநாம் ஸமீபே அந்த்யஜதர்சநே| அசுத்தபூதலே மார்க்கே சுர்யாந்நோத்தூலநம் வ்ரதி| சங்கதோயேந மூலேந பஸ்மநா மிச்ரணம் பவேத்|

—பிருகஜ்ஜாபாலம், பிராஹ்மணம், ச.

"தேவர்கள், சிவாக்கினி, குரு, பெரியோர் சமீபத்தினும், சண்டாளனைக் கண்டவிடத்தும், அசுத்தநிலத்தில் நடந்தவிடத்தும் விரதியானவன் விபூதியை உத்தூளனஞ் செய்தல் கூடாது; (ஆனால்) மூலமந்திரத்தைப் (பஞ்சாக்ஷரத்தைச்) சொல்லிச் சங்கு ஜலங்கொண்டு குழைத்த விபூதியைத் திரிபுண்டரமாகத் தரிக்க" என்றும்,

(20) த்ரிபுண்டரம் காரயேத் பச்சாத் ப்ரஹ்மவிஷ்ணு சிவாத்மகம்। மத்யாங்குலிபிராதாய திஸ்ருபிர் மூலமந்த்ரத:। அநாமாமத்யமாங்குஷ்டைரதவா ஸ்யாத் த்ரிபுண்ட்ரகம்॥

"பிரஹ்மவிஷ்ணுருத்திரர்களைக் குறிக்கும் முக்குறிகளைத் (தர்ச்சனி, மத்திமை, அநாமிகை என்னும்) நடு மூன்று விரல்களாலேனும், *பெருவிரல், மத்திமை, அநாமிகை என்னும் மூவிரல்களாலேனும் மூலமந்திரத்தைப் (பஞ்சாக்ஷரத்தைக்) கூறிப் பூசுக" என்றும்,

(21) உத்தமாங்கே லலாடே ச கர்ணயோர் நேத்ரயோஸ் ததா। நாஸாவக்த்ரே கலே சைவமம்ஸத்வயமத: பரம்। கூர்ப்பரே மணிபந்தேச ஹ்ருதயே பார்ச்வயோர் த்வயோ:। நாபௌ குஹ்யத்வயே சைவமூர்வோ: ஸ்பிக்பிம்பஜாநுநீ। ஜங்காத்வயேச பாதௌச த்வாத்ரிம்சத் ஸ்தாநமுத்தமம்। அஷ்டமூர்த்யஷ்ட வித்யேசாந் திக்பாலாந்வசுபி: ஸஹ। தரோ த்ருவச்ச ஸோமச்ச க்ருபச்சைவாநிலோநல:। ப்ரத்யூஷச்ச ப்ரபாஸச்ச வஸவோஷ்டாவிதீரிதா:।

—பிருகஜ்ஜாபாலம், பிராஹ்மணம், ௪.

"அஷ்டமூர்த்திதிருநாமங்கள், (சிவதத்துவத்து ஈசுவரதத்துவத்தினர்களாகிய) அஷ்டவித்தியேசுவரர் திருநாமங்கள், அஷ்டபாலகர் திருநாமங்கள், அஷ்டவசுக்கள் திருநாமங்களாகிய (பவ, சர்வ, ஈச, பசுபதி, சோம, உக்கிர, மகாதேவ, சோம, (அஷ்டமூர்த்திகள்); சிகண்டி, சிகண்ட, திரிமூர்த்தி, ஏகருத்திர, ஏகநேத்திர, சிவோத்தம, சூட்சும, அனந்த (அஷ்டவித்தியேசுவரர்); ஈசான, குபேர, வாயு, வருண, நிருதி, யம, அக்கினி, இந்திர (அஷ்டபாலகர்); தர, துருவ, சோம, கிருப, அநில, அநல, பிரத்தியூஷ, பிர

* பெருவிரல், மத்திமை, அநாமிகை என்னும் விரல்களாற் பூசுவது சிறிது வருத்தமாதலின் இவ்வழக்கம் அருகிவிட்டது.

பாச, (அஷ்டவசுக்கள்) என்னும் முப்பத்திரண்டு நாமங்கள்கொண்டு தலையினும், நெற்றியினும், காதுகள் இரண்டினும், கண்கள் இரண்டினும், நாசிகள் இரண்டினும், முகம் இருபக்கத்தினும், புயங்கள் இரண்டினும், முழங்கைகள் இரண்டினும், மணிக்கட்டுகள் இரண்டினும், நெஞ்சினும் இருபக்கத்து விலாக்களினும், நாபியினும், குஹ்யம் இரண்டினும், தொடைகள் இரண்டினும், ஜகனங்கள் இரண்டினும், முழங்கால்கள் இரண்டினும், கால்கள் இரண்டினும், அடிகள் இரண்டினுமாக முப்பத்திரண்டு இடங்களினும் பூசுக” என்றும்,

(22) விதத்யாத் ஷோடசஸ்தானே த்ரிபுண்ட்ரந்து ஸமாஹித:। சிர்ஷகேச லலாடே ச கர்ணே கண்டேம்ஸகத்வயே। கூர்ப்பரே மணிபந்தேச ஹ்ருதயே நாபிபார்ச்வயோ:। ப்ருஷ்டே சைகம் ப்ரதிஸ்தானம் ஜபேத் தத்ராதிதேவதா:। சிவம்சக்திஞ்ச ஸாதாக்யமீசம் வித்யாக்யமேவ ச। வாமாதி நவசக்தீச்ச ஏதா: ஷோடச தேவதா:। நாஸத்யோ தஸ்ரகச்சைவ அச்விநௌ த்வௌ ஸமீரிதௌ।

—பிருகஜ்ஜாபாலம், பிராஹ்மணம், ச.

“சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுவரம், சுத்தவித்தை (ஐந்து சிவதத்துவங்கள்); (வாமை, ஜ்யேஷ்டை, ரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி, மனோந்மனி) என்னும் நவசத்திகள்; நாசத்திய, தஸ்ரக என்னும் இரு அச்சுவினிதேவதைகள் என்னும் பதினாறு நாமங்கள் கொண்டு, தலை, நெற்றி, காது இரண்டு, கழுத்து ஒன்று, தோள்கள் இரண்டு, முழங்கைகள் இரண்டு, மணிக்கட்டுகள் இரண்டு, நெஞ்சு, நாபி, விலாப்புறம் இரண்டு, முதுகு என்னும் பதினாறு ஸ்தானங்களினும் பூசுக” என்றும்,

(23) அதவா மூர்த்ந்யலீகே ச கர்ணயோ: ச்வஸநேதததா। பாஹுத்வயே ச ஹ்ருதயே நாப்யாமூர்வோர் யுகே ததா। ஜாநுத்வயே ச பதயோ: ப்ருஷ்டபாகே ச ஷோடச। சிவச்சேந்த்ரச்ச ருத்ரார்க்கௌ விக்நேசோ விஷ்ணுரேவச। ஸ்ரீ:சைவ ஹ்ருதயே சச்ச ததா நாபௌ ப்ரஜாபதி:। நாகச்ச நாககந்யாச்ச உபே ச ருஷிகந்யகே। பாதயோச்ச ஸமுத்ராச்ச தீர்த்தா: ப்ருஷ்டே பி ச ஸ்திதா:। ஏவம் வா ஷோடசஸ்தானம்..........।

—பிருகஜ்ஜாபாலம், பிராஹ்மணம், ச.

(26) ஈசானேந சிரோதார்யம் கர்ணே தத்புருஷேண து।
அகோரேண களே தார்யம் ஹ்ருத்யகோரேண தாரயேத்।
ஸப்தஜந்மக்ருதம் பாபம் க்ஷிப்ரநாசம் பவேந் முநே।
ஸப்தஜந்மஸஹஸ்ரேஷு ருத்ரலோகே மஹீயதே।

"ஈசானத்திஞற் சிரசிலும், தற்புருஷத்திஞற் காதிலும், அகோரத்திஞற் கழுத்திலும் மார்பிலும் உருத்திராக்ஷம் தரிக்க; (அங்ஙனம் தரிக்கின்) ஏழு சென்மத்திற் செய்த பாவமும் விரைந்து நாசமாகும்; ஆயிரம் வருஷம் உருத்திரலோகத்திற் பூஜ்யஞயிருக்கின்ருன்."

## (கஉ) பராசரபுராணம்.

(27) ருத்ராக்ஷதாரணம் கார்யம் ஸர்வை: ச்ரேயோர்த்திபிர்ந்ருபி:।
கர்ணபாசே சிகாயாஞ்ச கண்டே ஹஸ்தே சுகாதராத்।
மஹாதேவ: ச விஷ்ணு: ச ப்ரஹ்மா தேஷாம் விபூதய:।
தேவா: சாந்யே ஸதா பக்த்யா கலு ருத்ராக்ஷதாரிண:।
பாபிஷ்டாநாம் மநுஷ்யாணாம் ருத்ராக்ஷாணாஞ்ச தாரணே।
ச்ரத்தா ந ஜாயதே ஸாக்ஷாத் வேதஸித்தே விமுக்திதே।
பஹூநாம் ஜந்மநாமந்தே மஹாதேவப்ரஸாதத:।
ருத்ராக்ஷதாரணச்ரத்தா ஸ்வபாவேநைவ ஜாயதே॥

"சுகரே! முக்திகாமிகளாகிய மனிதரெல்லாம் காது சிகை கண்டம் கை என்னும் இடங்களில் உருத்திராக்ஷத்தை அன்பிஞேடு தரிக்கற்பாலர்; பிரமா விஷ்ணு உருத்திரர்களும் இவர்கள் விபூதி (வியூகர்)களாகிய மற்றைய தேவர்களும் எஞ்ஞான்றும் உருத்திராக்ஷத்தை அன்பிஞேடு தரிக்கின்ருரன்ருே; பாவிகளாகிய மனிதர்க்கு வேதத்திஞற் சித்தித்த முக்தியைக் கொடுக்கும் உருத்திராக்ஷ தாரணத்திற் பக்தி உண்டாகாது; அநேக சென்மங்களின் இறுதியிற் சிவாநுக்கிரஹத்திஞல் இயல்பாக உருத்திராக்ஷம் தரிப்பதில் பக்தி உண்டாகின்றது."

(28) அங்குள்யா சங்கமணிநா புத்ரஜீவேந வா புத:।
பத்மாக்ஷை: ஸ்பாடிகைர்வாபி குசக்ரந்த்யாத வா ஜபேத்।
ருத்ராக்ஷேணைவ வா நித்யம் ஜபேந் மந்த்ரமதந்த்ரித:।
ருத்ராக்ஷேண ஜபந் மர்த்ய: ஸாக்ஷாத்ருத்ரஸமோ பவேத்।

ருத்ராக்ஷஸ்யது மாஹாத்ம்யம் ஜாபாலோதரேண து।
பட்யதே முநிபி: ஸர்வை: சிவேநாபி மஹாத்மநா।
அங்குள்யா ஜப ஏகஸ்யாத்ரேகயாஷ்டகுணோ பவேத்।
ஜபஸ்து சங்கமணிநா சதமஷ்டோத்தரம் பவேத்।
ஜபஸ்து புத்ரதீபேந பவேதேவசதத்ரயம்।
பத்மாக்ஷேண ஸஹஸ்ரம் ஸ்யாத்ஸ்பாடிகேநாயுதத்ரயம்।
கோடி கோடி குசக்ரந்த்யா ருத்ராக்ஷேணாந்தவர்ஜித:।
அத: ஸர்வப்ரயத்நேந ருத்ராக்ஷ: ஸர்வதா ஜபேத்॥

"விரல், சங்குமணி, புத்திரதீபமணி, தாமரைமணி, ஸ்படிகமணி; தர்ப்பைமுடிச்சு என்பவைகளின் ஒன்றினால் அறிஞன் செபிக்க. உருத்திராக்ஷங்கொண்டு நித்தமும் சோம்பலின்றி மந்திரம் செபிக்க; இங்ஙனம் உருத்திராக்ஷங்கொண்டு செபிக்கும் மனிதன் உருத்திரனுக்குச் சமமாகின்றான்; உருத்திராக்ஷத்தின் பெருமை ஆதரவினோடு ஜாபாலத்திற் கூறப்பட்டிருக்கின்றது; சமஸ்த முனிவர்களாலும் மகாத்மாவாகிய உருத்திரராலும் உரைக்கப் பட்டிருக்கின்றது; செபத்துக்கு விரல்கொண்டு செபித்தல் ஒரு மடங்கு குணமும், விரலிறையாற் செபித்தல் எட்டுமடங்கு அதிகம்; சங்குமணி நூற்றெட்டுமடங்கு அதிகம்; அதினும் புத்திரதீபம் முன்னூறு மடங்கு அதிகம்; அதினும் தாமரைமணி ஆயிரமடங்கு அதிகம்; அதினும் ஸ்படிகமணி முப்பதினாயிரமடங்கு அதிகம்; தர்ப்பை முடிச்சு கோடி கோடி மடங்கு அதிகம்; அதினும் உருத்திராக்ஷத்தைக்கொண்டு செபித்தலால் உண்டாகும் பயன் இததுணைத்தென்று கூற முடியாது; ஆகலின், எக்காலமும் சர்வப்பிரயத்தினத்தோடு உருத்திராக்ஷங்கொண்டே செபிக்க."

## (௩௩) வாசிஷ்டலைங்கம்.

---

(29) ருத்ராக்ஷதாரணாத் ருத்ரோ பவத்யேவ ந ஸம்சய:।
பச்யந்நபி நிஷித்தாந் ச ததா ச்ருண்வந்நபி ஸ்மரந்।
ஜிக்ரந்நபி ததாசாச்நந் ப்ரலபந்நபி ஸத்தம।
குர்வந்நபி ததா கச்சந் விஸ்ருஜந்நபி மாநவ:।
ருத்ராக்ஷதாரணாதேவ ஸர்வை: பாபை: ப்ரமுச்யதே।
அநேந புக்தம் ருத்ரேண யத் புக்தம் தத் ததா பவேத்।

பீதம் ருத்ரேண பீதம் ஸ்யாத் க்ராதம் க்ராதம் சிவேநத்।
ருத்ராக்ஷதாரணே லஜ்ஜா யேஷாமஸ்தி மஹாமுநே।
தேஷாம் நாஸ்தி விநிர்மோக்ஷ: ஸம்ஸாராஜ் ஜந்மகோடிபி:॥

"உருத்திராக்ஷதாரணத்தினல் உருத்திரனுகவே ஆகின்றான், இதில் ஐயமில்லை; மனிதன் இழிந்த பொருள்களை நோக்கினாலும் கேட்டாலும் நினைத்தாலும் மோந்தாலும் உண்டாலும் பேசினாலும் செய்தாலும் அடைந்தாலும் விடுத்தாலும் உருத்திராக்ஷம் தரித்தலாற் சமஸ்த பாவங்களினின்று விடுறுகின்றான்; இவன் உண்டது உருத்திரர் உண்டதாம்; இவன் குடித்தது உருத்திரர் குடித்ததாம்; இவன் மோந்தது உருத்திரர் மோந்ததாம்; மஹருஷியே! உருத்திராக்ஷம் தரித்தலில் எவர்களுக்கு இலச்சை உண்டாகின்றதோ, அவர்களுக்குக் கோடி செனமமானாலும் சம்சாரத்தினின்று நீங்குதல் கூடாது."

(30) ருத்ராக்ஷதாரிணம் த்ருஷ்ட்வா பரிஹாஸம் கரோதி ய:।
உத்பத்தௌ தஸ்ய ஸாங்கர்யமநுமேயம் விபச்சிதா।
ருத்ராக்ஷதாரணே ச்ரத்தா யேஷாம் நாஸ்தி மஹாமுநே।
ஸங்கீர்ணா ஸா பவேத் ப்ரஹ்மந் தேஷாம் வம்சபரம்பரா।
குலீநமகுலீநம் வா பூதிருத்ராக்ஷதாரிணம்।
த்ருஷ்ட்வோந்நதாஸநேஸ்தித்வா ரௌரவம் நரகம் வ்ரஜேத்।
ருத்ராக்ஷதாரணாதேவ ருத்ரா ருத்ரத்வமாகதா:।
முநய: ஸத்யஸங்கல்பா: ப்ரஹ்மா ப்ரஹ்மத்வமாகத:।
ருத்ராக்ஷதாரிணே பக்த்யாவஸ்த்ரம் வாந்யத் ததாதிய:।
ஸர்வபாபவிநிர்முக்த: சிவலோகம் ஸ கச்சதி।
ருத்ராக்ஷதாரிணம் ச்ராத்தே மோதயித்வா நுமோதித:।
பித்ருலோகமவாப்நோதி நாத்ர கார்யா விசாரணா॥

"உருத்திராக்ஷம் தரிப்பவனை நோக்கிப் பரிகசிக்கின்றவனுடைய உற்பத்தியை அறிஞன் சாங்கர்யம் என அநுமிக்கற்பாலன்; மஹாபிரஹ்மருஷியே! உருத்திராக்ஷதாரணத்திற் சிரத்தை இல்லாதவருடைய வம்சபரம்பரை சாங்கர்யமாகும்; உயர்ந்த குலத்தினனாயினும் தாழ்ந்த குலத்தினனாயினும் விபூதிருத்திராக்ஷம் தரித்தவர்களைப் பார்த்து உயர்ந்த ஆசனத்திருப்பவன் இரௌரவநரகத்தை அடைவான்; உருத்திராக்ஷதாரணத்தினாலேதான் உருத்திரர்கள் உருத்திரத்துவத்தை அடைந்தார்கள்; முனிவர்கள் சத்தியசங்கற்பத்தை யுடையராயினார்கள்; பிரமா பிரமத்

துவத்தை அடைந்தார்; எவன் உருத்திராக்ஷதாரிக்கு அன்பி னோடு வஸ்திரத்தையேனும் மற்றொன்றையேனும் கொடுக்கின்றா னோ, அவன் சமஸ்த பாவங்களினின்றும் விடுபட்டுச் சிவலோகத் தை அடைகின்றான்; உருத்திராக்ஷதாரியைச் சிராத்தகாலத்தி லே மகிழ்வித்துக் கொண்டாடினவன் சந்தேகமின்றிப் பிதிர்லோ கத்தை அடைகின்றான்.”

(31) ருத்ராக்ஷதாரிண: பாதௌ ப்ரக்ஷாள்யாப: பிபேந் நர:।
ஸர்வபாபவிநிர்முக்த: சிவலோகே மஹீயதே।
ஹாரம் வா கடகம் வாபி ததாங்யத்வா த்விஜோத்தம:।
ருத்ராக்ஷஸஹிதம் பக்த்யா தாரயந் ருத்ரதாமியாத்।
ருத்ராக்ஷம் கேவலம் வாபி யத்ர குத்ர மஹாமுநே।
அமந்த்ரகம் வா மந்த்ரேண ஸஹிதம் பாவவர்ஜிதம்।
யோ வா கோ வா நரோ நித்யம் தாரயேல் லஜ்ஜயா விநா।
ஸர்வபாபவிநிர்முக்த: ஸம்யக் ஜ்ஞாநமவாப்நுயாத்॥

“உருத்திராக்ஷம் தரித்தவனுடைய பாதங்களைப் பிரக்ஷாளனஞ் செய்து அத்தீர்த்தத்தைப் பானஞ் செய்கின்றவன் சமஸ்தபா வங்களினின்றும் நீங்கிச் சிவலோகத்திற் பெருமையோடிருக்கின் றான்; உருத்திராக்ஷமாலையையேனும் கடகத்தையேனும் மற்றொ தனையேனும் பக்தியோடு தரிக்கும் பிராஹ்மணோத்தமன் உருத் திரத்துவத்தை அடைகின்றான்; மஹாமுனிவரே! எவனொருவன் யாதாயினும் ஓரிடத்தில் மந்திரத்தோடேனும் மந்திரமில்லாம லேனும் பக்தியில்லாமலேனும் இலச்சையொழிந்து உருத்திரா க்ஷத்தைத் தரிக்கின்றானோ, அவன் சமஸ்தபாவங்களினின்று நீங்கி நல்ல ஞானத்தை அடையற்பாலன்.”

(32) கச்சித் புரா முநே ஜாத்யா சண்டாளோதிவ துர்ஜந:।
ஆசீத் ப்ரஹ்மந் க்ருதம் தேந ப்ரஹ்மஹத்யா ஸஹஸ்ரகம்।
கவாம் ஸஹஸ்ரம் நிஹதம் ப்ராஹ்மணாநாம் தநம் ஹ்ருதம்।
அந்யாநி யாநி கர்மாணி கோராண்யாசரிதாநி ச।
ததாபி தஸ்ய பாபாநி முநே ருத்ராக்ஷதாரணாத்।
தக்தாநி சல்மலீ தூலம் யதா தாவாக்நிஸம்ஸ்திதம்।
காலேந மரணம் ப்ராப்த: ஸ புநர் யமமாகத:।
ஸோபி தம் ப்ராஹ பகவாந் தர்மஸ் ஸர்வார்த்தவித்தம।
அஹோ பாபம் க்ருதம் ஸர்வம் த்வயா லோகே பரந்தப।
தத் பலம் வாம் மயா புத்வா சக்யம் போஜயிதும் நஹி।

மஹாத்மந் ஸகலம் தக்தம் தவ ருத்ராக்ஷதாரணாத்।
கச்ச கச்ச விமாநேந சிவலோகம் ஸுகாவஹம்।
ஸோபி ஸூர்யப்ரதிகாசம் விமாநம் ஸர்வகாமகம்।
ஆருஹ்ய ந்ருத்தகீதாத்யைர் வ்ருத: சிவபுரம் கத:।
தத்ர தத்தம் மயா தஸ்ய ப்ரஹ்மந் ரௌத்ரம் பதம் முதா।
தஸ்மாத்ஸர்வை: ஸதாகார்யம் ருத்ராக்ஷாணாஞ்சதாரணம்॥

"முனிவரே! முன்னோர்காலத்தில் ஓர் கொடிய சண்டாளன் இருந்தான்; அவன் ஆயிரம் பிரஹ்மஹத்தி ஆயிரம் கோஹத்திகளைச் செய்தான்; பிராமணர்பொருளை அபகரித்தான்; பின்னரும் அநேக கொடிய செய்கைகள் செய்தான்; அங்ஙனஞ் செய்தானாயினும் அவன் பாவங்கள் காட்டுத்தீமுன் பஞ்சுபோல உருத்திராக்ஷதாரணத்தினாற் பஸ்மீகரிக்கப்பட்டன; அவன் (இறக்குங்)காலத்தில் அனைத்தையும் அறிந்தவனும் பகவானுமாகிய யமன் வந்து அவனை நோக்கிச் சொல்லுகின்றான்; அஹோ! உலகத்திலே சகல பாவங்களையுஞ் செய்தாய்; (அங்ஙனஞ் செய்தனை என்று) யான் அறிந்தேனாயினும் அவற்றின் பயனை உன்னைக்கொண்டு அநுபவிக்கச் செய்ய என்னால் முடிந்திலது; மஹாத்துமாவே! உருத்திராக்ஷதாரணத்தினால் உன்னுடைய சமஸ்த பாவங்களும் தஹிக்கப்பட்டன; சுகத்தைக் கொடுக்கற்பாலதாய சிவலோகத்துக்கு விமானவாயிலாகப் போகுதி என்றான்; அவன் சூரியனை நிகர்த்ததும் எங்கும் போகக்கூடியதுமாய விமானத்தில் எறி நிருத்தகீதாதிகளோடு சிவலோகத்தை அடைந்தான்; அவ்விடத்தில் அவனுக்கு மகிழ்வினோடு உருத்திரபதவியைக் கொடுத்தேன்; ஆகலின், சமஸ்தரும் எஞ்ஞான்றும் உருத்திராக்ஷதாரணஞ் செய்யவேண்டும்."

(33) போகமோக்ஷப்ரதம் பும்ஸாம் மயாசைதத் வ்ரதம் ஸதா।
அஹோ ருத்ராக்ஷமாஹாத்ம்யம் மயா வக்தும் ந சக்யதே।
தஸ்மாத் ஸர்வப்ரயத்நேந குரு ருத்ராக்ஷதாரணம்॥

"மனிதர்க்குப் போகமோக்ஷம் கொடுக்கவல்ல இவ்விரதத்தை நான் எஞ்ஞான்றும் அநுஷ்டிக்கின்றேன்; அஹோ! உருத்திராக்ஷத்தின் மேன்மை என்னாலும் சொல்லமுடிவதன்று (என்றார் உருத்திரர்); ஆகலின், எவ்வாறாயினும் உருத்திராக்ஷதாரணஞ் செய்குதி."

## (கச) ஸ்காந்த உபதேசகாண்டம்.

---

(34) பக்திஹீநோதவா பக்தோ மூர்க்கோமூர்க்கதரோபிவா।
ருத்ராக்ஷம் தாரயேத் யஸ்து முச்யதே பாதகைரயம்।
மஹாவ்ரதமிதம் ப்ராஹுர் முநயஸ்தத்வதர்சிந:।
ருத்ராக்ஷதாரணாத் புண்யம் கேநவா ஸத்ருசம் பவேத்।
ஸஹஸ்ரம் தாரயேத் யஸ்து ருத்ராக்ஷாணாம் த்ருதவ்ரத:।
ஸுரா: ஸர்வே நமந்த்யேநம் யதாருத்ரஸ் ததைவ ஸ:
அபாவேது ஸஹஸ்ரஸ்ய பாஹ்வோ: ஷோடச ஷோடச।
ஏகம் சிகாயாம் கரயோர் த்வாதச த்வாதச த்வயோ:।
த்வாத்ரிம்சத்கண்டதேசேது ப்ரத்யேகம் கர்ணயோ:சஷட்।
தாரயேத் யஸ்து ருத்ராக்ஷாந் ருத்ரவத் பூஜ்யதே ஹிஸ:।
முக்த்வா ப்ரவாளஸ்படிகரௌப்யவைடூர்யகாஞ்சநை:।
தாரயேத் யஸ்து ருத்ராக்ஷாந் ஸருத்ரோ நாத்ர ஸம்சய:।
கேவலம் வாபி ருத்ராக்ஷாந் ருத்ரமுத்ராம் பிபர்த்தி ய:।
தந்ந ஸ்ப்ருசந்தி பாபாநி தமாம்சீவ விபாவஸும்॥

"பக்தியில்லாதவனாயிருப்பினும், பக்தனாயிருப்பினும், மூடனாயிருப்பினும், பண்டிதனாயிருப்பினும் அவன் உருத்திராக்ஷம் தரிப்பானாயின் சர்வ பாதகங்களினின்றும் நீங்குகின்றான்; தத்துவ தரிசிகளாகிய முனிவர்கள் மஹாவிரதம் என்று சொல்லுகிறார்கள்; உருத்திராக்ஷதாரணத்தினால் எய்தும் புண்ணியம் எதனோடு தான் சமத்துவமாகும்! எவர் ஆயிரம் உருத்திராக்ஷம் தரிக்கின்றாரோ, அவரைத் தேவர்களெல்லாம் வந்திக்கின்றார்கள்; அவர் உருத்திரருக்கு ஒப்பானவரே; ஆயிரம் இல்லாவிடினும் புயங்களிற் பதினாறு பதினாறும் சிகையில் ஒன்றும் கைகளிற் பன்னிரண்டு பன்னிரண்டும் கழுத்தில் முப்பத்திரண்டும் காதுகளில் அவ்வாறும் தரிக்கின்றாரோ, அவர் உருத்திரரைப் போலப் பூசிக்கற்பாலர்; எவர் உருத்திராக்ஷங்களை முத்து பவளம் ஸ்படிகம் வெள்ளி வைடூரியம் தங்கம் என்பவற்றோடு சேர்த்துத் தரிக்கின்றாரோ, அவர் சந்தேகமின்றி உருத்திரரே; உருத்திரமுத்திரையாகிய வெறு உருத்திராக்ஷத்தையாவது தரிப்பவரிடத்துப் பாவங்கள் சூரியனிடத்து இருள்போல அணுகுவதில்லை."

(35) ருத்ராக்ஷ மாலயா ஜப்தோ மந்த்ரோநந்தபலப்ரத:।
அருத்ராக்ஷஜப: பும்ஸாம் தாவந்மாத்ரபலப்ரத:।
யஸ்யாங்கே நாஸ்தி ருத்ராக்ஷ ஏகோபி பஹுபுண்யத:।
தஸ்ய ஜந்ம நிரர்த்தம் ஸ்யாத் த்ரிபுண்ட்ரரஹிதம் யதா।
மூர்த்நி விந்யஸ்ய ருத்ராக்ஷம் ய: ஸ்நாதி மதிமாந் நர:।
கங்காஸ்நாநபலம் தஸ்ய ஜாயதே நாத்ர ஸம்சய:।
கேவலம் வாபி ருத்ராக்ஷாந் ருத்ரமுத்ராம் பிபர்த்தி ய:।
தந்ந ஸ்ப்ருசந்தி பாபாநி பஹுஜந்மோத்பவாநிச।
பூஜயேத் யஸ்து ருத்ராக்ஷம் முக்த்வா தோயாபிஷேசநம்।
யத் பலம் லிங்கபூஜாயாம் ததேவாப்நோதி நிச்சிதம்।
ஏகாநநா: பஞ்சமுகாஸ் ததைவேகாதசாநநா:।
சதுர்தசாநநா: கேசித் ருத்ராக்ஷா லோகபூஜிதா:।
பக்த்யைதாந் பூஜயேந் மர்த்யோ தரித்ரோபி ச்ரியம் லபேத்॥

"உருத்திராக்ஷ மாலைகொண்டு செய்யப்படும் செபமானது மனிதர்க்கு அனந்த பலத்தைக் கொடுக்கும்; அம்மாலையின்றிச் செய்யப்படும் செபம் அதற்குத் தக்க பயனையே கொடுக்கும்; அநேக புண்ணியங்களைக் கொடுக்கும் உருத்திராக்ஷம் ஒன்றையேனும் எவன் தரிக்கவில்லையோ, அவனது சென்மம் திரிபுண்டரம் இடாதவனுடைய சென்மம்போலப் பயனற்றதாகும்; எந்தப் புத்திசாலியாகிய மனிதன் உருத்திராக்ஷத்தைச் சிரசிலிட்டுக் கொண்டு ஸ்நானஞ் செய்கின்றானோ, அவனுக்குக் கங்காஸ்நான பயன் எய்தும் என்பதிற் சந்தேகமில்லை; உருத்திரமுத்திரையாகிய உருத்திராக்ஷங்களில் ஒன்றையேனும் தரிப்பவரிடத்து அநேக சென்மங்களில் ஈட்டப்பட்ட பாவங்கள் தீண்டுவதில்லை; உருத்திராக்ஷத்தில் ஜலத்தை அபிஷேகஞ் செய்கின்றவர் சிவலிங்காபிஷேகஞ் செய்த பயனை அடைகின்றார் என்பது நிச்சயம்; சமஸ்த உலகினராலும் புகழப்படுகின்ற ஒருமுகம், ஐந்துமுகம், பதினொரு முகம், பதினான்கு முகம் என்பவற்றைக் கொண்ட உருத்திராக்ஷங்களை அன்பினோடு பூசிக்கின்ற மனிதர் மிகுந்த தரித்திரரேயாயினும் மிகுந்த சம்பத்துடையராவர்."*

---

* இங்ஙனம் ஸ்காந்த உபதேசகாண்டம் கூறியவாறு பிரஹ்மோத்தர கண்டம் சில சப்தவேறுபாட்டோடு கூறுகின்றது. விரிவஞ்சி ஈண்டு அது தவிர்க்கப்பட்டது.

## (கரு) வாயுசங்கிதை.

---

(36) அங்குல்யா ஜபஸங்க்யாநமேகமேகமுதாஹ்ருதம்।
ரேகயாஷ்டகுணம் வித்யாத் புத்ரதீபைர் தசாதிகம்।
சதம் ஸ்யாச் சங்கமணிபி: ப்ரபாலைஸ்து ஸஹஸ்ரகம்।
ஸ்பாடிகைர் தசஸஹஸ்ரம் மௌக்திகைர் லக்ஷமுச்யதே।
பத்மாக்ஷைர் தசலக்ஷந்து ஸௌவர்ணை: கோடிருச்யதே।
குசக்ரந்த்யா ச ருத்ராக்ஷைரநந்தகுணிதம் பவேத்॥

"செபம் செய்தற்கு விரலினும் விரலிறை எட்டுமடங்கு அதிகம்; அதினும் புத்திரதீபமணிமாலை பத்துமடங்கு அதிகம்; அதினும் சங்குமணிமாலை நூறுமடங்கு அதிகம்; அதினும் பவளமணிமாலை ஆயிரமடங்கு அதிகம்; அதினும் ஸ்படிகமணிமாலை பதிுயிரமடங்கு அதிகம்; அதினும் முத்துமாலை இலக்ஷமடங்கு அதிகம்; அதினும் தாமரைமணிமாலை பத்துலக்ஷமடங்கு அதிகம்; அதினும் சுவர்ணமணிமாலை கோடிமடங்கு அதிகம்; அதினும் தருப்பைப் பவித்திரமுடிச்சுமாலை பத்துக்கோடி மடங்கு அதிகம்; அதினும் உருத்திராக்ஷமாலை அனந்தமடங்கு அதிகம்."

(37) ருத்ராக்ஷம் தாரயேந் மூர்த்நி கண்டே ச்ரோத்ரே கரே தவா।
ஸுவர்ணவர்ணம் ஸச்சித்ரம் சுபம் நாந்யைர் த்ருதம் சுபம்।
விப்ராதீநாம் க்ரமாச் ச்வேதம் ரக்தம் பீதம் மதாஸிதம்।
ததாலாபே யதாலாபம் தாரணீயமதூஷிதம்।
தத்ராபி நோத்தரம் நீசைர் தார்யம் நீசமதோத்தரை:॥

"பொன்னிறமாயதும் துவாரமுடையதும் அழகியதும் பிறராற் றரிக்கப்படாததுமாகிய உருத்திராக்ஷத்தை தலை கண்டம் காது கை என்பவைகளில் எதிலாயினும் தரிப்பின் சுகமுண்டாகும்; பிராமணர்முதலிய வருணத்தார் வெண்மை செம்மை பொன்மை கருமைநிறமுடைய உருத்திராக்ஷம் தரிக்க; அங்ஙனம் கிடைக்காவிடின் கிடைத்தவரையில் தூஷியாமற்றரிக்கற்பாற்று; அதினும் தாழ்ந்தவரால் மேலாயது தரிக்கற்பாலதன்று."

(கசூ) ஸ்காந்தபுராணம்.

---

(38) ஹஸ்தே சோரஸி கண்டே ச கர்ணயோர் மஸ்தகே ததா।
ருத்ராக்ஷம் தாரயேத் யஸ்து ஸ ருத்ரோ நாத்ர ஸம்சய:।
அவத்ய: ஸர்வபூதாநாம் ருத்ரவத் விசரேத் புவி।
ஸுராணா மஸுராணாஞ்ச வந்தநீயோ யதாசிவ:।
ருத்ராக்ஷதாரீ ஸததம் வந்தநீயஸ் ததா நரை:।
உச்சிஷ்டோ வா விகர்மஸ்தோ யுக்தோ வா ஸர்வபாதகை:।
முச்யதே ஸர்வ பாபேப்யோ ருத்ராக்ஷஸ்ய து தாரணாத்।
கண்டே ருத்ராக்ஷமாபத்ய ய: ச்வாபி ம்ரியதே யதி।
ஸோபி ருத்ரத்வமாப்நோதி கிம்புநர் மாநுஷாதய:।
ஜபத்யாநவிஹீநோபி ருத்ராக்ஷம் யதி தாரயேத்।
ஸர்வபாபவிநிர்முக்த: ஸ யாதி பரமாம் கதிம்।
ம்ருண்மயம் வாபி ருத்ராக்ஷம் க்ருத்வா யத்நேந தாரயேத்।
குலைகவிம்சமுத்த்ருத்ய சிவலோகே மஹீயதே।
மஹாஸேந குசக்ரந்தி புத்ரதீபாதய: பரே।
ருத்ராக்ஷஸ்ய து வைகஸ்ய கலாம் நார்ஹந்தி ஷோடசீம்।
புருஷாணாந்து யதாவிஷ்ணுர் க்ரஹாணாந்து யதாரவி:।
நதீநாஞ்ச யதா கங்கா முநீநாம் காச்யபோ யதா।
உச்சை: ச்ரவா யதாச்வாநாம் தேவாநாமீச்வரோ யதா।
தேவீநாந்து யதா கௌரீ தத்வச் ச்ரேஷ்டமிதம் பவேத்॥

"கையினும் மார்பினும் கண்டத்தினும் காதுகளினும் உருத்திராக்ஷம் தரிப்பவன் சந்தேகமின்றி உருத்திரனே; உருத்திராக்ஷம் தரித்தவன் சமஸ்தசெந்துக்களாலும் கொல்லப்படமாட்டான்; உருத்திரனைப்போலப் பூமியின்கண்ணே சஞ்சரிப்பான்; உருத்திரனைப்போலத் தேவாசுரர்களால் வந்திக்கற்பாலன்; அங்ஙனம் அவன் மனிதர்களால் என்ஞான்றும் வந்திக்கத்தக்கவன்; உச்சிஷ்டமுடையனுயிருந்தாலும் கெட்டதொழிலுடையனுயிருந்தாலும் சர்வபாதகங்கள் செய்பவனுயிருந்தாலும் உருத்திராக்ஷ தாரணத்தினுற் சமஸ்த பாவங்களினின்றும் விடுறுகின்றான்; கழுத்தில் உருத்திராக்ஷம் கட்டப்பெற்ற நாயும் இறந்து உருத்திரத்துவத்தை அடைகின்றது; அங்ஙனமாயின் தரிக்கும் மனிதர்முதலாயினேரைப்பற்றிக் கூறவேண்டியது என்! செபம்

தியானம் என்பன இல்லாதிருந்தாலும் உருத்திராக்ஷம் தரிப்பவன் சமஸ்த பாவங்களினின்றும் நீங்கி மேலான கதியை அடைகின்றான்; மண்மயமாகிய உருத்திராக்ஷத்தையேனும் முயற்சியோடு தரிப்பானாயின் இருபத்தொரு குலத்தையும் உத்தாரணஞ் செய்துகொண்டு சிவலோகத்தில் மகிமையுற்றிருக்கின்றான்; தர்ப்பைமுடிச்சு புத்திரதீபமணிமுதலியன ஓர் உருத்திராக்ஷத்தின் பதினாறில் ஒருபங்குயோக்கியதையேனும் அடையா; புருஷருள்ளே விஷ்ணு போன்றும், நவக்கிரகங்களுள்ளே சூரியன் போன்றும், நதிகளுள்ளே கங்கைபோன்றும், முனிவர்களுள்ளே காசியபர் போன்றும், குதிரைகளுள்ளே உச்சைஸ்சிரவஸ் போன்றும், தேவர்களுள்ளே ஈசுவரன் போன்றும், தேவிமாருள்ளே பார்ப்பதி போன்றும் உருத்திராக்ஷமானது சிரேஷ்டமாகும்."

(39) அக்ஷயேஷு து தாநேஷு ருத்ராக்ஷந்து விசிஷ்யதே।
சிவபக்தாய தாந்தாய தத்யாத்ருத்ராக்ஷ முத்தமம்।
தஸ்ய புண்யபலஸ்யாந்தம் நசாஹம் வக்துமுத்ஸஹே।
த்ருதருத்ராக்ஷகண்டாய யஸ்த்வந்நம் ஸம்ப்ரயச்சதி।
த்ரிசப்தகுலமுத்த்ருத்ய ருத்ரலோகம் ஸ கச்சதி।
ந விபூதிர் யஸ்ய பாலே நாங்கே ருத்ராக்ஷதாரணம்।
ந சம்போர் பவநே பூஜா ஸ விப்ர: ச்வபசாதம:।
காதந் மாம்ஸம் பிபந் மத்யம் ஸங்கச்சநந்த்யஜாமபி।
பாதகேப்யோ விமுச்யேத ருத்ராக்ஷே சிரசி ஸ்திதே।
ஸர்வயஜ்ஞதபோதாநவேதாப்யாஸை: ச யத் பலம்।
தத் பலம் லபதே ஸத்யோ ருத்ராக்ஷஸ்ய து தாரணாத்।
வேதை: சதுர்பிர் யத் புண்யம் புராணபடனைரபி।
யத் தீர்த்தகமனை: சைவ ஸர்வவித்யாதிபிஸ்ததா।
தத் புண்யம் லபதே ஸர்வம் ருத்ராக்ஷஸ்ய து தாரணாத்।
ப்ரயாணகாலே ருத்ராக்ஷம் தாரயித்வா ம்ரியேத் யதி।
ஸ ருத்ரத்வமவாப்நோதி புநர்ஜந்ம ந வித்யதே।
ருத்ராக்ஷம் தாரயந் கண்டே பாஹ்வோர் ம்ரியதே யதி।
குலைகவிம்சமுத்தார்ய ருத்ரலோகேவஸேந் நர:।
ப்ராஹ்மணோ வாபி சண்டாலோ துர்குண: ஸுகுணோபிவா।
பஸ்ம ருத்ராக்ஷதாரீ ய: ஸ தேஹாந்தே சிவம் வ்ரஜேத்॥

"குறைவு படாத தானங்களுள்ளே உருத்திராக்ஷதானம் விசேஷிக்கின்றது; புற இந்திரியங்களை அடக்கிய சிவனடியானுக்கு உத்தமமாகிய உருத்திராக்ஷத்தைக் கொடுக்க; அதன் பயனின் முடிவு என்னாற் சொல்லமுடியாது; கண்டத்திலே எவர்கள் உருத்திராக்ஷம் தரிக்கின்றார்களோ அவர்கள் கிருஹத்தில் நன்மை உண்டாகும்; பாவச்செய்கைகளைச் செய்தாரேனும் அவர்கள் பரகதி அடைகின்றார்கள்; உருத்திராக்ஷம் தரித்த கண்டத்தினையுடையானுக்கு அன்னம் கொடுப்பவன் இருபத்தொரு குலத்தையும் கரையேற்றித் தானும் உருத்திரலோகத்தை அடைகின்றான்; எந்தப் (பிராமணனுடைய) நெற்றியில் விபூதி இல்லையோ, அங்கத்தில் உருத்திராக்ஷதாரணம் இல்லையோ, கிருஹத்திற் சிவபூசை இல்லையோ, அந்தப் பிராஹ்மணன் நாய் மாமிசம் சாப்பிடுபவனிலும் தாழ்ந்தவன்; மாமிசபக்ஷணஞ் செய்பவனாயிருந்தாலும் கட்குடிப்பவனாயிருந்தாலும் இழிந்தவளைச் சேர்ந்தவனாயிருந்தாலும் உருத்திராக்ஷம் அவன் தலையில் இருக்குமாயின் அவன் பாவங்களினின்றும் விடுறுகின்றான்; சமஸ்த வேள்வி, தபம், தானம், வேதாத்தியயனம் என்பவைகளால் உண்டாகும் பயனை உருத்திராக்ஷதாரணத்தினால் உடனே அடைகின்றான்; நான்கு வேதங்களையும் புராணங்களையும் படித்தலாலும், தீர்த்தயாத்திரை செய்தலாலும், சமஸ்த வித்தைகளை அறிதலாலும் எய்தும் சமஸ்த புண்ணியத்தையும் உருத்திராக்ஷம தரிப்பதினால் அடைகின்றான்; ஒருவன் இறக்குநான்று உருத்திராக்ஷம் தரிப்பித்துக்கொண்டு சாவானாயின் அவன் உருத்திரத்துவத்தை அடைகின்றான்; மறு பிறப்பு இல்லை; மனிதன் உருத்திராக்ஷத்தைக் கழுத்திலேனும் கைகளிலேனும் தரித்துக்கொண்டு சாவானாயின் இருபத்தொரு குலத்தையும் உத்தாரணஞ் செய்து சிவலோகத்தை அடைகின்றான்; பிராஹ்மணனாயிருப்பினும், சண்டாளனாயிருப்பினும், துர்க்குணனாயிருப்பினும், நற்குணனாயிருப்பினும் விபூதி உருத்திராக்ஷம் தரிப்பவன் மரணகாலத்தில் உருத்திரரை அடைகின்றான்."

(40) சுசிர் வாப்யசுசிர்வாபி ஹ்யபக்ஷ்யஸ்ய சபக்ஷக:| [கை:|
ம்லேச்சோ வாப்யத சண்டாளோ யுக்தோ வா ஸர்வபாத
ருத்ராக்ஷதாரணாதேவ ஸ ருத்ரோ நாத்ர ஸம்சய:|
சிரஸா தாரிதே கோடி: கர்ணயோர் தச கோடய:|

சதகோடிர் கர்ணே பத்தே மூர்த்நி கோடி ஸஹஸ்ரகம்।
அயுதஞ்சோபவீதே து லக்ஷகோடிர் புஜே த்ருதே।
அமேயம் மணிபந்தே து ருத்ராக்ஷம் மோக்ஷஸாதநம்।
ருத்ராக்ஷதாரீ பூத்வா து யத் கிஞ்சித் கர்ம வைதிகம்।
குர்வந் விப்ர: ஸதா பக்த்யா மஹதாப்நோதி தத் பலம்।
ருத்ராக்ஷமாலிகாம் விப்ரோ தாரயேத் பக்திவர்ஜித:।
பாபகர்மாபி யோநித்யம் ஸ முக்த: ஸர்வபந்தநாத்।
ருத்ராக்ஷார்ப்பித சேதா யோ ருத்ராக்ஷம் தேந தாரிதம்।
அஸௌ மாஹேச்வரேலோகே நமஸ்ய: ஸது லிங்கவத்॥

"சுத்தனாயிருப்பினும் அசுத்தனாயிருப்பினும் உண்ணத்தகாததை உண்டானாயினும், மிலேச்சனாயிருப்பினும், சண்டாளனாயிருப்பினும், பாவமனைத்துஞ் செய்பவனாயிருப்பினும் உருத்திராக்ஷ தாரணத்தினாலே ஐயமின்றி உருத்திரன் ஆகின்றான்; உருத்திராக்ஷத்தைத் தலையில் தரிப்பின் கோடிமடங்கு புண்ணியமும், காதுகளிலே தரிப்பின் பத்துக்கோடி மடங்கு புண்ணியமும், கண்டத்திற் கட்டப்பட்டிருப்பின் நூறு கோடி மடங்கு புண்ணியமும், சிகையிற்றரிப்பின் ஆயிரகோடி மடங்கு புண்ணியமும், உபவீதத்திற்றரிப்பின் பதினாயிரமடங்கு புண்ணியமும், புயங்களிற் றரிப்பின் இலக்ஷகோடிமடங்கு புண்ணியமும், மணிக்கட்டில் தரிப்பில் அளவிறந்த புண்ணியமும் எய்தும்; உருத்திராக்ஷம் மோக்ஷத்துக்குச் சாதனமாயது; பிராமணன் எஞ்ஞான்றும் அன்பினோடு உருத்திராக்ஷதாரணஞ் செய்து யாதாயினும் ஓர் சிறிய வைதிக கன்மத்தைச் செய்தாலும் மிகுந்த பயனை அடைகின்றான்; பிராமணன் பக்தியில்லாதவனாயிருந்தாலும் பாவத்தையுடையவனாயிருந்தாலும் எப்பொழுதும் உருத்திராக்ஷமாலை தரிப்பானாயின் சமஸ்த பாவங்களினின்றும் விடுறுகின்றான்; உருத்திராக்ஷத்தில் இருத்திய மனசையுடையவன் உருத்திராக்ஷத்தைத் தரித்தவனாகின்றான்; இவன் சிவலோகத்தில் லிங்கம் போல நமஸ்காரயோக்கியனாகின்றான்."

(41) ச்ருணு புத்ர புராவ்ருத்தம் கர்த்தபோ விந்த்யபர்வதே।
தத்தே ருத்ராக்ஷபாரந்து வாஹித: பதிகேந வை।
ச்ராந்தோஸமர்த்தஸ் தத் பாரம் வோடும் பதிதவாந் புவி।
த்யக்தப்ராண: ஸதுததா சூலபாணிர் மஹேச்வர:।
மத்ப்ரஸாதேந (மஹாஸேந) மமாந்திகமுபாகத:।

யாவத் வக்த்ரஸ்ய ஸங்க்யாநம் ருத்ராக்ஷாணாம் ஸ கர்த்தப:।
தாவத் வர்ஷ ஸஹஸ்ராணி சிவலோகே மஹீயதே॥

"புத்திரனே! முன் நடந்த விருத்தாந்தம் ஒன்றைக்கேள்; விந்தியமலையில் உருத்திராக்ஷசுமையோடு ஒரு கழுதையானது வழியில் ஒருவனால் நடாத்தப்பட்டு மிக வருத்தமடைந்து அப்பாரத்தைத் தாங்க இயலாததாய்ப் பூமியில் வீழ்ந்து இறந்துபோயிற்று; அப்போது அது உருத்திரரூபத்தை எடுத்துக்கொண்டு எனது அருளினால் என் சமீபத்தில் வந்து அதனாற் றாங்கப்பட்ட உருத்திராக்ஷமுகங்களின் கணக்கு எவ்வளவோ அவ்வளவு ஆயிரம் வருஷம் சிவலோகத்திற் பெருமையோடிருந்தது."

## (கஎ) லோகாக்ஷிஸ்மிருதி.

(42) த்ரிபுண்ட்ரத்ருக் விப்ரவரோ யோ ருத்ராக்ஷதர: சுசி:।
ஸபங்திபாவந: ச்ராத்தே பூஜ்யோ விப்ர: ஸுரைரபி॥

"எந்தப் பிராமணசிரேஷ்டன் திரிபுண்டரத்தையும் உருத்திராக்ஷத்தையும் தரித்தவனைச் சுத்தனை இருக்கின்றானோ, அவன் சிராத்தகாலத்திற் பந்தியைப் பரிசுத்தஞ் செய்கின்றோன் ஆவன்; அவன் தேவர்களாலும் பூசிக்கத்தகுந்தவன்."

## (கஅ) உருத்திராக்ஷமகிமைபற்றிய கதைகள்.

நந்தி என்னும் கிராமத்தில் நந்தை என்னும் தேவதாசியால் வளர்க்கப்பட்ட சேவலும் குரங்கும் உருத்திராக்ஷம் அணியப் பெற்றமையால், அவை இறந்த பின்னர் முறையே காசுமீரதேசத்து அரசனாகிய பத்திரசேனன் மனைவியிடத்திற் சுதர்மா எனப் பெயரிய புத்திரனாகவும், அவன் மந்திரியின் மனைவி வயிற்றில் தாரகன் எனப் பெயரிய புத்திரனாகவும் பிறந்து உலகத்தை அரசுபுரிந்து சிவபதத்தை அடைந்தன. நந்தையும் அணிவித்தமையால் அந்தப் பயனை அடைந்தாள்.

புஷ்கரதேசத்து அரசனாகிய சௌமியன் என்பான் உருத்திராக்ஷம் தரித்துச் சத்துருபயம் நீங்கினான்; அவன் மனைவியாகிய வசுமதி என்பாள் அதனைத் தரித்துச் சிறந்த அழகும் நற்புத்திரப்பேறும் சிவபெருமான் திருவருளும் பெற்றாள்.

காலஞானி என்னும் அரசி தன் நாயகனாகிய கமலார்க்கன் என்னும் அரசன் தன்னைப்போல உருத்திராக்ஷம் தரியாமையால் அவனோடு சேர இயையாது, விஷ்ணுவினால் அதன் பெருமையை அவனுக்கு உபதேசிப்பித்துத் தரிப்பித்து, வாழ்ந்து முத்தி அடைந்தாள்.

பூச்சக்கரம் என்னும் நகரத்திருந்த சுப்பிரதீபர் என்னும் பிராமணர் உருத்திராக்ஷதாரணத்தினால் தங்குலத்தோடு முத்தி அடைந்தனர்.

ஓர் பூனை உருத்திராக்ஷதாரணஞ் செய்துவரக்கண்டு இந்திரன் வணங்கித் தனது ஐந்து தருவுள் ஒன்றைக் கொடுத்து அனுப்பினான்.

சக்கிரவாகராஜன் மகள் உருத்திராக்ஷம் நடுவிலே கோக்கப் பெற்ற தனது அழகுபொருந்திய இரத்தினமாலையை மல்லிகைக் கொடியின்மீது கொளுவிவிட்டுத் தனது அரண்மனையில் ஸ்நானஞ் செய்துகொண்டிருக்குங்கால், ஓர் காகமானது அவ்விரத்தினமாலையைத் தூக்கிக்கொண்டு உயரப்பறந்து போனபோது, அம்மாலை அறுந்துவிட நடுவிலுள்ள உருத்திராக்ஷமானது வெட்டுண்டு கிடந்த ஜாமித்திரன் என்னும் கொடிய பாவியின் தலைமீது வீழ்ந்து, அவன் இரத்தத்திலே பற்றி ஒட்டிக்கொண்டிருந்தது. அந்தப் பாவி புண்ணியமொன்றும் செய்திலனாயினும், உருத்திராக்ஷ மகிமை காரணமாகக் கைலாசபதவியை அடைந்தான்.

## நான்காவது

# பஞ்சாக்ஷரப்பிரகரணம்.

[இப்பிரகரணம் பிரணவத்தைப்பற்றியும், ஸ்தூல சூக்குமபஞ்சாக்ஷரங்களைப்பற்றியும், அவற்றின் பேதங்களைப்பற்றியும் கூறுகின்றது.]

பெரும்பான்மையாய்ப் பஞ்சாக்ஷரத்துக்கு முன்னர் நிறுத்தி உச்சரிக்கப்படுவது ஓம் என்னும் பிரணவமாம். அது சமஷ்டிப் பிரணவம் எனவும், வியஷ்டிப்பிரணவம் எனவும் இருவகைப் படும். சமஷ்டிப்பிரணவமானது தோட்டம் என்பதுபோலத் தொகுத்து ஓம் எனவும், வியஷ்டிப்பிரணவமானது வாழை கமுகு தென்னை என்பனபோல வகுத்து அகாரம் உகாரம் மகாரம் எனவும் நிற்பன. இது நிற்க.

ஆன்றோர்களால் முக்கியோபநிடதங்கள் என அங்கீகரிக்கப்பட்ட ஈசாவாசியமுதற் சுவேதாசுவதரமிறுதியாகிய பதினோர் உபநிடதங்களுள் முதற்கணுள்ளது ஈசாவாசியோபநிடதம்; இறுதிக்கணுள்ளது சுவேதாசுவதரோபநிடதம்; நடுக்கணுள்ளது மாண்டூக்கியோபநிடதம்.

(1) அகாரம் ப்ரஹ்மாணம் நாபௌ, உகாரம் விஷ்ணும் ஹ்ருதயே, மகாரம் ருத்ரம் ப்ரூமத்யே, ஓங்காரம் ஸர்வேச்வரம் த்வாதசாந்தே]

"அகாரவாச்சியராகியபிரமாவை நாபியினும், உகாரவாச்சியராகிய விஷ்ணுவை இதயத்தினும், மகாரவாச்சியராகிய உருத்திரரைப் புருவமத்தியினும், (துரிய) ஓங்காரராகிய சர்வேசுவரரைத் துவாதசாந்தத்தினும் தியானிக்க என்று நிருசிம்மதாபினியுபநிடதத்திற் கூறப்படுகின்றது. அங்ஙனமே (துவாதசாந்தத்து) ஓங்கார வாச்சிய சர்வேசுவரராகிய சிவபெருமான் வழிபடற்பாலரென அதர்வசிகோபநிடதத்தினும் மாண்டூக்கியோபநிடதத்தினுங் கூறப்படுகின்றது.

ஈசாவாசியோபநிடதத்து க-ம் மந்திரத்து முதற்கணுள்ள ஈசரும், இறுதிச் சுவேதாசுவதரோபநிடதத்து (சு: ௨0) மந்திரத்துள்ள சிவனும், மாண்டூக்கியோபநிடதத்தினும் அதர்வசிகோபநிடதத்தினும் கூறப்பட்ட சிவனும் துவாதசாந்தத்துத் துரிய ஓங்காரப்பொருளாம் என்பது தானே பெறப்பட்டது.

(2) ஈசசப்தேந பகவாந் கீர்த்தித: ஸோ ஸதாசிவ:।

"ஈச என்னும் மொழியினால் (ஐசுவரியமுதலிய ஆறு குணங்களையுடைய) பகவானாகிய சதாசிவரே கூறப்பட்டார்" என்று மதங்க பாரமேசுவராகமம் கூறுகின்றது. ஈசாவாசியோபநிடதத்து ஈச என்னும் மொழியும், மாண்டூக்கியோபநிடதத்தினும் அதர்வசிகோபநிடதத்தினுமுள்ள சர்வேசுவரர் என்னும் மொழியும் முப்பத்தாறு தத்துவங்களிலுள்ள ச்மஸ்த சேதனாசேதனப்பிரபஞ்சத்தையும் ஆளுகின்ற (ஈசுவரர்) தலைவர்மேலவாமாதலின், அவை ஆளுதல் எனப்பொருள்படுகின்ற ஈச் என்னும் தாதுவினின்றும் பிறந்தனவாம். ஆகவே, ஈசாவாசியத்து ஈசரும், மாண்டூக்கியத்துச் சர்வேசுவரராகிய சிவனும், சுவேதாசுவதரத்துச் சிவனும் சதாசிவரின்மேலனவாம். (தாண்டவேசுவர சிவபரத்துவநிரூபணப்பிரகரணத்து உ00-ம் பிரிவில்) அச்சதாசிவராவார் தாண்டவேசுவரரேயாம். அவரே காரணாகமத்தினும் மகுடாகமத்தினும் (உஅடு-ம், உஅகூ-ம் பிரிவுகளில்) அங்ஙனம் கூறப்பட்டார்.

(3) ஈசேந ரக்ஷணீயத்வாதீசாவாசியமிதம் ஜகத்।

"சிவபெருமானாலே இப்பிரபஞ்சம் காக்கப்படுதலின் ஈசாவாசியம்" என்று (ஈசாவாசியோபநிடதத்து முதற்கண்ணே) கூறப்பட்டது என்று கைலாசசங்கிதை உபப்பிருங்கணஞ் செய்தது. அவ்வியல்பினராகிய தாண்டவேசுவரரைத் துவாதசாந்தத்தில் நிறுத்தி

(4) த்யேய: ஸர்வேச்வர: சம்புராகாசமத்யே।

"பரமாகாய (மெனப்படுகின்ற திருச்சிற்றம்பல) மத்தியிலே சர்வேசுவரராகிய சம்புவானவர் (தாண்டவேசுவரர்) தியானிக்கற்பாலர்" என்று அதர்வசிகோபநிடதம் கூற, மாண்டூக்கியோபநிடதமும் ஒரே கருத்துற முடிக்கின்றது. அங்ஙனம் அவரை வழிபடின் பயன் என்னை எனின்,

(5) யதா சர்மவதாகாசம் வேஷ்டயிஷ்யந்தி மாநவா:।
தததா சிவமவிஜ்ஞாய து:கஸ்யாந்தோ பவிஷ்யதி॥

"எப்போது மனிதர் ஆகாயத்தைத் தோல்போல உரித்து உடுப்பார்களோ, அப்போதுதான் சிவபெருமானைத் (தாண்டவேசு

ரசதாசிவரை) அறியாமற் (பிறவித்) துக்கத்தின் முடிவு எய்
தம்” என்று சுவேதாசுவதரம் (சு: உ0) கூறுகின்றமையின்,
சிவபெருமானை அறிந்து வழிபடின் பிறவி அறும் என்பது பய
னாகக் கூறப்பட்டது. அதுபற்றியே அதர்வசிகோபநிடதம்

6) சிவ ஏகோ த்யேய: ஸர்வமந்யத் பரித்யஜ்ய।

மற்றெல்லாம் விடுத்துத் (தாண்டவேசுவர) சிவபெருமான் ஒரு
வரே தியானிக்கற்பாலர்” என்று பின்னரும் உறுதியாகக் கூறிற்
று. ஆகவே, உபக்கிரமோபசங்காரலிங்கங்களான் ஏகாதசோப
நிடதங்களும் தாண்டவேசுவர சதாசிவபரத்தனவாம்.

சர்வேசுவரரைப் பொருளாகக்கொண்ட ஓங்காரமானது அகார உகார மகாரமாய் நிற்பனவாயின என்று அதர்வணவேதத்துக்குரிய அதர்வசிகோபநிடதம் கூறிற்று.

சிவபெருமான் உமையம்மையாரை நோக்கிக் கூறுவாராயினர்:—

7) த்வதீய: ப்ரணவ: கச்சிந் மதீய: ப்ரணவஸ்ததா।
அகாரோகாரமகாரமதீயே ப்ரணவே ஸ்தித:।
உகாரஞ்ச மகாரஞ்ச அகாரஞ்ச க்ரமேணது।
த்வதீயம் ப்ரணவம் வித்தி த்ரிமாத்ரம் ப்லுதமுத்தமம்॥

‘ஒரு பிரணவம் (உனக்கு) உரியது; அவ்வாறு மற்றொன்று எமக்கு (சிவபெருமானுக்கு) உரியது; எமது பிரணவமானது அகாரம் உகாரம் மகாரம் என நிற்பது; (எழுத்து மாறுதலினால்) உகாரம் மகாரம் அகாரம் என்பன கிரமமாக உமா என்னும் உனது பிரணவமாய் மும்மாத்திரைப்புலுதமாம் என்று அறிதி” என்று இலிங்கபுராணத்துப் பூருவபாகத்துச் (அ௫: சஃ—சகூ) சுலோகங்கள் கூறிய. கூறவே, அகார உகார மகாரமாயும், உகார மகார அகாரமாயும் நின்றது பிரணவம்; (மாயாசத்தியாகாத) அருட்சிவசத்தியாகிய உமையோடியைந்த சிவபெருமானையே பொருளாகக்கொண்டன இருக்காதி மூவேதங்களுமாம். எங்ஙனமெனின்,

ஆதி இருக்குவேதத்தின், ஆதிமண்டலத்து, ஆதிசூக்தத்து, ஆதி மந்திரத்தின், ஆதியிலுள்ள “அக்நிமீளே” என்ற மந்திரத்

தின் ஆதியிலுள்ள அகாரமும், மத்தியவேதமாகிய யசுர்வேதத்தில் "யோநிஸ் ஸமுத்ரோ பந்து." என்னும் மந்திரத்தில் மத்திய அக்ஷரமாகிய உகாரமும், இறுதி வேதமாகிய சாமவேதத்தின் இறுதியில் "ஸமாநம் வரம்" என்னும் மந்திரத்தின் இறுதி அக்ஷரமாகிய மகாரமுஞ் சேர்ந்து, திரயீ எனப்படும் இருக்காதி மூன்று வேதங்களும் ஆனந்ததாண்டவேசுவர சதாசிவப்பெருமானையே பொருளாகக் கொண்டவென்பது * (சதேபஞ்சாசத்) "நூற்றில் ஐம்பது" என்னும் நியாயத்தினாற் பெறப்பட்டது. படவே, இருக்காதி வேதங்களும் ஈசாவாசியோபநிடதமுதலியவைகளும் அத்தாண்டவேசுவரரையே பொருளாகக்கொண்டன என்பதாம். அங்ஙனம், வேதசாரமாய்த் தமிழிலேயுள்ள தேவாரமுதற் பெரியபுராணம் இறுதியாகிய பன்னிரு திருமுறைகளும், திருவுந்தியார் முதற்சங்கற்பநிராகரணம் இறுதியாகிய பதினன்கு (ஆகம) சித்தாந்த சாஸ்திரங்களும் ஆனந்ததாண்டவேசுவரரையே பொருளாகக்கொண்டன என்பதாம்.

இருக்கு யசுர் சாமம் என்னும் மூன்று வேதங்களும் திரயீ எனப்படும். இத்திரயீ எனப்படும் மூவேதங்களுக்கு நடுக்கணுள்ளது யசுர்வேதம், யசுர்வேதத்துக்கு நடுக்காண்டமாகிய நான்காம் காண்டத்தினுள்ளது

(8) நமஸ்தே ருத்ரமந்யவே

"உருத்திரரே, உமது ஞானத்துக்கு நமஸ்காரம்" எனறற்றொடக்கத்த சதருத்திரீயம். இச்சதருத்திரீயத்துள்ளது "உமையம்மையாரோடு கூடிய சிவபெருமானுக்கு நமஸ்காரம்" என்னும்

(9) நம: ஸோமாய ச

என்றற்றொடக்கத்த அநுவாகம். இந்த அநுவாகத்துள்ளது

*'ஐம்பதுவேண்டும்' என்ற ஒருவனுக்கு நூறு கிடைத்துவிடின், ஐம்பதுங் கிடைத்தது என்பது சித்தித்தது; ஈண்டு ஐம்பது என்பதற்கு ஈசாவாசிய முதலிய உபநிடதங்களும், நூறு என்பதற்கு இருக்குவேதமுதலிய வேதங்களும் சாமியமாம். ஈசாவாசியோபநிடதமுதலிய உபநிடதங்கள் சிவபரத்தனவாய் இருக்கவேண்டுமென விரும்பிய ஒருவர்க்கு இருக்காதி வேதங்களும் சிவபரத்தனவாய் எய்திவிடின், வேதங்கள் உபநிடதங்களாகிய அனைத்தும் சிவபரத்தனவாம் என்பது சித்தித்தது.

(10) நம: சிவாய]

'ம சிவாய' என்னும் ஐந்து எழுத்து. இந்த ஐந்து எழுத்தின் நடுவி ுள்ளது சிவ என்னும் ஈரெழுத்து. இந்த ஈரெழுத்தும் அமை கப்பட்ட அழகை நோக்கின், அது ஓர் புறத்து நீல இரத்தின ம், மற்றோர் புறத்து வைரமும் இயைய, அவற்றின் நடுவில் மா ரிக்கரத்தினமாகிய சிவ என்னும் சீவரத்தினத்தைப் பொருத்தி ருமித்து, பின் அதனைச் சுவர்ணப்பெட்டியில் அமைத்து, பின் ுதனை வெள்ளிப்பெட்டியில் வைத்து, பின் அதனைத் தாமிரப் பட்டியிற் பேணி, பின் அதனைச் சந்தனப் பெட்டியிற் போற் வைத்த சிறப்புப்போலாம்.

சிவ என்னும் ஈரெழுத்தினாற் பஞ்சாக்ஷரம் சிறப்புற்றது. ஞ்சாக்ஷரத்தினால் (நம: சோமாயச என்னும் அநுவாகம் சிறப்புற் து; இந்த அநுவாகத்தினால்) உருத்திராத்தியாயம் சிறப்புற்றது. ருத்திராத்தியாயத்தினால் யசுர்வேதம் சிறப்புற்றது. யசுர்வேதத் னால் மற்றிரு வேதங்களுஞ் சிறப்புற்றன.

இவ்வுண்மை,

(11) பஞ்சாக்ஷரீ சிவபதேந விபாதி ருத்ரா த்யாயஸ்தயா ஸ்புரதி தேந சதுர்த்தகாண்ட:। காண்டேந ஸர்வயஜுரேவ வி பாதி தேந ருக்ஸாமமத்யமணிநா ச விபாந்தி வேதா:॥

என்னுஞ் சுலோகத்தினால் உணரப்படும். ஆகவே,

(12) வித்யாஸுச்ருதிருத்க்ருஷ்டா ருத்ரைகாதசிநீ ச்ருதௌ।
தத்ர பஞ்சாக்ஷரீ தஸ்யாம் சிவ இத்யக்ஷரத்வயம்॥

(இருக்கு யசுர் சாமம் அதர்வணம் சிக்ஷை கற்பம் வியாகரணம் நிருக்தம் சந்தோவிசிதி சோதிடம் புராணம் நியாயம் மீமாஞ்சை மிருதி ஆயுர்வேதம் தநுர்வேதம் காந்தருவவேதம் அர்த்தவேதம் என்னும் பதினெண்) வித்தைகளுள்ளும் (இருக்கு யசுர் சாமங் என்னும்) சுருதி மேலானது; அச்சுருதியுள்ளும் ஸ்ரீருத்திரம் மே லானது; ருத்திரத்துள்ளும் ஸ்ரீபஞ்சாட்சரம் மேலானது; பஞ்சா

க்ஷரத்துள்ளும் § சிவ என்னும் ஈரெழுத்து மேலானது; ஆகவே வேதபுருஷனுக்கு உருத்திரமானது கண்; கண்ணின் மணியாயுள்ளது பஞ்சாக்ஷரம்; அப்பஞ்சாக்ஷரத்தின் பாவையாயுள்ளது சிவ என்னும் ஈரெழுத்து. இதுபற்றியே திருநாவுக்கரசுநாயனர் "மணியாடு பாவாய் காவாய்" என அருளிச்செய்தார்.

சிவ என்னும் ஈரெழுத்தினின்றே சைவம் பிறந்தது. அது

சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
சைவஞ் சிவந்தனைச் சாராம னீவுதல்
சைவஞ் சிவானந்தஞ் சாயுச்சி யம்மே

என்னும் திருமூலர் திருமந்திரத்தால் அறியப்படும்.

கன்மகாண்டமாகிய இருக்காதி மூவேதங்களுக்கும் நடுவிலே உள்ள யசுர்வேதம் சதருத்திரீயம் வாயிலாக (நம: சிவாய) (ஆனந்ததாண்டவேசுவர) சிவபெருமானுக்கு நமஸ்காரம் என்று வணக்கம் கூற,

(13) சிவ ஏகோத்யேய:l

(மற்றெல்லாம் விடுத்து) "(ஆனந்ததாண்டவேசுவர) சிவபிரான் ஒருவரே தியானிக்கற்பாலர்" என்று ஞானகாண்டமாகிய உபநிடதங்களுளெல்லாம் சிகையாயுள்ள அதர்வசிகோபநிடதம் கூறிற்று.

(a) சேதே அஸ்மிந் ஸர்வமிதி சிவ:l

(பிருதிவிமுதற் சிவதத்துவம் வரையுமுள்ள) "எல்லாம் இவரைச் (சிவபிரானைப்)பற்றிக் கிடத்தலின் சிவன் எனப்படுவர்;"

---

§ மும்மறையின் மெறையின் முடிவிலெழுகாண்டத்துச்
செம்மைதருநடுக்காண்டஞ்சேர்ந்தவெழுசங்கிதையி
னம்மநடுச்சங்கிதையினதியீரெழுத்துநடுப்
பொமமலுறவமர்மநுவின்பொருளாவானெவன்மைந்த.

சிவபெருமானுக்குச் சதருத்திரீயத்தில் முன்னூற்றொரு (௩0க) திருநாமங்கள் உளவாய். அவற்றுள் நூற்றைம்பத்தொராம் (௧ருக) திருநாமம் ஸ்ரீ பஞ்சாக்ஷரமேயாக. அப்பஞ்சாக்ஷரத்துள் நடுவெணின்ற சிவ என்பது நேரே சிவபெருமானை உணர்த்தியவாறு இச்செய்யுளால் உணரக்கிடந்தது.

(b) வஷ்டி லோகஹிதமிதி சிவ:|

உலகத்துக்கு இன்பஞ் செய்வதினால் அவர் சிவன் எனப்படு கின்றார்;"

(c) வச காந்தாவிதி தாதோ: பசாத்யசிப்ருஷோதராதித் ராத் வர்ணவ்யத்யயே அகாரஸ் யேகாராதேசே ச சிவ இதி ரூபம்|

அன்புறுதல் எனப் பொருள்படுகின்ற வச என்னும் தாதுவி லுள்ள அகாரம் இத்தாகி லோபமாக, அது வச் என நிற்கும்; அது அகாரத்தை உடைத்தாகிப் பின் வச ஆகும்; அது எழுத் து மாறி இகாரத்தைப் பொருந்தும் போது சிவ என நிற்கும்;"

(d) ஸமேதயதி யந்நித்யம் ஸர்வார்த்தாநாமுபக்ரமம்|
சிவமிச்சந் மநுஷ்யாணாம் தஸ்மாத் தேவ: சிவ: ஸ்ம்ருத:||

மனிதர்க்கு இன்பஞ் செய்ய விரும்பி எப்பொருள்களுக்கும் நித் யமாய் உபக்கிரமமாயுள்ளதை விருத்தி செய்வதினால், அந்த காதேவர் சிவன் எனப்படுவர்" என்று மகாபாரதத்துத் துரோ ணபருவம் (உ0௬: கஉக) கூறுகின்றது;

(e) அநாதிமல ஸம்ச்லேஷப்ராகபாவாத் ஸ்வபாவத:|
அத்யந்தபரிசுத்தாத்மா சிவ இத்யுச்யதே விபு:||

விசேடித்து அநாதிமலத்தொடக்கில்லாது அத்தியந்த பரிசுத் தான்மாவாய்ச் சர்வவியாபகராயிருத்தலின் சிவன் எனப்படு ர்" என்றும்,

(f) அதவாநந்தகல்யாணகுணைகதந ஈச்வர:|
சிவ இத்யுச்யதே ஸத்பி: சிவதத்வார்த்தவேதிபி:||

அனந்த கல்யாண குணங்களால் நிறைந்த நிதியாகிய ஈசுவரரா கயின் சிவன் எனப்படுவர் என்று சிவதத்துவத்தை அறிந்த சத் க்களாற் கூறப்படுவர்" என்றும் வாயுசங்கிதை பூருவபாகம் (அ: உஅ, உக) கூறுகின்றது;

(g) ஸர்வஜ்ஞதா த்ருப்திரநாதிபோத: ஸ்வதந்த்ரதா நித்யமலு தசக்தி:| அநந்தசக்தி: சவிபோர் விதிஜ்ஞா: ஷடாஹுரங்காநி மஹேச்வரஸ்ய||

*"சர்வஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், சுவதந்திரத்துவம், அலுப்தசக்தி, அனந்தசக்தி என்னும் (குணங்களும்) வியாபகராகிய சிவபெருமானுக்கு ஆறு அங்கங்கள் எனச் சிவசாஸ்திரவிதிகளை அறிந்தவர்கள் சொல்லுகின்றார்கள்" என்று கூர்மபுராண உத்தரபாகத்து அ-ம் அத்தியாயம் கூறுகின்றது;

(h) ஜ்ஞாநம் வைராக்யமைச்வர்யம் தப: ஸத்யம் க்ஷமா த்ருதி:।
ஸ்ருஷ்ட்ருத்வமாத்மஸம்போதோஹ்யதிஷ்டாத்ருத்வமேவச।
அவ்யயாநி தசைதாநி நித்யம் திஷ்டந்தி சங்கரே॥

"ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், தபசு, சத்தியம், க்ஷமை, தைரியம், சிருஷ்டிவன்மை, ஆன்மஞானம், அதிபதித்வம் என்னும் பத்துக் குணங்களும் சிவபெருமானிடத்து அழியாது நிலையுறுகின்றன" என்று நீலகண்டசைவபாஷ்யம் கூறுகின்றது.

சதருத்திரீயத்தில் நூற்றைம்பத்தோராம் திருநாமமாகிய நமசிவாய என்பது ஸ்தூலபஞ்சாக்ஷரம். அது தமிழ்மறையின் கண்ணும் எய்துகின்றது.

காதலாகிக்கசிந்துகண்ணீர்மல்கி
ஓதுவார்தமைநன்னெறிக்குய்ப்பது
வேதநான்கினுமெய்ப்பொருளாவது
நாதனுமநமச்சிவாயவே.

—ஞா, நமச்சிவாயத்திருப்பதிகம்.

(14) (ஸர்வலிங்காயநம:)। சிவாய நம:।

— யசுர்வேததைத்திரீய ஆரணியகம், க0. கசு. நட.

சிவாயநம (என்பது சூக்குமபஞ்சாக்ஷரம்); அது தமிழ்மறையின் கண்ணும் எய்துகின்றது.

நானேயோதவஞ்செய்தேன்சிவாயநமவெனப்பெற்றேன்
றேனாயின்னமுதமுமாய்த்தித்திக்குஞ்சிவபெருமான்
றானேவந்தெனதுள்ளம்புகுந்தடியேற்கருள்செய்தா
னூனாருமுயிர்வாழ்க்கையொறுத்தன்றேவெறுத்திடவே.

— திருவாசகம்.

* இருதய முதலிய ஆறு அங்கங்களுடைய சர்வஞ்ஞதை முதலிய ஆறு குணங்களையும் உணர்த்தியவென "உருத்திராக்ஷப்பிரகரணத்து"க் குறிப்பிற் காண்க.

ருக்கமாகுமைந்தெழுத்தினிற்சுற்றியபாச
வீக்கநீக்கிமெய்யானந்தம்விளைநிலத்துய்த்துப்
போக்குமீட்சியுட்புறம்பிலாப்பூரணவடிவ
மாக்கினுனொருதீபகம்போல்வருமண்ணல்.

— திருவிளையாடற்புராணம்.

15) அபிவா ய: சண்டாள: சிவ இதி வாசம் வதேத் தேந ஸஹ ஸம்வதேத், தேந ஸஹ ஸம்வஸேத், தேந ஸஹ பூஞ்ஜீத।

— முண்டகோபநிடதம், ௩. ௨. ௯.

"சண்டாளனுயிருப்பினும் சிவ எனச் சொல்வானேல் ஒருவர் அவனோடு பேசுக; அவனோடு வசிக்க; அவனோடிருந்து உண்ணுக."

சிவனெனுமொழியைக்கொடியசண்டாளன்
செப்பிடினவனுடனுறைக
வவனொடுகலந்துபேசுக
வவனோடருகிருந்துண்ணுகவென்னு
முவமையில்சுருதிப்பொருடனைநம்பா
வூமரோடென்பயில்கொடியோ
னிவனெனக்கழித்தாலையனேகதிவே
றெனக்கிலைகலைசையாண்டகையே.

— கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி.

சங்கநிதிபதுமநிதியிரண்டுந்தந்து
தரணியொடுவானுளத்தருவரேனும்
மங்குவாரவர்செல்வமதிப்போமல்லோ
மாதேவர்க்கேகாந்தரல்லாராகில்
அங்கமெலாங்குறைந்தழுகுதொழுநோயரா
யாவுரித்துத்தின்றுழலும்புலையரேனும்
கங்கைவார்சடைக்கரந்தார்க்கன்பராகி
லவர்கண்டீர்நாம்வணங்குங்கடவுளாரே.

— நா, தனித்திருத்தாண்டகம்.

## (௯) பஞ்சாக்ஷரம் பிறவிநோய்க்கு மருந்து.

வாயிலேவைக்குமளவின்மருந்தாகித்
தீயபிறவிநோய்தீர்க்குமே—தூயவே

கம்பெருமாதேவியொடுமன்னுகயிலாயத்
தெம்பெருமானோரஞ்செழுத்து.

அஞ்செழுத்துங்கண்டீரருமறைகளாவனவு
மஞ்செழுத்துங்கற்கவணித்தாகு—நஞ்சவித்த
காளத்தியார்யார்க்குங்காண்டற்கரிதாய்ப்போய்
நீளத்தேநின்றநெறி.

— பதினோராந்திருமுறை.

## (உ) பஞ்சாக்ஷரபேதம்.

(16) பஞ்சாக்ஷரந்து ஷட்பேதம் தாரப்ராஸாதமிச்ரகம்|
ஸ்தூலம் ஸூக்ஷ்மஞ்ச சுத்தம் சாத்ரோச்சாரக்ரமம் ச்ருணு||

— சித்தாந்தபோதம்.

பஞ்சாக்ஷரமானது தாரபஞ்சாக்ஷரம், பிராசாதபஞ்சாக்ஷரம், மிசிரபஞ்சாக்ஷரம், ஸ்தூலபஞ்சாக்ஷரம், சூக்குமபஞ்சாக்ஷரம், சுத்தபஞ்சாக்ஷரம் என அறுவகைப்படும்.

தாரபஞ்சாக்ஷரமானது பிரணவத்தோடு கூடிய நகாராதி பஞ்சாக்ஷரம்.

பிராசாதபஞ்சாக்ஷரமானது மூன்று பீஜாக்ஷரங்களோடு கூடிய சிகாராதி பஞ்சாக்ஷரம். (எட்டு எழுத்துடையது).

மிசிரபஞ்சாக்ஷரமானது நகாராதி பஞ்சாக்ஷரத்தோடு சேர்ந்த சிகாராதி பஞ்சாக்ஷரம்.

ஸ்தூலபஞ்சாக்ஷரமானது நகாராதிபஞ்சாக்ஷரம்.
சூக்குமபஞ்சாக்ஷரமானது சிகாராதி பஞ்சாக்ஷரம்.
சுத்தபஞ்சாக்ஷரமானது சிகாராதி மூன்று அக்ஷரம்.

## (ங) காயத்திரி பஞ்சாக்ஷரப்பொருள் ஒற்றுமை.

(17) சிகாரம் சிவரூபந்து வகாரம் சக்திருச்யதே|
யகாரமாத்மரூபஞ்ச நகாரம் க்ரந்திரூபகம்|
மகாரம் மலரூபஞ்ச இத்யர்த்த: பஞ்ச வர்ணக:||

சிகாரம் என்பது * சிவன் (சூரியன்), வகாரம் என்பது அருட்சத்தி (கிரணம்), † யகாரம் என்பது ஆன்மா (கண்), நகாரம் என்பது மாயை (தீபம்), மகாரம் என்பது மலம் (இருள்).

இருபத்திநான்கு அக்ஷரம் அடங்கிய காயத்திரியிலே, தேவஸ்ய ஸவிது: என்றது (பதியாகிய) சிவசூரியனின்மேற்று; பர்க்க: என்றது அருட்சத்தியாகிய கிரணத்தின்மேற்று; ந: (எங்களுடைய) என்றது பசுவி (கண்ணி)ன்மேற்று.

முன்னெழுத்துப் பானு முதல்வி யெழுத்தோரரியாம்
பின்னெழுத் துக்கண் ணுப் பிறங்குமே—தன்னையுன்னை
மூடுமெழுத் துதீப மூலையெழுத் தேயிருளா
நாடியறி வாய்மனமே நன்கு.

—சிவாநுபவசாரம்.

## (ச) இரு தலை மாணிக்கம்.

பதியக்ஷரமும் அருளக்ஷரமும் ஓர் புறத்தும், அருளக்ஷரமும் பதியக்ஷரமும் மற்றோர் புறத்தும் நிற்க, ஆன்ம அக்ஷரம் நடுவிலே பொருந்த நிற்பது § இருதலை மாணிக்கம்.

## (ரு) ஒரு தலை மாணிக்கம்.

அருள் அக்ஷரத்தோடு பதி அக்ஷரம்சேர்ந்து நிற்பது ஒரு தலை மாணிக்கம். இது முத்திபஞ்சாக்ஷரம். இவற்றை முறையே பேசும் எழுத்து எனவும், பேசாத எழுத்து எனவும் கூறுவர். "வேகாக்கால், சாகாத்தலை" எனவும் செல்வர்.

---

* தாண்டவேசுவரசதாசிவர்.

† தாண்டவேசுர சிவபாத்தவ திருவருட்பிரகரணத்து கசு-ம் பிரிவிற் கண்டபிரகாரம் கொள்ளமாறிகளுடைய நிலை நாமரூபப்பிரபஞ்சம் கடந்தவிடத்துளதாய், ஆன்மதத்துவத்தின்பாலதாகிய ஆன்மப் (பிரஹ்ம) நிலையேயாம். இந்த ஆன்மாவுக்கு மேலுள்ள அருளையும் சிவத்தையும் உணர்ந்தாரல்லர். இதுபற்றியே உமாபதிசிவாசாரியசுவாமிகள் "தாம்பிரமங்கண்டவர்போற்றம்மைக்கண்டாங்கதுவே, நான்பிரமமென்பவர்பாலன்றே" என்றருளிச்செய்தார்.

§ இதனை முத்திபஞ்சாக்ஷரம் என்பர் ஒருசாரார்.

இலங்கை யரக்கர் தமக்கிறையே
   யிடந்து கயிலை யெடுக்கிறையே
புலன்கள் கெடவுடன் பாடினனே
   பொறிகள் கெடவுடன் பாடினனே
இலங்கிய மேனி யிராவணனே
   யெய்து பெயரு மிராவணனே
கலந்தருள் பெற்றது மாவசியே
   காழி யரனடி மாவசியே.

— ஞா, திருப்பிரமபுரம்.

## (கூ) நாயோட்டுமெந்திரம்.

ஆங்கமு மாகம வேதம தோதினு
மெங்கள் பிரானெழுத் தொன்றி லிருப்பது
சங்கைகெட் டவ்வெழுத் தொன்றையுஞ் சாதித்தா
லங்கரை சேர்ந்த வருங்கல மாமே.

ஈரு மனத்தை யிரண்டற வீசுமி
னூருஞ் சகாரத்தை யோதுமி னோதியே
வாரு மரனெறி மன்னியே முன்னியத்
தூருஞ் சுடரொளி தோன்றலு மாமே.

கூத்தனைக் காணுங் குறியல பேசிடிற்
கூத்த னெழுத்தின் முதலெழுத் தோதினர்
கூத்தனொ டொன்றிய கொள்கைய ராய்கிற்பர்
கூத்தனைக் காணுங் குறியது வாமே.

§ நாயோட்டுமெந்திரநான்மறைவேத
நாயோட்டுமெந்திரநாதனிருப்பிட
நாயோட்டுமெந்திரநாதாந்தசோதி
நாயோட்டுமெந்திரநாமறியோமே.

— திருமந்திரம்.

அஞ்சக்கரமெனவெட்டக்கரமெனவாறக்கரமெனநான்கென்னப்
பிஞ்சக்கரமுதனுருமூன்றெனவளர்பேரக்கரமுதன்மூன்றென்ன
நெஞ்சத்துறநவிலீரக்கரமெனநிலையோரக்கரமெனநின்ற
செஞ்சொற்றிறமிருநான்காயும்பிறவாயுந்திருநடநவில்கின்றான்.

— பேரூர்ப்புராணம்.

இருதலைமாணிக்கம், ஒருதலைமாணிக்கம், நாயோட்டுமெந்திரம் என்பன எல்லாம் துறந்த துறவிகட்கே உரியன.

---

§ இம்மந்திரம் இப்போது அச்சிடப்பட்ட பிரதிகளிற் காணப்படவில்லை.

ஐந்தாவது

# சிவலிங்கார்ச்சனாப்பிரகரணம்.



[இப்பிரகரணம் சிவபெருமானை அகத்தும் புறத்தும் வழிபடுமுறையையும், நமஸ்காரங்களினால் அவரை உபசரிக்கு முறையையும் கூறுகின்றது.]

(1) அந்தரிச்சந்தி தம் ஜநே ருத்ரம் பரோமநீஷயா I
க்ருப்ணந்தி ஜிஹ்வயா ஸஸம் II

"ஜனங்களிடத்து அந்தரியாமியிருக்கும் சர்வோத்கிருஷ்டராகிய ‡ சிவபிரானாரை எவர் அருட்சத்தியோடு தியானிக்கின்றாரோ, அவர் அன்னத்தை நாவினாற் கிரகிக்கின்றார்" என்று இருக்கு வேதம் (அ. சுக. ந) கூற,

(2) அந்தரிச்சந்தி யே ருத்ரம் ஸதா வந்த்யம் மநீஷயா I
க்ருஹ்ணந்தி ஜிஹ்வயா தே ஹி ரஸபூர்ணாம்ருதோதகம் I
அந்தர் நேச்சந்தி யே ருத்ரம் பவாநீ ஸஹிதம் சிவம் I
புரீஷமேவ க்ருஹ்ணந்தி ஜிஹ்வயா தே ந ஸம்சய: II

"எவர்கள் அருட்சத்தியோடுகூட வழிபடற்பாலராகிய சிவபெருமானை எக்காலமும் உள்ளே தியானிக்கின்றார்களோ, அவர்கள் இரசநிறைந்த அமிர்தோதகத்தை நாவினாலே கிரகிக்கின்றார்கள்; எவர்கள் பவாநியாம் சத்தியோடு கூட அச்சிவபிரானை உள்ளே தியானிக்கவில்லையோ, அவர்கள் மலத்தையே நாவினாற் கிரகிக்கின்றார்கள் சந்தேகமில்லை" என்று பராசரபுராணம் உபப்பிருங்கணஞ் செய்தது.

(3) தவச்ரியே மருதோ மர்ஜயந்த ருத்ர யத்தே ஜநிம சாருசித்ரம் I

"தேவர்கள் (பொருளும் அருளுமாம்) செல்வத்தை அடையுமாறு உமது (சிவபெருமானுடைய) விசித்திரரூபமாகிய மஹாலிங்கமூர்த்தியை அபிஷேகாதி பூசை செய்தார்கள்" என்று இருக்குவேதம் (நி. ந. ந) கூற,

(4) ரௌத்ரம் லிங்கம் மஹாவிஷ்ணுர் பக்த்யா சுத்தம் சிலாமசாரு சித்ரம் ஸமப்யர்ச்ய லப்தவாந் பரமம் பதம் II [யம்

‡ தாண்டவேசுவரசதாசிவரை.

"மஹாவிஷ்ணுவானவர் ரூயதும் சிலாமயமும் மநோஞ்ஞவிசித்திரமுமாகிய சிவலிங்கத்தை அன்பினோடு அர்ச்சித்துப் பரமபதத்தை (வைகுண்டபதத்தைப்) பெற்றார்" என்று பராசரபுராணமும்,

(5) ரௌத்ரம் ஸாம்பாச்ய ஹரி லிங்கமாதௌ சிலாமயம் சாரு ஹரிஸ்து பக்த்யா। ஸாஹார்ஸபம் வைஷ்ணவமாத்யமக்ரம் ப்ராப்தவாந் ச்ரேஷ்டபதம் பரம் யத்॥

"விஷ்ணுவானவர் அன்பினோடு ஆதியில் மநோஞ்ஞமாய்ச் சிலாமயமாயுள்ள சிவலிங்கத்தையன்றே வழிபட்டு, மிகுதியும் கிடைத்தற்கரிதாய், ஆதியாய், தலைமையாய், சிரேஷ்டமாயுள்ள தமக்குரிய (விஷ்ணுவுக்குரிய) பரமபதத்தைப் பெற்றார்" என்று விருத்தகிரிமான்மியமும்,

(6) அஹம் யதாவதாராத்ய: க்ருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா।
தஸ்மாதிஷ்டதம: க்ருஷ்ணாதந்யோ மம ந வித்யதே॥

"யாம் (சிவன்) இளைப்புறுத் தொழில்பூண்ட கிருஷ்ணரால் விதிப்படி ஆராதனை செயற்பாலேம்; ஆகலின், கிருஷ்ணரின் எமக்கு அதிக விருப்புடையர் பிறர் இலர்" என்று மகாபாரதசௌத்திக பருவத்து எ-ம் அத்தியாயமும் கூறுகின்றன.

(சாருசித்ரம் தே ஜநிம) மநோஞ்ஞ விசித்திரமாகிய உமது (சிவபெருமானது) லிங்கம் என்று இருக்குவேதம் கூற, பராசரபுராணம் "(சாரு சித்ரம் ரௌத்ரம் லிங்கம்)" மநோஞ்ஞ விசித்திரமாகிய சிவனுக்குரிய லிங்கம் என்றும, விருத்தகிரிமான்மியம் (சாரு சிலாமயம் ரௌத்ரம் லிங்கம்) மநோஞ்ஞமாகிய சிலாமயமாயுள்ள சிவலிங்கம் என்றும் கூறுகின்றமையின், இருக்குவேதத்திற்கண்ட ஜநிம என்னும் மொழி சிவலிங்கத்தை உணர்த்தியவாறு காண்க.

(7) யூநா ஹ ஸந்தா ப்ரதமம் விஜஜ்ஞதுர் குஹாஹிதம் ஜநிம நேம முத்யதம்।

"(அவர்கள்) இளைஞர்களாய்க்கொண்டு, முதற்கண்ணே (இதய) குகையிற் பாதி புலப்பட்டதாயும் (சகளமாயும்), பாதி புலப்படாததாயும் (நிஷ்களமாயும்) வைக்கப்பட்ட லிங்கத்தைக் (சுன்மசாதாக்

ஸெயவடிவத்தை) அறிந்தார்கள்" என்று இருக்குவேதம் (கூ. கூஅ. ௫) கூறுகின்றது.

இக்கன்மசாதாக்கியவடிவமானது சிவசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திருசாதாக்கியம், கன்மசாதாக்கியம் என்னும் ஐவகைச் சாதாக்கியங்களுள் ஒன்றாய், பீடமும் லிங்கமுமாய் உள்ளது. சகளம் புஷ்பம்போன்றும், நிஷ்களம் அதன் வாசனைபோன்றும் உள்ளன என்பர் பெரியோர். இம்மந்திரத்தில் ஜிம என்றது லிங்கத்தின்மேற்று.

(8) தமுஷ்டுஹி ய: ஸ்விஷு: ஸுதந்வா யோ விச்வஸ்ய க்ஷயதி பேஷஜஸ்ய। யக்ஷ்வாமஹே ஸௌமநஸாய ருத்ரம் நமோபிர் தேவமஸுரம் துவஸ்ய॥

— இருக்குவேதம், ௫. சஉ. கக.

"(அக்கினியை அடிப்பிடியாகவும், சோமனை நடுவாகவும், விஷ்ணுவை நுனியாகவுங்கொண்ட) யாதொரு நல்ல பாணத்தையும், (மேரு என்ற) நல்ல வில்லையுமுடைய அந்தச் சிவபெருமானை ஸ்துதி; சிக்கசுத்தியின்பொருட்டுப் பூஜையிற் சிவபெருமானை வழிபடு; பிராணதாதாவாகிய (அவரை) நமஸ்காரங்களினாலே உபசரி" என்றும்,

(9) ஆவோ ராஜாநமத்வரஸ்ய ருத்ரம் அவஸே க்ருணுத்வம்।

— இருக்குவேதம், ச. ௩. க.

"வேள்விக்கு அரசராக, உங்களை இரக்ஷிக்குமாறு சிவபெருமானை நாடுக" என்றும்,

(10) த்ரியம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்டிவர்த்தநம்।

— இருக்குவேதம், எ. ௫கூ. கஉ.

— தைத்திரீய ஆரணியகம், க0. ௫கூ. எச.

"மிகுந்த (புண்ணியப்) புகழுடையவரும், (உலகத்துக்கு வித்தாய் உபாசகர்களை) விருத்திசெய்பவருமாகிய (சோம சூரிய அக்கினி என்னும்) முக்கண்களையுடைய சிவபெருமானை வழிபடுகின்றோம்" என்றும்,

(11) கத் ருத்ராய ப்ரசேதஸே மீ஢ுஷ்டமாய தவ்யஸே।
வோசேம சந்தமம் ஹ்ருதே।

— இருக்குவேதம், க. சங. க.

(12) கத் ருத்ராய ப்ரசேதஸே மீடுஷ்டமாய தவ்யஸே।
வோசேம சந்தமம் ஹ்ருதே। ஸர்வோஹ்யேஷ ருத்ரஸ்
தஸ்மை ருத்ராய நமோஸ்து॥

— தைத்திரீய ஆரணியகம், க0. உநு. சங.

"சம்சாரத்தை ஒழிப்பவர்க்கும், மிகுந்த ஞானமுள்ளவர்க்கும், அநுக்கிரகஞ் செய்பவர்க்கும், வணங்கற்பாலர்க்கும், இதயத்துள்ளார்க்கும் இந்த இனிய வார்த்தையைச் சொல்வோம்; இவையெல்லாஞ் சிவபெருமான்; இந்தச் சிவபெருமானுக்கு நமஸ்காரம் ஆகுக" என்று இருக்குவேதமும் தைத்திரீய ஆரணியகமும்,

(13) விச்வம் பூதம் புவநம் சித்ரம் பஹுதா ஜாதம் ஜாயமாநஞ்ச
யத்। ஸர்வோஹ்யேஷ ருத்ரஸ்தஸ்மை ருத்ராய நமோஸ்து॥

— தைத்திரீய ஆரணியகம், க0. உச. சஉ.

"பிரபஞ்சமும், பூதமும், புவனமும், விசித்திரமாகப் பிறந்தனவும், பிறக்கின்றனவுமாகிய இவையனைத்தும் சிவபெருமான்; அந்தச் சிவபெருமானுக்கு நமஸ்காரம்" என்றும்,

(14) ஸர்வோ வை ருத்ரஸ் தஸ்மை ருத்ராய நமோஸ்து।
புருஷோ வை ருத்ர: ஸந்மஹோ நமோ நம:॥

— தைத்திரீய ஆரணியகம், க0. உச. சஉ.

"எல்லாஞ் சிவபெருமான்; அந்தச் சிவபெருமானுக்கு நமஸ்காரம்; சத்தும் அசத்துமாயுள்ள சிவபெருமான் (தகரபுண்டரீகபுரியிற் கிடத்தலாற்) புருஷர் எனப்படுவர்; அவருக்கு நமஸ்காரம்; நமஸ்காரம்" என்றும்,

(15) நமோ ஹிரண்யபாஹவே ஹிரண்யவர்ணாய ஹிரண்யரூபாய ஹிரண்யபதயேம்பிகாபதய உமாபதயே பசுபதயே நமோநம:।

"பொற்கையுடையார்க்கு நமஸ்காரம்; பொன்வண்ணமுடையார்க்கு பொன்வடிவினர்க்கு இரண்ணியபதிக்கு அம்பிகாபதியார்க்கு உமாபதியார்க்கு பசுபதியார்க்கு நமஸ்காரம்; நமஸ்காரம்" என்றும் யசுர்வேதத்தைச் சார்ந்த தைத்திரீய ஆரணியகமும் (க0. உஉ. ச0) கூறிய.

(16) யஸ்மை நமஸ்தச்சிரோதர்மோ மூர்த்தாநம் ப்ரஹ்மோத்த
ராஹநுர் யஜ்ஞோதரா விஷ்ணுர் ஹ்ருதயம் ஸம்வத்ஸர:।

"எவர் சிரசாயுள்ளாரோ அவர்க்கு நமஸ்காரம்; தருமம் நெற்றி; பிரமா மேல் அலகு; யஞ்ஞம் கீழ் அலகு; விஷ்ணு இருதயம்; சம்வற்சரம் பிரஜநநம்" என்றற்றொடக்கத்த சுருதியிற் சிம்சுமாரான்ம நிருபணவிஷயத்தில், இருதயாதி ரூபங்களையுடைய விஷ்ணுமுதலிய தேவர்களுக்கு வேறாகச் சர்வோற்கிருஷ்ட தேவராகிய பரப்பிரஹ்மசிவபிரானுர்க்கே பிரதான சிரோரூபத்துவம்

(17) யஸ்மை நமஸ்தச்சிர:।

"சிரசாயுள்ள யாதொருவருக்கு நமஸ்காரம்" என்னும் நமஸ்கார விஷயமாயுள்ள இலக்ஷணத்தினாலேதான் இறுதியினும்

(18) த்வம் பூதாநாமதிபதிரஸி, த்வம் பூதாநாம் ச்ரேஷ்டோஸி।
"நீவிர் (நாற்கால் இருகாற்) செந்துக்களுக்கெல்லாம் அதிபதியாய் இருக்கின்றீர்; நீவிர் அச்செந்துக்களுக்கெல்லாம் தலைவராகின்றீர்" என அவரே அனைத்துக்கும் அதிபதித்தன்மையாயும் சிரேஷ்டத்தன்மையாயும் இருத்தலைக் கூறி,

(19) நமஸ்தே நம: ஸர்வம் தே நமோ நம:।

"உமக்கு நமஸ்காரம்; நமஸ்காரம்; நமஸ்காரமனைத்தும் உமக்கே" என்று நமஸ்காரம் முடியும் எல்லை தைத்திரீய ஆரணியகத்திற் (உ. கசு. உரு) கூறப்பட்டது.

(20) வஜ்ரிண்யா முத்ரயா சக்ரம் பத்மிந்யா தர்சயேத் விதிம்।
சங்கிந்யா கேசவம் ருத்ரம் சிரஸ்யஞ்ஜலிமுத்ரயா॥

"இந்திரனைக் குலிசாயுதமுத்திரைகொண்டும், பிரமாவைக் கமலமுத்திரைகொண்டும், விஷ்ணுவைச் சங்குமுத்திரைகொண்டும், சிவபெருமானைச் சிரசில் நமஸ்கார முத்திரைகொண்டும் (அபிநயஞ் செய்க)" என்று பரதசாஸ்திரம் கூறுதலின், மற்றெல்லாத் தேவர்களினுஞ் சிவபெருமானே நமஸ்காரத்துக்கு உரியர் என்பது பெறப்பட்டது.

சிவலிங்க வழிபாடு சிவாகமங்களில் விரிவுறக் கூறப்பட்டிருத்தலின், அதனை ஈண்டுக் கூறாதுவிடுத்தேம்.

## ஆறாவது

# பிரபஞ்சோற்பத்திப்பிரகரணம்.

[இப்பிரகரணமானது அத்தியக்ஷர், ஆன்மா, பிரஹ்மம், சத்து என்னும் பெயர்களையுடையராய்த் தாண்டவேசுவர சிவபிரான் சிருஷ்டியாதி காரணர் எனக் கூறுகின்றது.]

(1) நாஸதாஸீந் நோ ஸதாஸீத் ததாநீம் நாஸீத் ரஜோநோ வ்யோமா பரா யத்। கிமாவரீவ: குஹ கஸ்ய சர்மந்நம்ப: கிமாஸீத் கஹநம் கபீரம்॥

— இருக்குவேதம், க௦. கஉகூ. க.

* "அசத்தும் இல்லை, சத்தும் இல்லை; அப்போது (மகாப்பிரளய தசையிலே) பீஜமும் (அங்குரமும்) இல்லை, ஆகாயத்துக்கு மேல் யாதும் இல்லை, எங்கேனும் எதையேனும் மூடியதுண்டா? இன்பம் எவனுக்கு (உளதாயிற்று)? அடையக்கூடாத அகாதமாகிய ஜலம் இருந்ததா? (ஒன்றும் இல்லை).

(2) ந ம்ருத்யுராஸீதம்ருதம் ந தர்ஹி ந ராத்ரயா அஹ்ந ஆஸீத் ப்ரகேத:। ஆநீத வாதம் ஸ்வதயா ததேகம் தஸ்மாத் தாந்யம் ந பர: கிஞ்சநாஸ॥

— இருக்குவேதம், க௦. கஉகூ. உ.

"மிருத்தியுவும் இல்லை, அமூர்தமும் இல்லை, அப்போது இராப்பகலின் (கால) ஞானமும் இல்லை; (எ-ம் மந்திரத்திற் குறிக்கப்பட்ட திருச்சிற்றம்பலத்து அத்தியக்ஷராகிய அந்தப் பரவஸ்து) ஏகமாய் (அத்துவிதீயமாய்), ஸ்வதா எனப்படும் (சுத்தாசுத்த) மாயையோடியைந்து, காற்றில்லாமற் சுவாசித்தது; (சிருஷ்டிக்கு) முன் அதுவொழிந்து பிறிதொன்றும் இல்லை."

---

* அஃதாவது சந்திரசூரியரொளியெலாம் ஒழிந்து, பகல் இது இரவு இது எனப் பகுத்தலில்லாத சூனியமாய், நாமரூபவிசேஷமின்றி ஸ்தூல சூக்கும சேதனசேதனமாகிய சத்து (பசு) அசத்தின் (பாசத்தின்) வியக்திநிலையற்று, இவையனைத்தும் இருண்மயமாயிருந்த அந்தக் காலத்திலே தாண்டவேசுவரசதாசிவப்பெருமான் அத்துவிதீயராய், கேவலராய், சுவப்பிரகாசராய்த் தம்மினின்று பகுக்கப்படாத இயல்படைந்த சேதனசேதனச் சத்தியோடு உளராயினர் என்பதாம்.

(3) தம ஆஸீத் தமஸா கூஹ்ளமக்ரே ப்ரகேதம் ஸலிலம் ஸர்வ மா இதம்। துச்யே நாப்வபிஹிதம் யதாஸீத் தபஸஸ் தந்ம ஹிநா ஜாயதைகம்॥

— இருக்குவேதம், க0. கஉகூ ௩.

"இருள் இருந்தது, (சிருஷ்டிக்கு) முன்னர்ப் (பிரளயதசையி லே) பிரபஞ்சமனைத்தும் இருளினால் மறைந்து, (பாலில்) ஜலம் போலப் பகுத்து அறியக்கூடாததாய் இருந்தது; இருந்ததெது வும் நாற்புறமும் துச்சமாய் மறைக்கப்பட்டிருந்தது; (ஜகத்துக் குரிய) ஒன்றாயுள்ள (காரியத்தொகுதி) சிருஷ்டிக்குரிய சங்கற்ப ஞான மகிமையினாலே உண்டாயிற்று."

(4) காமஸ் ததக்ரே ஸமவர்த்ததாதிமநஸோரேத: ப்ரதமம் யதா ஸீத்। ஸதோபந்துமஸதிநிரவிந்தம் ஹ்ருதி ப்ரதீஷ்யா கவ யோ மநீஷா॥

— இருக்குவேதம், க0. கஉகூ. ச.

§ "காமம் எனப்படும் (துணைக்காரணமாகிய) பராசத்தியானது மு தற்கண்ணே (எ-ம் மந்திரத்து அத்தியக்ஷராகிய தாண்டவேசுவ ரப்பெருமானினின்று) உளதாயிற்று; யாதொரு காரணத்தினால் அந்தச் சத்தியினின்று ரேதஸ் எனப்படும் பீஜம் முதற்கண்ணே உளதாயிற்று; கவிகள் (யோகிகள்) ஜகத்துக்குக் காரணபூதமா யுள்ளதை இதயத்தில் மநீஷையினால் (அருளினால்) அசத்திலே (சுத்தாசுத்தமாயையிலே) என ஆராய்ந்து அறிந்து கொண்டார் கள்."

---

§ இம்மந்திரத்துள்ள காமம் என்னும மொழி அ-ம் மந்திரத்துள்ள பிரஞ்ஞை எனப்படும் பராசத்தியை உணர்த்திற்று; உ-ம், ங-ம் மந்திரத் துள்ள சுவதா என்னும் மொழியும், ச-ம மந்திரத்துள்ள அசத்து என்னும் மொழியும் (சுத்தாசுத்த) மாயையை உணர்த்தின. சிவபெருமானைத் தவி ர்த்துப் பிறவனைத்துக்கும் பிரளயம் எய்துமாயின், முக்தான்மாக்களுடை ய பதம் நித்தியமாதல் எங்ஙனமெனின், அன்று; முக்தான்மாக்களுடைய பதம் சிவதத்துவத்துள் அந்தர்ப்பாவமாதலின் தூய்மையுடையயாற்சிவ தத்துவமானது இவர்கட்கும (முக்தான்மாக்கட்கும்) சமானமாய் உண்டே; சிருஷ்டிமுதலிய சக்கரத்துட்பட்ட பசுபாசங்களுக்கு விலக்ஷணமாயுள் ளது சிவதத்துவம். ஆகலின், பசுபாசவிலக்ஷணமாயுள்ள சிவபிரானார் பத த்துக்கு அநித்தியத்துவப்பிரசங்கம் இல்லை. இங்ஙனம ஸ்ரீநீலகண்ட சிவாசாரியர் ஜகத்வியாபாராதிகரணத்தில் (ச. ச. உஉ) கூறியிருக்கின்றார்.

(5) திர:சீநோ விததோ ரச்மிரேஷாமத: ஸ்விதாசீதுபரிஸ்விதா சீத்l ரேதோயா ஆஸந் மஹிமாந ஆஸந் ஸ்வதா அவஸ்தாத் ப்ரயதி: பரஸ்தாத்ll

— இருக்குவேதம், ௧0. ௧உ௯. ரு.

"குறுக்காகச் செல்லும் (பராசத்தி) ஒளியானது தொகுதியாகிய காரியங்களுக்குக் கீழாகவேனும், மேலாகவேனும் (எனவே, எங்கும்) இருந்தது; பீஜங்களாகிய கன்மங்களைச் செய்கின்றவர்களும், புசிக்கின்றவர்களுமாகிய சீவர்கள் இருந்தார்கள்; ஆகாசாதிகளும் இருந்தன; மாயையானது (இருவகைப்பட்டு ஒன்று) கீழாயும் (அசுத்தமாயையாயும்), (மற்றது) மேலாயும் (சுத்தமாயையாயும்) இருந்தது."

(6) கோ அத்தா வேத க இஹ ப்ரவோசத் குத ஆஜாதா குத இயம் விஸ்ருஷ்டி:l அர்வாக் தேவா அஸ்ய விஸர்ஜநேந தா கோ வேத யத ஆபபூவll

— இருக்குவேதம், ௧0. ௧உ௯. ௬.

"எவன் (புருஷன்) இந்தச் சிருஷ்டியானது பாரமார்த்திகமாய் எதினின்று (எந்த உபாதானகாரணத்தினின்று) பிறந்தது எனவும் எவரினின்று (எந்த நிமித்தகாரணரினின்று) பிறந்தது எனவும் (விஸ்தாரமாக நன்கு சொல்ல) அறிவான்? தேவர்கள் உலக சிருஷ்டிக்குப் பின்னர்த் (தான் உளராயினர்); பின் எங்கிருந்து (சிருஷ்டி) எய்தியது என யார் அறிவார்?"

(7) இயம் விஸ்ருஷ்டிர் யத ஆபபூவ யதிவாதநே யதிவா நl யோ அஸ்யாத்யக்ஷ: பரமே வ்யோமந் ஸோ அங்க வேத யதிவா ந வேதll

— இருக்குவேதம், ௧0. ௧உ௯. எ.

"எங்கிருந்து இந்தச் சிருஷ்டி உண்டாயிற்று? எவர் தாங்கவல்லார்? எவர் தாங்கவல்லாரல்லர்? சிருஷ்டியின் (காரணத்தைப்) பரமாகாயத்தில் (திருச்சிற்றம்பலத்தில்) எந்த † அத்தியக்ஷர் (Superintendent) உளரோ, அவர் (நிமித்தகாரணர்) அறிவார் (அவரே பிரபஞ்சத்தைத் தாங்கவல்லார்;) மற்றெவரும் அறியார் (தாங்கவல்லாரல்லர்).

† ௭௧-ம் பக்கத்து உ௭அ-ம் பிரிவுமுதலியவைகளை நோக்குக.

3) அத ய ஆத்மா ஸ ஸேதுர் வித்ருதிரேஷாம் லோகாநாம ஸம்பேதாய||

— சாந்தோக்கியம், அ. ௮. ௧.

இவ்வுலகங்களுக்கு யாதும் கலக்கம் நேரிடாவண்ணம் தாங்கும் சது (அணை) இந்தப் (பரம) ஆன்மா."

() யதாதமஸ்தந்ந திவாந ராத்ரிர் நஸந்ந சாஸச் சிவ ஏவ கேவல:| ததக்ஷரம் தத் ஸவிதுர் வரேண்யம் ப்ரஜ்ஞா ச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ||

— சுவேதாசுவதரம், ௪. ௧அ.

"எப்போது இருள் உளதாய், பகலுமின்றி இரவுமின்றி, சத்து ன்றி அசத்துமின்றி இருந்ததோ, அப்போது (தாண்டவேசுவர) தாசிவர் ஒருவரே இருந்தார்; அவர் அக்ஷரமாயும், சவிதாவின் (நரியனது) * முக்கியப் பொருளாயும் (சதாசிவராயும்) இருந்தார்; அவரினின்று (தாண்டவேசுவரசதாசிவரினின்று) பழைய (ரமம் எனப்படும் பிரஞ்ஞை) பராசத்தி வெளிப்பட்டார்."

(0) இதி ஸர்வேச்வர: சம்பு: சச்சிதாநந்தவிக்ரஹ:|
உபஸம்ஹ்ருத்ய விச்வாத்மா சக்திம் ஸர்வநியாமிகாம்|
ஸ்வஸ்மிந் தஸ்தே ஸ்வயம் ஜ்யோதி: பார்வத்யா: புரதோ த்விஜா:||

— சங்கரசங்கிதையைச்சார்ந்த தக்ஷகாண்டம்.

"சச்சிதானந்தரூபியும், சம்புவும், விசுவாத்மாவும், சர்வேசுவராகிய (தாண்டவேசுவர) சிவபெருமான் தேவியார் முன்னிலையில் உலகமனைத்தையும் நடாத்தும் தமது சத்தியைத் தமக்குள்ளே அடக்கிக்கொண்டு சோதிரூபராய் நின்றார்; அப்போது சமஸ்த உலகமும் மிகுதியும் உருவுமற்றுச் செயலுமற்றுப்போயின; இரவு இல்லை, பகல் இல்லை, சூரியன் இல்லை, சந்திரன் இல்லை, அக்கினி இல்லை, தேவர்கடானும் இல்லை, எங்கும் கேவலம் பய ற்றத்தக்க ஜடவடிவினதாகிய இருண்மயமாயுற்றது."

---

* தீக்ஷ்ணாம்ஸு பிம்பமத்யஸ்தம் த்யாத்வா தேவம் ஸதாசிவம்!
"தீக்ஷணமாகிய கிரணங்களையுடைய (சூரிய) விம்பமத்தியிலுள்ள சதாசிவ ரைத் தியானித்து" என மிருகேந்திராகமம் கூறுகின்றது.

(11) அகார: ஸத்யவக்த்ரம் ஸ்யா துகாரம் வாமவக்த்ரகம்।
மகாரோ கோரவக்த்ரம் ஸ்யாத் பிந்துஸ் தத் புருஷாநநம்।
நாதஸ்த்வீசாநவக்த்ரம் ஸ்யாந் நாதாதீதம் நடேச்வரம்॥

— மகுடாகமம்.

"(எச-ம் பக்கத்து உகூஅ-ம், உகூகூ-ம் பிரிவுகளிற் கூறப்பட்ட) தாண்டவேசுவரர் எனப்படும் நாதாதீத நடேசர்க்குரிய சத்தியோசாத முகம் அகாரமாயும், அவருடைய வாமதேவமுகம் உகாரமாயும், அகோரமுகம் மகாரமாயும், தற்புருஷமுகம் விந்துவாயும், ஈசான முகம் நாதமாயும் உள்ளன."

(12) பதி:ச கிம் விதோ ஜ்ஞேய: ஸாதிகாரபதே ஸ்தித:।
பதி: ஸதாசிவோ ஜ்ஞேயோ மந்த்ராத்மா மந்த்ரவிக்ரஹ:।
ஸர்வமந்த்ராதிப: சாஸௌ ச்ருஷ்டிஸம்ஹார காரக:॥

— சர்வஞ்ஞானோத்தரம்.

"(சிருஷ்டி, ஸ்திதி, சங்கார, திரோபவ, அநுக்கிரகம் என்னும் பஞ்ச கிருத்திய) அதிகாரபதத்திலிருக்கும் பதியாவார் யாவரெனில், மந்திரான்மாவும், மந்திரவடிவினரும், சமஸ்தமந்திராதிபரும், சிருஷ்டி சங்காரஞ்செய்யும் பதியாகிய (தாண்டவேசுவர) சதாசிவர்" என்று சர்வஞ்ஞானோத்தராகமமும்,

(13) சுத்தேத்வநி சிவ: கர்த்தா ப்ரோக்தோநந்தோசிதே ப்ரபு:।
யதா பூமண்டலேசேந நியுக்த: ஸ்வஸமப்ரபு:।
ததாஸௌ குருதே ஸர்வம் தத்சக்திப்ரதிபோதித:॥

— கிரணாகமம்.

"(சுத்தமாயையின்பாலதாகிய) சுத்தாத்துவாவில் தாண்டவேசுவர சிவபெருமானே (உஎஅ-ம், உஎகூ-ம், உஅ0-ம், உஅக-ம் பிரிவுகளில் இருக்குவேதங் கூறியவாறு) சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியஞ் செய்யும் கர்த்தா; அசுத்தமாயையிற் கிருத்தியம் ஐந்தும் அனந்தேசுவரராகிய பிரபுவே செய்கின்றார்; பூமண்டலாதிபதியினாலே தனக்குச் சமானமாகிய பிரபுவானவன் நியோகிக்கப்பட்டாற் போல, (தாண்டவேசுவரராகிய சிவபெருமானால் அனந்தேசுவரப்பிரபு நியோகிக்கப்பட்டு) அவரது சத்தியினால் அறிவிக்கப்பட்டு (ஸ்ரீகண்டநாயனார் வாயிலாக மூலப்பிரகிருதியிலுள்ள கிருத்தியம் ஐந்தும் செய்வர்)" என்று கிரணாகமமும் கூறுகின்றன.

இங்ஙனம் வேதமும் உபநிடதமும் கூறினமைக்கியைந்தே, புராணோபப்பிருங்கணமும், சிவாகமமகோபப் பிருங்கணமும் நின்றமை காண்க.

(14) ஆத்மைவேத மக்ர ஆசீத்।

— பிருகதாரண்ணியம், க. ச. க.

"முதற்கண்ணே (பரம) * ஆன்மா (சிவபெருமான்) இருந்தார்"

(15) ஆத்மந ஏவேதம் ஸர்வம்।

— சாந்தோக்கியம், எ. உரு. க.

"(பரம) ஆன்மாவினின்று ஈதெல்லாம் (பிறந்தன)."

(16) ப்ரஹ்மவா இதமக்ர ஆசீத் ததாத்மாநமேவா
வேத...............தஸ்மாத் ஸர்வமபவத்।

— பிருகதாரணியம், க. ச. க0.

"முதற்கண்ணே இந்தச் (சிவமும் சத்தியுமாகிய) பிரஹ்மம் இருந்தது; அந்தப் பிரஹ்மம் பரமான்மாவே; அதினின்று இவையனைத்தும் உண்டாயின."

(17) ஸதேவ ஸோம்யேதமக்ர ஆசீத்।

— சாந்தோக்கியம், சா. உ. க.

"சோமிய! முதற்கண்ணே (சத்தியும் சிவமுமாம்) † சத்தே இருந்தது."

(18) ஏகமேவாத்விதியம்।

— சாந்தோக்கியம், சா. உ. க.

"ஏகமாய், இரண்டாவதற்றதாய்ச் (சத்து) இருந்தது."

---

* சைதந்யமிதி விச்வஸ்ய ஸர்வஜ்ஞாநக்ரியாத்மகம்।
ஸ்வாதந்த்ரியம் தத் ஸ்வபாவோ ய: ஸ ஆத்மா பரிகீர்த்தித:॥

"சைதன்னியம் என்பது பிரபஞ்சத்தை முற்றும் அறிதலும் முற்றும் இயற்றுதலுமாம். (முற்றறிவு முற்றுத்தொழில் என்பவற்றைச்) சுவாதந்திரியமாய் எவர் இயல்பாகவுடையரோ, அவர் (பரம) ஆன்மா எனப்படுவர்" என்று கைலாசசங்கிதை (க0. கஉசா) கூறுகின்றது.

† சக்தி: சிவ:ச சச்சப்தப்ரக்ருதிப்ரத்யயோதிதௌ।

"சத்தியும் சிவனும் சத்து என்னும் பதத்தின் பகுதியும் விகுதியுமாகக் கூறப்பட்டனர்" என அபியுக்தர் கூறியதாக லோகண்டபாஷ்யம் (க. க. ரு) கூறுகின்றது.

(19) ஸந்மூலா: ஸோம்யேமா: ஸர்வா:
ப்ரஜா: ஸதாயதநா: ஸத்ப்ரதிஷ்டா:।
—சாந்தோக்கியம், சா. அ. சா.

"இந்தப் பிரஜைகளெல்லாம் சத்தை மூலமாகக்கொண்டன; அவையனைத்துஞ் (சிவமுஞ் சத்தியுமாகிய) சத்திலே வசிக்கின்றன; சத்திலே நிலையுறுகின்றன."

(20) ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேய।
—சாந்தோக்கியம், சா. உ. ங.

"அது அநேகமாய் ஆவேனாக என்று நினைந்தது."

(21) ஆத்மா வா இதமேக ஏவாக்ர ஆஸீந் நாந்யத்கிஞ்சநமிஷத்
ஸ ஈக்ஷத லோகாந்நு ஸ்ருஜா இதி।
—ஐதரேயோபநிடதம், க. க.

"இந்த ஏகமாகிய (பரம) ஆன்மாவே முதற்கண் இருந்தது; வேறு வியாபாரம் இல்லை; அந்தப் பரமான்மா சிருஷ்டிக்கவேண்டுமென்று சங்கற்பித்தது."

(22) புருஷோ வை ருத்ர: ஸந்மஹோ நமோ நம:।
—தைத்திரீய ஆரணியகம், க0. உச. சஉ.

§"புருஷர் (சிவபெருமான்) மகானாகிய சத்து எனப்படும் உருத்திரரே; நமஸ்காரம், நமஸ்காரம்."

(23) ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மந: ஸர்வேந்த்ரியாணிச।
கம் வாயுர் ஜ்யோதிராப: ப்ருதிவீ விச்வஸ்ய தாரிணீ।।
— முண்டகோபநிடதம், உ. க. ங.

"இவரினின்று (சிவபிரானினின்று) பிராணனும், மனசும், சர்வேந்திரியங்களும், ஆகாசமும், காற்றும், தேயுவும், ஜலமும், அனைத்தையும் தாங்கும் பூமியும் உற்பத்தி ஆகின்றன"

(24) ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப:।
தஸ்மாதேதத் ப்ரஹ்மநாமரூபமந்நஞ்ச ஜாயதே।
—முண்டகம், க. க. கூ.

---

§ "தாண்டவேசுவர சிவபரத்துவ நிருபணப்பிரகரண"த்து ஙஉஎ-ம், கூஉஅ-ம் பிரிவுகளை நோக்குக.

"எந்தக் (கேடிலபாகிய சிவபிரான்) சர்வஞ்ஞரோ, அனைத்தையும் அறிந்தாரோ, அந்தப் பிரானுக்கு ஞானமயமாயுள்ளது தபசோ, அவரினின்று பிரமாவும், நாமரூபமும், அன்னமும் உற்பத்தியாகின்றன."

(25) ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி சாந்த உபாஸீத।

— சாந்தோக்கியம், ங. கச. க.

"எல்லாம் இந்தப் பிரஹ்மமன்றோ; இது (பிரபஞ்சமானது) அவரிலே தோன்றி நின்று ஒழிதலைக் கண்டு, ஒவ்வொருவரும் சாந்தமாக அவரை உபாசிக்க."

(26) யதோ வா இமானி பூதானி ஜாயந்தே।
யேந ஜாதானி ஜீவந்தி। யத் ப்ரயந்த்யபிஸம்விசந்தி।

— தைத்திரீயம், ங. க.

"எங்குநின்று இந்தச் (சேதனாசேதன) உலகங்கள் பிறக்கின்றனவோ, எதனாற் பிறந்தவை நிலையுறுகின்றனவோ, ஒழியுங்கால் அவை எங்கே பிரவேசிக்கின்றனவோ, அதனை அறிய முயலுதி; அது பிரஹ்மம்."

(27) ஸர்வாணி ரூபாணி விசிந்த்ய தீரோ நாமானி க்ருத்வா பிவதந் யதாஸ்தே।

— தைத்திரீய ஆரணியகம், ங. கஉ. எ.

"தீரராகிய (சிவபிரான்) சமஸ்த வடிவங்களையும் ஆக்கிவிட்டு அவற்றின் பெயர்களைக் கூறிக்கொண்டிருந்தார்."

(28) ஸ யதோர்ணநாபிஸ்தந்துநோச்சரேத்யதாக்நே:
க்ஷுத்ரா விஸ்புலிங்கா வ்யுச்சரந்த்யேவமேவாஸ்மாதாத்மந: ஸர்வே ப்ராணா: ஸர்வே லோகா: ஸர்வே தேவா:
ஸர்வாணி பூதானி வ்யுச்சரந்தி।

— பிருகதாரணியம், உ. க. உ0.

"சிலந்திப்பூச்சியானது நூலொடு சேறல்போல, இன்றேல் தீயினின்று சிறு பொறிகள் பிறத்தல்போலப் பரமான்மாவினின்று சமஸ்த பிராணன்களும், சமஸ்த உலகமும், சமஸ்த தேவரும் சமஸ்த பூதங்களும் (சமஸ்த ஆன்மாக்களும்) கூட்டமாய்ப் பிறக்கின்றன."

(29) யதோர்ணநாபி: ஸ்ருஜதே க்ருஹ்ணதே ச யதா ப்ருதிவ்யா
மோஷதய: ஸம்பவந்தி। யதா ஸத: புருஷாத்கேச
லோமாநி ததாக்ஷராத்ஸம்பவதீஹ விச்வம்॥

— முண்டகம், க. க. எ.

"சிலந்திப்பூச்சியானது எங்ஙனம் (நூலைப்) படைத்து ஒடுக்கு கின்றதோ, பூமியில் எங்ஙனம் ஔஷதிகள் பல உண்டாகின்றன வோ, சத்தாகிய புருஷனிலிருந்து தலை, உரோமங்கள் உண்டா கின்றனவோ, அங்ஙனம் கேடிலராகிய (அக்ஷரராகிய) சிவபிரானி னின்று பிரபஞ்சம் உண்டாகின்றது."

(30) யதாக்நேர் ஜ்வலதோ விஸ்புலிங்கா விப்ரதிஷ்டேரந்
நேவமேவைதஸ்மாதாத்மந: ப்ராணா யதாயதநம் விப்ர
திஷ்டந்தே।

— கவுஷீதகிப்பிராஹ்மணம், ங. ங.

"சுவாலிக்கும் தீயினின்று பொறிகள் நாற்புறத்துச் செல்லுதல் போல, அந்தப் (பரம) ஆன்மாவினின்று தத்தம் இடநோக்கிப் பிராணன்கள் செல்லுகின்றன."

(31) ததேதத் ஸத்யம் யதா சதீப்தாத் பாவகாத் விஸ்புலிங்கா:
ஸஹஸ்ரச: ப்ரபவந்தே ஸரூபா:। ததாக்ஷராத்
விவிதா: ஸோம்யேபாவா: ப்ரஜாயந்தே தத்ரசைவாபியந்தி॥

— முண்டகம், உ. க. க.

"சோமிய! இது மெய்; எங்ஙனம் எரியும் தீயினின்று ஒரே வடிவமாகிய பொறிகள் ஆயிரக்கணக்காக உண்டாகின்றனவோ, அங்ஙனம் கேடிலராகிய சிவபெருமானினின்று அநேக பிரகார மாகிய பதார்த்தங்கள் உண்டாகின்றன; (மீண்டும்) அங்கே (போய்) இலயமடைகின்றன."

(32) யேநாவ்ருதம் நித்யமிதம் ஹி ஸர்வம் ஜ்ஞ: காலகாலோ
குணீ ஸர்வவித் ய:। தேநேசிதம் கர்ம விவர்த்ததேஹ
ப்ருதிவ்யாப்யதேஜோநிலகாநி சிந்த்யம்॥

— சுவேதாசுவதரம், சா. உ.

"இவையனைத்தையும் எஞ்ஞான்றும் வியாபித்துள்ளாரும், சர் வஞ்ஞரும், காலகாலரும், (சர்வஞ்ஞாதி) குணங்களையுடையரும்,

அனைத்தையும் அறிந்தவருமாயுள்ள சிவபெருமானாலே பிரேரிக்கப்பட்ட (சிருஷ்டித்) தொழிலானது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பவற்றை விரிக்கின்றதெனக் கோடற்பாற்று."

(33) தபஸா சீயதே ப்ரஹ்ம ததோந்நமபிஜாயதே।
அந்நாத் ப்ராணோ மந: ஸத்யம் லோகா: கர்ம சுசாம்ருதம்॥
— முண்டகம், க. க. அ.

"பரப்பிரஹ்ம சிவபிரான் (அருண்) ஞானத்தினற் பிரபஞ்சத்தைப் பிறப்பித்தார்; இதினின்று அன்னமுண்டாயிற்று; இதினின்று பிராணனும் மனசும் புத்தியும் உலகங்களும், கன்மங்களினின்று அமிர்தமும் உண்டாயின."

(34) ஸ ஏஷ இஹ ப்ரவிஷ்ட ஆநகாக்ரேப்ய:।
— பிருகதாரணியம், க. ச. எ.

"அவர் (பரமான்மா) நகநுனிவரையும் பிரவேசித்துள்ளார்."

(35) ஸ இமாந்லோகாநஸ்ருஜத அம்போ மரீசிர்மரமாபோதோம்ப:
பரேண திவம் த்யௌ: ப்ரதிஷ்டாந்தரிக்ஷம் மரீசய:।
ப்ருதிவீ மரோயா அதஸ்தாத்தா ஆப:॥
— ஐதரேயம், க. உ.

"அவர் அம்பஸ் மரீசி மர அப்பு என்பவற்றைப் படைத்தார்; சுவர்க்கத்துக்கு மேலாகிய தியௌ, பிரதிஷ்டை; அந்தரிக்ஷம், மரீசி; பிருதிவி மர எனப்படும்; பூமிக்குக்கீழ்ப்பட்ட உலகங்கள் அப்புலகம் எனப்படும்."

(36) ஏதஜ்ஜ்ஞேயம் நித்யமேவாத்மஸம்ஸ்தம் நாத: பரம் வேதிதவ்யம் ஹி கிஞ்சித்। போக்தா போக்யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா ஸர்வம் ப்ரோக்தம் த்ரிவிதம் ப்ரஹ்மமேதத்॥
— சுவேதாசுவதரம், க. கஉ.

"ஆன்மாவிலிருக்கும் இவர் (சிவபிரான்) எஞ்ஞான்றும் அறியற்பாலர்; இவர்க்குமேற் சிறிதும் அறியற்பாலதில்லை; போக்கியப்பிரஹ்மம் (போக்கியகாண்டம்), போக்தாபிரஹ்மம் (போககாண்டம்) பிரேரிதாரப்பிரஹ்மம் (பிரேரகாண்டம்) என்னும் இம்மூவித பிரஹ்மத்தையும் அறிதலால் எல்லாம் கூறப்பட்டதாயிற்று."

"தாண்டவேசுவர சிவபரத்துவ நிரூபணப்பிரகரணத்து" ,அகூ-ம், கூ0-ம் பிரிவுகளிற் போக்கியகாண்டம் என்றது ஆன்மதத்துவத்தையும், போக்திருகாண்டம் என்றது வித்தியாதத்துவத்தையும், பிரேரகாண்டம் என்றது சிவதத்துவத்தையும் உணர்த்தியவாம் என நிரூபிக்கப்பட்டது.

(37) இதம் ஸர்வமஸ்ருஜத। யதிதம் கிஞ்ச।

— தைத்திரீயம், உ. சு.

"எதெதுண்டோ அததெல்லாம் (சிவபிரான்) சிருஷ்டித்தார்."

(38) ஊர்த்வ மூலோவாக்சாக ஏஷோச்வத்த: ஸநாதந:।
தமேவ சுக்ரம் தத் ப்ரஹ்ம தமேவாம்ருதமுச்யதே।
தஸ்மிந் லோகா: ச்ரிதா: ஸர்வே ததுநாத்யேதி கச்சந॥

— கடம், சு. க.

"(கலை தத்துவம் புவனம் வர்ணம் பதம் மந்திரம் என்னும்) கிளைகளோடு சுத்த மிசிர அசுத்தாத்துவப் பிரபஞ்சமாகிய அசுவத்தவிருக்ஷத்துக்கு மேலே வேர்; அது தூயது; அது பிரஹ்மம்; அது தான் (அமிர்தம்) சிவம் என்று கூறப்படுகின்றது; அந்தப் பரப்பிரஹ்மசிவத்திலே (மேலே கூறிய) சமஸ்தப்பிரபஞ்சமும் ஆசிரயித்துள்ளன; இதனைக் கடந்தவன் எவனுமில்லை" (இம்மந்திரம் முன்வரும் மந்திரத்தோடு சம்பந்தமுற்றது.)

(39) விஜ்ஞாநஸாரதிர் யஸ்து மந: ப்ரக்ரஹவாந்நர:।
ஸோத்வந: பாரமாப்நோதி தத்விஷ்ணோ: பரமம் பதம்॥

— கடம், ந. கூ.

"ஞான(யோக) சாரதியாகிய எந்த மனிதன் அருள்வசப்பட்டவனாயிருக்கின்றானோ, அவன் விஷ்ணு எனப்படும் சிவபெருமானது (பரமாகாய) திருவடியை அடைகின்றான்; இது (பதினொரு மந்திரம், எண்பத்தொரு பதம், ஐம்பத்தொரு அக்ஷரம், இருநூற்றிருபத்திநான்கு புவனம், முப்பத்தாறு தத்துவம், ஐந்து கலை என்னும் அறுவித) அத்துவாவின் கரைக்கண்ணது."

இம்மந்திரங்கள் இரண்டும் சிவபரத்துவ நிரூபணப்பிரகரணத்து கசுடு, கசுசு, கசுஎ, கசுஅ-ம் இலக்கங்களிற் குறிக்கப்பட்டுள்ளன.

(40) ஏகைகம் ஜாலம் பகுதா விகுர்வந்நஸ்மிந் க்ஷேத்ரே ஸம்ஹரத்யேஷ தேவ:। பூய: ஸ்ருஷ்ட்வா யதயஸ்ததேச: ஸர்வாதிபத்யம் குருதே மஹாத்மா॥

— சுவேதாசுவதரம், ரு. ந.

(இம்முத்திறப்பட்ட பிரபஞ்சமாகிய) வயலிலே ஏகராகிய சிவ
பிரான் ஒன்றன்பின் ஒன்றாக வலையை அநேகபிரகாரமாக விரித்
துப் பின் அதனைச் சுருக்குகின்றார்; பின்னரும் மகாத்துமாவா
கிய சிவபிரான் (பிரமாமுதல் ஸ்தம்பபரியந்தம்) சிருஷ்டித்துச்
சர்வாதிபத்தியஞ் செய்கின்றார்.”

41) ப்ரத்யங்ஜநாஸ்திஷ்டதி ஸஞ்சுகோசாந்தகாலே ஸம்ஸ்ருஜ்ய
விச்வா புவநாநி கோபா:।

— சுவேதாசுவதரம், ௩. ௨.

(பெத்தகாலத்திலே) (சிவபெருமான்) ஆன்மாக்களுக்கெல்லாம்
பின்னே நிற்கின்றார்; உலகமனைத்தையும் சிருஷ்டித்துக் காப்பாற்
றுபவராகிய அவர் முடிவுகாலத்திலே அவற்றை ஒடுக்குகின்றார்.”

42) மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந் மாயிநந்து மஹேச்வரம்।
அஸ்மாந் மாயி ஸ்ருஜதே விச்வமேதத் தஸ்மிந் சாந்யோ
மாயயா ஸந்நிருத்த:॥

— சுவேதாசுவதரம், ௪. ௧0, ௯.

(அசுத்த) மாயையைப் பிரகிருதி என்றும், மாயையுடையாரை
மகேசுவரர் (அனந்தர்) என்றும் அறிக; மாயியாகிய அனந்தேசுவ
ர் இப்பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கின்றார்; அதிலே மற்றது
ஆன்மா (பாசமாகிய) மாயா மலத்தினாற் கட்டுண்டது.”

43) ப்ரஹ்மவாதிநோ வதந்தி। கிம் காரணம்। ப்ரஹ்மகுத: ஸ்ம
ஜாதா ஜீவாம கேந க்வச ஸம்ப்ரதிஷ்டா:। அதிஷ்டிதா:
கேந ஸுகேதரேஷு வர்த்தாமஹே ப்ரஹ்மவிதோவ்ய
வஸ்தாம்॥

— சுவேதாசுவதரம், ௧. ௧.

பிரஹ்மவித்துக்கள் பிரபஞ்சத்துக்குக் காரணம் யாது என்று
கூறுகின்றார்கள்; எங்கிருந்து பிறந்தேம்? (சிருஷ்டி); எவரால் நிலை
யுறுகின்றேம்? (ஸ்திதி;) எவரிலே இலயமுறுகின்றேம்? (சங்காரம்);
எவரால் இன்பத்தினும் துன்பத்தினும் அதிஷ்டிக்கப்படுகின்றேம்?
(திரோபவம்); எவராற் பந்தநிவிர்த்தி நிலை நமக்கு எய்துகின்றது
(அநுக்கிரகம்).”

இம்மந்திரத்துக்கு இங்ஙனம் பொருள்கொண்டமை சிவார்க்கமணி தீபிகையிற் (க. க. உ) கண்டவாறேயாம்.

ஓரோ இடத்திற் சிருஷ்டி ஸ்திதி சங்காரம் என்னும் மூன்றும் கூறப்பட்டிருக்கின்றதே எனின், திரோபவகிருத்தியம் ஸ்திதி கிருத்தியத்தினும், அநுக்கிரககிருத்தியம் சங்காரகிருத்தியத்தினும் அடங்கும் என்றோர்க.

(44) த்யாவாபூமீ ஜநயந் தேவ ஏக:।

— தைத்திரீய ஆரணியகம், க0. க. உ.

"ஏகராகிய (மகா) தேவர் பூமியையும் ஆகாயத்தையும் படைத்தார்."

(45) விச்வாதிகோருத்ரோ மஹர்ஷிர் ஹிரண்யகர்ப்பம் பச்யத ஜாயமாநம்।

— தைத்திரீய ஆரணியகம், க0. சஉ. உஅ.

"விசுவாதிகரும் மகர்ஷியுமாகிய சிவபிரான் இரண்ணியகர்ப்பர் பிறக்கக் கண்டார்."

(46) தத்ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிசத்।

— தைத்திரீயம், உ. சு.

"அதனைச் சிருஷ்டித்து அவர் அதனுள்ளே பிரவேசித்தார்" (சிருஷ்டி).

(47) அகாமாத் ஸ்ருஜதே ஸர்வம் ஜகத் ஸ்தாவர ஜங்கமம்।
ஜ்ஞாநசக்த்யா புந: சைவ ஸமாலோக்ய வராநநே।
இச்சாசக்த்யா ஸமாவிஷ்ட: க்ரியாசக்த்யாச ஸுவ்ரதே॥

— சுவச்சந்தபைரவாகமம்.

"(சிவபெருமான் தமக்குரிய ஞான இச்சாக்கிரியாசத்திகளுள்ளே) ஞானசத்தியினாலே நினைந்து, ஸ்தாவரசங்கமமாகிய பிரபஞ்சமனைத்தையும் சிருஷ்டிக்கின்றார்; இச்சாசத்தியினாலும் கிரியாசத்தியினாலும் பிரபஞ்சத்தைப் பிரவேசித்துள்ளார்."

மேல் மூன்று மந்திரங்களாற் சிருஷ்டிகிருத்தியம் பெறப்பட்டது.

(48) யதூர்த்வம் கார்க்கி திவோ யதவாக் ப்ருதிவ்யா யதந்தரா
த்யாவா ப்ருதிவீ இமே யத்பூதஞ்ச பவச்ச பவிஷ்யச்சேத்யா
சக்ஷதே ஆகாச ஏவ ததோதஞ்ச ப்ரோதஞ்ச।

— பிருகதாரணியகம், ௩. அ. எ.

"கார்க்கியே! வானத்துக்குமேலும் பூமிக்குக் கீழுமாக வானம் பூமி இறப்பு எதிர்வு நிகழ்வு என்பவற்றை அடக்கிக் குறுக்கும் மறுக்குமாய் அமைந்ததெதுவோ, அது ஆகாயத்தில் அமர்ந்தது; [இந்த ஆகாயம் (பராசத்தியார்), கார்க்கியே, குறுக்கும் மறுக்குமாய் இந்த அக்ஷரப்பிரஹ்மமாகிய (கேடிலியாகிய) சிவபிரானிலன்றோ உள்ளது."]

அனைத்தையும் தாங்கிக் காத்தலினால் இது ஸ்திதி கிருத்தியம்.

(49) யஸ்ய ப்ரஹ்மச க்ஷத்ரஞ்சோபே பவத ஓதநம் ம்ருத்யுர் யஸ்யோபஸேசநம் க இத்தா வேத யத்ர ஸ:।

— கடம், உ. உச.

"எவருக்கு (சிவபிரானுக்கு) பிராமணரும், க்ஷத்திரியரும் ஓதனமாக, மிருத்யு உபஸ்கரமாயிற்றோ, அவர் எங்குளார் எனப் பின் யார் அறிவார்."

இதனாற் சங்காரகிருத்தியம் சூசிக்கப்பட்டது.

(50) ஏஷஹ்யேவ ஸாது கர்ம காரயதி தம் யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதே। ஏஷ உ ஏவாஸாது கர்ம காரயதி தம் யமதோ நிநீஷதே॥

— கௌஷீதகிப்பிராஹ்மணம், ௩. அ.

"இவ்வுலகங்களினின்று மேலே செலுத்தவேண்டியவனை நற்கருமஞ் செய்யப்பண்ணுகின்றார்; இவ்வுலகங்களினின்று கீழே செலுத்தவேண்டியவனைத் தீக்கருமஞ் செய்யப்பண்ணுகின்றார்."

இதனால் திரோபவகிருத்தியம் கூறப்பட்டது.

(51) நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ நமேதயாநபஹுநாச்ருதேந। யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ்தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம்ஸ்வாம்॥

— கடம், உ. உக.

"இந்தப் பரமான்மாவாகிய சிவபிரான் வேதாத்தியயனத்தினாலேனும், புத்தியினாலேனும், அநேக சிரவணத்தினாலேனும் எய்தார்; எவனை இவர் (பக்குவநோக்கி) விரும்புகின்றாரோ (அருளுகின்றாரோ), அவனால் அவர் அடையப்படுகின்றார்; அவனுக்கு அந்தப் பரமான்மாவாகிய (சிவபிரான்) தமது ரூபத்தை (உள்ளக்கண்ணுக்குப்) புலப்படுத்துகின்றார்."

இதனால் அநுக்கிரககிருத்தியம் கூறப்பட்டது.

(52) ஏகோஹி ருத்ரோ ந த்விதீயாய தஸ்துர் ய இமாங் லோகா நீசத ஈசநீபி:।

— சுவேதாசுவதரம், ௩. ௨.

"சிவபிரான் ஒருவரே; அவர் இரண்டாவதற்காக இருந்திலர்; இவர் தமது ஆளுஞ் சத்திகளினாலே இவ்வுலகமனைத்தையும் ஆளுவாராயினர்."

(53) ய ஏகோ ஜாலவாநீசத ஈசநீபி: ஸர்வாங் லோகாநீசத ஈசநீபி:। ய ஏவைக உத்பவே ஸம்பவேச ய ஏதத்விதுரம்ருதாஸ்தே பவந்தி॥

— சுவேதாசுவதரம், ௩. ௧.

"எந்த ஏகராகிய வலைஞர் (சிவபிரான்) ஆளுஞ் சத்திகளினாலே ஆளுகின்றாரோ, சமஸ்த உலகங்களையும் ஆளுகின்றாரோ, (பிரபஞ்சமனைத்தும்) தோற்றி ஒடுங்குங்கால் எவர் ஏகராய் இருந்தாரோ, அவரை அறிபவர் சிவராகின்றார்."

(54) ஸ யதார்த்ரேந்தநாக்நேரப்யாஹிதாத்ப்ருதக்தூமோ விநிச்சரந்த்யேவம் வா அரே ஸ்ய மஹதோ பூதஸ்ய நி: ச்வஸிதமேதத்யத்ருக்வேதோ யஜுர்வேத: ஸாமவேதோ தர்வாங்கிரஸ இதிஹாஸ: புராணம் வித்யா உபநிஷத:।

— பிருகதாரணியம், ௨. ௪. ௧௦.

"ஈரவிறகில் மூட்டப்பட்ட அக்கினியினின்று புகைப்படலங்கள் கிளருமாறு போல, பெரும் பொருளினின்று (சிவபெருமானினின்று) இருக்குவேதம், யசுர்வேதம், சாமவேதம், அதர்வாங்கிரசு, இதிகாசம், புராணம், வித்தை, உபநிடதமுதலியன சுவாசிக்கப்பட்டன."

இதனாற் சிவப்பிரஹ்மம் வேதாதிகளை விளையாட்டுப்போல லேசானே அருளிற்று என்பது தொனிக்கச் சுவாசித்தது எனக் கூறப்பட்டது.

(55) தஸ்யாம் விக்ஷோப்யமாணாயாமாதௌ நாத: ஸமுத்பவௌ। நாதாத் விந்: ஸ்ருதோபிந்துர் பிந்தோர் தேவ: ஸதாசிவ:। தஸ்மாந் மாஹேஸ்வரோஜாத: சுத்தாவித்யாமஹேச்வராத்। அதாநந்தஸமாவேசாந் மாயா காலமவாஸ்ருஜத்। நியதிஞ்ச கலாம் வித்யாம் கலாதோ ராகபூருஷௌ। கலாத: புநரேவாபூதவ்யக்தம் த்ரிகுணாத்மகம்। த்ரிகுணச்ச ததோ வ்யக்தாத்விமுக்தா: ஸ்யுஸ்த்ரயோகுணா:। ஸத்வம் ரஜஸ்த

மச்சேதி யைர் வ்யாப்தமகிலம் ஜகத்l குணேப்ய: க்ஷோப்ய மாணேப்யோ குணேசாக்யாஸ்த்ரிமூர்த்தய:l அபவந் மஹ தாதீநி தத்வாநி ச யதாக்ரமம்ll

"(தாண்டவேசுவர பரப்பிரஹ்மசிவனுரது) பராசத்தியார் சுத்த மாயையைக் கலக்கியபோது நாதம் உண்டாயிற்று; இதினின்று (விந்து) தோற்றிற்று; இதினின்று சாதாக்கியம் உதித்தது; இதினின்று ஈசுவரதத்துவம் உதித்தது; இதினின்று சுத்தவித்தை பிறந்தது; (பின்னர்ச் சிவனுரது ஆஞ்ஞையை வகித்த ஈசுவர தத்துவத்து) அனந்தேசுவரரது ஆஞ்ஞையினல் மாயையானது காலம், நியதி, கலை, வித்தைகளையும், கலையினின்று இராகம் புருஷன் இரண்டையும், பின்னரும் கலையினின்று திரிகுணத்துமக மாகிய அவ்வியக்தத்தையும், (அவ்வியக்த) திரிகுணத்தினின்று சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணப்பிரிவுடைய வியக் தத்தையும் பிறப்பித்தது; இம்முக்குணங்களினுற் பிரபஞ்ச மனைத்தும் வியாபிக்கப்பட்டது; குணங்களினின்று மும்மூர்த்தி களும், புத்திமுதற் பிருதிவியீருகிய தத்துவம் இருபத்திஞன்கும் கிரமமாகப் பிறந்தன" என்று வாயுசங்கிதை உத்தரபாகமும்,

(56) க்ஷித்யாதி குடிலாந்தாநி ஷட்த்ரிம்சத்தத்வரூபகம்l
சிவேச்சயா குடிலோத்பந்நம் நாததத்வம் ப்ரதாநகம்l
நாதமத்யோதிதம் பிந்து:..................ll

"பிருதிவிமுதற் குடிலை இறுதியாயுள்ளன முப்பத்தாறு தத்துவங்கள்; சிவேச்சையினுலே குடிலையினின்று முக்கியமாகிய நாதத்த்துவம் உண்டாயிற்று; நாததத்துவத்தினின்று விந்துதத்துவம் தோற்றிற்று."
என்று ஞானசித்தியாகமமும்,

(57) ஸ்ருஷ்டிர் தேஹாதி ஸம்யோகோ ந்ருணும் கர்மாநுஸாரத:l
"ஆன்மாக்களுக்குக் கன்மாநுசாரமாகத் தேகாதிகளைச் சேர்த்தலே சிருஷ்டியாகும்" என்றும்,

(58) பசூநாம் கர்மபோகார்த்தம் ஸ்திதிக்ருத்யம் யதாயதம்l

"ஆன்மாக்களின் கன்மபோகத்தின்பொருட்டே உள்ளவாறு ஸ்திதிகிருத்தியம் உள்ளது" என்றும்,

(59) ஸம்ஹார: பசுபாசாநாம் விச்ராம இதி கத்யதே।
"பசுபாசங்களின் இளைப்பாற்றுகையே சங்காரம் எனப்படும்" என்றும்,

(60) திரோதாநம் பசூநாம் தத்போகேச்சாயாம் நிபந்தநம்।

"பசுக்களைப் போகேச்சையில் உறுத்துதலே திரோதானம்" என்றும்,

(61) அநுக்ரஹ: பாசவிச்லேஷோ முக்திரிச்யுச்யதே ந்ருணாம்।

"ஆன்மாக்களின் பாசத்தை நீக்குதலே அநுக்கிரகம் எனப்படும்' என்றும்,

(62) யதாலோகே கடாதிஸ்து குலாலேந ம்ருதாதித:।
கார்யாக்யம் ஜகத்ஸர்வம் காரணேந கரோதிஸ:।
க்ரியாசக்த்யா ஜகத்ஸர்வம் குருதே பரமேச்வர:॥

"ஆதியிலே குலாலனால் உலகத்திற் கடாதிகள் மண்ணினாற் செய்யப்படுகின்றனவோ, அங்ஙனம் அவர் காரியமாகிய பிரபஞ்சமனைத்தையும் (துணைக்) காரண (சத்தி)யினாற் செய்கின்றார், உலகமனைத்தையும் கிரியாசத்தியைக்கொண்டே செய்கின்றார்" என்றும் சிவாகமங்களும் வேதோபநிடதங்களைத் தொடர்ந்து கூறியவாறு உணர்க.

(63) ப்ரஹ்மபூதாத்மநஸ் தஸ்மாதேதஸ்மாச் சக்திமிச்ரிசாத்।
அபஞ்சீக்ருத ஆகாச: ஸம்பூதோ ரஜ்ஜுஸர்ப்பவத்॥

"இந்தச் சத்திமிச்சிரமாகிய பிரஹ்மவடிவ ஆன்மாவினின்று அபஞ்சீகிருத ஆகாசம் பழுதையிற் பாம்புபோல உண்டாயிற்று" என்று ஏகான்மவாத கடருத்திரீயோபநிடதமும், பிரஹ்மகீதையும்

(64) மத்தோஹி ஜாயதே விச்வம் மயைவேதத் ப்ரதார்யதே।
மய்யேவேதமதிஷ்டாநே லீயதே சுக்திரூப்யவத்।
அதிஷ்டாநே து மய்யேவ பஜதே விச்வரூபகம்।
சுக்தௌ ரஜதவத் ரஜ்ஜௌ புஜங்கோ யத்வதேவது॥

"(ஆன்மாவாகிய) என்னிடத்தினின்றே உலகம் உண்டாகின்றது; என்னாலே அது மிகத் தரிக்கப்படுகின்றது; அதிஷ்டானமாகிய என்னிடத்திலே அது இப்பி வெள்ளிபோல ஒடுங்குகின்றது;

ஏன்னிடத்திலே இப்பியில் வெள்ளிபோலவும், பழுதையிற் பாம்புபோலவும் உலகம் உண்டாகின்றது" என்று சிவகீதையும் கூறுகின்றன.

மேலே உதகரித்த ஏகான்மவாதத்துக்குரிய கடருத்திரீயோபநிடதம், பிரஹ்மகீதை, சிவகீதை முதலியவற்றில் உலகத்துக்கு நானே காரணம் என்றமை அவ்வுலகத்தைக் கற்பனை என்று சொல்வதற்கேயாம்; இது சிருஷ்டியாகாது. க-ம் பிரிவு முதல் கஉ-ம் பிரிவு இறுதியாக உதகரிக்கப்பட்ட வேதமும், உபநிடதமும், புராணங்களும், ஆகமங்களும் (தாண்டவேசுவர) சிவபெருமானே உலகத்துக்குக் காரணர் எனக் கூறுகின்றன. இதுதான் சிருஷ்டியாகும்.

---

ஏழாவது

# திரிபதார்த்தப்பிரகரணம்

[இப்பிரகரணம் வேதங்களினும் உபநிடதங்களினுமுள்ள பசு பதி பாசம் என்னும் முப்பதார்த்தங்களையும், மூவித உபாசனைகளையும் கூறுகின்றது.]

(1) † த்வாஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே। தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்யநச்நந்யோபிசாகசீதி॥

"பிரியாத நண்பினையுடைய இரு அழகிய பக்ஷிகள் ஒரே (சரீரமாகிய அரச) மரத்தைப்பற்றி இருக்கின்றன; அவற்றுள் ஒன்று இனிமையாகிய (அரசம்) பழத்தை உண்கின்றது; மற்றது உண்ணாது பார்த்துக்கொண்டிருக்கின்றது."

(2) யத்ராஸுபர்ணா அம்ருதஸ்ய பாகம்நிமேஷம்
விததாபிஸ்வரந்தி। இநோ விச்வஸ்ய புவநஸ்ய
கோபா: ஸமாதீர: பாகமத்ராவிவேச॥

— இருக்குவேதம், க. கசுச. உக.

"(சரீரங்களாகிய) (அரச) விருக்ஷங்களிலுள்ள (ஆன்மாக்களாகிய) அழகிய பக்ஷிகள் மோக்ஷத்தின் (அடையவேண்டிய) அம்சத்தை அறிதலால், அதனைப் பெறும்பொருட்டு (அவரைப்) பாடுகின்றன; (அங்ஙனமிருந்தும்) சமஸ்த புவனங்களுக்குப் பதியும், இரக்ஷகரும், தீரருமாகிய (சிவபெருமான்) பக்குவம அடையற்பாலனாகிய என்னைப் பிரவேசித்தார்."

(3) யஸ்மிந் வ்ருக்ஷே மத்வத: ஸுபர்ணாநி விசந்தே ஸுவதே சாதிவிச்வே। தஸ்யேதாஹு: பிப்பலம் ஸ்வாத்வக்ரே தந்நோந்நசத்ய: பிதரம் நவேத॥

— இருக்குவேதம், க. கசுச. உஉ.

† இம்மந்திரம் முண்டகோபநிடதத்தினும் (௩. க. க), சுவேதாசுவதரோபநிடதத்தினும் (ச. சு.) உள்ளன.

"யாதொரு (சரீரமாகிய) (அரச) விருக்ஷத்திற் § பிரபஞ்சாதீத அக்கிரத்தில் (நுனியிற்) (பரமான்மாவாகிய) தாண்டவேசுவர) சிவபிரானது இனிய (பரமானந்த) * அரசம் பழத்தைப் (பெறுமாறு போய்) அடைகின்றார்கள்; பிதாவாகிய (சிவபெருமானை) அறியாதவன் அடையமாட்டான் எனச் சொல்லுகின்றார்கள்."

(4) ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோநீசயா
சோசதி முஹ்யமாந:। ஜுஷ்டம் யதா பச்
யத்யந்யமீசமஸ்யமஹிமாநமேதி வீதசோக:॥

— முண்டகோபநிடதம், ௩. க. உ.

"ஒரே (சரீரமாகிய அரச) விருக்ஷத்திற் புருஷன் (பசுவாகிய) ஆன்மா சுவதந்திரமின்மையால் மயக்கமுற்றுத் துன்பத்தில் மூழ்கிக் கிடக்கின்றான்; எப்போது அவன் இன்பத்தையுடைய (தாண்டவேசுவர) சிவபெருமானைப் (பதியாக) அறிந்து அவருடைய மகிமைக்குணத்தை அடைகின்றானோ, அப்போது துன்பம் நீங்கினோன் ஆகின்றான்."

இங்கே அரசமரம் என்றது மாயாகாரியமாகிய சரீரத்தையும், இனிய பழம் என்றது கன்மத்தையும் உணர்த்துகின்றன. உண்ணாத பக்ஷி ஈசர் எனப்படும் தாண்டவேசுவரராகிய பதியாம் எனவும், உண்ணும் பக்ஷி புருஷனாகிய சீவான்மா எனப்படும் பசு எனவும், அது மயங்குதற்கும் சுவதந்திரமில்லாதிருத்தற்கும் காரணம் ஆணவமலம் எனவும், எனவே, இருக்குவேத முண்டகோபநிடதமந்திரங்களாற் பதி பசு ஆணவம் மாயை கன்மம் என்னும் ஐந்தும் பெறப்பட்டனவாம் எனவும் அறியற்பாற்று. திருமூலநாயனாரும்

§ (சேதனாசேதனப்) பிரபஞ்சாதீத அக்கிரம் என்பது முப்பத்தாறாம் தத்துவமுடிவு என்பது பொருள்.

* மனிதர்காளிங்கேவம்மொன்றுசொல்லுகேன்
கனிதந்தாற்கனியுண்ணவும்வல்லிரே
புனிதன்பொற்கழலீசனெனுங் கனி
இனிதுசாலவுமேசற்றவர்கட்கே.

— தேவாரம்.

அன்ன மிரண்டுளே வாற்றங் கரையினிற்
றுன்னி யிரண்டுந் துணைப்பிரி யாதன்னந்
தன்னிலே யன்னந் தனிலொன்ற தென்றக்கால்
பின்ன மடவன்னம் பேறணு காதே.

சீவான்மா பரமான்மாக்களைப்பற்றி இவ்வாறு கூறினர்.

(5) ய ஈசேஸ்ய த்விபத: சதுஷ்பத:।

"எவர் (பதி) இருகாலும் நாற்காலுமுடைய பசுக்களை ஆளுகின்றாரோ" என்று இருக்குவேதம் (க0. கஉக. ௩) கூற

(6) ஏஷாமீசே பசுபதி: பசூநாம் சதுஷ்பதா முதச த்விபதாம்।
"நாற்காலும் இருகாலுமுடைய பசுக்களைப் பசுபதியாயினர் ஆளுகின்றார்" என்று யசுர்வேதமும் (௩ க. ச. ௩) கூற,

(7) பசவஸ்து சதுஷ்பாதா த்விபாதா: சேதி சுச்ரும:।
பத்யந்தே பசவ: பாசைர் நச ஸ்வைரப்ருவ்ருத்தய:।
பத்யதிநா:ச ஸந்துஷ்டா: பதௌ ச்ரேயோ வ்ரஜந்திச॥

"பசுக்கள் நாற்காலும் இருகாலும் உடையன என அறிகின்றோம்; பசுக்கள் பாசங்களினாற் கட்டப்படுகின்றன; ஆகலின் அவற்றுக்குச் சுவயமாகப் பிரவிருத்தி இல்லை; அவை பதியின் வசப்பட்டனவாய்த் திருப்தியுடையனவாய்ப் பதியிடத்தில் நன்மையைப் பெறுகின்றன" என்று காமிகாகமத்து வித்தியாபாதப்படலம் விளக்கிக் கூறுகின்றது.

(8) ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோநீசயா சோசதிமுஹ்யமாந:। ஜுஷ்டம் யதா பச்யத்யந்யமீசமஸ்ய மஹிமாநமேதி வீதசோக:॥

"ஒரே சரீரமாகிய விருக்ஷத்திற் புருஷன் (பசுவாகிய) ஆன்மா சுவதந்திரஹீனனுகையால் (அநீசனுணமையால்) அமிழ்ந்தி (ஆணவத்தினுல்) மயங்கிச் சோகிக்கின்றான்; தனக்கு வேறுகிய (தாண்டவேசுவர) சிவபெருமானுக்குரிய (பதிக்குரிய) இன்பமாகிய (முற்றறிவுமுதலிய) மகிமைக்குணத்தை எப்போது (சாமியமாக) அடைகின்றானோ, அப்போது (பிறவித்) துன்பம் நீங்கினோனுவன்" என்று முண்டகோபநிடதமும் (௩. க. உ), சுவேதாசுவதரோபநிடதமும் (ச. எ) கூறுகின்றன.

(9) ஆத்மாநமந்தரோயமயதி।

— மத்தியந்தினசாகை.

"எவர் (பதி) உள்ளிருந்து ஆன்மாவைப் (பசுவை) செலுத்துகின்றாரோ."

(10) ய ஆத்மநி திஷ்டந்।

"எவர் (பதி) ஆன்மாவிற் (பசுவில்) நின்று."

(11) ந வேதவிந் மநுதே தம் ப்ருஹந்தம்।

— தைத்திரீயப்பிராஹ்மணம்.

"வேதம் அறியாதவன் (பசு) அப்பெரும்பொருளைப் (பதியை) நினைக்க இயலான்."

(12) அந்த: ப்ரவிஷ்ட: சாஸ்தா ஜநாநாம்।

— தைத்திரீய ஆரணியகம், ங. கக. உக.

"அவர் (சிவபிரானாகிய பதி) ஜனங்களுள்ளே (பசுக்களுள்ளே) பிரவேசித்து, அவைகளை ஆளுபவராய் உள்ளார்."

(13) ஸநோ தேவ: சுபயா ஸ்ம்ருத்யா ஸம்யுநக்து।

— தைத்திரீய ஆரணியகம், க0. கஉ. உஅ.

"அந்தச் சிவபெருமான் (பதி) நம்மைப் (பசுவை) சிவஞானத்திற் சேர்ப்பாராக."

(14) தஸ்மிந் யதந்தஸ் ததுபாஸிதவ்யம்।

— தைத்திரீய ஆரணியகம், க0. கஉ. உஅ.

"உள்ளே உள்ளது (பதி) (பசுவினால்) உபாசிக்கற்பாலது."

(15) வித்யயா விந்ததேம்ருதம்।

— கேநோபநிடதம், கஉ.

"(பதி) ஞானத்தினாற் சிவத்தைப் (பதியை) (ஆன்மாவாகிய பசு) அடைகின்றான்."

(16) ஸ தஸ்மிந்நாகாசே ஸ்த்ரியமாஜகாம பஹுசோபமாநாமுமாம் ஹைமவதீம் தாம் ஹோவாச கிமேதத் யக்ஷமிதி, ஸா ப்ரஹ்மேதி ஹோவாச।

— கேனம், உரு, உசு.

"அவன் (இந்திரனுகிய பசு) அந்த ஆகாசத்தில் மிகுந்த அழகுடையவரும், ஐமவதியும், ஸ்திரியுமாகிய உமையம்மையாருக்கு (அருட்சத்தியாருக்கு) எதிராக வந்து, இந்த யக்ஷர் யார் என அவரைக் கேட்டான்; அவர் பிரஹ்மம் (பதி) எனச் சொன்னுர்."

(17) ஸ ம்ருத்யுபாசாந் புரத: ப்ரணோத்ய சோகாதிகோமோததே ஸ்வர்க்கலோகே।

— கடம், க. கஅ.

"அவன் (பசு) ஆணவ (மாயை கன்மங்களாகிய) பாசங்களை முதன்முதல் நீக்கிவிட்டு, துக்கத்தை நீங்கினேனைய்ச் சிவலோகத்தில் மகிழ்கின்றுன்."

(18) தமக்ரது: பச்யதி வீதசோகோ தாது: ப்ரஸாதாந் மஹிமாநமாத்மந:।

— கடம், உ. உ0.

"காமிய கன்மங்களை அநுஷ்டியாதவன் (பசு) சிவனுடைய அருளினுற் பரமான்மாவுடைய (பதியுடைய) அந்த மகிமையைச் சோகம் நீங்கினேனைய்ப் பார்க்கின்றுன்."

(19) மஹாந்தம் விபுமாத்மாநம் மத்வா தீரோ ந சோசதி।

— கடம், உ. உக.

"மகானும் வியாபகருமாகிய பரமான்மாவைப் (பதியை) திண்ணிய அறிஞன் (பசு) அறிந்து கவலையுறுகின்றுன் இல்லை."

(20) யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ் தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்।

— கடம், உ. உஉ.

"யாதொருவனைப் (பசுவை) இந்தப் பரமான்மாவானவர் (பதியானவர்) விரும்புகின்றுரோ, அவனுற் (பசுவினுல்) அடையத்தக்கவர்; அவனுக்குப் (பசுவுக்கு) இந்தப் பரமான்மா (பதி) தமது சொரூபத்தைக் காட்டுகின்றுர்."

(21) ருதம் பிபந்தௌ ஸுக்ருதஸ்ய லோகே குஹாம்
ப்ரவிஷ்டௌ பரமே பரார்த்தே। சாயாதபௌ
ப்ரஹ்மவிதோ வதந்தி பஞ்சாக்நயோ யேச
த்ரிணசிகேதா:।

— கடம், ங. க.

"புண்ணியஸ்தானமாகிய மேலாய (பிராஹ்மணுதி சரீர) குகையிலே பிரவேசித்தனவாய், கன்மபலத்தைத் துய்ப்பனவாயுள்ள இருவஸ்துக்கள் (பதியும் பசுவும்) சாயையும் ஒளியும்போல வேருய் உள்ளன எனக்கிருஹஸ்தர்களாயும் திருணுசிகேதர்களாயுமுள்ள ப்ரஹ்மவித்துக்கள் கூறுகின்றூர்கள்."

(22) ஸோத்வந: பாரமாப்நோதி தத்விஷ்ணோ: பரமம் பதம்।

—கடம், ஙு. கூ.

"அவன் (பசு) (அறவித) அத்துவாவின் கரையை அடைகின்றுன்; அது தாண்டவசிவனுருடைய (பதியுடைய) பரமாகாயதிருவடி."

(23) ஏஷ ஸர்வேஷு பூதேஷு கூடோத்மா ந ப்ரகாசதே।
த்ருச்யதே த்வக்ர்யா புத்யா சூக்ஷ்மயா ஸூக்ஷ்மதர்சிபி:॥

— கடம், ஙு. கஉ.

"இந்தப் பரமான்மாவானவர் (பதியானவர்) சமஸ்த செந்துக்களினும் மறைந்து பிரகாசிக்கின்றூரில்லை; சூக்குமதிருஷ்டியுடையோர்களால் (பசுக்களால்) நுண்ணிதாகிய சூக்கும அருளினுற் காணப்படுகின்றூர்."

(24) க: சித் தீர: ப்ரத்யகாத்மாநமைக்ஷத்।

— கடம், ச. க.

"ஒரு திண்ணிய அறிஞன் (பசு) பிரத்தியக் ஆன்மாவைப் (பதியை) பார்த்தான்."

(25) மஹாந்தம் விபுமாத்மாநம் மத்வா தீரோ ந சோசதி।

— கடம், ச. ச.

"மகானும் வியாபகருமாகிய பரமான்மாவைப் (பதியை) திண்ணிய அறிஞன் (பசு) அறிந்து கவலையுறுகின்றுனில்லை."

(26) ய இமம் மத்வதம் வேத ஆத்மாநம் ஜீவமந்திகாத்।
ஈசாநம் பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே॥

— கடம், ச. ரு.

"எவன் கன்மபலத்தை அநுபவிக்கும் இந்தச் சீவான்மாவையும் (பசுவையும்) அவனுக்குச் சமீபத்திருக்கும் இறந்தகால எதிர்காலத்துக்கும் ஈசானராயுள்ளவரைத் (தாண்டவேசுவராகிய பதியை) அறிகின்றுனே, அவன் பின் ஒர்போதும் அஞ்சுவானல்லன்."

(27) தமாத்மஸ்தம் யேநுபச்யந்தி தீராஸ் தேஷாம் சுகம்
சாச்வதம் நேதரேஷாம்।

— கடம், ரு. கஉ.

"எந்தத் திண்ணிய அறிஞர் ஆன்மாவில் (பசுவில்) இருப்பவராக, அவரைப் (பதியை) காண்கின்றார்களோ, அவர்களுக்கு நித்திய மாகிய இன்பம், ஏனையோர்க்கின்றாம்."

(28) நித்யோ நித்யாநாம் சேதந: சேதநாநாம்।

— கடம், ரு. கங.

"(பதி பசு பாசம் என்னும்) நித்திய பதார்த்தங்களுள்ளே நித்தியரும், (பதி, விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும்) சேதன பதார்த்தங்களுள்ளே சேதனருமாம்."

(29) ய ஏதத் விதுரம்ருதாஸ்தே பவந்தி।

— கடம், சு. உ.

"எவர்கள் (பசுக்கள்) இந்தப் பிரஹ்மத்தைப் (பதியை) அறிகின்றார்களோ, அவர்கள் சிவர் ஆகின்றார்கள்."

(30) இஹ சேதசகத் போத்தும் ப்ராக் சரீரஸ்ய விஸ்ரஸ:।
தத் ஸர்க்கேஷு லோகேஷு சரீரத்வாய கல்பதே॥

— கடம், சு. ௪.

"சரீரம் நழுவுதற்குமுன் ஒருவன் (பசு) இந்தப் பிரஹ்ம (பதி) சொரூப விஷயத்தை அறிந்துகொள்வதற்கு அசக்தனுயின், அது பற்றிச் சிருஷ்டிக்கப்பட்ட உலகங்களில் ஜன்மம் அடைகின்றான்."

(31) ந ஸந் த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா
பச்யதி க:ச நைநம்।

— கடம், சு. கூ.

"இந்தப் பரமான்மாவுடைய ரூபமானது நன்கு அறியுமாறு விளங்குவதில்லை; ஒருவனும் (பசுவும்) இந்தப் பரமான்மாவைப் (பதியை) கண்ணாற் காண்கின்றான் இல்லை."

(32) ய: புநரேதம் த்ரிமாத்ரேணோமித்யேதேநைவாக்ஷரேண
பரம் புருஷமபித்யாயீத।

— பிரசினம், ரு. ரு.

"எவன் (பசு) மும்மாத்திரையையுடைய ஓம் என்னும் இப்பிரணவாக்ஷரத்தினற் பரமபுருஷரை (பதியை) உபாசிக்கின்ருனே."

(33) அந்வேதி வித்வாந் யத் தச்சாந்தமஜரமம்ருதமபயம் பரஞ் சேதி।

— பிரசினம், ரு. எ.

"வித்துவான் (பசு) சாந்தரும் ஜரையில்லாதவரும் அழியாதவரும் பயமில்லாதவரும் பரருமாகிய அவரைப் (பதியை) அடைகின்ருன்."

(34) ஏதத் யோ வேத நிஹிதம் குஹாயாம் ஸோவித்யா க்ரந்திம் விகிரதீஹ ஸோம்ய।

— முண்டகம், உ. க. கO.

"எவன் (பசு) இந்த அக்ஷரப்பிரஹ்மத்தைப் (பதியை) இதயகுகையில் இருப்பதாக அறிகின்ருனே, சோமிய! அவன் (பசு) பாசமுடிச்சைப் போக்குகின்ருன்."

(35) ததஸ்து தம் பச்யதே நிஷ்கலம் த்யாயமாந:।

— முண்டகம், ங. க. அ.

'தியானிப்பவனுய்க்கொண்டு (பசு) நிஷ்களமாக அவரைப் (பதியைப்) பார்க்கின்ருன்."

(36) வித்வாந் நாமரூபாத் விமுக்த: பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்।

— முண்டகம், ங. உ. அ.

'வித்துவான் (பசு) பெயர்வடிவினின்று வீடுற்றுப் பரத்துக்குப் பரமாயிருக்கும் திவ்யபுருஷரைப் (பதியை) அடைகின்ருன்."

(37) ஸ யோ ஹ வை தத் பரம் ப்ரஹ்ம வேத ப்ரஹ்மேவ பவதி।

— முண்டகம், ங. உ. கO.

'அந்தப் பிரஹ்மத்தைப் (பதியை) எவன் (பசு) அறிகின்ருனே அவன் பிரஹ்மமாகின்ருன்."

(38) அயமாத்மா ப்ரஹ்ம।

— மாண்டூக்கியம், உ.

'இந்த ஆன்மா (பசு) பிரஹ்மம் (பதி) ஆகின்றது."

(39) ஸம்விசத்யாத்மநாத்மாநம் ய ஏவம் வேத।

— மாண்டூக்கியம், கஉ.

"எவன் (பசு) இங்ஙனம் அறிகின்றானோ, அவன் பரமான்மாவின் அருளினாற் பரமான்மாவைப் (பதியை) அடைகின்றான்."

(40) ப்ரஹ்மவிதாப்னோதி பரம்।

— தைத்திரீயம், உ. க. க.

"பிரஹ்மோபாசகன் (பசு) நிரதிசயபிரஹ்மத்தின் (பதியின்) ஆனந்தத்தை அடைகின்றான்."

(41) ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம।
யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந்।

— தைத்திரீயம், உ. க. க.

"பரமாகாய (திருச்சிற்றம்பல) குகையில் வைக்கப்பட்ட சத்திய ஞான அனந்தமாகிய பிரஹ்மத்தைப் (பதியை) எவன் (பசு) அறிகின்றானோ."

(42) ததநுப்ரவிச்ய சச்ச த்யச்சாபவத்।

— தைத்திரீயம், உ. சு.

"அது (பதி) பிரவேசித்து சத்தும் (பசுவும்) தியத்தும் (பாசமும்) ஆயினர்."

(43) ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந்।
ந பிபேதி குத: சநேதி।

— தைத்திரீயம், உ. கூ. க.

"பிரஹ்மத்தினது (பதியினது) ஆனந்தத்தை அறிந்தவன் (பசு) யாண்டும் பயப்படுவானல்லன்."

(44) ஸ ஏதேந ப்ரஜ்ஞேநாத்மநாஸ்மால்லோகாத்।

— ஐதரேயம், ரு. ச.

"அவன் (பசு) இந்தப் பிரஞ்ஞானத்தோடு (அருட்சத்தியோடு) கூடிய பரமான்மா (பதி) வாயிலாக இவ்வுலகத்தைவிட்டு."

(45) ஸேயம் தேவதைக்ஷத........அநேந ஜீவேநாத்மநாநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணீதி।

— சாந்தோக்கியம், சு. ங. உ.

"அந்த இந்தத் தேவதை (பதி) இந்தச் சீவான்மாவோடு (பசுவோடு) பிரவேசித்து, நாமரூபங்களை வெளிப்படுத்துவேன் என எண்ணிற்று."

(46) புருஷ: ஸ்வபிதி நாம ஸதா ஸோம்ய ததா ஸம்பர்நோ பவதி।

— சாந்தோக்கியம், சு. அ. க.

"சோமிய! புருஷன் (பசு) நித்திரைசெய்யுங்கால், அவன் சத்தோடு (பதியோடு) இயைந்தவனாகின்றான்."

(47) தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்ய அதஸம்பத்ஸ்யே।

— சாந்தோக்கியம், சு. கச. உ.

"அவன் (பசு) பாவபுண்ணியங்களினின்று விடுபடாதவரையில், அவனுக்கு அங்கே தாமசமே; பின்னர் அவன் (பிரஹ்மமாகிய பதி) சம்பன்னன் ஆகின்றான்."

(48) தரதி சோகமாத்மவித்।

— சாந்தோக்கியம், எ. க. ந.

"பரமான்மாவைப் (பதியை) அறிகின்றவன் (பசு) கவலையைக் கடக்கின்றான்."

(49) ஏஷ ஸம்ப்ரஸாதோஸ்மாச் சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய।

— சாந்தோக்கியம், அ. ந. ச.

இந்தச் § சம்பிரசாதன் (பசு) இந்தச்சரீரத்தினின்று நீங்கிப் பரஞ்சோதியைப் (பதியை) அடைந்து."

(50) ஸத்யஸ்ய ஸத்யம்।

— பிருகதாரணியம், உ. க. உ0.

"ஆன்மாவுக்குப்(பசுவுக்கு) ஆன்மாவாய்ப் (பதியாய்) உள்ளார்."

(51) தமேவ தீரோ விஞ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத ப்ராஹ்மண:।

— பிருகதாரணியம், ச. ச. உக.

"தீரனாகிய பிராஹ்மணனானவன் (பசுவானவன்) அவரைப் (பதியை) அறிந்து, ஞானத்தை அப்பியசிப்பானாக."

(52) ய விஜ்ஞாநே திஷ்டந்।

— பிருகதாரணியம், ந. எ. உஉ.

---

§ சம்பிரசாதன் என்றது ஆன்மாவுக்குப் பெயரானமையை வேதாந்த சூத்திரத்துப் பூமாதிகரணத்திற் (க. ந. எ.) காண்க.

† சத்தியம் என்றது ஆன்மாவுக்கும் பரமான்மாவுக்கும் பெயரானமையை நீலகண்ட சைவபாஷ்யத்துப் பிரகிருதைதாவத்துவாதிகரணத்திற் (ந. உ. உக) காண்க.

"எவர் (பதி) ஆன்மாவிற் (பசுவில்) உள்ளாரோ."

(53) ஆத்மந்யேவாத்மாநம் பச்யதி।

— பிருகதாரணியம், ௪. ௪. ௨௩.

"ஆன்மாவிலே (பசுவிலே) ஆன்மாவைப் (பதியை) பார்க்கின்ருன்."

(54) ப்ரஹ்மைவ ஸந் ப்ரஹ்மாப்யேதி।

— பிருகதாரணியம், ௪. ௪. ௬.

"(பசுவானவன்) பிரஹ்மமாகிப் (பதியாகி), பிரஹ்மத்தைப் போய்டைகின்ருன்."

(55) ஏஷ பூதாதிபதிரேஷ பூதபால:।

— பிருகதாரணியம், ௪. ௪. ௨௨.

"இவர் பூதங்களுக்குப் (பசுக்களுக்கு) அதிபதி; இவர் பசுக்களைக் காப்பாற்றுபவர்."

(56) ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீசாநீசாவஜாஹ்யேகாபோக்த்ருபோகார்த்தயுக்தா। அநந்த: சாத்மா விச்வரூபோஹ்யகர்த்தா த்ரயம் யதா விந்ததே ப்ரஹ்மமேதத்॥

— சுவேதாசுவதரம், க. ௯.

"பிறவாதவராகிய அறிஞனும் அஞ்ஞனுமாம் இருவரும் முறையே ஈசரும் (தாண்டவேசுவரராகிய பதியும்) அநீசனுமாம் (பசுவுமாம்); பிறவாத மற்ருேர் (அருட்) சத்தியானது போக்தாவையும் பசுவாகிய (ஆன்மாவையும்) போக்கியமாயுள்ள பொருள்களையும் பிரியாதுள்ளது; ஆன்மாவும் * அனந்தம்; அவ்வான்மா எங்கும் வியாபகமாயுள்ளவன்; ஆயின் அவன் சவதந்திரஹீனன்; எப்போது சிவபிரானையும், அருட்சத்தியையும், ஆன்மாவையும் அறிகின்ருனே, அப்போது இந்தப் பிரஹ்மம் (ஆகின்ருன்)."

---

* அநந்த: சாத்மா।

— சுவேதாசுவதரம், க. ௯.

"ஆன்மா (கணக்கில்) முடிவில்லாதது;" எனவே, ஆன்மாக்கள் பல என்பதாம்; இதுபற்றியே.

ஸர்வேஷ்வாத்மசு।

"சமஸ்த ஆன்மாக்களினும்" எனச் சாந்தோக்கியத்திற் (ரு. ௧அ. ௧) கூறப்பட்டது.

(57) ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர் குணேச:।

— சுவேதாசுவதரம், சு. கசு.

"பிரதானத்துக்கும் (பாசத்துக்கும்) க்ஷேத்திரஞ்ஞனுக்கும் (பசுவுக்கும்) பதியாயுள்ளார் (சர்வஞ்ஞத்துவாதி கல்யாண) குணங்களையுடைய தாண்டவேசுவரர்."

(58) அஸ்மாந் மாயீ ஸ்ருஜதே விச்வமேதத் தஸ்மிஞ்சாந்யோ மாயயா ஸந்நிருத்த:।

— சுவேதாசுவதரம், ச. கூ.

"இதினின்று (அசுத்தமாயையினின்று) மாயியானவர் (அனந்தேசுவரர்) இந்தப் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்கின்றனர்; அதிலே மற்றது (பசு) மாயையாற் (கலாதிதத்துவங்களாற்) கட்டுண்டது.

(59) ஸ விச்வக்ருத் விச்வவிதாத்மயோநிர் ஜ்ஞ: காலகாலோ குணீ ஸர்வவித் ய:।

— சுவேதாசுவதரம், சு. கசு.

"அவர் (பதி) பிரபஞ்சத்தை உண்டாக்குபவர்; அனைத்தையும் அறிபவர்; ஆன்மாக்களுக்குப் (பசுக்களுக்கு) காரணர்; சர்வஞ்ஞர், காலகாலர், (சர்வஞ்ஞத்துவாதி கல்யாண) குணங்களையுடையர்; எல்லாம் அறிபவர்."

(60) ப்ருதகாத்மாநம் ப்ரேரிதாரஞ்ச மத்வா।

— சுவேதாசுவதரம், க. சு.

"ஆன்மாவைப் (பசுவை) வேறாகவும் செலுத்துபவரைப் (பதியை) வேறாகவும் அறிந்து."

(61) ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசை:।

— சுவேதாசுவதரம், க. அ.

"ஆன்மா (பசு) (மகா) தேவரைப் (பதியை) அறிந்து, (ஆணவம் மாயை கன்மம் என்னும்) சமஸ்த பாசங்களினால் விடுபடுகின்றான்."

(62) க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநா வீசதே தேவ ஏக:।

— சுவேதாசுவதரம், க. கo.

"க்ஷரம் (என்பது பிரதானமாகிய பாசம்); அழியாத அக்ஷரம் (என்பது)‡ ஹரனாகிய பசு எனப்படும் (ஆன்மா); பாசம் ஆன்மா என்னும் இரண்டையும் ஏகராகிய (மஹா)தேவர் (பதி) ஆளுகின்றார்."

(63) ஸம்யுக்தமேதத் க்ஷரமக்ஷரஞ்ச வ்யக்தாவ்யக்தம் பரதே விச்வமீச:।

— சுவேதாசுவதரம், க. அ.

"இந்த க்ஷரம் எனப்படும் வியக்தமும், (ஆன்மாவாகிய) அக்ஷரம் எனப்படும் அவியக்தமுமாகச் சேர்ந்த பிரபஞ்சத்தைத் (தாண்டவ)ஈசுவரர் தாங்குகின்றார்."

(64) ஸம்யுக்தமேதத் த்விதயம் க்ஷரமக்ஷரமேவ ச।
வ்யக்தாவ்யக்தம் பிபர்த்தீசோ விச்வம் விச்வவிமோசக:॥

— வாயுசங்கிதை, பூருவபாகம், ச: எஉ.

"க்ஷரமாகிய வியக்தம், அக்ஷரமாகிய அவியக்தம் (ஆன்மா) என இரண்டாக இயைந்த பிரபஞ்சத்தைப் பிரபஞ்சத்தினின்று விடுவிப்பவராகிய சிவபிரான் தாங்குவாராயினர்" என்றும்,

(65) அக்ஷரஞ்ச க்ஷரஞ்சைவ க்ஷராக்ஷரபரந்ததா।
ததேதத் த்ரிதயம் பூய: கத்யதே தத்வவேதிபி:।
அக்ஷரம் பசுரித்யுக்த: க்ஷரம் பாச உதாஹ்ருத:।
க்ஷராக்ஷரபரம் யத்தத் பதிரித்யபிதீயதே॥

— வாயுசங்கிதை, பூருவபாகம், ச: கங, கச.

"க்ஷரம் அக்ஷரம் க்ஷராக்ஷரபரம் என மூன்று கூறப்படுகின்றன; அந்த மூன்றும் தத்துவஞானிகளால் (முன்வருமாறு) பின்னருஞ் சொல்லப்படுகின்றன; (அவற்றுள்) க்ஷரம் என்றது பாசம் எனப்படும்; அக்ஷரம் என்றது பசு எனப்படும்; க்ஷராக்ஷரபரம் என்றது பதியாகிய சிவன் எனச் சொல்லப்படுகின்றது" என்றும்,

---

‡ கைலாசசங்கிதை ௬௦-ம் அத்தியாயத்து கடுச-ம், கடுரு-ம் சுலோகங்களிற் சிவசப்தம்போல, ஹரசப்தமும் சீவான்மாவை உணர்த்துகின்றது.

(66) பசு: பாசபதி: சேமே வர்ண்யந்தே ப்ரஹ்மவாதிபி:|
அஜமேடாய: பசு: ப்ரோக்த: ஸோக்ஷர: பரிகீர்த்தித:|
பாச: ப்ரோக்தோ ஜடோயோயம் ஸ க்ஷர: பரிகீர்த்தித:|
க்ஷராக்ஷரபர: சம்புஸ்த்ரயோப்யேதே ஹ்யநாதய:||

—உபதேசகாண்டம், அஅ: ௬.

"பசு பாசம் பதி என்னும் இவை பிரஹ்மவாதிகளால் வர்ணிக்கப் படுகின்றன; எது அஜடமாகிய பசு எனச் சொல்லப்படுகின்றதோ, அது அக்ஷரம் எனப்படும்; எது ஜடமாகிய பாசம் எனச் சொல்லப்படுகின்றதோ, அது க்ஷரம் எனப்படும்; § க்ஷராக்ஷரபரராவார் பதியாகிய சிவபெருமான்; இம்மூன்றும் அநாதியே உள்ளன" என்றும் ஸ்காந்த உபதேசகாண்டமும் 62-ம் பிரிவிலுள்ள சுருதிப்பொருளைப் பதி பசு பாசம் எனத் தெளிவுற விளக்கியவாறு காண்க.

(67) த்வே அக்ஷரே ப்ரஹ்மபரே த்வநந்தே வித்யாவித்யே நிஹிதே யத்ரகூடே| க்ஷரந்த்வவித்யா ஹ்யம்ருதந்துவித்யா வித்யா வித்யே ஈசதே யஸ்து ஸோந்ய:||

—சுவேதாசுவதரம், ௫. க.

"கேடிலதாயும் அக்ஷரமாயும் முடிவிறந்ததாயுமுள்ள பரப்பிரஹ்மத்திலே வித்தை (பசு), அவித்தை (பாசம்) என்னும் இரண்டும் மறைவுற்றுள்ளன; க்ஷரம் என்பது அவித்தை (பாசம்); அமிர்தம் என்பது வித்தை (பசு); பாசம் பசு என்னும் இரண்டையும் ஆளுபவர் இவ்விரண்டுக்கும் வேறாகிய பதி எனப்படும் சிவபெருமான்."

(68) த்வேக்ஷரே ப்ரஹ்மபரே த்வநந்தே ஸமுதாஹ்ருதே|
வித்யாவித்யே ஸமாக்யாதே நிஹிதே யத்ர கூடவத்|
க்ஷரந்த்வவித்யா ஹ்யம்ருதம் வித்யேதி பரிகீயதே|
தே உபே ஈசதே யஸ்து ஸோந்ய: கலுமஹேச்வர:||

— வாயுசங்கிதை, பூருவபாகம், சு: ௧0௬, ௧0௭.

"அழியாததாய் முடிவிறந்ததாய்க் கூறப்பட்ட பரப்பிரஹ்மத்திலே வித்தை (பசு) அவித்தை (பாசம்) எனக் கூறப்பட்ட இரண்டும் மறைவாக வைக்கப்பட்டுள்ளன; க்ஷரமானது பாசம் என

§ பாசம் பசு என்பவற்றிற்கு மேலானவர் என்பது பொருள்.

வும், அசுத்தமானது பசு எனவும் கூறப்படுகின்றது; அவ்விரண்டையும் எவர் ஆளுகின்றாரோ, அவர் இவ்விரண்டுக்கும் வேறாகிய சிவபெருமான்''

(69) வித்யேதி சேதநாம் ப்ராஹுஸ்ததாவித்யாமசேதநாம்।
வித்யாவித்யாத்மகம் சைவ விச்வம் விச்வகுரோர் விபோ:।
ரூபமஸ்ய நஸந்தேஹோ விச்வம் தஸ்ய வசே யத:॥

— வாயுசங்கிதை, உத்தரபாகம், சூ: எ.

"சேதனத்தைப் (பசுவை) வித்தை எனவும், அசேதனத்தை (பாசத்தை) அவித்தை எனவும் கூறுவர்; வித்தை அவித்தை என்னும் பிரபஞ்சமனைத்தும் சந்தேகமின்றி வியாபகராகிய விச்வகுருவின் (சிவபெருமானாகிய பதியின்) சரீரம்; பிரபஞ்சமனைத்தும் அவர் வசத்ததாகலின்.''

(70) ஸ நோபுத்யா சுபயா ஸம்யுநக்து।

— சுவேதாசுவதரம், ச. க; ச. கஉ; ரு. ச.

"அவர் (பதி) நம்மைப் (பசுக்களை) அருட்சத்தியினாற் சேர்ப்பாராக.''

(71) த்யாத்வா முநிர் கச்சதி பூதயோநிம் ஸமஸ்த ஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத்।

— கைவல்லியம்.

"சேதனப்பிரபஞ்சத்துக்குக் காரணரும், சமஸ்த சாக்ஷியுமாயுள்ளாரைப் (பதியைத்) தியானித்து முனியானவன் (பசுவானவன்) இருளுக்குமேலே போகின்றான்.''

(72) த்வே ப்ரஹ்மணீ வேதிதவ்யே பராஞ்சாபரஞ்ச।

— மைத்திராயணம், சூ. உஉ.

"பரம் (பரமான்மாவாகிய பதி) அபரம் (ஆன்மாவாகிய பசு) என்னும் இரு பிரஹ்மங்களும் அறியற்பாலன.''

(73) ஸோஹமஸ்மி।

— ஈசாவாசியம், கஎ.

"அவராகப் (பதியாக), நான் (பசு) இருக்கின்றேன்.''

(74) ஸோஹம்1

— பிருகதாரணியம், ௪. ௪. ௭.

"அவராகப் (பதியாக), நான் (பசு) (இருக்கின்றேன்)."

(75) அஹம் ப்ரஹ்மாஸ்மி1

— பிருகதாரணியம், ௧. ௪ ௧0.

"நான் (பசு), பிரஹ்மமாகப் (பதியாக) இருக்கின்றேன்."

(76) தத் த்வமஸி1

— சாந்தோக்கியம், ௬. அ. ௭.

"அதுவாகப் (பதியாக), நீ (பசு) ஆகின்றனை."

பசுவாகிய ஆன்மாவானது எங்ஙனம் பதியாகிய பிரஹ்மம் ஆகின்றதென்பதைச் "சோஹம்பாவனைப்பிரகரண"த்திற் காண்க.

## கற்பித பதி பசு பாசங்கள்

(77) ஜீவேசௌ பரிகல்பிதௌ1

— வராகோபநிடதம்.

"சீவனும் (பசுவும்), ஈசுரனும் (பதியும்) கற்பிதர்" என ஏகான்மவாதிகள் கூறுவர். அவர்களுடைய பதி சாத்துவிக குணத்திலும், பசு இராசதகுணத்திலும், பாசம் தாமசகுணத்திலும் அடங்குவனவாம். ஆகவே அவர்கள் கருத்தின்படி பதி பசு பாசங்கள் பொய் எனப்படும்; சைவர்களுடைய் உபநிடதங்களிலும், புராணங்களிலும், ஆகமங்களிலும் பேசப்பட்ட பதி பசு பாசங்கள் நித்திய பதார்த்தங்களாம் என்பது இப்பிரகரணத்து உஅ-ம் பிரிவினுல் அறியப்படும். அவர்களுடைய பதி பசு பாசங்களுக்கும் நம்முடைய பதி பசு பாசங்களுக்கும் பேதம் பெரிதாம் என்க. ஏகான்மவாதிகளுடைய நிர்க்குணோபாசனை நிலையையும், நமது சிவோபாசனைநிலையையும் பற்றிச் சிறிது ஆராய்குதும்.

## விஷ்ணுபாவனை அக்ஷரபாவனை
## சிலபாவனை

(78) நாற்றுநான்கு பிரபந்தங்களுக்குக் கர்த்தாவாகிய அப்பய தீக்ஷிதயோகியார் வேதோபநிடத உபப்பிருங்கணநெறிகொண்டு நீலகண்டசைவபாஷ்யத்துக்குப் பாஷ்யமாகிய சிவார்க்கமணிதீபி

கைவாயிலாகச் சைவத்தின் உயர்வுகாட்டினாரன்றே. இராமாநுஜபாஷ்யம் சங்கரபாஷ்யம் என்பவற்றுக்கு மேலாயது நீலகண்டபாஷ்யம் என உணர்த்துமாறு அவர் எழுதிய பிரபந்தங்கள் இரத்தினத்திரயபரீக்ஷை ஆனந்தலகரி சிவாத்துவைதநிர்ணயம் என்பனவாம். ஆனந்தலகரியின் சிற்சில பாகங்களும், சிவாத்துவைதநிர்ணயத்தின் அநேக பாகங்களும் பிரக்ஷிப்தவாக்கியங்களாற் பழுது படுத்தப்பட்டன. இரத்தினத்திரயபரீக்ஷையினும் ஆனந்தலகரியினும் விஷ்ணுபாவனை அக்ஷரபாவனை சிவபாவனை என்னும் மூன்றும் ஒன்றுக்கொன்று உயர்வுடையன எனக் கூறப்பட்டுள்ளது.

(79) ஸ்ரீகண்டாத்யஷ்டபுவநம் ப்ரக்ருதௌ சவ்யவஸ்திதம்।
ஸ்ரீகண்டௌமௌ ததா ஜ்ஞேயௌ கௌமாரம் வைஷ்ணவந்ததா। ப்ராஹ்மஞ்ச பைரவஞ்சைவ க்ருதஞ்சைவ ததா க்ருதம்॥

"அகிர்தபுவனம், கிருதபுவனம், பைரவபுவனம், பிரமபுவனம், வைஷ்ணவபுவனம் (வைகுண்டலோகம்), குமாரபுவனம், உமாபுவனம் (உமாலோகம்), ஸ்ரீகண்டபுவனம் எனப் பிரகிருதியில் எட்டுப் புவனங்கள் உளவாம்." விஷ்ணுவையும் நிர்க்குணப் பிரஹ்மத்தையும் உபாசித்தலால் அடையும் லோகங்கள் முறையே பிரகிருதியிலுள்ள வைகுண்டலோகமும் உமாலோகமுமாம். இது இரத்தினத்திரயபரீக்ஷையினால் அறியப்படுகின்றது.

## சிவோபாசனையினால் எய்துவது சிவலோகம்

---

பரமேசுவர (தாண்டவேசுவர) சிவோபாசனைக்குச் சிவசத்தியார் நியமமாக வேண்டப்படுவர். அது

(80) தே த்யாநயோகாநுகதா அபச்யந் தேவாத்மசக்திம் ஸ்வகுணைர் நிகூடாம்।

"தியானயோகம் வாயிலாகச் (சர்வஞ்ஞத்துவாத்) குணங்களால் மறைவுற்ற சிவசத்தியாரைக் கண்டார்கள்" என்னும் சுவேதாசுவதரோபநிடதத்தினாலும் (க: ௩),

(81) தமாத்மஸ்தம் யேநுபச்யந்தி தீராஸ் தேஷாம்
ஸுகம் சாச்வதம் நேதரேஷாம்।

"எந்த அறிஞர்கள் சீவான்மாவில் (அருட்சத்தியாரோடு கூட)உள ராக அவரைப் (பரப்பிரஹ்மசிவபிரானுரைக்) காண்கின்றார்களோ, அவர்களுக்கே நித்தியமாகிய ஆனந்தம், ஏனையோர்க்கின்றாம்" என்னும் கடோபநிடதத்தினாலும் (ரு. கஉ), சுவேதாசுவதரோப நிடதத்தினாலும் (சு. கஉ), அதர்வசிரோபநிடதத்தினாலும் அறியப்படுகின்றது. இவற்றிற்கு உபப்பிருங்கணமாக

(82) தஸ்மாத் ஸஹதயா சக்த்யா ஹ்ருதி பச்யந்தி யே சிவம்।
தேஷாம் சாச்வதிகீ சாந்திர் நேதரேஷாமிதி ச்ருதி:॥

"சிந்தையில் (ஆன்மாவில்) அருட்சத்தியாரோடு எவர்கள் சிவபெருமானைப் பார்க்கின்றார்களோ, அவர்களுக்கு நித்தியமாகிய ஆனந்தம் பிறர்க்கின்றாம் எனச் சுருதி கூறுகின்றது" என வாயுசங்கிதை உத்தரபாகம் (அ: உ0) கூறுகின்றது. ஆகவே, ஆன்மாவிற் சிவசத்தியாரோடு சிவபிரானை நியமமாக வழிபடல்வேண்டுமென்பது பெறப்பட்டது. சிவபிரானை உபாசித்தலால் எய்தும் பயன் புநராவர்த்திகொடாத சிவஸ்தானமாகிய சிவலோகமேயாம். இந்தத் தாண்டவேசுவரராகிய சிவபிரானுடைய ஸ்தானம் எது என்பாராய்த் தீக்ஷிதயோகியார் * இரத்தினத்திரயபரீக்ஷையின் கங-வது பக்கத்து இறுதியில்

(83) சிவஸ்ய திவ்யஸ்தாநம்.........ப்ரக்ருதி மாயா
மஹாமாயாவிகாரமலிநமிச்ரசுத்தப்ரபஞ்சாதீதம்।

"பிரகிருதி, மாயை, மகாமாயை என்பவற்றின் விகாரமாய மலினப்பிரபஞ்சம், மிசிரப்பிரபஞ்சம், சுத்தப்பிரபஞ்சம் என்பவற்றுக்கு அதீதமாயுள்ளது சிவபிரானுடைய திவ்யஸ்தானமாகிய சிவலோகம்" எனக் கூறினர். அஃதாவது, பிரகிருதி, சூக்குமப்பிரகிருதி (மாயை), பரப்பிரகிருதி (மகாமாயை) என்னும் மூன்றில் முறையே ஆன்மதத்துவம், வித்தியாதத்துவம், சிவதத்துவம் என்னும் மூவகைத் தத்துவங்கள் அடங்கியுள்ளன. இருபத்திநான்கு ஆன்மதத்துவம் அடங்கிய பிரகிருதி, ஏழு வித்தியாதத்துவம் அடங்கிய சூக்குமப்பிரகிருதி (மாயை), ஐந்து சிவதத்துவம் அடங்கிய பரப்பிரகிருதி (மகாமாயை) என்பவற்றின் விகாரமா

* இது சிதம்பரம் பிரஹ்மவித்யாயந்திரசாலையில் அச்சிடப்பட்டது.

யுள்ளன மலினப்பிரபஞ்சம் (ஆன்மதத்துவம்), மிசிரப்பிரபஞ்சம் (வித்தியாதத்துவம்), சுத்தப்பிரபஞ்சம் (சிவதத்துவம்) என்னும் மூன்றையும் கடந்துள்ளது சிவலோகம் எனக் கூறப்பட்டிருக்கின்றது. இங்ஙனம் சுத்தமிசிரமலினப் பிரபஞ்சங்களைப்பற்றிச் * சிவார்க்கமணிதீபிகையின் ௫௦௪-ம் பக்கத்திற் சூசிக்கப்பட்டுள்ளது. முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்த பரப்ரஹ்மதாண்டவேசுவர சிவபிரானைக் கூறும் சைவபாஷ்யத்தினும், இருபத்தினான்காம் தத்துவத்து ஆன்மப்பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கும் சங்கரபாஷ்யம் மேலாயதாய்ச் சாத்தியபாஷ்யமாகுந்தானே!

## மூவிதபாவனை

இந்திரத்தியும்நர் கூர்மராகிய நாராயணரை நோக்கி, சுவாமீ!

(84) த்ரிவிதாம் பாவநாம் ப்ரஹ்மந் ப்ரோச்யமாநாம் நிபோத மே।
ஏகா மத்விஷயா தத்ர த்விதீயாவ்யக்தஸம்ச்ரயா।
அந்யாது ஸகுணு ப்ராஹ்மீ விஜ்ஞேயா த்ரிகுணாதிகா।
ஆஸாமந்யதமாஞ்சாத பாவநாம் பாவயேத் புத:॥

"மூவித பாவனையையும் எனக்கு அருளுக என வேண்ட முதலாவது பாவனை என் விஷயம் (சகுணவிஷயம்), இரண்டாவது பாவனை அவியக்தம் (நிர்க்குணம்) பற்றியது; மூன்றாவது பாவனை (சாத்துவிகாதிமுக்) குணங்களைக் கடந்ததாய்ச் (சர்வஞ்ஞத்துவாதி) குணங்களையுடையதாயுள்ள பிரஹ்மபாவனை; மூவித பாவனைகளுள் ஒன்றை அறிஞன் பாவிக்க" எனத் தொகுத்து மூவிதபாவனையையும் கூறினர்.

## முதலாவது விஷ்ணு சகுண பாவனை

(85) அசக்த: ஸம்ச்ரயேதாத்யாமித்யேஷா வைத்திகீ ச்ருதி:।

"அசக்தன் சகுணபாவனையாகிய முதலாவது (விஷ்ணுவினது) பாவனையையே ஆசிரயிக்க என வைதிகிசுருதி கூறிற்று" என்று கூர்மபுராணத்து முதலாம் அத்தியாயம் கூறுகின்றது. இது

* இது கும்பகோணம் ஹாலாசியநாதசாஸ்திரியாரால் பம்பாய் நிர்ணயசாகரயந்திரசாலையில் அச்சிடப்பட்டது.

சகுணோபாசனை எனவும், சபீஜயோகம் எனவும், சாகாரபாவனை எனவும் கூறப்படும்.

## நிர்க்குணபாவனை சத்தியுபாசனை எனப்படல்

அக்ஷரம் என்பதும், அவியக்தம் என்பதும் (அறிவுருப) ஆன்மாவை உணர்த்துவனவாம்; அங்ஙனம் அம்மொழிகள் (ஆதி) சத்தியையும் உணர்த்துவனவாம். இரத்தினத்திரயபரீக்ஷையிலே விஷ்ணுவானவர் சிவனார்க்குக் குணமாகக் கொள்ளப்பட்டு வைஷ்ணவலக்ஷ்மிதந்திரத்தில் (வைதிக சுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப்படவினாவிடையின் சக-ம் பக்கத்து கஙஉ-ம் வினாவிடையிலே) (சகுண) க்ஷேத்திரஞ்ஞன் (ஆன்மா) ஆகக் கொள்ளப்பட்டாற் போல, அப்பரீக்ஷையிலே சிவபிரானுக்குக் குணமாகக் கூறப்பட்ட சத்தியும் (நிர்க்குண) ஆன்மா ஆகக் கொள்ளக்கிடந்தது.

(86) ஜகதங்குரரூபிண்யா சக்த்யா யதவச்சின்னம் சைதந்யம் தஸ்ய யா ஸம்வித்ரூபிணீ ஸா பராசக்திரித்யுச்யதே।

"உலகத்துக்கு அங்குரரூபமாகிய சத்தியோடு பிரியாத சைதன்னிய அறிவுருபம் (ஆன்மா) *பராசத்தி எனப்படும்" எனச் சூதசங்கிதைத் தீபிகையில் வரையப்பட்டுள்ளது. ஆகலின், நிர்க்குணோபாசனையும் சத்தியுபாசனையும் ஒன்றும் என்க.

## இரண்டாவது சத்தி (நிர்க்குண) பாவனை

(87) பராத் பரதரம் தத்வம் பரம் ப்ரஹ்மைகமவ்யயம்।
நித்யாநந்தமயம் ஜ்யோதிரக்ஷரம் தமஸ: பரம்।
ஐச்வர்யம் தஸ்ய யந்நித்யம் விபூதிரிதி கீயதே।
கார்யம் ஜகததாவ்யக்தம் காரணம் சுத்தமக்ஷரம்।
அஹம் ஹி ஸர்வபூதாநா மந்தர்யாமீச்வர: பர:।

* பராசத்தி என்றதிற் பரா என்றது அறிவுருபமாகிய ஆன்மாவையும், சத்தி என்றது ஆதிசத்தியையும் உணர்த்திய எனக் கொள்க.

26

ஸர்க்க ஸ்தித்யந்தகர்த்த்ருத்வம் ப்ரவ்ருத்திர் மமகியதே।
ஏதத் விஜ்ஞாய பாவேந யதாவதகிலம் த்விஜ।
ததஸ்த்வம் கர்மயோகேந சாச்வதம் ஸம்யகர்ச்சய॥

"மூலப்பிரகிருதிக்குத் (தமசுக்கு) மேலாயும், சோதியாயும், அக்ஷரமாயும், சச்சிதானந்தமாயும், அவியக்தமாயும், பரத்துக்குமேல் அதிபரமாயும், பரதத்துவமாயும் உள்ளது பிரஹ்மம்; அதின் ஐசுவரியம் விபூதி எனப்படும்; காரியம் உலகம்; காரணம் சுத்தமும் அக்ஷரமுமாகிய அவியக்தம்; சர்வபூதங்களுக்கும் அந்தரியாமியாகிய பரமேசுவரன் நான்; சிருஷ்டி ஸ்திதி சங்கார கிருத்தியம் என்னுடையதாகும்; (குரு உபதேசத்தினாலே) இவ்வாய்மையை உள்ளவாறு உணர்ந்து கன்மயோகத்தினால் எக்காலமும் வழிபடுக" என்று கூர்மபுராணத்து முதலாம் அத்தியாயத்தில் இரண்டாவது பாவனையாகிய நிர்க்குணோபாசனை கூறப்பட்டது. இது அக்ஷரபாவனை எனவும், அவியக்தபாவனை எனவும், நிர்க்குணபாவனை எனவும், நிராகாரபாவனை எனவும், கன்மயோகம் எனவும், நிர்ப்பீஜயோகம் எனவும், அபாவயோகம் எனவும் படும்.

## மூன்றாவதாகிய தாண்டவேசுவரப் பிரஹ்மபாவனை

---

(88) த்யக்த்வா புத்ராதிஷு ஸ்நேஹம் நிர்த்வந்தோ நிர்ஷ்பரிக்
ஸங்யஸ்ய ஸர்வகர்மாணி பரம் வைராக்யமாச்ரித:। (ரஹ:),
ஆத்மந்யாத்மாந மந்வீக்ஷ்ய ஸ்வாத்மந்யேவாகிலம் ஜகத்।
ஸம்ப்ராப்ய பாவநாமந்த்யாம் ப்ராஹ்மீமக்ஷரபூர்விகாம்।
அவாப பரமம் யோகம் யேநைகம் பரிபச்யதி॥

"புத்திராதியரிடத்துள்ள பற்றை அறுத்து நிர்த்துவந்துவனாய் நிஷ்பரிக்கிரகனாய், சர்வகன்மங்களும் ஒழிந்து மிக்க வைராக்கியமுடையனாய், பரமைசுவரியம் பூண்டவன் ஆன்மாவிலே (அருட்) பராசத்தியாரோடு பரமான்மாவாகிய தாண்டவேசுவர சிவபிரானைக் கண்டு, பின்னர்த் தனக்குப் பரமான்மாவாயுள்ளவரிலே தானே உலகமனைத்தும் இருப்பனவாக நோக்கி, இங்ஙனம் அக்ஷரபாவனை பூர்வமாக (நிர்க்குணோபாசனைவாயிலாக) எய்தும் இந்த இறுதியாகிய பிராஹ்மிபாவனையை அடைதலாம் பரமயோக

த்தினாலே ஏகராகிய (தாண்டவேசுவர) * சிவபிரானைக் காண்கின்றான்" என்று கூர்மபுராணத்து முதலாம் அத்தியாயத்தில் மூன்றுவதுபாவனை கூறப்பட்டது. இது மஹாயோகம் எனவும், பிரஹ்மபாவனை எனவும், அத்தியாசிரமயோகம் எனவும், பரமேசுவரபாவனை எனவும், பாசுபதயோகம் எனவும் கூறப்படும்.

## மூவிதபாவனையும் முறையே பௌதிகயோகம் சாங்கியயோகம் அத்தியாசிரமயோகம் எனப்படல்

(89) யோகீச த்ரிவிதோ ஜ்ஞேயோ பௌதிக: ஸாங்க்ய ஏவச|
த்ரிதீயோத்யாச்ரமீ ப்ரோக்தோயோகமுத்தம மாச்ரித:|
ப்ரதமா பாவநா பூர்வே ஸாங்க்யேத்வக்ஷரபாவநா|
த்ருதீயா சாந்திமா ப்ரோக்தா பாவநா பாரமேச்வரீ||

"யோகியானவன் பௌதிகயோகியும், சாங்கியயோகியும், அத்தியாசிரமயோகியும் என மூவகைப்படுவன்; நாராயண விஷயமாகிய முதலாவது பாவனை பௌதிகயோகம்; (இரண்டாவதாகிய) அவியக்த (அக்ஷர) பாவனை சாங்கியயோகம் (நிர்குணயோகம்); மூன்றுவதாகிய இறுதிப் பிரஹ்மபாவனை பரமேசுவர பாவனையாகிய அத்தியாசிரமயோகம்" என்று கூர்மபுராணத்து இரண்டாம் அத்தியாயம் கூறுகின்றது.

## மூன்று யோகமும் முறையே விஷ்ணுபாவனை சத்திபாவனை சிவபாவனை எனப்படல்

(90) விஷ்ணுசக்தி சிவபாவநாநா முத்தரோத்தரோத்க்ருஷ்டத்வமுக்தம்|

"விஷ்ணுபாவனையினும் சத்திபாவனை மேலானது; சத்திபாவனையினும் சிவபாவனை மேலானது என்று ஒன்றுக்கொன்று மேலாயிருத்தல் கூறப்பட்டது" என ஆனந்தகிரியிற் காணப்படு

* இத்தச் சிவன் பிரஹ்மகீதை ரு-ம் அத்தியாயத்து கஉஎ-ம் சுலோகத்திற் காணப்பட்ட "சிவனே உள்ளான் பிறிதில்லை" என்ற இரண்டாவது பாவனைக்குரிய ஆன்மாவாகிய சிவனன்று.

கின்றது. ஆகவே, விஷ்ணுபாவனை பௌதிகயோகத்திலும்,(ஆதி) சத்திபாவனை சாங்கியயோகத்திலும், சிவபாவனை அத்தியாசிரம யோகத்திலும் நிலையுறுவன எனப் பெறப்பட்டது.

## மூன்று பாவனைக்குமேல் நான்காவது பாவனை இன்றெனல்

———

பரமேசுவரபாவனை எனப்படும் சிவபாவனையாகிய பிராஹ்மிபாவனை (இப்பிரகரணத்து அ௯-ம் பிரிவின்படி) முப்பத்தாறும் தத்துவத்துக்கு அதீதத்தில் விளங்குகின்றமையின், இந்தப் பரமேசுவரபாவனைக்கு மேலாக (௩௪-ம் பக்கத்து ௬௩, ௬௪-ம் பிரிவுகளின்படி) ஆன்மதத்துவத்திலுள்ள சத்திபாவனையாகிய நிர்க்குணப்பிரஹ்மோபாசனை மேலோங்குவது எங்ஙனமோ? அங்ஙனமே விஷ்ணுபாவனை, சத்திபாவனை (நிர்க்குணபாவனை) சிவபாவனை என்னும் மூன்றுக்கும் மேல் நான்காவதாகிய நிர்க்குணப்பிரஹ்மோபாசனை ஒன்று உளதுபோல,

(91) ஏகஸ்யைவ பரப்ரஹ்மண: சிவ சக்தி விஷ்ணுரூபேண ஸ்திதஸ்ய]

“ சிவ (பாவனை), சத்தி (பாவனையாகிய நிர்க்குணப்பிரஹ்ம பாவனை, விஷ்ணு (பாவனை) என்னும் மூன்று ரூபமாக நின்ற ஏகமாகிய பரப்பிரஹ்மம்” என ஆனந்தலகரியில் அறிவில்லாமல் எழுதிய ஏகான்மவாதவிப்பிரபண்டிதர்க்கு யாது உபகாரஞ் செய்யவேண்டும்! இங்ஙனம் இரத்தினத்திரய பரீக்ஷை ஆனந்தலகரி முதலியவற்றிலே அப்பண்டிதர் தாம் முற்றும் வழுவுற எழுதிவைத்தமையை யார் சூக்குமமாகப் பார்க்கப்போகின்றார் என நினைந்தார் போலும்! இரத்தினத்திரயபரீக்ஷையில் (அ௪-ம் பிரிவுப்படி) மூவிதபாவனையும் தொகுத்துக் கூறப்பட்டதேயன்றி, நாம் (இப்பிரகரணத்து அ௭-ம் பிரிவுப்படி) இரண்டாவது பாவனையை விரித்து விளக்கிக் கூறியவாறு, தீக்ஷிதயோகியார் வரையாது விட்டமையே இந்த அசம்பாவித எழுத்து எழுதுமாறு குசாக்கிரமதி பண்டிதரை ஏவிற்று. அத்துவைதார்த்தப்பிரகாசிகையுடையார் அப்பிரகாசிகையின் ௧௨-ம் பக்கத்தில் இரண்டாவது பாவனையை நிர்க்குணோபாசனை என அங்கிகரித்துக்கொண்டார். பின் “இறுதி (மூன்றாவது) பிராஹ்மி

பாவனை சத்துவாபத்தி என்னும் நான்காம் பூமியிற்றோன்று நின்ற சமாதிவடிவதாம்" என்று கூறி, அப்பிரகாசிகையின் கூ0எ-ம் பக்கத்தில் "(மூன்றாவது) பிராஹ்மிபாவனை நிதித்தியாசனம்" என்று முன்பின் முரணுற வரையும் அப்பிராமாணிகர்க்கு சமாதானம் யாது கூறுவது!

## அப்பயதீக்ஷிதயோகியார் மூன்றுபாவனைகளையும் தொகுத்துக் கூறினமை

(92) ஸ்ரீமத்கூர்மேண யாத்யாச்ரமரதவிஷயா பாவநோக்தா த்ருதியா॥ திவ்யாஸ்தாநப்ரதாத்ரீ ஸகுணவிஷயிணீ சங்கராலம்பநா॥ யேத்வக்யே பாவநேதே ஸரஸிஜநயநேநாதிசக்த்யாச யுக்தே॥ ப்ராபிண்யௌ தேது தஸ்யா: க்ரமிக பலயுதே பௌதிகம் ஸாங்க்யமாப்தே॥

"ஸ்ரீமத் கூர்மமூர்த்தியினாலே எந்தப் (பாசுபத) அத்தியாசிரமிக்குரிய பாவனாவிஷயம் சொல்லப்பட்டதோ, அது சங்கரரைப் பற்றியதாய்ச் சகுணவிஷயிணியாய்த் திவ்யஸ்தானமாகிய மகாசிவலோகத்தைக் கொடுப்பதாகிய மூன்றாவது பாவனையாம்; மற்றிரு பாவனைகள் எவையாமெனின், அவை விஷ்ணுவோடும் (கமலக்கண்ணரோடும்), ஆதிசத்தியுடனும் இசைந்தனவாம்; இந்த நாராயணபாவனை (சகுணபாவனை), அக்ஷரபாவனை ஆதிசத்தி பற்றிய (நிர்க்குணபாவனை) என்னும் இவ்விரண்டும் கிரமபலமுடையனவாய்ப் பௌதிகயோகத்தையும் சாங்கியயோகத்தையும் பற்றி, அந்த அத்தியாசிரமபாவனையை அடைவிப்பனவாயின" எனக் கூறினர்.

மாயாசத்தியானது சிற்சத்தி எனவும், திரோதானசத்தி எனவும், ஆதிசத்தி எனவும் படும். இந்த மாயாசத்தியாகிய ஆதிசத்தியானது மகுடாகமத்து அர்ச்சனாவிதிப்படலத்து ௬௩0-ம், ௬௩௬-ம் சுலோகங்களிற் கூறப்பட்ட பராசத்தியாகிய ஆதிசத்தியன்றாம் எனவும், இந்த ஆதிசத்தியே எ௪-ம் பக்கத்துக் குறிப்புரையிற் குறிக்கப்பட்டவராம் எனவும் ஓர்க.

தீக்ஷிதயோகியார் விஷ்ணு, சத்தி, பரமேசுவரன் என்னும் மூன்று இரத்தினங்களை ஆராய்வான்றொடங்கி, அங்ஙனம் ஆராய்

ந்த நூலுக்கு இரத்தினத்திரயபரீக்ஷை எனப் பெயரும் கொடுத்துவிட, நான்காவதொன்றை விப்பிரபண்டிதர் கண்டுபிடித்து அதற்கு எங்ஙனம் நிர்க்குணபாவனை எனக் கூறினரோ! இரண்டாவது பாவனையும் நிர்க்குணபாவனையேயாக, நான்காவது பாவனையும் நிர்க்குணபாவனையேயாக, இரண்டு நிர்க்குணபாவனைகள் இரத்தினத்திரயபரீக்ஷையிற் கூறப்பட்டனவோ? அந்த மூவித பாவனைக்கும் முறையே விஷ்ணுலோகமும், உமாலோகமும், சிவலோகமும் கூறப்பட்டிருக்கின்றனவேயன்றி, பண்டிதரது நான்காவது நிர்க்குணோபாசனைக்குப் பயன் ஒன்றும் கூறப்படாது போனமைக்குக் காரணம் என்னையோ? இரத்தினத்திரயபரீக்ஷை வியாக்கியானத்தில்

(93) அத ஏவ சிரம் நாராயணமேவோபாசிதவத இந்த்ரத்யும்நஸ்ய நிரஸ்த நிகில த்வைத ஜீவாபிந்ந நிர்க்குணப்ரஹ்மஜ்ஞாநமத்யமயோகத்விதீயபாவநாப்ரவ்ருத்திஸாதநபூர்வகம் த்ருதீயோத்தமயோகபாவநாயா: பரமேச்வரதிவ்யஸ்தாநப்ராப்திருக்தா।

"ஆகலின் நெடுங்காலம் நாராயணோபாசனை செய்த இந்திரத்தியும்நர்க்குச் சகலத்தையும் நீங்கிய ஜீவனுக்கு அபின்னமாகிய நிர்க்குணப் பிரஹ்ம ஞானமாய், மத்தியம அதிகாரிக்குரிய யோகமாயுள்ள இரண்டாவது (நிர்க்குண) பாவனாப்பிரவிருத்திசாதன பூருவமாக எய்தும் மூன்றாவதாகிய உத்தமயோகபாவனைக்குச் சிவனாது திவ்யஸ்தானமாகிய சிவலோகப்பிராப்தியே பயனாகக் கூறப்பட்டது" என்றும்,

(94) ஏவம் த்விதீய நிர்க்குணோபாஸநாபூர்விகாயா: பரமாகாசரூப பரமேச்வரதிவ்யஸ்தாந ப்ராபிண்யாஸ்த்ருதீய பாவநாயா: பரமுக்திஹேதுத்வம் புராணவஸாநேபி ஸ்புடீக்ருதம்।

"இங்ஙனம் இரண்டாவதாகிய நிர்க்குணோபாசனைவாயிலாக எய்தும் பரமாகாசரூபமாய்ச் சிவலோகத்தை அடைவிப்பதாயுள்ள மூன்றாவது பாவனையானது (பிராஹ்மிபாவனையானது) பரமுத்திக்குக் காரணமாயது எனக் (கூர்ம) புராணத்து இறுதிக்கண்ணும் கூறப்பட்டது" என்றும் எழுதப்பட்டிருக்கின்றது. இவற்றிற்கு மாறாகப் பிரஞ்ஞையில்லாத பண்டிதரால் பிரமாணமொன்றுமின்றி வரையப்பட்டவையனைத்தும் பயனில் கூற்றும் என விடுக்க.

## மகாபாரதமும் மூகபஞ்சதியும் பாசுபதத்தை மேலாகக்கொண்டமை

(95) ஸாங்க்யம் யோக: பாஞ்சராத்ரம் வேதா: பாசுபதம் ததா

(நிரீச்சுவர) சாங்கியத்தினும் யோகம் மேலானது; யோகத்தினும் பாஞ்சராத்திரம் மேலானது; பாஞ்சராத்திரத்தினும் வைதிகம் மேலானது; வைதிகத்தினும் பாசுபதம் மேலானது" என்று தானிக்குமாறே வியாசபகவான் ஐந்து மதங்களையும் உத்தரோத்தர உற்கிருஷ்டமாக வைத்தார். பாஞ்சராத்திரத்தினால் விஷ்ணு உபாசனையும், வைதிகத்தினால் நிர்க்குணோபாசனையும், பாசுபதத்தினாற் பரமேசுவரசிவபாவனையும் இப்பாரதவசனத்தினாற் கூறப்பட்டன.

(96) ஸத்க்ருததேசிகசரணா: ஸபீஜநிர்பீஜயோகநி:ச்ரேண்யா I
அபவர்க்கஸௌதவலபீமாரோஹந்த்யம்பகேபி தவக்ருபயா II

(காமாக்ஷித்)தாயே! சுவாநுபூதியில் முற்றிய ஞானதேசிகருடைய திருவடியைப்பற்றிய சிலர் உமது கிருபையினாலே சகுணம் எனப்படுகின்ற சபீஜயோகப்படியினாலும், நிர்க்குணபாவனை எனப்படுகின்ற நிர்ப்பீஜயோகப்படியினாலும், (பாசுபதயோக) மோக்ஷம் எனப்படுகின்ற மேடையிலுள்ள சிகரத்தை ஏறுகின்றார்கள்" என்று மூகபஞ்சதி கூறுகின்றது.

## சகுண நிர்க்குணபாசுபத உபாசனைகளுக்குப் பயன்

சகுணம் நிர்க்குணம் என்னும் இரு பாவனைகளும் காலவிளம்பத்தில் முத்திபாலிப்பனவாம் என்றும், அத்தியாசிரமபாசுபதயோகபாவனை காலவிளம்பமின்றி நேரே முத்திபாலிப்பதாம் என்றும் இரத்தினத்திரயபரீக்ஷை இறுதியினாலும், வேதாந்தசூத்திர சைவபாஷ்யத்தினாலும் (க. க. ௩உ) அறியப்படுகின்றன. சகுணம் நிர்க்குணம் என்னும் இருபாவனையுடையோர்க்கு உரியவல்லாத தத்துவங்களிற் (சுத்ததத்துவங்களில் உள்ள) நிஷ்களசிவனுரையும், நிஷ்களசகளசிவனுரையும், சகள

சிவனுரையும், சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீசுவரர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், கஜாமுகாநுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தக்ஷிணாமூர்த்தி, லிங்கோற்பவர் என்னும் இருபத்தைந்துமூர்த்தங்களையும், விஷ்ணுவுக்கு அடிமையென்றேனும் மாயோபாதியுற்றவரென்றேனும் தூஷித்தலும், மூன்றுவது அத்தியாசிரம பாசுபத (வேதாந்த) யோகத்துக்கும், வைதிக சைவ சித்தாந்தத்துக்கும் இன்றியமையாது வேண்டப்படும் அன்பை அநாவசியகம் எனப் புறக்கணித்தலும், நிஷ்களசிவன் முதலியவர்களைப் பிரதிபாதிக்கும் சிவாகமங்களைத் தூஷித்தலும், அச்சிவாகமங்களுக்கு அதிகாரமுடைய முப்பொழுதும் திருமேனி தீண்டுவோரைத் தூஷித்தலும் எவ்வகைப்பட்ட பிராயச்சித்தங்களானும் தீராத அதிபாதகங்களாமென ஓர்ந்து விலகித் தத்தம் உபாசனைகளில் நின்றோர் நன்னெறியிற்றலைப்படுவர். ஆண்டவராகிய சிவபெருமானை விஷ்ணுவுக்கு அடிமைப்பட்டவரெனவும், சிவபெருமானை ஆயிரம் கமலங்களால் அர்ச்சித்த விஷ்ணுமூர்த்தியாகிய அடியவரை ஆண்டவரெனவும், ஆன்மதத்துவத்தின்பாற்படநின்ற ஆன்மாவைப் பரப்பிரஹ்மமாகிய பதி எனவும், முப்பத்தாறும் தத்துவத்திலுள்ள பரமேசுவரனைப் பிரகிருதிமாயோபாதிப்பட்ட பசு எனவும் திரிவுணர்ச்சிகொண்டு தூஷித்தல் யுக்தம் அன்றும் என்க.

ஆண்டவன்றன்னை யடிமையென்றுரைப்பாரடிமையையாண்டவனென்பார், மாண்டகுபதியைப்பசுவென்றும்பசுவைப்பதியென்றுமதித்துனையிகழ்ந்தே, தாண்டருநிரயக்கிடங்கினில்வீழுஞ்சழக்கரோடிணங்குறுவரமே, வேண்டினேனருளாய்கலைசைமாநகரின்மேவிவாழ்ந்தருள்பசுபதியே

என்று சிவஞானசுவாமிகளும் கூறியருளினர்.

“விஜயசக்தி (வெற்றிவேல்); இது மகாவுக்கிரவீரபத்திராஸ்திரம் என்னும் புஸ்தகத்தின் மறுப்பாம்” எனப் பிரகடனஞ் செய்யப்பட்டு ஒரு வருஷத்துக்கு மேலாகின்றது. இதுவரையும் புஸ்தகத்தைக் காணேம்.

புஸ்தகம் ஒன்றுக்கு மறுப்பு எழுதிய பின்னன்றோ, 'அதனை மகுடப்பெயரோடு பிரகடனஞ் செய்தல் முறை. உள்ளபடி மறுப்பெழுதாது மகுடப்பெயரைமாத்திரம் எழுதி மறுப்பெழுதியதுபோலக் காட்டி நடித்து உலகத்தை ஏமாற்றத்துணிதல் "மகாமண்டலேசுவரப்"பட்டப்பெயருக்கும், "உபயபாஷா வேதாந்தப்பிரவர்த்தகாசாரியப்" பட்டப்பெயருக்கும் இழுக்காகாதா!

வீரபத்திரமூர்த்தியுடைய தம்பியார் சுப்பிரமணியப்பெருமானுக, அவர் கைக்கண்ணது வேலாயுதமேயாக, இந்த வேலாயுதம் அவ்விருவர்க்கும் எவ்விதவிரோதமும் இல்லாதிருந்தவிடத்தும், வீரபத்திரரை செயிக்கத்துணியுமா? அங்ஙனமாயின், மகாவுக்கிரவீரபத்திராஸ்திரம் என்னும் புஸ்தகத்தை விஜயசக்தி (வெற்றிவேற்) புஸ்தகம் செயிப்பதெப்படியோ? கண்டனமெழுதமுடியாவிட்டாலும் பெயரைத்தானும் பொருத்தமாக எழுத அறியாத விவேகத்தைப்பற்றி ஆச்சரியமுறுகின்றேம்.

"ஸ்ரீகூர்மபுராணப் பிரதிபாத்ய மூன்றுவது பாவனை வேதாந்தமே" என்று அத்துவிதப்பிரகாசிகையுடையார் காலயுக்திஸ்ரீ மாசிமீ 20-ம் தேதிக்குச் சரியாகிய 1919ஸ்ரீ மார்ச்சுமீ 3உ லோகோபகாரிப்பத்திரிகையின் 7-ம் பக்கத்திற் கூறியிருக்கின்றார்; மூன்றுவது பாவனை சகுணமே என்று மகாவுக்கிரவீரபத்திராஸ்திரத்து (343-ம் பிரிவினுல்) அறிந்துகொண்ட இவர் வாளா "மூன்றுவது பாவனை வேதாந்தமே" எனக் கூறினர். அப்பாவனையைச் சகுணம் எனக் கூறிவிடின், தமது கக்ஷி வலிகுன்றிவிடும் எனவும், நிர்க்குணப்பிரஹ்மநிஷ்டை எனக் கூறின் பொய்யாய் முடியும் எனவும் நினைந்து போலும் பொதுவுற "மூன்றுவது பாவனை வேதாந்தமே" எனக் கூறினர். ஆகவே இவர் வாக்கிலே நிர்க்குணோபாசனைப்பிரசங்கமும், மனசிலே பதிரூபசகுணப் பிரஹ்மோபாசனையுமாம் என அநுமானிக்கப்படுகின்றது.

சகுணம் நிர்க்குணம் என்னும் இரண்டையும் பிரதிபாதிக்கும் அவ்வுபகாரிப் பத்திரிகையுடையாரும் நிஷ்களவடிவினராகிய தாண்டவேசுவர அதிசூக்கும வடிவினர் தியானிக்கப்படுவரன்றி, அவரை விக்கிரகத்தில் அமைப்பது சாஸ்திரசம்மதமன்றேயாக, அவர்க்குப் பிரதிநிதியாகிய சிற்றுருவமைந்த நடராஜ வடிவத்தைம் பத்திரிகையின் முகப்பின்கண்ணே வரைந்து, மூன்ருவது பாவனையைச் சகுணம் என அபுத்திபூருவமாக உடன்பட்டோராயினர்.

---

எட்டாவது

# தாண்டவேசுவரபதிப்பிரகரணம்

[இப்பிரகரணமானது தாண்டவேசுவரரையே பதியாக வேதோப சிட்டநெறிகொண்டு நிரூபிக்கின்றது.]

(1) தமீச்வராணும் பரமம் மஹேச்வரம் தம்தேவதாநாம் பரமஞ்ச தைவதம்। பதிம் பதீநாம் பரமம் பரஸ்தாத் விதாம தேவம் புவநேசமீட்யம்॥

— சுவேதாசுவதரம், சா. எ.

"ஈசுரர்களுக்குள்ளே பரமமகேசுவரராயும், தேவர்களுக்குள்ளே மஹாதேவராயும், பதிகளுக்குள்ளே மேலாய்ப் பரமபதியாயும், புவநேசராயும், ஸ்துதிக்கற்பாலராயுமுள்ள அந்த மஹாதேவரை அறிகின்றேம்."

(2) ஏஷாமீசே பசுபதி: பசூநாம் சதுஷ்பதாமுதச த்விபதாம்।

— யசுர்வேதம், ௩. க. ச. ௩.

"நாற்காலும் இருகாலுமுடைய பசுக்களைப் பசுக்களுக்குப் பதியாயுள்ளார் ஆளுகின்றார்."

(3) ய ஈசே அஸ்ய த்விபத: சதுஷ்பத:.................।

— இருக்குவேதம், க0. கஉக. ௩.

"எவர் (சிவபிரான்) இருகாலும் நாற்காலுமுடையவற்றை ஆளுகின்றாரோ (பசுபதியாயுள்ளாரோ)."

(4) யா தே ருத்ர சிவா தநூரகோராபாபகாசிநீ। தயாநஸ்தநுவா சந்தமயா கிரிசந்தாபிசாகசீஹி।

— சுவேதாசுவதரம், ௩. ரு.

"மகாருத்திர (சிவபிரானே)! காருண்ணியமும் மநோகரமுமாய்ப் பாவமில்லாதோரிடத்து விளங்குவதாயும் ஆனந்தரூபமாத்திரமாயுமுள்ள எந்தத் தநு உண்டோ, அந்தப் பராசத்தி (சிவை)யாகிய தநுவுடனே மங்களரூபமாகக் (கைலாச) கிரியினின்று உமது பூரணப்பிரகாசத்தோடு எங்களுக்கு விளங்குவீராக."

(5) யாமிஷும் கிரிசந்தஹஸ்தே பிபர்ஷ்யஸ்தவே| சிவாம்கிரித்ரதாம் குரு மாஹிம்சீ: புருஷம் ஜகத்|

— சுவேதாசுவதரம், ந. சு.

"கைலாசவாசரே! எந்தப் பாணத்தை (வைரிகண்மேற்) பிரயோகித்தற்குத் திருக்கர்த்திற் றரிக்கின்றீரோ, அந்தப் பாணத்தைச் சாந்தமாக்கும்; கைலாசபாலகரே! மனிதரையும் ஜகத்தையும் ஹிம்சியாதிரும்."

(6) ஸ ஏவ காலே புவநஸ்ய கோப்தா விச்வாதிக: ஸர்வபூதேஷு கூட:| யஸ்மிந்யுக்தா ப்ரஹ்மர்ஷயோ தேவதாச்ச தமேவம் ஜ்ஞாத்வா ம்ருத்யுபாசாந் சிநத்தி||

— சுவேதாசுவதரம், ச. கரு.

"அவர் (எக்) காலத்தினும் பிரபஞ்சத்தைக் காப்பவரும், பிரபஞ்சாதீதரும், சமஸ்த (சேதனுசேதனப்) பிரபஞ்சத்துள்ளே மறைந்துள்ளாருமாய் இருந்தார்; பிரஹ்மருஷிகளும் தேவர்களும் அவரிலே இயைந்திருந்தார்; அவரை அநுபவத்தில் அறிபவன் * ஆணவபாசங்களைச் சேதிக்கின்றான்."

(7) மஹாந் ப்ரபுர் வை புருஷ: ஸத்வஸ்யைஷப்ரவர்த்தக:|
ஸுநிர்மலாமிமாம் ப்ராப்திமீசாநோ ஜ்யோதிரவ்யய:||

— சுவேதாசுவதரம், ந. கஉ.

"புருஷர் (சிவபிரான்) மகான், பிரபு, (சேதனுசேதன) உள்பொருளைச் செலுத்துபவர்; அனைத்தையும் அடைதற்குரிய இந்த நிர்மல சக்தியுடையர்; (அவர்) ஈசானரும், சோதியும், கேடிலருமாம்."

(8) புருஷ ஏவேதம் ஸர்வம் யத் பூதம் யச்ச பவ்யம்|
உதாம்ருதத்வஸ்யேசாநோ யதந்நேநாதிரோஹதி||

— சுவேதாசுவதரம், ந. கரு.

---

* மிருத்யு ஆணவத்தின்மேற்றென்பதை மிருகேந்திரத்திற் பாசலக்ஷணப்பிரகரணத்து எ-ம் சுலோகத்திற் காண்க.

"இருந்ததும் இருக்கப்போவதுமாகிய ஈதெல்லாம் (மகா) புருஷ ராகிய (சிவபிரான்); அவர் முத்திக்குத் தலைவர்; அன்னத்தினல் வளர்வதெல்லாம் (அவர்)."

(9) இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதேl

— பிருகதாரணியம், உ. ரு. கக.

"சிவபிரான் மஹாமாயாசத்திகள் வாயிலாக அநேக வடிவங்கொண்டோராக் விளங்குகின்றனர்."

(10) ஸ்திரேபிரங்கை: புருரூப உக்ர:l

— இருக்குவேதம், உ. ஙங. கூ.

"சிவபிரான் ஸ்திரமாகிய அங்கங்களோடு பலரூபமுடையர்."

(11) ஸ தந்மயோஹ்யம்ருத ஈசஸம்ஸ்தோஜ்ஞ: ஸர்வகோ புவநஸ்யாஸ்ய கோப்தாl ய ஈசேஸ்ய ஜகதோ நித்யமேவ நாந்யோ ஹேதுர் வித்யதே ஈசநாயll

— சுவேதாசுவதரம், கூ. கஎ.

"அவர் (சிவபிரான்) சேதனுசேதனப்பிரபஞ்சமயமாய் நிற்பவர்; அமிர்தர்; ஈசராய் நிலைப்பவர்; சர்வஞ்ஞர், சர்வவியாபகர், இந்தப் பிரபஞ்சத்தைக் காப்பவர், இந்தப் பிரபஞ்சத்தை எஞ்ஞான்றும் ஆளுபவர், மற்றெதுவும் அதனை ஆளுதற்கு வன்மையின்று."

(12) ஸர்வேந்த்ரிய குணுபாஸம் ஸர்வேந்த்ரியவிவர்ஜிதம்l
'ஸர்வஸ்ய ப்ரபுமீசாநம் ஸர்வஸ்ய சரணம் ப்ருஹத்ll

— சுவேதாசுவதரம், ஙு. கஎ.

"சர்வேந்திரிய குணங்கள் விளங்கப்பெறுபவராயும், சர்வேந்திரியங்களினின்று நீங்கினவராயும், அனைத்துக்கும் பிரபுவாயும், ஈசானராயும் (தாண்டவேசுவரராயும்) அனைத்துக்கும் பெருஞ் சரணமாயும் உள்ளார்."

(13) வேதாஹமேதமஜரம் புராணம் ஸர்வாத்மாநம் ஸர்வகதம் விபுத்வாத்l ஜந்மநிரோதம் ப்ரவதந்தி யஸ்ய ப்ரஹ்மவாதிநோ ஹி ப்ரவதந்தி நித்யம்ll

— சுவேதாசுவதரம், ஙு. உக.

"(சிவபெருமானை) ஜரையில்லாதவரும், பழையரும், அனைத்துக்கும் ஆன்மாவாயும், விபுவாதலிற் சர்வவியாபகருமாக அறிகுவல்; அவருக்கு ஜனனம் இல்லை என்று கூறுகின்றார்கள்; பிரஹ்மவாதிகளோ (அவனை) நித்தியரென்று கூறுகின்றனர்."

(14) ய: ப்ராணேந ப்ராணிதி ஸத ஆத்மா ஸர்வாந்தரோ யோ பாநேநாபாநிதி ஸத ஆத்மா ஸர்வாந்தர:ll

— பிருகதாரணியம், ங. ச. க.

"உச்சுவாசத்திற் சுவாசிக்கின்றவரே (சிவபெருமானே) உன் பரமான்மாவாய், அனைத்துள்ளும் (இருக்கின்றார்); நிச்சுவாசத்திற் சுவாசிக்கின்றவரே (சிவபெருமானே) உன் பரமான்மாவாய் அனைத்துள்ளும் (இருக்கின்றார்)."

(15) யோசநாயாபிபாஸே சோகம் மோஹம் ஜராம் ம்ருத்யுமத்யேத்யேதம் வை தமாத்மாநம் விதித்வா ப்ராஹ்மணா... பிக்ஷாசர்யம் சரந்திl

— பிருகதாரணியம், ங. ரு. க.

"பசி, தாகம், சோகம், மோகம், ஜரை, மரணம் என்பவற்றைக் கடந்தவராகிய * ஆன்மாவைச் (சிவபிரானை) அறிந்து அந்தணர் துறவிகளாய்த் திரிகின்றனர்."

(16) ததேதத் ப்ரஹ்மாபூர்வமநபரமநந்தரமபாஹ்ய மயமாத்மா ப்ரஹ்ம ஸர்வாநுபூ:l

— பிருகதாரணியம், உ. ரு. கக.

"இந்தப் பிரஹ்மம் (சிவபிரான்) முற்புறத்தும் இல்லை; பிற்புறத்தும் இல்லை; உள்ளும் இல்லை; வெளியும் இல்லை; இந்தப் பிரஹ்மம் (சிவபிரான்) யாண்டும் நீக்கமற வியாபித்துள்ளார்."

(17) ஏகதைவாநுத்ரஷ்டவ்யமேததப்ரமேயம் த்ருவம்l
விரஜ: பர ஆகாசாதஜ ஆத்மா மஹாந் த்ருவ:l

— பிருகதாரணியம், ச. ச. உo.

---

* சிவபெருமான் ஆன்மசப்தத்தினூற் கூறப்பட்டமைக்குக் காரணம் நீலகண்ட சைவபாஷ்யத்து வாக்கியாந்வயாதிகரணத்திற் (க. ச. உஉ) காண்க.

"அப்பிரமேயராயும், நிலையராயுமுள்ள அந்தப் பரப்பிரஹ்மம் சிவபிரான்) ஒரு காலத்தில்மாத்திரம் அறியற்பாலர்; ஆன்மா சிவபிரான்) துகளிலராய் ஆகாயத்துக்கு அப்புறத்தராய், பிற வாதவராய், மகானுய், நித்தியராய் உள்ளார்."

18) ய ஏஷ ஸுப்தேஷு ஜாகர்த்தி காமம் காமம் புருஷோ நிர்மிமாண:l ததேவ சுக்ரம் தத் பிரஹ்ம ததேவாம்ருதமுச்யதேl தஸ்மிந் லோகா: ச்ரிதா: ஸர்வே தது நாத்யேதி கச்சநll

— கடம், ரு. அ.

"எந்தப் புருஷர் (நாங்கள்) உறங்கும்போது வேண்டிய வேண்டியாங்கு படைத்துக்கொண்டு விழித்திருக்கின்றாரோ, அந்தப் புருஷர்தான் தூயர், அவர் பிரஹ்மம், அவரே சிவன் என்று சொல்லப்படுகின்றார்; அவரிடத்திற் பிரபஞ்சமனைத்தும் பற்றிக் கொண்டிருக்கின்றன; அவரை அதிக்கிரமிப்பவர் யாருமில்லை."

19) அமும் யஜாமும் யஜேத்யேகைகம் தேவமேதஸ்யைவ ஸா விஸ்ருஷ்டிரேஷ உ ஹ்யேவ ஸர்வே தேவா:l

— பிருகதாரணியம், க. ச. சு.

"இந்தத் (தேவரை) வழிபடு; அந்தத் (தேவரை) வழிபடு என்று ஒவ்வோர் தேவரைக் (குறித்துச் சொல்லும்போது) ஒவ்வோர் தேவரும் அவருடைய வடிவம்; யாதினுலெனின் அவர் எல்லாத் தேவர்களுமாய் உள்ளார்."

20) அந்யதேவ தத்விதிதாததோ அவிதிதாததிl
இதி சுச்ரும பூர்வேஷாம் யேநஸ்தத் வ்யாசசக்ஷிரேll

— கேநோபநிடதம், ந.

"அது (பிரஹ்மம்) அறியப்பட்டதற்கும் வேறு; அறியப்படாததற்கும் மேற்பட்டது என்று இதனை எவர்கள் எங்களுக்கு உபதேசித்தார்களோ, (அதனை) அந்த முன்னோர்வாயிலாக இங்ஙனம் அறிந்துள்ளேம்."

21) யதி மந்யஸே ஸுவேதேதி தப்ரமேவாபி நூநம் த்வம் வேத்த ப்ராஹ்மணோ ரூபம்l

— கேநோபநிடதம், சு.

"(பரப்பிரஹ்மசிவபிரானை) நன்கு அறிந்தேன் என்று நினைத்தாயானால், அந்தச் சிவபிரானது ரூபத்தைச் சிறிதே அறிந்தனை என்பது நிச்சயம்."

(22) நாஹம் மந்யே ஸு வேதேதி நோநவேதேதி வேதசl
யோநஸ்தத்வேத தத்வேத நோநவேதேதி வேதசl
— கேநோபநிடதம், க0.

"(பரப்பிரஹ்மத்தை) நன்கு அறிந்தேன் என்று நான் நினைக்கவில்லை; நான் அதனை அறியவில்லை என்று அறியவில்லை; எங்களுள்ளே அதனை அறிபவன் அதனை அறிகின்றான்; அவன் அதனை அறியவில்லை என்று அறியான்."

(உங) யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸ:l
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்ll
— கேநோபநிடதம், கக.

"எவனுக்குச் (சிவபிரான்) அறியப்படவில்லை என்றுண்டோ, அவனுக்கு (அவர்) அறியப்பட்டவராவர்; எவனுக்கு அவர் அறியப்பட்டாரென்றுண்டோ, அவன் (அவரை) அறிந்திலன்; (ஏனெனில்) அவர் சொரூபம் தெரிந்தவர்களுக்குத் தெரியப்படாது; அறியப்படமாட்டாதென்றவர்கட்கும் அறியப்பட்டதாகும்."

(24) அந்யத்ர தர்மாதந்யத்ராதர்மாதந்யத்ராஸ்மாத்க்ருதாக்ருதாத்l அந்யத்ர பூதாச்ச பவ்யாச்ச யத் தத் பச்யசி தத்வதll
— கடோபநிடதம், உ. கச.

"புண்ணியத்துக்கு வேறானவரும், பாவத்துக்கு வேறானவரும், இந்தக் காரியகாரணங்களுக்கு வேறானவரும், இறந்தகால எதிர்காலங்களுக்கு வேறானவருமாகிய எதனைப் (பிரஹ்மத்தைப்) பார்க்கின்றீரோ, அதனைக் கூறுதிர் (என்றார் நாசிகேதர்)."

(25) ஹம்ஸ: சுசிஷத் வசுரந்தரிக்ஷஸத்தோதா வேதிஷததிதிர் துரோணஸத்l ந்ருஷத்வரஸத்ருதஸத்வ்யோமஸ்தப்ஜா கோஜா ருதஜா அத்ரிஜா ருதம் ப்ருஹத்ll
— கடோபநிடதம், ரு. உ.

"க்ரீஷ்மகாலத்திற் சூரியனும், அந்தரிக்ஷத்தில் வாயுவும், வேதிகையில் ஹோதாவும், துரோணத்தில் அதிதியும் அவர்; மனிதர்களில் இருப்பதும், தேவதைகளில் இருப்பதும், யஞ்ஞத்தில் இருப்பதும், ஆகாயத்தில் இருப்பதும், ஜலத்தில் உண்டானதும், பூமியில் உண்டானதும், யாகத்தில் உண்டானதும், மலையில் உண்டானதுமாகிய (அனைத்துக்கும் அந்தரியாமியாயுள்ளது) மெய்ப்பொருளாகிய பிரஹ்மம்."

(26) (ஸ) யதா (ஸோம்ய) வயாம்ஸி வாஸோ வ்ருக்ஷம் ஸம்ப்ரதிஷ்டந்தே। ஏவம் ஹவை தத்ஸர்வம் பர ஆத்மநி ஸம்ப்ரதிஷ்டதே॥

— பிரசினோபநிடதம், ச. எ.

"எங்ஙனம் பக்ஷிகள் இருப்பிடமாக விருக்ஷத்தை நிலையாகக்கொண்டனவோ, அங்ஙனம் (சேதனசேதனமாகிய) ஈதெல்லாம் பரமான்மாவாகிய (சிவபெருமானில்) நிலைபெற்றுள்ளன."

(27) யச்ச ஸ்வபாவம் பசதி விச்வயோநி: பாச்யாம்ச ஸர்வாந் பரிணாமயேத்ய:। ஸர்வமேதத் விச்வமதிதிஷ்டத்யேகோ குணாம்ச ஸர்வாந் விநியோஜயேத்ய:॥

— சுவேதாசுவதரம், ரு. ரு.

"விசுவகாரணராகிய (சிவபிரான்) பக்குவமாகக் கூடியவனைத்தையும் இயல்பாகப் பக்குவமாக்குகின்றார்; பரிணமிக்கச் செய்கின்றார்; இந்தப் பிரபஞ்சமனைத்துக்கும் மேலாய் ஏகராய்நின்ற (சிவபிரான்) சமஸ்த குணங்களையும் நியோகிக்கின்றார்."

(28) நைநமூர்த்வம் ந திர்யஞ்சம் ந மத்யே பரிஜக்ரபத்।
ந தஸ்ய ப்ரதிமா அஸ்தி யஸ்ய நாம மஹத்யச:॥

— சுவேதாசுவதரம், ச. கக.

"மேலேயாயினும், குறுக்கேயாயினும், நடுவிலாயினும் அவரை ஒருவரும் பற்றினரில்லை; அவர்க்குப் பிரதிமை இல்லை; அவரது நாமம் பெரும் புகழ்படைத்தது."

(29) ந தஸ்ய கச்சித் பதிரஸ்தி லோகே நசேசிதா நைவச தஸ்ய லிங்கம்। ஸ காரணம் கரணாதிபாதிபோ நசாஸ்ய கச்சிஜ் ஜநிதா நசாதிப:॥

— சுவேதாசுவதரம், சு. சு.

"உலகத்தில் அவருக்கு (மேலாக) ஒரு பதியும் இல்லை; அவரை ஆளுபவரும் (ஈசரும்) இல்லை; அவர்க்கு ஓர் குறியும் இல்லை; அவர் காரணர்; காரணாதிபர்க்கும் அதிபர்; அவருக்குப் பிதாவும் இல்லை; அதிபரும் இல்லை."

(30) யதச்சோதேதி ஸூர்யோஸ்தம் யத்ர ச கச்சதி।
தம்தேவா: ஸர்வேர்பிதாஸ்ததுநாத்யேதி கச்சந॥

— கடம், ௪. ௯.

"எவரால் சூரியன் உதயஞ் செய்கின்றானோ, எவரில் லயத்தை அடைகின்றானோ, அவரிலே (சிவபிரானிலே) தேவர்களெல்லாம் அர்ப்பிக்கப்பட்டுள்ளார்; அவரை ஒருவரும் கடப்பதில்லை."

(31) யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச ப்ரஹிணோதி தஸ்மை। தம்ஹதேவமாத்மபுத்திப்ரகாசம் முமுக்ஷுர் வை சரணமஹம் ப்ரபத்யே॥

— சுவேதாசுவதரம், ௬. ௧௮.

"எவர் பிரமாவை முதற்கண்ணே படைக்கின்றாரோ, எவர் அவருக்கு வேதங்களைக் கொடுக்கின்றாரோ, அந்தத்தேவரும், ஆன்ம புத்திப் பிரகாசருமாகிய அவரைச் (சிவபிரானை) மோக்ஷ ஆசை கொண்டு சரணடைகின்றேன்."

(32) தத் வேத குஹ்யோபநிஷத்ஸு கூடம் தத் ப்ரஹ்மா வேதததே ப்ரஹ்மயோநிம்। யே பூர்வம் தேவா ருஷயச்ச தத்விதுஸ்தே தந்மயா அம்ருதா வை பபூவு:॥

— சுவேதாசுவதரம், ௫. ௬.

"வேதங்களினும், இரகசியமாய உபநிடதங்களினும் மறைந்து கிடக்கும் அதனை (பிரஹ்மத்தை) வேதகாரணர் என்று பிரமாவானவர் அறிகின்றார்; தேவர்களும் இருஷிகளும் முன்னரே அதனை (பிரஹ்மத்தை) அறிந்து அதன் மயமாய் முத்தர்களாய்ப் போயினார்கள்."

(33) த்வம் ஸ்த்ரீ த்வம் புமாநஸி த்வம் குமார உதவா குமாரீ।
த்வம் ஜீர்ணோ தண்டேந வஞ்சஸி த்வம் ஜாதோ பவஸி விச்வதோமுக:॥

— சுவேதாசுவதரம், ௪. ௩.

"நீவிர் பெண், நீவிர் ஆண், நீவிர் குமாரன், இன்றேற் குமாரி; நீவிர் தண்டு ஒன்றுகொண்டு கிழவராய் வஞ்சிக்கின்றீர்; பிரபஞ்ச மெங்குமாய் ஜனித்துள்ளீர்."

(34) நீல: பதங்கோ ஹரிதோ லோஹிதாக்ஷஸ் தடித்கர்ப்ப ருத வஸ ஸமுத்ரா:। அநாதிமத்வம் விபுத்வேந வர்த்தஸே யதோ ஜாதாநி புவநாநி விச்வா॥

— சுவேதாசுவதரம், ச. ச.

"நீவிர் நீலவண்டு, நீவிர் செங்கண்களையுடைய பச்சைக்கிளி, நீவிர் இடியேற்றுமுகில், இருதுக்கள், சமுத்திரங்கள்; நீவிர் வியாபக ராயிருத்தலின் அநாதிக்கண்ணராகின்றீர்; உம்மினின்றே சமஸ்த புவனங்களும் பிறந்தன."

(35) யஸ்மிந் பஞ்ச பஞ்சஜநா ஆகாசச்ச ப்ரதிஷ்டித:।
தமேவ மந்ய ஆத்மாநம் வித்வாந் ப்ரஹ்மாம்ருதோம்ருதம்॥

— பிருகதாரணியம், ச. ச. கள.

"ஐவைந்து சனங்களும் (இந்திரியங்களும்) ஆகாயமும் எவரிலே பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளனவோ, அவரையே (பரம) ஆன்மா என நினைக்கின்றேன்; இந்தப் பரமான்மாவைப் (பரப்பிரஹ்மசிவத்தை) அறிந்து நான் சிவனாகின்றேன்."

(36) ப்ராணா வை ஸத்யம் தேஷாமேஷ ஸத்யம்।

— பிருகதாரணியம், உ. க. உ0.

"ஆன்மாக்கள் * சத்தியம் எனப்படும், இவைகளுள்ளே இவர் (சிவபிரான்) சத்தியம் எனப்படுவர்."

(37) அக்நிர் யதைகோ புவநம் ப்ரவிஷ்டோ ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ। ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பஹிச்ச॥

— கடம், ரு. கூ.

---

* சத்தியம் என்றது ஆன்மாவையும் சத்தியங்களுள்ளே சத்தியம் என்றது சிவபிரானையும் உணர்த்தும் என்பதை நீலகண்ட சைவபாஷ்யத்துப் பிரகிருதைதாவத்துவாதிகரணத்திற் (ங. உ. உக) காண்க.

"அக்கினியானது உலகத்திற் பிரவேசித்து அது எரிக்கும் ரூபத்தைப்போல ஆகின்றதோ, அங்ஙனம் ஏகர் (சிவபிரான்) (சரீரங்கடோறும் வெவ்வேருயிருக்கும்) சர்வான்மாக்களுக்கும் அந்தரான்மாவாகி (உள்ளும்) வெளியும் அவ்வவ் (ஆன்ம) ரூபமாய் இருக்கின்றார்."

(38) வாயுர் யதைகோ புவநம் ப்ரவிஷ்டோ ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பபூவ। ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா ரூபம் ரூபம் ப்ரதிரூபோ பஹிச்ச॥

— கடம், ரு. க௦.

"வாயுவானது உலகத்திற் பிரவேசித்து அது பிரவேசித்த ரூபம் போல ஆகின்றதோ, அங்ஙனம் ஏகர் (சிவபிரான்) சரீரங்கடோறும் வெவ்வேருயிருக்கும் சர்வான்களுக்கும் அந்தரான்மாவாகி (உள்ளும்) வெளியும் அவ்வவ் (ஆன்ம)ரூபமாய் இருக்கின்றார்."

(39) சூர்யோ யதா ஸர்வலோகஸ்ய சக்ஷுர் ந லிப்யதே சாக்ஷுஷைர் பாஹ்யதோஷை:। ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா ந லிப்யதே லோகது:கேந பாஹ்ய:॥

— கடம், ரு. கக.

"சமஸ்தப்பிரபஞ்சத்துக்கும் கண்ணாயிருக்கின்ற சூரியன் கண்ணுக்குப் புலப்படும் புறக்குற்றங்களால் தொடக்குண்ணவில்லையோ, அங்ஙனம் ஏகராய்ப் புறத்தினராயுள்ள ஆன்மா (சிவபிரான்) சமஸ்த சேதனசேதனப் (பிரபஞ்சத்துக்கும்) அந்தரான்மாவாகி உலகத்துள்ள துன்பத்தினாற் றொடக்குண்ணார்."

(40) ஸ ஹோவாசைதத் வை ததக்ஷரம் கார்க்கி ப்ராஹ்மணா அபிவதந்த்யஸ்தூலமநண்வ ஹ்ரஸ்வதீர்க்க மலோஹிதமஸ்நேஹமச்சாயமதமோவாய்வநாகாசமஸங்கமரஸமகந்தமசக்ஷுஷ்கமச்ரோத்ரமவாகமநோதேஜஸ்கமப்ராணமமுகமமாத்ரமநந்தரமபாஹ்யம் ந தததச்நாதி கிஞ்சந ந தததச்நாதி கச்சந॥

— பிருகதாரணியம், ந. அ. அ.

"அவர் (யாஞ்ஞவற்கியர் முன்வருமாறு) கூறினர்; பிராமணர் அதனை (ஆகாயம் நிலைக்குமிடத்தை) அந்த அக்ஷரம் (பரப்பிரஹ்மசிவன்) என்பர்; அவர் * ஸ்தூலமன்று, அணுவன்று, குறுக்கமன்று, நீட்சியன்று, சிவப்பன்று, சிநேகம் (நீரியல்பு) அன்று, அது சாயையன்று, இருளன்று, காற்றன்று, ஆகாயமன்று, சங்கம் (கூட்டம்) அன்று, இரசமன்று, மணமன்று, கண்களன்று, காதுகளன்று, வாக்கன்று, மனமன்று, ஒளியன்று, பிராணனன்று, வாயன்று, அளவன்று, உள்ளன்று, புறமன்று, அவர் எதனையும் உண்ணுபவரன்று, ஒன்றும் அவரை உண்ணுவதன்று."

(41) யதாஹ்யேவைஷ ஏதஸ்மிந்நத்ருச்யேநாத்ம்யேநிருக்தே நிலயநே பயம் ப்ரதிஷ்டாம்விந்ததே। அதஸோபயம்கதோ பவதி। யதாஹ்யேவைஷ ஏதஸ்மிந்நுதரமந்தரம் குருதே। அததஸ்ய பயம் பவதி॥

—தைத்திரீயம், உ. எ.

"காண்டற்கரியரும், அநாத்மீயரும், கூறொணாதவரும், ஆதாரமிலாதவருமாயுள்ளவரில் எப்போது இவன் அச்சமின்றி நிலையை அறிகின்றானோ, அப்போது அவன் பயமில்லாதவனாகின்றான்; யாதினாலெனின், அவன் அங்ஙனம் காணாது அற்பபேதஞ் செய்வானாயின், பின் அவனுக்குப் பயமுளதாகும்."

(42) பரமேவாக்ஷரம் ப்ரதிபத்யதே ஸயோ ஹவை ததச்சாயமசரீரமலோஹிதம் சுப்ரமக்ஷரம் வேதயதே யஸ்து (ஸோம்ய) ஸ ஸர்வஜ்ஞஸ் ஸர்வோ பவதி॥

— பிரசிநம், ச. க௦.

"நிழலிலாதவரும், சரீரமிலாதவரும், செந்நிறமிலாதவரும், பிரகாசமுடையவரும் அக்ஷரருமாகிய அந்தக் கேடிலாத பரரை (சிவபிரானை) (அநுபவத்தினால்) எவன் அறிகின்றானோ, அவன் சர்வஞ்ஞனும் எல்லாமானவனும் ஆகின்றான்."

---

* சிவபிரான் ஸ்தூலப் பொருள்களோடிருந்தாலும் அவற்றாற் றொடக்குண்ணார்; அணுப்பொருள்களோடிருந்தாலும் அவற்றாற்றொடக்குண்ணார்; குறிய வஸ்துக்களோடிருந்தாலும் குறுக்கமிலர், நீட்சிப்பொருள்களோடிருந்தாலும் அவற்றாற்றொடக்குண்ணார், சிவப்போடு கூடியிருந்தாலும் சிவப்பல்லர் என்றற்றொடக்கத்தனவாகப் பொருள்கோடல்வேண்டும்.

(43) அசப்தமஸ்பர்சமரூபமவ்யயம் ததாரஸம் நித்யமகந்தவச்ச யத்। அநாத்யநந்தம் மஹத: பரம் த்ருவம் நிசாய்ய தம் ம்ருத்யு முகாத் ப்ரமுச்யதே॥

— கடம், ௩. ௧௫.

§"சப்தமிலாதவரும், ஸ்பரிசமிலாதவரும், உருவமிலாதவரும், அழிவிலாதவரும், இரசமிலாதவரும், நித்தியரும், மணமிலாதவரும், ஆதியிலாதவரும், அந்தமிலாதவரும், மகத்துக்கு மேலானவரும், நிலையாயினருமாகிய (சிவபிரானை) (அநுபவத்தினால்) அறிந்து யமன் வாயினின்று வீடுறுகின்றான்."

(44) ஸ பர்யகாச் சுக்ரமகாயமவ்ரணமஸ்நாவிரம் சுத்தமபாபவித்தம்। கவிர் மநீஷீ பரிபூ: ஸ்வயம்பூர் யாதாதத்யதோர்த்தாந் வ்யததாச் சாச்வதீப்ய: ஸமாப்ய:॥

— ஈசாவாசியம், ௮.

"அவர் (பரமான்மாவாகிய சிவபிரான்) எங்கும் நிறைந்தவர்; தூய்மையுடையவர்; உடலற்றவர்; விரணமற்றவர்; நரம்பற்றவர்; நிருமலர்; பாவமற்றவர்; கவிஞர்; அருளுடையவர்; அனைத்துக்கும் மேலானவர்; சுயம்புவாயுள்ளவர்; தக்கவாறு பயன்களைச் சாசுவதவருஷங்களாக ஆன்மாக்களுக்குப் பகிர்ந்து கொடுப்பவர்."

(45) யத் தததத்ருச்யமக்ராஹ்யமகோத்ரமவர்ணமசக்ஷு: ச்ரோத்ரம் தத்பாணிபாதம் நித்யம் விபும் ஸர்வகதம் சுஸூக்ஷ்மம் தத்வ்யயம் தத்பூதயோநிம் பரிபச்யந்தி தீரா:॥

— முண்டகம், ௧. ௧. ௬.

---

§ சப்தத்தோடு கூடியிருந்தாலும் சப்தத்தாற்றொடக்குண்ணார், ஸ்பரிசத்தோடு கூடியிருந்தாலும் அதனாற்றொடக்குண்ணார், உருவத்தோடு கூடியிருந்தாலும் அதனாற்றொடக்குண்ணார் என்றற்றொடக்கத்தனவாகப் பொருள்கோடல்வேண்டும். இதனாற் சிவபிரான் ஓர் தோஷத்தினாலும் தொடக்குண்ணாது சர்வஞ்ஞதாதி சமஸ்த மங்கலகுணங்களோடும் இயைந்தவராவர். இவற்றை வேதாந்தசூத்திரசைவபாஷ்யத்து உபயலிங்காதிகரணத்தினும் (௩. ௨. ௧௧), அக்ஷரத்தியதிகரணத்தினும் (௩. ௩. ௩௩) காண்க.

"எவர் காணப்படாதவராயும், பற்றப்படாதவராயும், கோத்ரதியிலராயும், சாதியிலராயும், கண்காதிலராயும், கைகான் முதலியவிலராயும், நித்தியராயும், விபுவாயும், சர்வவியாபகராயும், அதிசூக்குமராயும் உளரோ, அந்த அவ்விய (அக்ஷரப்பிரஹ்ம) சிவபிரானைத் திண்ணிய அறிஞர் சமஸ்த பூதங்களுக்கும் காரணரென்று காண்கின்றனர்."

(46) ஏகோ தேவஸ் சர்வபூதேஷு கூடஸ் ஸர்வவ்யாபீ ஸர்வ பூதாந்தராத்மா| கர்மாத்யக்ஷஸ் ஸர்வபூதாதிவாஸஸ் ஸாக்ஷீசேதா கேவலோ நிர்க்குணச்ச||

— சுவேதாசுவதரம், சு. கக.

"ஏகராகிய தேவர் (சிவபிரான்) சமஸ்த (சேதனுசேதனப்) பொருள்களுள்ளே மறைந்துள்ளாரும், சர்வவியாபகரும் சர்வ (சேதனுசேதனப்) பொருள்களுக்கு அந்தரியாமியும், கர்மாத்தியக்ஷரும், சர்வ (சேதனுசேதனப்) பொருள்களில் வசிப்பவரும், சாக்ஷியும், அறிஞரும், தனிப்பொருளும் (சாத்துவிக ராஜத தாமத ஹேயகுணமில்லாத) நிர்க்குணருமாயுள்ளார்."

(47) ய: ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தரோ யம்ப்ருதிவீ ந வேத யஸ்ய ப்ருதிவீ சரீரம் ய: ப்ருதிவீ மந்தரோ யமத்யேஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:||

—பிருகதாரணியம், ரு. எ. ரு.

"எவர் * பூமியிலிருந்து பூமிக்குள்ளும் உளராயினுரோ, எவரைப் பூமி அறிந்திலதோ, எவர்க்குப் பூமி சரீரமோ, பூமிக்குள்ளிருந்து எவர் செலுத்துகின்றுரோ, அவர் தான் உன் பரமான்மா; உள்ளேயுள்ள அந்தரியாமி; சிவன்."

(48) யோ விஜ்ஞாநே திஷ்டந் விஜ்ஞாநாதந்தரோயம் விஜ்ஞாநம் ந வேத யஸ்ய விஜ்ஞாநம் சரீரம் யோவிஜ்ஞாநமந்தரோ யமத்யேஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:|

— பிருகதாரணியம், ரு. எ. உஉ.

---

* இங்ஙனம் ஜலம், தீ, அந்தரிக்ஷம், வாயு, தியு, ஞாயிறு, திசை, சந்திரதாரகை, ஆகாசம், தமஸ், தேஜஸ் பூதங்கள், பிராணன், வாக்கு, கண், காது, மனசு, துவக்கு, ரேதஸ் என்பவற்றினும் என்பவற்றுள்ளும் உளராய், அவற்றுக்கெல்லாம் சரீரமாய், அவற்றைச் செலுத்துகின்றுரோ அவர் உன் பரமான்மா, அந்தரியாமி, சிவன் எனக்கூறப்பட்டிருக்கிறன்து.

"எவர் § ஆன்மாவிலிருந்துகொண்டு ஆன்மாவுள்ளும் உள்ராயி ஞரோ, எவரை ஆன்மா அறிந்திலதோ, எவர்க்கு ஆன்மா சரீர மோ, எவர் ஆன்மாவுள்ளிருந்து செலுத்துகின்றாரோ, அவரே உன் பரமான்மா, அந்தரியாமி, சிவன்."

(49) புரமேகாதச த்வாரமஜஸ்யாவக்ரசேதஸ:। அநுஷ்டாய ந சோசதி விமுக்தச்ச விமுச்யதே॥

— கடம், ரு. க.

"பிறவாதவரும், வக்கிரபுத்தியில்லாதவருமாகிய சிவபிரானுக்குப் ‡ பதினொரு வாசலையுடைய நகரம் உண்டு; அவரை அடைந்து சோகிப்பானல்லன், பாசத்தினின்று நீங்கி வீடுறுகின்றான்."

(50) ஏதாவதேவாஹமேதத் பரம் ப்ரஹ்ம வேத। நாத: பரம ஸ்தி।

— பிரசினம், சு. எ.

"நான் இந்தப் பரப்பிரஹ்மத்தைச் (சிவபிரானை) அறிந்தவரை யில் இவர்க்கு மேலானவர் இல்லை"

(51) ந தஸ்ய கார்யம் கரணஞ்ச வித்யதே ந தத்ஸமச்சாப்யதி கச்ச த்ருச்யதே।

— சுவேதாசுவதரம், சு. அ.

"அவருக்குக் காரியமும் கரணமும் இல்லை; அவருக்கு ஒப்பாயி னரும் மேலாயினரும் காணப்படவில்லை."

(52) அஜாத இத்யேவம் கச்சித் பீரு: ப்ரபத்யதே। ருத்ரயத்தே தக்ஷிணம் முகம் தேந மாம் பாஹி நித்யம்॥

— சுவேதாசுவதரம், ச. உக.

"நீவிர் பிறந்திலீர் என்று பயமுடையான் ஒருவன் (நும்மை) நணுகுகின்றான்; (மகா) ருத்திர (சிவபிரானே)! உமது தக்ஷிண முகம் வாயிலாக எஞ்ஞான்றும் என்னைக் காக்க."

---

§ விஞ்ஞானம் என்பது ஆன்மாவுக்குப் பெயராதலை நீலகண்ட சைவபாஷ்யத்து அந்தரியாமிபதிகரணத்திற் (க. உ. உக) காண்க.

‡ பதினொரு வாசல்களாவன:—கண் இரண்டு, மூக்குத் துவாரம் இரண்டு, காது இரண்டு, வாய் ஒன்று, பிரஹ்மரந்திரம் ஒன்று, கொப்பூழ் ஒன்று, குதம் ஒன்று, உபஸ்தம் ஒன்று.

(53) அபிவா யச்சண்டாள: சிவ இதி வாசம் வதேத் தேந ஸஹ ஸம்வதேத் தேந ஸஹ ஸம்விசேத் தேந ஸஹ புஞ்ஜீத।

— முண்டகம், ௩. ௨. ௯.

"சண்டாளனேனும் சிவ என்னும் சப்தத்தை உச்சரிப்பானாயின், அவனோடு பேசுக, அவனோடு வசிக்க, அவனோடு கூட உண்க"

(54) யதா சர்மவதாகாசம் வேஷ்டயிஷ்யந்தி மாநவா:। ததா சிவ மவிஜ்ஞாய து:கஸ்யாந்தோ பவிஷ்யதி॥

— சுவேதாசுவதரம், ௬. ௨௦.

"எப்போது மனிதர் ஆகாயத்தைத் தோலாக உடுப்பார்களோ அப்போது சிவபெருமானை அறியாது (பிறவித்) துன்பத்தின் முடிவு எய்தும்."

(55) ப்ரஹ்மைவேதமம்ருதம் புரஸ்தாத் ப்ரஹ்ம பச்சாத் ப்ரஹ்ம தக்ஷிணத: சோத்தரேண। அதச் சோர்த்வஞ்ச ப்ரஸ்ருதம் ப்ரஹ்மைவேதம் விச்வமிதம் வரிஷ்டம்॥

— முண்டகம், ௨. ௨. ௧௧.

"இந்தப் பிரஹ்மந்தானே சிவன், அது முன்னர் உள்ளது; பிரஹ்மம் பின்னர் உள்ளது; பிரஹ்மம் வலப்புறத்துள்ளது; இடப்புறத்துள்ளது; கீழும் மேலும் விரிந்துளது; பிரஹ்மந்தானே இந்த உலகம்; இது சிறந்தது"

(56) விச்வத: சக்ஷுருத விச்வதோ முகோ விச்வதோ பாஹுருத விச்வதஸ்பாத்। ஸம்பாஹுப்யாம் தமதி ஸம்பதத்ரைர் த்யாவாபூமீ ஜநயந்தேவ ஏக:॥

— சுவேதாசுவதரம், ௩. ௩.

"எங்கும் கண்களும், எங்கும் முகங்களும், எங்கும் கைகளும், எங்கும் கால்களுமாகக்கொண்ட ஏகராகிய தேவர் (சிவபிரான்) பூமி ஆகாயங்களைப் படைத்துக்கொண்டு (தமது) நல்ல கைகளாலும் நல்ல இறகுகளாலும் ஊதுகின்றார்."

(57) யதேவேஹ ததமுத்ர யதமுத்ர ததந்விஹ। ம்ருத்யோஸ் ஸ ம்ருத்யுமாப்நோதி ய இஹ நாநேவ பச்யதி॥

— கடம், ௪. ௧௦.

"எது (பிரஹ்மம்) இங்கே (உளதோ), அது அங்கே (பரலோகத்திலும் உளது); எது (பிரஹ்மம்) பரலோகத்தில் உளதோ அது இவ்வுலகத்திலும் (உளது); இங்கே எவன் பேதமாகக் காண்கின்றானோ, அவன் மரணத்தினின்று§ மரணத்தை அடைகின்றான்"

(58) ஸர்வா திச ஊர்த்வமதச்ச திர்யக் ப்ரகாசயந் ப்ராஜதே யத்வநட்வாந்I ஏவம் ஸ தேவோ பகவாந் வரேண்யோ யோநிஸ்வபாவாநதிதிஷ்டத்யேக:II

— சுவேதாசுவதரம், ரு. ச.

"எங்ஙனம் சூரியன் திக்குகளனைத்தையும் மேலும், கீழும், குறுக்குமாக விளக்கிக்கொண்டு பிரகாசிக்கின்றானோ, அங்ஙனம் பகவானும், முக்கியப்பொருளும், ஏகருமாகிய அந்தத்தேவர் (சிவபிரான்) யோனியை இயல்பாகவுடையவற்றுக்கு அதிபராயிருக்கின்றார்."

(59) ஸர்வத: பாணிபாதம் தத் ஸர்வதோக்ஷிசிரோமுகம்I ஸர்வத: ச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதிII

— சுவேதாசுவதரம், ௩. கசு.

"(புருஷருக்கு-சிவபிரானுக்கு) எங்கும் கை, எங்கும் கால், எங்கும் கண், எங்கும் தலை, எங்கும் முகம், எங்கும் காது, அவர் பிரபஞ்சமனைத்தையும் சூழ்ந்து (வியாபித்துக்கொண்டு) நிற்கின்றார்."

(60) ஸர்வாநநசிரோக்ரீவ: ஸர்வபூதகுஹாசய:I ஸர்வவ்யாபீ ஸ பகவாந் தஸ்மாத் ஸர்வகத: சிவ:II

— சுவேதாசுவதரம், ௩. கக.

"அந்தப் பகவான் எங்கும் முகமுடையவரும், எங்கும் சிரசுடையரும், எங்கும் கழுத்துடையரும், சமஸ்த சேதனப்பிரபஞ்சத்தின் குகைக்கண்ணரும் சர்வவியாபகராயுமுள்ளார்; ஆகலின், சிவபிரான் சமஸ்தப் பிரபஞ்சங்களினும் பிரவேசித்துள்ளார்."

(61) யோ தேவோக்நௌ யோப்ஸு யோ விச்வம் புவநமாவிவேசI ய ஓஷதிஷு யோ வநஸ்பதிஷு தஸ்மை தேவாய நமோ நம:II

— சுவேதாசுவதரம், உ. கஎ.

§ சீவான்மா இறந்து பிறந்து உழல்கின்றான்; பரமான்மசிவபிரான் யாண்டும் வியாபித்து ஒரு பெற்றியராய் இருக்கின்றார்.

"எந்த (மஹா) தேவர் அக்கினியிலும், எவர் ஜலத்திலும், எவர் ஓஷதிகளினும், எவர் விருக்ஷங்களிலும், எவர் சமஸ்தப் பிரபஞ்ச புவனங்களிலும் வியாபித்திருக்கின்றாரோ, அந்த (மஹா) தேவர்க்குச் (சிவபிரானுக்கு) நமஸ்காரம் நமஸ்காரம்."

(62) ஏஷோ ஹ தேவ: ப்ரதிசோநுஸர்வா: பூர்வோ ஹ ஜாத: ஸ உ கர்ப்பே அந்த:। ஸ விஜாத: ஸஜநிஷ்யமாண: ப்ரத்யங்ஜநாஸ்திஷ்டதி ஸர்வதோ முக:॥

— சுவேதாசுவதரம், உ. கசு.

"இவர் எல்லாத் தேசங்களையும் வியாபித்த (மஹா) தேவர்; அவர் முன் ‡ பிறந்தார்; அவர் கர்ப்பத்துள் இருந்தார்; அவர் பிறந்திலர்; அவர் பின் பிறப்பார்; எங்கும் வியாபகராய் எல்லோர்க்கும் பின்னே நிற்கின்றார்."

(63) தத் வா ஏதததக்ஷரம் கார்க்யத்ருஷ்டம் த்ரஷ்ட்ரச்ருதம் ச்ரோத்ரமதம் மந்த்ரவிஜ்ஞாதம் விஜ்ஞாத்ரு நாந்யததோஸ்தி த்ரஷ்ட்ரு நாந்யததோஸ்தி ச்ரோத்ரு நாந்யததோஸ்தி மந்த்ரு நாந்யததோஸ்தி விஜ்ஞாத்ரு.........................।

— பிருகதாரணியம், ரூ. அ. கக.

"கார்க்கியே! அந்த அக்ஷரப்பிரஹ்மம் (சிவன்) (பிறரால்) காணப்படாதவராய்த் (தான்) காண்கின்றார்; கேட்கப்படாதவராய்க் கேட்கின்றார்; எண்ணப்படாதவராய் எண்ணுகின்றார்; அறியப்படாதவராய் அறிகின்றார்; தெரியப்படாதவராய்த் தெரிகின்றார்; அவரொழிந்து காண்கின்றவரும், அவரொழிந்து கேட்கின்றவரும், அவரொழிந்து எண்ணுகின்றவரும், அவரொழிந்து அறிகின்றவரும் இல்லை."

(64) ந த்ருஷ்டேர் த்ரஷ்டாரம் பச்யேர் ந ச்ருதே: ச்ரோதாரம் ச்ருணுயாத் ந மதேர் மந்தாரம் மந்வீதா ந விஜ்ஞாதேர் விஜ்ஞாதாரம் விஜாநீயா ஏஷ த ஆத்மாஸர்வாந்தர:।

— பிருகதாரணியம், ரூ. ச. உ.

‡ எங்கும் வியாபகராய்ப் பிறந்தவர்களோடும் பிறவாதவர்களோடும் தொடர்ந்திருப்பவராதலின். அவர் பிறந்தார் பிறப்பார் என ஈண்டுக் கூறப்பட்டது.

"பார்வையின் பார்ப்பவரைப் பார்க்கமாட்டாய்; கேட்பதின் கேட்பவரைக் கேட்கமாட்டாய்; உணர்ச்சியின் உணர்வினரை உணரமாட்டாய்; அறிவின் அறிஞரை அறியமாட்டாய்; இவர் தான் அனைத்துள்ளுமுள்ள உன் (பரம) ஆன்மா (சிவபிரான்)."

(65) அத்ருஷ்டோ த்ரஷ்டா ச்ருத: ச்ரோத்ராமதோமந்தா விஜ்ஞாதோ விஜ்ஞாதா நான்யோதோஸ்தி த்ரஷ்டாநான்யோ தோஸ்தி ச்ரோதா நான்யோதோஸ்தி மந்தா நான்யோ தோஸ்தி விஜ்ஞாதைஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:॥

— பிருகதாரணியம், ௩. ௭. ௨௩.

"(சிவபிரான்) காணப்படாதவராய்க் காண்பவரும், கேட்கப்படாதவராய்க் கேட்பவரும், உணரப்படாதவராய் உணர்பவரும், அறியப்படாதவராய் அறிபவருமாய் (உள்ளார்); அவரன்றிக் காண்பவரில்லை, அவரன்றிக் கேட்பவரில்லை, அவரன்றி நினைப்பவரில்லை, அவரன்றி அறிபவரில்லை, இவர்தான் உன் ஆன்மாவின் அந்தரியாமி சிவன்."

(66) தமாதேசமப்ராக்ஷ்ய:॥ யேநாச்ருதம் ச்ருதம் பவத்யமதம் மதம்விஜ்ஞாதம் விஜ்ஞாதம்............॥

— சாந்தோக்கியம், ௬. ௧. ௨, ௩.

"கேட்கப்படாததை எதனாற் கேட்கின்றோமோ, கருதப்படாததை எதனாற் கருதுகின்றோமோ, அறியப்படாததை எதனால் அறிகின்றோமோ, அந்த ஆதேசத்தை (அருளை) (எப்போதாயினும்) கேட்டனையா? (என்றார்.)"

(67) ப்ராணஸ்ய ப்ராணமுத சக்ஷுஷ: சக்ஷுருத ச்ரோத்ரஸ்ய ச்ரோத்ரம் மநஸோ யே மநோ விது:॥ தே நிசிக்யுர் ப்ரஹ்ம புராணமக்ரயம்॥

— பிருகதாரணியம், ௪. ௪. ௧௮.

"பிராணனுக்குப் பிராணனும், கண்ணுக்குக் கண்ணும், காதுக்குக் காதும், மனசுக்கு மனசாயுமுள்ளவரை அறிகின்றவர்கள் பழையோரும் தலைவருமாயுள்ள பரப்பிரஹ்மத்தை (சிவபிரானை) உணர்ந்தோராவர்."

(68) ச்ரோத்ரஸ்ய ச்ரோத்ரம் மநஸோ மநோ யத்வாசோ ஹவா சம் ஸ உ ப்ராணஸ்ய ப்ராண: சக்ஷுஷச்சக்ஷுரதிமுச்ய தீரா: ப்ரேத்யாஸ்மால்லோகாதம்ருதா பவந்தி।

— கேனம், உ.

"அவர் (மகாதேவர்) காதுக்குக் காதாயும், மனசுக்கு மனசாயும், வாக்குக்கு வாக்காயும், பிராணனுக்குப் பிராணனும், கண்ணுக்குக் கண்ணும் உள்ளாரென்று திண்ணிய அறிஞர் அறிந்து இந்த உலகத்தை விடுத்து நீங்குங்காற் சிவலோகத்திலே சிவசாரூப்பியமுற்றுச் சிவன்களாகின்றார்."

(69) அபாணிபாதோ ஜவநோ க்ரஹீதா பச்யத்யசக்ஷு: ஸ ச்ருணோத்யகர்ண:। ஸ வேத்தி வேத்யம் நச தஸ்யாஸ்தி வேத்தா தமாஹுரக்ர்யம் புருஷம் மஹாந்தம்॥

— சுவேதாசுவதரம், ந. கக.

"கை இல்லாமற் பற்றுபவரும், கால் இல்லாமல் விரைந்து செல்பவருமாகிய அவர் (சிவபிரான்) கண்ணின்றிப் பார்க்கின்றார்; காதின்றிக் கேட்கின்றார்; அறியற்பாலதை அறிகின்றார்; அவரை அறிந்தார் யாருமில்லை; அவரைத் தலைமையாகிய மஹாபுருஷர் எனக் கூறுகின்றார்கள்."

(70) ந தத்ர சக்ஷுர் கச்சதி ந வாக்கச்சதி நோ மநோ ந வித்மோ ந விஜாநீமோ யதைததநுசிஷ்யாத்।

— கேனம், ந.

"அவரிடத்திற் (சிவபெருமானிடத்திற்) கண் செல்லாது, வாக்குச் செல்லாது, மனசு செல்லாது, அவரை அறிகிலேம், சீடனுக்கு அவரை எங்ஙனம் உபதேசிக்கலாம் என்பதை உணர்கிலேம்."

(71) ஆஸீநோ தூரம் வ்ரஜதி சயாநோ யாதி ஸர்வத:।
கஸ்தம் மதாமதம் தேவம் மதந்யோ ஜ்ஞாதுமர்ஹதி।

— கடம், உ. உ0.

"இருப்பவராய்த் தூரத்தினராகின்றார், கிடப்பவராய் யாண்டுஞ் செல்கின்றார், (உலகத்துக்குரிய) துன்ப இன்பமிலராகிய தேவரை (சிவபெருமானை) என்னையன்றி யார் அறிதற்குரியராவர்."

(72) தமேஜதி தந்நைஜதி தத்தூரே தத்வதந்திகே ததந்தரஸ்ய ஸர்வஸ்ய தது ஸர்வஸ்யாஸ்ய பாஹ்யத:‌।

— ஈசாவாசியம், ரு.

"அது (பரப்பிரஹ்மம்-சிவபிரான்) அசைகின்றார், அசைகின்றிலர், அவர் தூரத்தினர், அங்ஙனம் சமீபத்தினர், அவர் அனைத்துள்ளும் உள்ளார், அவர் அனைத்துக்கும் புறத்துமுள்ளார்."

(73) ப்ருஹச்ச தத் திவ்யமசிந்த்யரூபம் ஸூக்ஷ்மாச்ச தத் ஸூக்ஷ்மதரம் விபாதி। தூராத்சுதூரே ததிஹாந்திகே ச பச்யத்ஸ்விஹைவ நிஹிதம் குஹாயாம்॥

— முண்டகம், ௩. க. எ.

"அது (பரப்பிரஹ்மம்-சிவபிரான்) பெரியர், திவ்யர், சிந்திக்க இயலாத ரூபத்தினர், சூக்குமத்தினும் அதிசூக்குமமாய் விளங்குகின்றவர், தூரத்திலும் தூரமாயுள்ளார், சமீபத்திலும் உள்ளார், அவரை இங்கும் பார்க்கின்றவர்களுக்கு இதயகுகையில் மறைந்துள்ளார்."

(74) ஈசாவாஸ்யமிதம் ஸர்வம் யத் கிஞ்ச ஜகத்யாம் ஜகத்। தேந த்யக்தேந புஞ்ஜீதா மாக்ருத: கஸ்ய ஸ்வித்தநம்॥

— ஈசாவாசியம், க.

"பிரபஞ்சத்தின்கண் எத்துணைச் சிறிது உளதோ, அவ்வனைத்துமாம் இப்பிரபஞ்சம் (காண்டவ) ஈசுவரராற் (சிவபெருமானாற்) காக்கற்பாலது; அப்பிரபஞ்சத்தின் (பற்றை) விடுதல்வாயிலாகச் (சிவானந்தப்) புசிக்க; எவருடைய பொருளையும் அவாவற்க."

(75) ந ப்ராணேந நாபாநேந மர்த்யோ ஜீவதி கச்சந। இதரேண து ஜீவந்தி யஸ்மிந்நேதாவுபாச்ரிதௌ॥

— கடம், ரு. ரு.

"எந்த மனிதனும் பிராணவாயுவினாலும் சீவிக்கவில்லை, அபானவாயுவினாலும் சீவிக்கவில்லை, எதிலே (பரப்பிரஹ்மத்திலே—சிவபிரானிலே) இவைகள் (வாயுக்கள்) பற்றியிருக்கின்றனவோ, (இவற்றுக்கு) வேறாகிய மற்றொருவராற் (சிவபிரானாற்) சீவிக்கின்றார்கள்."

76 ) நிஷ்களம் நிஷ்க்ரியம் சாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜநம்। அம்ருதஸ்ய பரம் ஸேதும் தக்தேந்தநமிவாநலம்॥

— சுவேதாசுவதரம், சு. கக.

(பாச)கலைகள் அற்றவரும் (தேவர்கட்குரிய) கிரியைகள் அற்றரும், சாந்தரும், கூறிருணுதவரும், மலமிலாதவரும், முத்திக்ப் பரமாகிய அணையாய் இருப்பவருமாகிய (சிவபிரான்) விறகைத் தஹிக்கும் அக்கினிபோன்றிருக்கின்றார்."

77) யஸ்மிந் த்யௌ: ப்ருதிவீ சாந்தரிக்ஷமோதம் மந: ஸஹ ப்ராணைச்ச ஸர்வை:। தமேவைகம் ஜாநத ஆத்மாநமந்யோ வாசோ விமுஞ்சத அம்ருதஸ்யைஷ ஸேது:॥

— முண்டகம், உ. உ. ரு.

எவரிடத்திலே (அண்டத்தின்பாலனவாகிய) சுவர்க்கமும், பூமிம், அந்தரிக்ஷமும், (பிண்டத்திலே) சமஸ்தப்பிராணன்களோடு ட மனசும் கோக்கப்பட்டிருக்கின்றனவோ, அவரையே ஆன்ரவாக அறிக; பிற வார்த்தைகளை விடுக; மோக்ஷத்துக்கு இவர்சேது."

78) உத்திஷ்டத ஜாக்ரத ப்ராப்யவராந் நிபோதத। க்ஷுரஸ்ய தாரா நிசிதா துரத்யயா துர்க்கம் பதஸ் தத் கவயோ வதந்தி॥

— கடம், ங. கச.

எழுந்திரு, விழித்திரு (பரப்பிரஹ்மசிவவித்துக்களிடத்தினிறு) வரங்களைப் பெற்று அறிந்துகொள்ளுதி; கத்தியின் கூரயானது கூரியது; (அதுபோல) அறிஞர்கள் அதனைப் (பரப்ஹ்மத்தை-சிவபிரானை) அடையும் வழி கஷ்டமென்கின்றனர்."

9) ஸ வா அயமாத்மா ஸர்வேஷாம் பூதாநாமதிபதி: ஸர்வேஷாம் பூதாநாம் ராஜா தத் யதா ரதநாபௌ ச ரதநேமௌ சாரா: ஸர்வே ஸமர்ப்பிதா ஏவமேவாஸ்மிந்நாத்மநி ஸர்வாணி பூதாநி ஸர்வே தேவா: ஸர்வே லோகா: ஸர்வே ப்ராணா: ஸர்வ ஏத ஆத்மந: ஸமர்ப்பிதா:।

— பிருகதாரணியம், உ. ரு. கரு.

"அந்தப் பரமான்மா (சிவபிரான்) சமஸ்த சேதனாசேதனப்பொருள்களுக்கும் அதிபதி; சர்வசேதனாசேதனப்பொருள்களுக்கும் இராஜா; தேரின் நாபியில் ஆரங்கள் யாவும் அர்ப்பிக்கப்பட்டாற்போல, இந்தப் பரமான்மசிவபிரானிலே சமஸ்த பூதங்களும், சமஸ்த தேவர்களும், சமஸ்தலோகங்களும், சமஸ்தபிராணிகளும், சமஸ்த ஆன்மாக்களும் அர்ப்பிக்கப்பட்டுள்ளன."

(80) த்வே வாவ ப்ரஹ்மணோ ரூபே மூர்த்தஞ் சைவாமூர்த்தஞ்ச மர்த்யஞ்சாம்ருதஞ்ச ஸ்திதஞ்ச யச்ச ஸச்ச த்யச்ச।

— பிருகதாரணியம், உ. ௩. க.

"பரப்பிரஹ்மத்தினது (சிவபிரானது) ரூபம் மூர்த்தமும் அமூர்த்தமும் என இருதிறப்படும்; ஒன்று (பிரபஞ்சமூர்த்தம்) அழிவது, மற்றொன்று (பிரபஞ்சரூபமல்லாதது) அழிவிலாதது; ஒன்று நிலையிலாதது; மற்றது நிலையுள்ளது; ஒன்று அசத்து (த்யத்) மற்றொன்று சத்து"

(81) அதாத ஆதேசோ நேதி நேதி நஹ்யேதஸ்மாதிதி நேத்யந்யத் பரமஸ்த்யத நாமதேயம் ஸத்யஸ்ய ஸத்யமிதி ப்ராணா வை ஸத்யம் தேஷாமேஷ ஸத்யம்।

— பிருகதாரணியம், உ. ௩. ௬.

"பின்னர் ஆதலின் 'அன்று அன்று' என்னும் உபதேசம் எய்துகின்றது; இங்ஙனமன்று என்று கூறப்பட்டவரினும் பரமானது ஒன்றுமில்லை; (ஆதலின்) சத்தியத்தின் சத்தியம் (பசுபதி) என்னும் நாமதேயம் (அவர்க்குப்) பொருந்தும்; உயிர்கள்தான் சத்தியம்; இவைகளுள்ளே அவரே சத்தியம்."

(82) ஸ ஏஷ நேதி நேத்யாத்மாக்ருஹ்யோ நஹி க்ருஹ்யதே சீர்யோ நஹி சீர்யதே ஸங்கோ நஹி ஸஜ்யதே। அஸிதோ நவ்யததே நரிஷ்யதி।

— பிருகதாரணியம், ௩. ௯. உ௬.

"இவர் (பரமான்மா-சிவபிரான்) ‡ இங்ஙனம் அல்லர், இங்ஙனம் அல்லர் என்று கூறற்பாலராகின்றார்; அவர் அக்கிராஹ்யராய்க் கிரகிக்கப்பட்டார்; அவர் அழிவுறாதவராய் அழிவுறார்; அவர் அசங்கராய் (Unattached) சங்கராகார் கட்டுண்ணப்பட்டவராய் வருந்தார்; தவறார்."

‡ இக்கருத்துக்கொண்டே திருவிளையாடற்புராணப் பாயிரப்படலத்தில் "அல்லையீதல்லையீது" எனக் கூறப்பட்டது.

(83) ஸ த்வமக்நிம் ஸ்வர்க்யமத்ய்யேஷி ம்ருத்யோ ப்ரப்ரூஹி தம் ச்ரத்ததாநாய மஹ்யம்। ஸ்வர்க்கலோகா அம்ருதத்வம் பஜந்தே।

— கடம், க. கங.

"யமனே! சுவர்க்கத்துக்குச் (சிவலோகத்துக்குக்) கொண்டுய்க்கும் (சிவ)* அக்கினியை அறிவீர்; அதனைச் (சிவாக்கினியை) அன்புடையனாகிய எனக்குக் கூறுதிர்; சிவலோகத்தினர் சிவத்துவத்தை அடைகின்றார்கள்."

(84) ப்ர தே ப்ரவீமி தது மே நிபோத ஸ்வர்க்ய மக்நிம் நசிகேத: ப்ரஜாநந்। அநந்தலோகாப்திமதோ ப்ரதிஷ்டாம் வித்தி த்வமேதாம் நிஹிதம் குஹாயாம்॥

— கடம், க. கச.

"நசிகேதசே! அதனை உனக்கு நன்கு கூறுவல்; என்னிடமிருந்து (அதனை) அறிகுதி; சுவர்க்கத்துக்குரிய (சிவாக்கினியை) அறிந்தபோது (அறிஞரது இதய) குகைக்கண்ணதாயும் முடிவிறந்த லோகங்களை அடைதற்கு ஏதுவாயதுமாகிய பிரதிஷ்டையை அறிகுதி."

(85) ஸவா ஏஷ மஹாநஜ ஆத்மா யோயம் விஜ்ஞாநமய: ப்ராணேஷு ய ஏஷோந்தர்ஹ்ருதய ஆகாசஸ் தஸ்மிந் சேதே ஸர்வஸ்ய வசி ஸர்வஸ்யேசாநஸ் ஸர்வஸ்யாதிபதி: ஸ ந ஸாதுநா கர்மணா பூயாந் நோ ஏவாஸாதுநா கநீயாந் ஏஷ ஸர்வேச்வர ஏஷ பூதாதிபதிரேஷ பூதபால ஏஷ ஸேதுர் விதரண லோகாநாமஸம்பேதாய।

— பிருகதாரணியம், ச. ச. உ.உ.

"இவர் (சிவபிரான்) பெரியரும், மகானும், பிறவாதவருமாகிய பரமான்மா; இவர் விஞ்ஞானமயர் (அருண்மயர்); பிராணன்களாற் சூழப்பட்டு இதயாகாயத்துள்ளார்; இந்த ஆகாயத்திலே அனைத்தையும் வசிகரிப்பவரும், அனைத்துக்கும் ஈசானரும்

---

* செஞ்சடைக்கற்றைமுற்றத்திளநிலாவெறிக்குஞ்சென்னி
நஞ்சடைகண்டனாரைக்காணலாநறவநாறு
மஞ்சடைசோலைத்தில்லைமல்குசிற்றம்பலத்தே
துஞ்சடையிருள்கிழியத்துளங்கெரியாடுமாறே.

— தேவாரம்.

(தாண்டவேசுவரரும்), அனைத்துக்கும் அதிபதியுமாயினர் உள்ளார்; அவர் நற்செய்கைகளினால் (நம்மைப்போற்) பெரியருமாகார்; தீச்செய்கைகளால் (நம்மைப்போல) இழிஞருமாகார்; இவர் சர்வேசுவரர்; இவர் சேதனசேதனப் பிரபஞ்சத்துக்கு அதிபதி; இவர்சேதனசேதனப்பொருள்களைக் காப்பவர்; பிரபஞ்சமனைத்தும் பேதியாவண்ணம் அவர் அணையாயும் எல்லையாயும் உள்ளார்."

(86) பாதோஸ்ய ஸர்வபூதாநி த்ரியாதஸ்யாம்ருதம் திவி।

— சாந்தோக்கியம், ௩. ௧௨. ௬.

"சமஸ்த சேதனசேதனப் பிரபஞ்சப்பொருள்களும் அவரது பாதம்; அவரது அமிர்தமாகிய மூன்று பாதம் ஆகாயத்திலே."

(87) யஸ்மாதர்வாக் ஸம்வத்ஸரோஹோபி: பரிவர்த்ததே। தத் தேவா ஜ்யோதிஷாம் ஜ்யோதிராயுர்ஹோபாஸதேம்ருதம்॥

— பிருகதாரணியம், ௪. ௪. ௧௬.

"எவருக்குப் பின் தினங்களோடு வருஷங்களும் சுற்றுகின்றனவோ, அவரைத் தேவர்கள் சோதிக்குட் சோதி எனவும், ஆயுசு எனவும், சிவன் எனவுங்கொண்டு வழிபடுகின்றார்கள்."

(88) அத யதத: பரோ திவோ ஜ்யோதிர் தீப்யதே விச்வத: ப்ருஷ்டேஷு ஸர்வத: ப்ருஷ்டேஷ்வநுத்தமேஷூத்தமேஷு லோகேஷ்விதம் வாவ தத் யதிதமஸ்மிந்நந்த: புருஷே ஜ்யோதி:।

— சாந்தோக்கியம், ௩. ௧௩. ௭.

"இதற்குமேற் பிறிதோர் உலகம் இல்லை எனற்பாலதாம் உயர்வாகிய உலகத்தில் ஒவ்வொன்றுக்கும் மேலாய் அனைத்துக்கும் மேலாய், இந்த ஆகாயத்துக்கும் மேலாய் எங்கும் பிரகாசிக்கின்ற சோதியே ஆன்மாவுக்குள்ளே உள்ள (சிவபிரானாகிய) சோதி."

(89) ஹிரண்மயே பரே கோசே விரஜம் ப்ரஹ்ம நிஷ்களம்। தச் சுப்ராம் ஜ்யோதிஷாம் ஜ்யோதிஸ் தத்யதாத்மவிதோ விது:।

— முண்டகம், ௨. ௨. ௯.

"மேலாகிய *இரண்மயகோசத்திலே துகளிலாதவரும் நிஷ்களரு மாகிய சிவபிரான் (பிரஹ்மம்) இருக்கின்றார்; அவர் (அது) தூய தாயும், அவர் (அது) சோதிக்குட் சோதியாயுமுள்ள யாதொரு வரை (யாதொன்றை) (பரம) ஆத்துமவித்துக்கள் அறிகின்றார் கள்."

(90) ஏகோ வசீ நிஷ்க்ரியாணும் பஹுநாமேகம் பீஜம் பஹுதா ய: கரோதி। தமாத்மஸ்தம் யேநுபச்யந்தி தீராஸ் தேஷாம் ஸுகம் சாச்வதம் நேதரேஷாம்॥

— சுவேதாசுவதரம், சு. கஉ.

"ஏகரும், தொழிலில்லாத அநேகரை வசீகரிப்பவரும், ஒரே வித் தை அநேகமாகச் செய்பவருமாகிய (யாதொருவரை) சிவபிரானை ஆன்மாவிலே (அருட்சத்தியோடுகூட) இருப்பவராக எந்த அறி ஞர்கள் காண்கின்றார்களோ, அவர்களுக்கே நித்தியானந்தம்; அது மற்றையோர்க்கின்றாம்."

(91) நவ த்வாரே புரே தேஹே ஹம்ஸோ லேலாயதே பஹி:। வசீ ஸர்வஸ்ய லோகஸ்ய ஸ்தாவரஸ்ய சரஸ்ய ச॥

— சுவேதாசுவதரம், ந. கஅ.

"ஒன்பது வாசல்களையுடைய சரீரத்தின்கண்ணே ஹம்சர் (சதா சிவப்பிரானர்) புறத்தே ஸ்தாவரமும் ஜங்கமமுமாகிய சமஸ்த லோகங்களை வசீகரித்துச் சஞ்சரிக்கின்றார்."

(92) ஏகோ வசீ ஸர்வபூதாந்தராத்மா ஏகம் ரூபம் பஹுதா ய: கரோதி। தமாத்மஸ்தம் யேநுபச்யந்தி தீராஸ் தேஷாம் சுகம் சாச்வதம் நேதரேஷாம்॥

— கடம், ரு. கஉ.

"ஏகராயும், வசீகரிப்பவராயும், சேதனாசேதனப் பிரபஞ்சத்து க்கு அந்தரியாமியாயும், ஒரே (பீஜ) ரூபத்தை அநேகமாகச் செய்பவராயுமுள்ள யாதொருவர் (சிவபிரான்) (அருட்சத்தி யோடு கூட) ஆன்மாவில் இருப்பவராக எந்தத் திண்ணிய அறி ஞர்கள் காண்கின்றார்களோ, அவர்களுக்கு நித்தியானந்தம், மற் றையோர்க்கின்று."

* இரண்மயகோசம் என்பது சிதம்பரம்.

(93) ஏஷ ஸர்வேச்வர ஏஷ ஸர்வஜ்ஞ ஏஷோந்தர்யாம்யேஷ யோநி: ஸர்வஸ்ய ப்ரபவாப்யயௌ ஹி பூதாநாம்॥

— மாண்டூக்கியம், ௬.

"இவர் (சிவபிரான்) சர்வேசுவரர், இவர் சர்வஞ்ஞர், இவர் அந்தரியாமி, இவர் அனைத்துக்கும் காரணர், பிராணிகளின் பிறப்பும் இறப்பும் (இவரிலேதான்.)"

(94) யஸ்மாத் பரம் நாபரமஸ்தி கிஞ்சித் யஸ்மாந்நாணீயோ ந ஜ்யாயோஸ்தி கச்சித்। வ்ருக்ஷ இவ ஸ்தப்தோ திவி திஷ்டத்யேகஸ் தேநேதம் பூர்ணம் புருஷேண ஸர்வம்॥

— சுவேதாசுவதரம், ௩. ௯.

"எவரினும் பரமாயதொன்றில்லையோ, எவரினும் அபரமாயதொன்றில்லையோ, அவருக்கு அணுவானதொன்றுமில்லையோ, அவருக்கு மகத்தானதொன்றில்லையோ அந்தப் புருஷராற் (சிவபிரானாற்) பிரபஞ்சமனைத்தும் வியாபிக்கப்பட்டன."

(95) அணோரணீயாந் மஹதோ மஹீயாத்மா குஹாயாம் நிஹிதோஸ்ய ஜந்தோ:। தமக்ரது: பச்யதி வீதசோகோ தாது ப்ரஸாதாந் மஹிமாநமீசம்॥

— சுவேதாசுவதரம், ௩. ௨௦.

"அணுவுக்கு அணுவாயும், மகத்துக்கு மகத்தாயுமுள்ள ஆன்மா (சிவபிரான்) இந்தச் செந்துவின் குகைக்கண்ணே அமர்ந்துள்ளார்; 'ஆசை யற்றவரும், (சர்வஞ்ஞாதி) மகிமைக்குணத்தையுடையவரும், ஈசருமாகிய அவரைச் (சிவபிரானை) (அனைத்தையும் தாங்கும்) தாதாவுடைய (சிவபிரானுடைய) அருளாற் கவலை நீங்கி (அநுபவத்திற்) பார்க்கின்றான்."

(96) அணோரணீயாந் மஹதோ மஹீயாநாத்மாஸ்ய ஜந்தோர் நிஹிதோ குஹாயாம்। தமக்ரது: பச்யதி வீதசோகோ தாது: ப்ரஸாதாந் மஹிமாநமாத்மந:॥

— கடம், ௨. ௨௦.

"அணுவுக்கு அணுவாய், மகத்துக்கு மகத்தாயுள்ள ஆன்மா (சிவபிரான்) இந்தச் செந்துவின் இதயகுகையில் உளராயினர்; ஆசையற்றவனாய் (அனைத்தையும் தாங்கும்) தாதாவுடைய (சிவ

பிரானுடைய) திருவருளினலே ஆன்மாவினது (சிவபிரானது) அந்தச் (சர்வஞ்ஞத்துவாதி) மகிமைக்குணத்தைச் சோகமிலனாய்ப் பார்க்கின்றான்”

(97) யதர்ச்சிமத்யதணுப்யோணுச யஸ்மிந் லோகா நிஹிதா லோகிநச்ச। ததேததக்ஷரம் ப்ரஹ்ம ஸ ப்ராணஸ் தது வாங்மந:। ததேதத் ஸத்யம் ததம்ருதம் தத் வேத்தவ்யம் ஸோம்ய வித்தி॥

— முண்டகம், ௨. ௨. ௨.

“சோமிய! எது (பிரஹ்மம்) ஒளியுடையதோ, எது அணுவில் அணுவோ, எதிலே உலகங்களும், உலகினரும் வைக்கப்பட்டிருக்கின்றார்களோ, அது அக்ஷரப்பிரஹ்மம் (சிவபிரான்); அது (சிவபிரான்) அந்தப் பிராணனுயும், வாக்காயும், மனசாயும் (உள்ளது); அது சத்தியம், அது சிவன், அது அறியற்பாற்று, அதனை அறிதி.”

(98) ந நரேணாவரேண ப்ரோக்த ஏஷ ஸுவிஜ்ஞேயோ பஹுதா சிந்த்யமாந:। அநந்யப்ரோக்தே கதிரத்ரநாஸ்த்யணீயாந் ஹ்யதர்க்யமணுப்ரமாணாத்॥

— கடம், ௨. அ.

“அநேக பிரகாரமாகச் சிந்திக்கற்பாலராகிய இவர் (ஆன்மா-சிவபிரான்) தாழ்ந்த (அறிவினையுடைய)வனால் உணர்த்தப்பட்டபோது அவர் நன்கு அறியப்படாதவராவர்; (ஆன்மாவைப் பரமான்மாவாகிய சிவபிரான் சரீரமாகக்கொண்டார் என்று) அனன்னியமாக (ஆசாரியரால்) கூறப்பட்டபோது (எய்தும் மேலாகிய) கதியானது (பரமான்மாவோடு சிவான்மா மஹாகாச கடாகாசம்போலக் கலக்குமென்று அபேதமாகக் கூறுமிடத்து) எய்தாதாகும்; (சிவபிரான்) அணுப்பரிமாணத்தைப்பார்க்கினும் அணுவினராய்த் தர்க்கிக்கப்படாதவரன்றோ.”

(99) இஹ சேதசகத் போத்தும் ப்ராக் சரீரஸ்ய விஸ்ரஸ:। தத: ஸர்க்கேஷு லோகேஷு சரீரத்வாய கல்பதே॥

— கடம், ௬. ௪.

“சரீரம் மடிந்து போதற்குமுன்னே, ஈண்டு (பரப்பிரஹ்ம சிவபிரானை) அறிதற்குச் சக்தியிலனாய்ப் போவானாயின், பின்னர் அவன் (பிருதிவியாதி) உலகங்களிற் (சரீரத்தை) சென்மத்தை அடைகின்றான்.”

(100) தஸ்ய ஹவா ஏதஸ்யாத்மநோ வைச்வாநரஸ்ய மூர்
தைவ ஸுதேஜா: சக்ஷுர் விச்வரூப: ப்ராண: ப்ருத
வர்த்மாத்மா ஸந்தேஹோ பஹுலோபஸ்திரேவ ரயி
ப்ருதிவ்யேவ பாதௌ...।

—சாந்தோக்கியம், ரு. கஅ. உ.

"அந்த வைசுவானர ஆன்மாவுக்குச் (சிவபிரானுக்குத்) தலை
சுதேஜஸ் (நல்லொளி); கண் விசுவரூபம்; பிராணன் பிருதக்வர்
தமானம் (வேறுயவழி); தேஹம் பஹுலம் (நிறைவு); ஜலாச
மே செல்வம்; அடிகளே பூமி."

(101) அயமக்நிர் வைச்வாநரோ யோயமந்த: புருஷே யேநே
மந்நம் பச்யதே யதிதமத்யதே தஸ்யைஷ கோஷோ பவ
யமேதத் கர்ணாவபிதாய ச்ருணோதி ஸ யதோத்க்ரமிஷ்ய
பவதி நைநம் கோஷம் ச்ருணோதி।

— பிருகதாரணியம், ரு. கூ. க.

"உண்ணப்பட்ட அன்னத்தை ஜீர்ணமாக்கற்பாலதாய (மனி
னுள்ளேயுள்ளது) இந்த வைசுவாநராக்கினி (சிவபிரான்); ஒ
வன் தன் காதுகளை மூடுங்கால் அவன் கேட்பது அதன் ஒலியே
அவன் இவ்வாழ்வைவிட்டு நீங்குங்கால், அவன் அவ்வொலியை
கேட்பானல்லன்."

(102) அக்நிர் மூர்த்தா சக்ஷுஷீ சந்த்ரஸூர்யௌ திசச்ச்ரோ
ரே வாக்விவ்ருதாச்ச வேதா:। வாயு: ப்ராணோ ஹ்ரு
யம் விச்வமஸ்ய பத்ப்யாம் ப்ருதிவீ ஹ்யேஷ ஸர்வபூதாந்
ராத்மா।

— முண்டகம், உ. க. ச.

"(வைசுவாநரபரப்பிரஹ்மசிவபிரானுக்கு) அக்கினி தலை, சூரி
சந்திரர் கண்கள், திக்குகள் செவி, வாக்கினால் வெளிப்பட்ட
வேதங்கள், இவருக்குப் பிராணன் காற்று, அனைத்தும் அவ
இருதயம், பாதங்கள் பூமி, அவர் சமஸ்த சேதனசேதனப்பி
பஞ்சத்துக்கும் அந்தரான்மா."

(103) ந ஹவா அஸ்மா உதேதி ந நிம்லோசதி ஸக்ருத் தி
ஹை வாஸ்மை பவதி ய ஏதாமேவம் ப்ரஹ்மோபநிஷத
வேத।

— சாந்தோக்கியம், ரு, கக. ரு.

"‡ (சூரியன்) உதிப்பதும் இல்லை அஸ்தமிப்பதும் இல்லை ன்னும் பிரஹ்மரஹசியத்தை அறிகின்றவனுக்கு ஒரேமுறை ற் பகல்தான்."

04) ய ஏஷோக்ஷிணி புருஷோ த்ருச்யத ஏஷ ஆத்மேதி ஹோ வாசைததம்ருதமபயமேதத் ப்ரஹ்ம।

— சாந்தோக்கியம், ச. கரு. க.

இவர் கண்ணுள்ளே புருஷராகக் காணப்படுகின்றார்; இவர் ரம) ஆன்மா; இவர் சிவன்; பயமிலாதவர்; இவர் பிரஹ்மம்."

05) ஏஷோக்ஷிணி புருஷோ த்ருச்யத ஏஷ ஆத்மா।

— சாந்தோக்கியம், அ. எ. ச.

ண்ணுட் புருஷனாகக் காணப்படும் இவர் (பரம) ஆன்மா (சிவ ான்)."

06) ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே ஹிரண்யச்மச்ருர் ஹிரண்யகேச ஆப்ரணகாத் ஸர்வ ஏவ சுவர்ண:। தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவாக்ஷிணீ।

— சாந்தோக்கியம், க. சு. சு, எ.

பாற்முடியோடும், பொற்கேசத்தோடும், நகந்தொடுத்துமுழு யும் பொன்வண்ணராய் (கபி எனப்படும்) சூரியனால் § விக மாய புண்டரீகம்போலும் இரு கண்களுடையராய், இந்தச் ரியமத்தியிலே பொன்வடிவினராகிய இந்தப்புருஷர் (சிவபி ர்) காணப்படுகின்றார்."

07) அம்ருதோ ஹிரண்மய:।

— தைத்திரீயம், க. சு. க.

---

‡ ஈண்டுக் கூறப்பட்ட சூரியன் யாவரென்பதை நீலகண்ட சைவ ாஷ்யத்து க. ௧. ௧உ-ம் சூத்திரத்தின் கீழும், குறிப்பினுங் காண்க.

§ விகசிதமாய புண்டரீகம்போலும் இரு கண்களுடையர் எனவே ன்றாவது நெற்றிக்கண் முகுளித புண்டரீகசுபாவமுடையது எனப் ப்பட்டது.

* ரவிமண்டல மத்யஸ்தம் த்யாயேச் சாந்தம் ஸதாசிவம்।

"ரவிமண்டல மத்தியிலுள்ள சாந்தராகிய (தாண்டவேசுவர) சதாசிவ தியானிக்க" என்று சூக்குமாகமம் கூறுகின்றது.

"சிவபிரான் பொன்வண்ணர்."

(108) மனோமயோயம் புருஷோ பாஸ்ஸத்யஸ் தஸ்மிந்நந்தர்ஹ்
ருதயே யதா வ்ரீஹிர் வா யவோ வா ஸ ஏஷ ஸர்வஸ்யே
சாந: ஸர்வஸ்யாதிபதி: ஸர்வமிதம் ப்ரசாஸ்தி யதிதம்
கிஞ்சl

— பிருகதாரணியம், ரு. சு. க.

"ஞானமயராகிய இந்த (மஹா) புருஷர் (சிவபிரான்) இதயத்
துள்ளே நெல்லையேனும், யவையையேனும் நிகர்த்துள்ளார்;
இவர் அனைத்துக்கும் ஈசானர்; அனைத்துக்கும் அதிபதி; எதெ
துண்டோ அததையெல்லாம் ஆளுகின்றார்."

(109) ஆவிஸ் ஸந்நிஹிதம் குஹாசரந் நாம மஹத் பதமத்ரை
தத் ஸமர்ப்பிதம்l ஏஜத் ப்ராணந் நிமஷச்ச யதேதஜ் ஜா
நத ஸதஸத் வரேண்யம் பரம்l விஜ்ஞாநாத் யத் வரிஷ்டம்
ப்ரஜாநாம்ll

— முண்டகம், உ. உ. க.

"(இதய) குகையின்கண்ணே சரித்துக்கொண்டிருக்கும் (பரப
பிரஹ்மசிவபிரானது) பெரிய திருவடியானது (யோகிகட்குச்
சாந்நித்தியமாய்ப் புலப்படுகின்றது; ஒவ்வொன்றும் அதிலே
சமர்ப்பிக்கப்பட்டுள்ளது; இது சத்து அசத்துக்குப் (பசுபாச
கட்குச்) சிரேஷ்டமாயும், செந்துக்களுடைய அறிவுக்கு எட
டாததாயுமாகிச் சரிப்பதும் சுவாசிப்பதும் உறங்குவதுமாகி
ஒவ்வொன்றுக்கும் நிலையாயும் உள்ளது என அறிதி."

(110) யஸ்து விஜ்ஞாநவாந் பவதி ஸமநஸ்கஸ் ஸதா சுசி:l ஸ
தத் பதமாப்நோதி யஸ்மாத் பூயோ ந ஜாயதேll

—கடம், ங. அ.

"எவன் அறிவுடையனாய், அருளோடு கூடினவனாய், எஞ்ஞா
றும் சுசி யுடையனாயிருக்கின்றானோ, பின்னர்ப் பிறவி கொடா
அவருடைய (சிவனுருடைய ஞானாகாய) திருவடியை அடை
கின்றான்."

(111) தமீசாநம் ஜகதஸ் தஸ்துஷஸ் பதிம்l

— இருக்குவேதம், க. அகூ. ரு.

"நிலையியற் பிரபஞ்சத்துக்குப் பதியாகிய ஈசானரை (தாண
வேசுவரனை) (காக்கும்பொருட்டு) அழைக்கின்றோம்."

ஒன்பதாவது

# பராசத்திப்பிரகரணம்

[இப்பிரகரணம் தாண்டவேசுவர சிவபிரானினின்று வேறுரூத பரா சத்தியாரையுற்றுக் கூறுகின்றது.]

(1) ப்ரஹ்மஹ தேவேப்யோ விஜிக்யே தஸ்ய ஹ ப்ரஹ்மணோ விஜயே தேவா அமஹீயந்த த ஐக்ஷந்தாஸ்மாகமேவாயம் விஜயோஸ்மாகமேவாயம் மஹிமேதி

— கேநோபநிடதம், கச.

"தேவர்கள் பொருட்டுத் (தோன்றாது நின்று) பிரஹ்மம் (சிவ பிரான்) செயித்தார்; அந்தச் சிவபிரானது வெல்வியிலே தே வர்கள் மகிழ்ச்சிகொண்டார்கள்; அவர்கள் அந்த வெல்வி (சிவ பிரானுடையது என்று கொள்ளாது) எங்களுடையது, இந்த மகி மை எங்களுடையது என நினைந்தார்கள்."

(2) தத்தைஷாம் விஜஜ்ஞௌ தேப்யோ ஹ ப்ராதுர் பபூவ தந்ந வ்யஜாநந்த கிமிதம் யக்ஷமிதி

— கேநம், கரு.

"பிரஹ்மம் (சிவபிரான்) அவர்கள் (அறியாமையைத்) தெரிந்து கொண்டு, அவர்கள்பொருட்டு (யக்ஷரூபராக) ஆவிர்ப்பவித்தார்; அவர்கள் அதனைப் (பிரஹ்மத்தை) அறியமாட்டாது, இஃதென் னை, யக்ஷர் என்றார்கள்."

(3) தேக்நிமப்ருவந் ஜாதவேத ஏதத் விஜாநீஹி கிமேதத் யக்ஷ மிதி ததேதி

— கேநம், கசா.

"அவர்கள் (தேவர்கள்) அக்கினிதேவனை நோக்கி, அக்கினியே இந்த யக்ஷர் யார் எனப் பார் என்று கூறினர்; அவன் அங்ஙன மாகுக என்றான்."

(4) ததப்யத்ரவத் தமப்யவதத் கோசித்யக்நிர் வா அஹமஸ் மீத்யப்ரவீஜ் ஜாதவேதா வா அஹமஸ்மீதி

— கேநம், கஎ.

"(அக்கினிதேவன் அவர் எதிரே) ஓடிப்போனான்; அவர் அவனை நோக்கி, நீ யார் என்று கேட்டார்; அதற்கு அவன் நான் ஜாத வேதசே (அக்கினியே) என்றான்."

(5) தஸ்மிந் த்வயி கிம் வீர்யமித்யபீதம் ஸர்வம் தஹேயம்| யதி தம் ப்ருதிவ்யாமிதி|

—கேநம், கஅ.

"அவ்வியல்பினனாகிய உன்னிடத்தில் யாது வன்மை (உளது)? என்றார் (யக்ஷர்); (அதற்கு அவன்) பூமியில் எதெது உண்டோ அதனை எல்லாம் தகிக்கும் வன்மையுடையேன் என்றான்."

(6) தஸ்மை த்ருணம் நிததாவேதத் தஹேதி ததுபப்ரேயாய ஸர்வஜவேந தந்ந சசாக தக்தும் ஸ தத ஏவ நிவவ்ருதே நைததசகம் விஜ்ஞாதும் யதேதத் யக்ஷமிதி|

—கேநம், கக.

"(யக்ஷர்) அவன் எதிரே துரும்பொன்றை நிறுவி, இதனைத் தகி என்றார்; அவன் தனக்குள்ள முழுவன்மையோடு நெருங்கியும் அதனை தகிக்கமுடியவில்லை; பின் அவன் அங்குநின்றும் மீண்டு போய் அந்த யக்ஷர் யாரென்று அறிய இயலவில்லை என்றான்."

(7) அத வாயுமப்ருவந் வாயவேதத் விஜாநீஹி கிமேதத் யக்ஷமிதி ததேதி|

— கேநம், உ௦.

"பின் (அவர்கள்) வாயுவை (நோக்கி) வாயுவே! இந்த யக்ஷர் யார்? என்று அறிதி என்றார்கள்; அங்ஙனமாகுக என்றான்."

(8) தததப்யத்ரவத் தமப்யவதத் கோசீதி வாயுர் வா அஹமஸ்மீத்யப்ரவீந் மாதரிச்வா வா அஹமஸ்மீதி|

—கேநம், உக.

"அவன் அவர்க்கு எதிரே ஓடினான்; அவர் அவனை நோக்கி நீ யார்? என்றார்; அதற்கு அவன் நான் வாயு, நான் மாதரிச்வான் என்றான்."

(9) தஸ்மிந் த்வயி கிம் வீர்யமித்யபீதம் ஸர்வமாததீயம் யதிதம் ப்ருதிவ்யாமிதி|

— கேநம், உஉ.

"அவ்வியல்பினனாகிய உன்னிடத்தில் யாது வன்மை உளது? என்றார் (யக்ஷர்); (வாயு அதற்கு) பிருதிவியில் எதெது உண்டோ, அதனையெல்லாம் கிரகித்துவிடுவேன் என்றான்."

(10) தஸ்மை த்ருணம் நிததாவேததாதத்ஸ்வேதி ததுபப்ரே யாய ஸர்வஜவேந தந்ந சசாகாதாதும் ஸ தத ஏவ நிவவ்ரு தே நைததசகம் விஜ்ஞாதும் யதேதத் யக்ஷமிதி।

—கேநம், உ௩.

"(யக்ஷர்) அவன் எதிரே துரும்பொன்றை நிறுவி, இதனைக் கிரகி என்றார்; அவன் முழுவேகத்தோடு நெருங்கியும் அதனைக் கிர கிக்க முடியவில்லை; பின் அவன் அங்கு நின்றும் போய் அந்த யக்ஷர் யார் என்றறிய இயலவில்லை என்றான்."

(11) அதேந்த்ரமப்ருவந் மகவந்நேதத் விஜாநீஹி கிமேதத் யக்ஷ மிதி ததேதி ததப்யத்ரவத் தஸ்மாத் திரோததே।

—கேநம், உ௪.

"பின்னர்த் (தேவர்கள்) இந்திரனை (நோக்கி) இந்த யக்ஷர் யார்? என அறிதி என்றார்கள்; அவ்விந்திரன் அங்ஙனமே ஆகுக என்று கூறி அவர்க்கெதிரே கடுகினான்; அவர் அங்குநின்றும் அந்தர்த்தானமாயினர்."

(13) ஸ தஸ்மிந்நேவாகாசே ஸ்த்ரியமாஜகாமபஹுசோபமா நாமுமாம் ஹைமவதீம் தாம் ஹோவாச கிமேதத் யக்ஷமிதி।

— கேநம், உ௬.

"அந்த இந்திரன் அவ்வாகாசத்திலே மிகுதியும் அழகினையுடை யரும், (இமயமலையரசன் புதல்வியாதலின்) ஐமவதியும் ஸ்திரியு மாயுள்ள உமாதேவியாரை அடைந்தான்; அவரை நோக்கி, (இந் திரன்) இந்த யக்ஷர் யார்? என்று கேட்டான்."

(14) ஸா ப்ரஹ்மேதி ஹோவாச ப்ரஹ்மணோவா ஏதத் விஜயே மஹீயத்வமிதி ததோ ஹைவ விதாஞ்சகார ப்ரஹ்மேதி।

— கேநம், உ௯.

"(அதற்கு) உமாதேவியார் (யக்ஷராய் வந்தவர்) பரப்பிரஹ்மம் (சிவபிரான்) என்றார்; பிரஹ்மத்தின் வெல்வியிலே நீங்கள் மகி மையுடையராகின்றீர்கள் என்றார்; அதன்பின், அவன் (யக்ஷ ரூபமாயிருந்த) அவர் பிரஹ்மம் என அறிந்துகொண்டான்."

(15) தஸ்மாத் வா ஏதே தேவா அதிதராமிவாந்யாந் தேவாந் யதக்நிர் வாயுரிந்த்ரஸ்தேஹ்யேநம் நேதிஷ்டம் பஸ்பர்சுஸ் தேஹ்யேநத் ப்ரதமோ விதாஞ்சகார ப்ரஹ்மேதி।

— கேநம், உ௭.

"அதனால் அக்கினி வாயு இந்திரன் என்னும் இந்தத் தேவர்கள் எஞ்சிய தேவர்களினும் சிறந்தவர்களைப் போன்றிருக்கின்றார்கள்; அவர்கள் மிகச் சமீபத்திருந்த அவரை (யக்ஷரூபசிவபிரானைத்) தீண்டினார்கள்; அவரை அவர்கள் அறிந்துகொண்டாராகலின்."

(16) தஸ்மாத் வா இந்த்ரோதிதராமிவாந்யாந் தேவாந் ஸஹ்யேநம் நேதிஷ்டம் பஸ்பர்ச ஸ ஹ்யேநத் ப்ரதமோ விதாஞ்சகார ப்ரஹ்மேதி।

—கேநம், உ.அ.

"ஆகலின், இந்திரன் மற்றைத் தேவர்களினும் மேம்பட்டவன் போன்றிருக்கின்றான்; அவன் மிகச் சமீபத்தில் இவரை (யக்ஷரூபசிவபிரானைத்) தீண்டி முதற்கண்ணே அவரை அறிந்துகொண்டானதலின்."

முன்னாளையிலே தேவர்களும் அசுரர்களும் அமிர்தபானஞ் செய்யுமாறு பாற்சமுத்திரத்தைக் கடைந்தார்கள்; அப்போது விஷம் எழுந்தது; அதைக் கண்ட சமஸ்த தேவர்களும் அதற்குப் பயந்து சிவபிரானைச் சரணடைந்தார்கள்; அவர் அக்கொடிய விஷத்தைக் கண்டத்திலே தரித்து நீலகண்டர் என்னும் பெயருடையராயினார்; பின்னரும் போய்க் கடைந்தவிடத்து அமிர்தம் உண்டாயிற்று; விஷ்ணுவினுடைய கிருபையினால் தேவர்களே அமிர்தத்தை உண்டார்கள்; அசுரர்கள் உண்டாரல்லர்; அதனால் அவ்விருதிறத்தார்க்கும் யுத்தம் உண்டாயிற்று; தேவர்களால் அசுரர்கள் செயிக்கப்பட்டார்கள்; அந்தத் தேவர்கள் மாயையினால் மயங்கிக் கர்வமடைந்து (சிவபிரானுடைய உதவியினால் வெல்விபெற்றோம் என்பதை அறியாமல்) "தாமே ஜெயித்தோம் தாமே ஜெயித்தோம்" என்று கர்வங்கொண்டபோது, சிவபிரான் யக்ஷரூபராய் அமர்ந்து துரும்பொன்றினால் அக்கினி வாயுமுதலாயினோருடைய கர்வத்தை அடக்கி, மறைந்தருளினார்; அப்போது இந்திரன் அந்த யக்ஷர் யார் என்று அவாவிய போது பராசத்தியாராகிய உமையம்மையார் சிவபிரானே அந்த யக்ஷர் என்று கூறியருளினார். இங்ஙனம் சிவபுராணத்துச் சதருத்திர சங்கிதையின் 16-ம் அத்தியாயத்தில் விரிவுற இக்கதை கூறப்பட்டிருக்கின்றது. மேலும், இக்கதை வாயுசங்கிதை உத்தரபாகத்து ௩-ம் அத்தியாயத்திலும் கூறப்பட்டிருக்கின்றது.

திருவருட்சத்திவாயிலாகச் சிவபிரானை நாடாது கெட்டவர்களெல்லாம் கேநோபநிடதத்தைத் தேடிப்படித்து உய்யவேண்டுமெனக்கொண்டே "கெட்டவன் கேனத்தைத் தேடு" என்று பழமொழியும் நிகழுகின்றது.

(17) தே த்யாநயோகாநுகதா அபச்யந் தேவாத்ம சக்திம் ஸ்வகுணைர் நிகூடாம்। ய: காரணாநி நிகிலாநி தாநி காலாத்மயுக்தாந்யதிதிஷ்டத்யேக:॥

— ச்வேதாச்வதரம், க. ௩.

"அவர்கள் (பரப்பிரஹ்மசிவவாதிகள்) தியான யோகத்தோடியைந்து (சர்வஞ்ஞதாதி) சுவகுணங்களினால் ஆவரிக்கப்பட்ட சிவசத்தியாரைக் கண்டார்கள்; காலமுதலாயினவும் (அக்கால முதலிய பஞ்சகஞ்சுகத்தோடு கூடிய) ஆன்மாவுமாகிய சமஸ்த காரணங்களையும் அதிஷ்டிப்பவர் ஏகர் (ஆகிய சிவபிரான்) என்று அறிந்தார்கள்."

இதனால் தேவர்களுக்கும் இருஷிகளுக்கும் ஏனையோர்க்கும் சிவோபாசனையிற் சிவசத்தியார் நியமமாக வேண்டப்படுவர் என்பது பெறப்பட்டது.

(18) தத் விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பச்யந்தி ஸூரய:। திவீவ சக்ஷுராததம்।

— இருக்குவேதம், க. உஉ. உ0.

"(பிருதிவிமுதற் சிவதத்துவம்வரையுமுள்ள முப்பத்தாறு தத்துவங்களையும் வியாபித்த விஷ்ணு எனப்படும்) சிவபிரானுருடைய (வியோமம் எனப் பெயரிய திருச்சிற்றம்பலத்து நிருத்தஞ் செய்யும்) அந்தத் திருவடியைக் கண்ணானது ஆகாயத்தில் இருத்தப்பட்டாற்போலப் பெரியோர்கள் எக்காலமும் பார்க்கின்றார்கள்."

இம்மந்திரம் இருக்குவேதத்து மாத்திரமன்றிக் கிருஷ்ணயசுர்வேதத்து ச-ம் காண்டத்து உ-ம் பிரசினத்து கூ-ம் அநுவாகத்து ௬-ம் மந்திரத்திலும், சுக்கிலயசுர்வேதத்து ௬-ம் அத்தியாயத்து ரு-ம் மந்திரத்திலும், சாமவேதத்து கஅ-ம் அத்தியாயத்து ச-ம் மந்திரத்திலுங் காணப்படுகின்றது. எனவே, திருச்சிற்றம்பலவர் திருவடி வேதங்களனைத்திலுங் கூறப்படுகின்றது.

(19) யோஸ்யாத்யக்ஷ: பரமே * வ்யோமந்|

— இருக்குவேதம், ௧௦. ௧௨௯. ௭.

"பரமவியோமத்தில் எந்த அத்தியக்ஷர் (உளரோ.)"

(20) † ருசோஅக்ஷரே பரமே வ்யோமந் யஸ்மிந்தேவா அதிவிச்வே நிஷேது:| யஸ் தந்ந வேத கிம்ருசா கரிஷ்யதி ய இத்தத் விதுஸ்த இமே ஸமாஸதே||

— இருக்குவேதம், ௧. ௧௬௪. ௩௯.

"இருக்குவேதத்துளதாய், § தேவர்கள் (முக்தர்கள்) வசிக்கப் பெறுவதாயுள்ள அழியாத பரமாகாயத்தில் (திருச்சிற்றம்பலத்தில்) எவர் (தாண்டவேசுவரர்) இருக்கின்றாரோ, அவரை அறியாதவன் இருக்கு (மந்திரங்) களால் என்ன பயன் அடைவான்; அவரை அறிபவர்களே கிருதார்த்தர்களாய் அமர்கின்றார்கள்."

(21) யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந்|

— தைத்திரீயோபநிடதம், ௨. ௧.

"(இதய) குகைக்கண்ணதாகிய பரம வியோமத்திலிருக்கும் (சச்சிதானந்த பிரஹ்மத்தை) எவன் அறிகின்றானோ."

(22) ஸைஷா பார்க்கவீ வாருணீ வித்யா பரமே வ்யோமந் ப்ரதிஷ்டிதா|

— தைத்திரீயோபநிடதம், ௩. ௬.

"பரமவியோமத்திலே நிறுத்தப்பட்ட அந்தத் (தகர) வித்தை (வருணன் கூற) பிருகுவாருணியினால் (அறியப்பட்டது.)"

(23) ததக்ஷரே பரமே வ்யோமந்|

— மகாநாராயணம், ௧௦. ௧. ௧.

---

* வியோமந் என்னும் மொழி இருக்குவேதத்து ௧. ௧௬௪. ௪௧-னும், ௪. ௫௦. ௪-னும், ௧௦. ௫. ௭-னும் ௧௦. ௧௨௯. ௭-னும் பிறவிடங்களினுங் காணப்படுகின்றது.

‡ இம்மந்திரம் சுவேதாசுவதரோபநிடதத்தினும் (௪. ௮) காணப்படுகின்றது.

§ ஈண்டு தேவர்கள் முக்தான்மாக்கள் எனப்படுவோர்; இதனை நீலகண்ட சைவபாஷ்யத்துப் பிரதிபவதாமேசாதிகரணத்திற் (௪. ௪. ௧௫) காண்க.

"அந்தத் (தாண்டவேசுவரசிவப்பிரஹ்மம்) அழியாத பரம வியோமத்துள்ளது."

(24) திவ்யே ப்ரஹ்மபுரே ஹ்யேஷ வ்யோமந்யாத்மா ப்ரதிஷ்டித:l

— முண்டகம், ௨. ௨. ௭.

"திவ்யபிரஹ்மபுரத்திலே உள்ள வியோமத்திலே ஆன்மா (தாண்டவேசுவரப்பெருமான்) அமர்ந்தனர்."

மேலே கூறப்பட்ட வியோமம் என்னும் மொழி பராசத்தியின் மேற்று. அது,

(25) மாஹேச்வரீ சத்திரநாதிசித்தா வ்யோமாபிதாநா......l

"அநாதிசித்தமாயுள்ள பராசத்தியார் வியோமம் எனப்பெயருடையர்" என்னும் கூர்மபுராணத்து உத்தரபாகத்து ௩௮-ம் அத்தியாயத்தினுற் பெறப்படுகின்றது.

கற்பனை கடந்த சோதி கருணையே யுருவமாகி
யற்புதக் கோல நீடி யருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற்றம் பலத்து ணின்று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி

என்னும் பெரியபுராணத்திருச்செய்யுளால் வியோமத்திலே தாண்டவேசுவரர் உளராயினுர் என அறியப்படுகின்றது.

(26) ஸ ஏஷோந்தர்ஹ்ருதய ஆகாச:l தஸ்மிந்நயம் புருஷோ மநோமய:l அம்ருதோ ஹிரண்மய:l

—தைத்திரீயம், ௧. சூ. ௧.

"அகத்தே இதயத்தில் ஆகாசம் (பராசத்தியார்) உளர்; அந்த ஆகாசத்திற் (பராசத்தியாரில்) அருண் (ஞான) மயராகிய புருஷர் (சிவபிரான்) உளர்; இவர் பொன்மயராகிய சிவன்"

(27) ஸோமோ கௌரீ அதிச்ரித:l

— இருக்குவேதம், ௯. ௧௨. ௩.

"சோமர் (உமாபதியார்) கவுரியில் (பரமாகாயபராசத்தியாரில்) இருக்கின்றுர்."

(28) யோயமந்தர்ஹ்ருதய ஆகாசஸ்ததேதத் பூர்ணமப்ரவர்த்தி பூர்ணமப்ரவர்த்திநீம் ச்ரியம் லபதே ய ஏவம் வேதl

— சாந்தோக்கியம், ௩. ௧௨. ௯.

"இதயத்துள்ள ஆகாயம் (பராசத்தி) எதுவோ, அது சர்வ வியாபகமாயும், நித்தியமாயும் உள்ளது; எவன் இங்ஙனம் அறிகின்றானோ, அவன் சர்வவியாபகமாயும் நித்தியமாயுமுள்ள செல்வத்தை அடைகின்றான்."

(29) ஏஷோந்தர்ஹ்ருதய ஆகாசஸ்தஸ்மிந் சேதே ஸர்வஸ்ய வசீ ஸர்வஸ்யேசாநஸ் ஸர்வஸ்யாதிபதி:‌।

— பிருகதாரணியம், ச. ச. உஉ.

"இவர் (தாண்டவேசுவரர்)உள்ளேயுள்ள இதய ஆகாசத்தில்(பராசத்தியில்) அனைத்தையும் * வசீகரிப்பவரும் அனைத்துக்கும் ஈசானரும், அனைத்துக்கும் அதிபதியுமாய் உள்ளார்."

(30) விபும் சிதாநந்தமரூபமத்புதமுமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரசாந்தம்।

— கைவல்லியம்.

"(அவர்) வியாபகரும், ‡ சிதானந்தரும், அரூபரும், அற்புதரும், உமாசகாயரும், பரமேசுவரரும், பிரபுவும், திரிநேத்திரரும், நீல, கண்டரும், பிரசாந்தரு(மாயுள்ளார்.)

(31) ஆகாசோ வை நாம நாமரூபயோர் நிர்வஹிதா।

— சாந்தோக்கியம், அ. கச. க.

"ஆகாசம் (பராசத்தி) நாமரூபத்தை (சப்தார்த்தப்பிரபஞ்சத்தை) உண்டாக்கிற்று."

(32) ஸர்வாணி ஹவா இமாநி பூதாந்யாகாசாதேவ ஸமுத்பத்யந்த ஆகாசம் ப்ரத்யஸ்தம் யந்தி।

— சாந்தோக்கியம், க. கூ. க.

"இந்தச் (சேதனாசேதனப்) பிரபஞ்சமனைத்தும் ஆகாசத்தினின்று (பராசத்தியினின்று) உற்பத்தியாகின்றன; பின் ஆகாயத்துக்கு மீள்வனவாயின."

(33) ஆகாசசரீரம் ப்ரஹ்ம।

— தைத்திரீயம், க. சு. உ.

---

‡ வசித்துவம், அதிபதித்துவம், சிதானந்தரூபத்துவம், உமாசகாயத்துவம், திரிநேத்திரத்துவம், நீலகண்டத்துவ முதலிய குணங்கள் சிவபிரானுக்கு உள்ளன என்பது பெறப்பட்டது.

"ஆகாசத்தைச் (பராசத்தியை) சரீரமாகவுடையது பிரஹ்மம் (சிவபிரான்)."

(34) யதூர்த்வம் கார்க்கி திவோ யதவாக் ப்ருதிவ்யா யதந்தரா த்யாவா ப்ருதிவீஇமே யத் பூதஞ்ச பவச்ச பவிஷ்யச்சேத் யாசக்ஷத ஆகாச ஏவ ததோதஞ்ச ப்ரோதஞ்சேதி கஸ்மிந்நு கல்வாகாச ஓதச்ச ப்ரோதச்சேதி।

— பிருகதாரணியம், ௩. அ. எ.

"கார்க்கியே! எது சுவர்க்கத்துக்குமேலும், எது பூமிக்குக் கீழும், எது இடையில் உள்ளதும், (எது) இந்தச் சுவர்க்கமும் பூமியும், எது இறந்தகாலமும் எதிர்காலமும் நிகழ்காலமுமாக இருக்கின்றதோ, அது ஆகாசத்திற் (பராசத்தியிற்) குறுக்கும் மறுக்குமாய் (அமர்ந்தது) என்று யாஞ்ஞவற்கியர் கூற, அதற்குக் கார்க்கி குறுக்கும் மறுக்குமாய் ஆகாயம் (பராசத்தி) எதில் (அமர்ந்தது) என்றார்."

(35) ஏதஸ்மிந்நு கல்வக்ஷரே கார்க்யாகாச ஓதச்ச ப்ரோதச்சேதி।

— பிருகதாரணியம், ௩. அ. கக.

"(அதற்கு யாஞ்ஞவற்கியர்) கார்க்கியே! இந்த அக்ஷரத்திலே (சிவபிரானிலே) ஆகாயம் (பராசத்தி) குறுக்கும் மறுக்குமாய் அமர்ந்தது என்றார்".

(36) ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய ப்ரசாசநே கார்க்கி சூர்யா சந்த்ரமஸௌ வித்ருதௌ திஷ்டத ஏதஸ்யவா அக்ஷரஸ்ய ப்ரசாசநே கார்க்கி த்யாவா ப்ருதிவ்யௌ விதருதே திஷ்டத:।

— பிருகதாரணியம், ௩. அ. கூ.

"கார்க்கியே! இந்த அக்ஷரத்தினது (சிவபிரானது) ஆஞ்ஞையினாலே (பராசத்தியினாலே) சூரிய சந்திரர் தாங்கப்படுகின்றனர்; கார்க்கியே! இந்த அக்ஷரத்தினது (சிவபிரானது) ஆஞ்ஞையிலே (பராசத்தியிலே) சுவர்க்கமும் பூமியும் தாங்கப்படுகின்றன."

(37) சம்புராகாசமத்யே த்யேய:।

— அதர்வசிகை.

"சம்புவானவர் ஆகாசமத்தியிலே (பராசத்தியினடுவிலே) தியானிக்கற்பாலர்."

இதனையே மாணிக்கவாசகசுவாமிகள் "உடையாணுடுவுணியிருத்தி" என்றருளிச்செய்தார். இந்தப் பராசத்தியார் சிதம்பரசத்தி எனப்படுவர். இதனை நீலகண்ட சைவபாஷ்யத்துத் தமிழ் மொழிபெயர்ப்பின் ஜன்மாத்தியதிகரணத்திற் (க. க. உ) காண்க.

(38) யதிதமஸ்மிந் ப்ராஹ்மபுரே தஹரம் புண்டரீகம் வேச்ம தஹரோஸ்மிந்நந்தராகாசஸ் தஸ்மிந்ய தந்தஸ் ததந்வேஷ்டவ்யம்

— சாந்தோக்கியம், அ. க. க.

"இந்தப் பிரஹ்மபுரத்திலே (சரீரத்திலே) தஹர (நுண்ணிய) புண்டரீக வீடு உள்ளது; இந்தத் தகர புண்டரீக வீட்டினுள்ளே ஸ்ரீதகராகாசம் (திருச்சிற்றம்பலம்) உள்ளது; இத் தகராகாயத்து உள்ளே உள்ளது (தாண்டவேசுவரப்பிரஹ்மம்) தேடற்பாற்று."

ஆகாசம் என்றாலும், அம்பலம் என்றாலும், பராசத்தி என்றாலும் பொருந்தும். இப்பராசத்தி மெய்ஞ்ஞானம் எனச் சேக்கிழார்பெருமானால் அருளிச்செய்யப்பட்டது. அது,

"அண்ண லார்தமக் களித்த மெய்ஞ் ஞானமே யானவம் பலமும்" என்னும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணத்து கசூ0-ம் திருச்செய்யுளால் உணரப்படும்.

தகராகாசம் என்றதில் தகரம் என்றது சிறுமையையும் ஆகாசம் என்றது அம்பலத்தைலம் உணர்த்துதலின், தகராகாசமானது சிற்றம்பலம் எனப்படும். இதனையுற்று நீலகண்டசைவபாஷ்யத்து உபநிடத உபக்கிரமணிகையின் 50-ம் பக்கத்தைப் பார்க்க.

ஆகாசம் பராசத்திக்குப் பெயராயிருக்க, அந்த ஆகாசத்திலே நிருத்தஞ்செய்பவர் சிவபெருமானேயாக, ஆகாசம் என்றது பரப்பிரஹ்மமாகிய சிவம் என்று சங்கரபாஷ்யத்தைத் தொடர்ந்து அபேதமுற எழுதினமை வழுவாம் என்க. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சிற்றம்பலமாகிய ஆகாயத்தில் இருப்பவர் சிவபெருமான் என்று உணர்த்துவாராய்ச் "சிற்றம்பலமேயமுற்றாவெண் டிங்கண்முதல்வன்" என்று சாந்தோக்கிய சுருதிக்கியைந்தே சிதம்பர தேவாரத்திலும் அருளிச்செய்திருக்கின்றார். ஆகலின் சிதம்பரமான்மியம், பேரியபுராணவசனம், பெரியபுராணசூசனம் என்பவற்றிற் கூறப்பட்ட ஆகாசத்தைச் சிவம் என்று கொள்ளாது அவற்றை முன்வருமாறு திருத்தி அச்சிட்டு விடுக.

"சரீரம் பிரஹ்மபுரம், சரீரத்தினுள்ளே இருக்கும் இருதயஸ்தானம் தகரமாகிய புண்டரீகவீடு; புண்டரீக வீட்டினுள்ளே தகராகாசம் (சிற்றம்பலம்) உள்ளது; இந்தத் தகராகாசத்துஉள்ளே உள்ளது (தாண்டவேசுவரசிவப்பிரஹ்மம்) தேடற்பாற்று; அறியற்பாற்று என்று சாந்தோக்கியோபநிடதத்து அ-ம் பிரபாடகத்து க-ம் கண்டத்து க-ம் மந்திரத்திற் கூறப்படுகின்றது; புறத்தும் இப்படியே பிரஹ்மாண்டம் பிரஹ்மபுரம்; பிரஹ்மாண்டத்தினுள்ளே இருக்கும் தில்லைவனம் புண்டரீகவீடு; புண்டரீகவீட்டினுள்ளே உள்ளது ஆகாசம்; ஆகாசத்திலே நிருத்தஞ் செய்வது தாண்டவேசுவரசிவப்பிரஹ்மம்", என்று விரோதி௵ மாசி௴ அச்சிடப்பட்ட சிதம்பரமான்மியத்து ரு-ம் பக்கத்து கஉ-ம் வரியில் "இருதயஸ்தானம்" என்று தொடங்கி கஎ-ம் வரியிற் "சிவம் ஆகாசம்" என்பது வரையினும்,

"சாந்தோக்கியோபநிடதத்து அ-ம் பிரபாடகத்து க-ம் கண்டத்து க-ம் மந்திரத்திற் பிரஹ்மபுரத்திலுள்ள தகரமாகிய புண்டரீக வீட்டினுள்ளே தகராகாசம் உள்ளது; இதிலே உள்ளது (தாண்டவேசுவரசிவப்பிரஹ்மம்) தேடற்பாற்று; அறியற்பாற்று; இங்கே பிரஹ்மபுரம் என்றது இச்சரீரத்தையும், புண்டரீகவீடு என்றது இருதயகமலத்தையும், ஆகாசம் என்றது சிற்றம்பலத்தையும், சிற்றம்பலத்துள்ளே நிருத்தஞ் செய்யும் சிவம் என்றது தாண்டவேசுவரசிவப்பிரஹ்மத்தையும் உணர்த்தும் என்றறிக. புறத்தும் இப்படியே, இப்பிரமாண்டம் பிரஹ்மபுரம் எனவும், பிரஹ்மாண்டத்தினுள்ளே இருக்கும் தில்லைவனம் புண்டரீகவீடு என்வும், புண்டரீகவீட்டிலிருக்கும் ஆகாசம் சிற்றம்பலம் எனவும், இச்சிற்றம்பலத்தில் நிருத்தஞ் செய்வது தாண்டவேசுவர சிவப்பிரஹ்மம் எனவுஞ் சொல்லப்படும்" என்று சுபகிருது௵ ஆனி௴ அச்சிடப்பட்ட பெரியபுராணவசனத்து சஅ-ம் பக்கத்துத் தில்லைவாழந்தணர் சருக்கத்து கஎ-ம் வரிதொடுத்து உரு-ம் வரிவரையினும்,

"சாந்தோக்கியோபநிடதத்து அ-ம் பிரபாடகத்து க-ம் கண்டத்து க-ம் மந்திரத்திலே பிரஹ்மபுரமாகிய இச்சரீரத்திலுள்ள தகரமாகிய புண்டரீகவீட்டினுள்ளே இருப்பது ஆகாசம் (சிற்றம்பலம்); இச்சிற்றம்பலத்துள்ளே உள்ளது (தாண்டவேசுவரப்பிரஹ்மம்) எனத் தகரவித்தை கூறப்பட்டது; இங்கே ஆகாசம் என்றது சிற்றம்பலத்தையாம் என்க; இதிலே உள்ளது

தாண்டவேசுவர சிவப்பிரஹ்மம்; புறத்தும் இவ்வாறே பிரஹ்மாண்டம் பிரஹ்மபுரம் எனவும், பிரஹ்மாண்டத்தினுள்ளே இருக்கும் தில்லைவனம் புண்டரீகவீடு எனவும், புண்டரீகவீட்டிலிருக்கும் ஆகாசம் சிற்றம்பலம் எனவும், இச்சிற்றம்பலத்திலே நிருத்தஞ் செய்யுஞ் சிவம் தாண்டவேசுவரப்பிரஹ்மம் எனவும் கூறப்படும்" என்று விசுவாவசுஹூ புரட்டாசிமீ அச்சிடப்பட்ட பெரியபுராணசூசனத்து ருரு-ம்பக்கத்து கூ-ம்வரிதொடுத்து கச-ம் வரிவரையினும் திருத்திவிடுக.

(39) ஸர்வாணி ஹவா இமாநி பூதாநி ப்ராணமேவாபிஸம்விசந்தி ப்ராணமப்யுஜ்ஜிஹதே।

— சாந்தோக்கியம், க. கக. ரு.

"சேதநாசேதனப் பிரபஞ்சமனைத்தும் பிராணனிலே (பிராணசத்தியாகிய சிதம்பரசத்தியிலே) ஒடுங்கி பிராணனினின்று (சிதம்பர சத்தியினின்று) உதிக்கின்றன."

(40) விஞ்ஞாநமாநந்தம் ப்ரஹ்மராதிர் தாதுः பராயணம் திஷ்டமாநஸ்ய தத் வித இதி।

— பிருகதாரணியம், ந. கூ. உஅ.

"பரப்பிரஹ்மம் (சிவபிரான்) ஞானானந்தர்; ஈவோனுக்கும், உறுதியாய்நின்று அறிபவனுக்கும் அவர்தான் மூலர்."

(41) ஸஹோவாச நவா அரேஹம் மோஹம் ப்ரவீம்யவிநாசீவா அரேயமாத்மாநுச்சித்திதர்மா।

— பிருகதாரணியம், ச. ரு. கச.

"நான் மோஹமாயதொன்றும் கூறவில்லை; அந்த ஆன்மா (சிவபிரான்) நாசமில்லாததும் சேதிக்கப்படாததுமாகிய குணமுடையர்."

(42) ஏஷ ஆத்மா ‡ அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விசோகோ விஜிகித்ஸோபிபாஸः ஸத்யகாமः ஸத்யசங்கல்பः।

— சாந்தோக்கியம், அ. க. ரு.

---

‡ அபகதபாப்மத்துவாதி குணங்களே உத்தரவேதத்து முதலதிகாரத்து கூ-ம் திருக்குறளிற் குறிக்கப்பட்ட எண்குணங்களுமாம்.

"இந்த ஆன்மா (சிவபிரான்) பாவமில்லாதவர் (சர்வஞ்ஞர்), ஜரையில்லாதவர், மரணமில்லாதவர், சோகமில்லாதவர், பசியில்லாதவர், தாகமில்லாதவர், சத்திய † காமர், சத்தியசங்கற்பர். அபகதபாப்மத்துவாதி (சர்வஞ்ஞதாதி) குணங்களையுற்று நீலகண்டசைவபாஷ்யத்து அபாவாதிகரணத்திற் (ச. ச. கூ) காண்க.

(43) மநோமய: ப்ராணசரீரோ பாரூப: ஸத்ய ஸங்கல்ப ஆகாசாத்மா ஸர்வகர்மா ஸர்வகாம:।

— சாந்தோக்கியம், ௩. கச. உ.

"ஞானமயரும், பிராணசத்திசரீரரும், சோதிசொரூபரும், சத்தியசங்கற்பரும், பராசத்திவடிவினரும், சர்வகர்மரும், சர்வகாமருமாயுள்ளார் (சிவபிரான்)."

(44) ஸர்வகர்மா ஸர்வகாம: ஸர்வகந்த: ஸர்வரஸ: ஸர்வமிதமப்யாத்தோவாக்யநாதர:।

— சாந்தோக்கியம், ௩. கச. ச.

"(சிவபிரான்) சர்வகர்மர், சர்வகாமர், சர்வகந்தர், சர்வரசர், இவற்றையெல்லாம் அடக்குபவர்; பேசுபவரல்லர்; எவரையும் மதிப்பவரல்லர்."

(45) ஸஹப்ரஹ்மணா * விபச்சிதா।

— தைத்திரீயம், உ. க.

"சர்வஞ்ஞதையுடைய பிரஹ்மத்தோடு கூட."

(46) ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப:।

— முண்டகம், க. க. கூ; உ. உ. எ.

"எவர் சர்வஞ்ஞரோ, அனைத்தையும் அறிபவரோ எவருக்குத் தபசு ஞானமயமோ."

---

† காமம் சங்கற்பம் என்னும் மொழிகள் பராசத்தியார்க்குத் திருநாமங்களாமாற்றை இப்பிரகரணத்து ௫௬-ம் பிரிவிற் காண்க.

* பராசத்தியோடியைந்த பரப்பிரஹ்மசிவனார் விபச்சித் (சர்வஞ்ஞர்) எனப்படுவர்; இதனை நீலகண்ட சைவபாஷ்யத்து ஜகத்வியாபாராதிகரணத்திற் (ச. ச. உஉ) காண்க.

(47) ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம।

— தைத்திரீயம், உ. க. க.

"§சத்தியம் ஞானம் அனந்தமாய் உள்ளது பிரஹ்மம் (சிவபிரான்.)"

(48) ரஸோ வை ஸ:।

— தைத்திரீயம், உ. எ. க.

"அவர் (சிவபிரான்) ஆனந்தர்."

(49) ஆநந்தோ ப்ரஹ்மேதி வ்யஜாநாத்।

— தைத்திரீயம், ௩. சு.

"ஆனந்தம் பிரஹ்மம் (சிவபிரான்) என அறிந்தான்."

(50) ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:।

— தைத்திரீயம், உ. அ. சு.

"அது (பிரஜாபதியின் நூறு ஆனந்தம்) பிரஹ்மத்தின் (சிவபிரானின்) ஓர் ஆனந்தம்."

(51) அந்யோந்தர ஆத்மா ஆநந்தமய:।

— தைத்திரீயம், உ. ரு. க.

"(அனைத்துக்கும்) வேறாய் உள்ளே உள்ள ஆன்மா (சிவபிரான்) ஆனந்தமயர்."

(52) ஸத்யாத்மப்ராணாராமம் மந ஆநந்தம்। சாந்தி ஸம்ருத்தமம்ருதம்।

— தைத்திரீயம், க. சு. எ.

"சத்தியான்மகமாகிய பிராணனிலே (சத்தியிலே) (அவர்க்கு) ஆனந்தம்; மனசிலே (சத்தியிலே) (அவர்க்கு) ஆனந்தம்; (இராகத்துவேஷ குணங்கள் இல்லாத) சாந்தியினால் நிறைந்த சிவன்."

"சிவஞானபோதமாபாடியத்துப் பதினொராஞ் சூத்திரத்திலே ஆன்மா பரமுத்தியிற் சிவானந்தாநுபூதியை விடயிக்கும்; அநுவும் முதல்வனையின்றி அமையாது; முதல்வனும் அவ்வநுபூதியை அவ்வான்மாவிற்றங்கிநின்று உணரும்." இது உண்மையே.

§ பராசத்தியார் சிவபிரானுக்கு உருவமும் சர்வஞ்ஞதாதி குணங்களுமாயுள்ளாரென்று நீலகண்ட சைவபாஷ்யத்துச் சர்வத்திரப்பிரசித்தாதிகரணத்திற் (க. உ. க) கூறப்பட்டுள்ளது; சத்தியஞானனந்தமுதலிய குணங்களும் அங்ஙனமே பராசத்தியார்க்கு உள்ளனவாம்.

"இக்கருத்துப்பற்றியன்றே சில ஆகமங்களில் முதல்வன் தன் ஆனந்தத்தை அநுபவிப்பன் என்றோதியதூஉம்;' ஆண்டு அநுபவிப்பன் என்றதற்குத் தாற்பரியம் அறிவன் என்பதூஉம்" தவறும் என்க. மேலும் "அக்கருத்தறியாத சிவாத்துவித சைவர் முதலியோர் முதல்வன் தன் ஆனந்தத்தை அநுபவிப்பன்" என்றும் கூறினமையும் தவறும் என்க. யாதினாலெனின், வேதோபநிடதம் தியானயோகம் வரைக்குந்தான் பேசுகின்றது. அகண்டாகாரநித்தவியாபகசச்சிதானந்தசொரூபசிவத்துக்கு நிஷ்களசிவன், நிஷ்களசகளசிவன், சகளசிவன் என்னும் மூன்று தடஸ்தவடிவங்கள் உள்ளன. தியானயோகம்பற்றிநின்ற நிஷ்களதடஸ்தசிவனார்க்குச் சத்தியார் † ஆதிசத்தி என்று காமிகாகமத்து மந்திராவதாரப்படலத்திற் கூறப்படுகின்றது. மேலும், பிராணனிலே (சத்தியிலே) அவர்க்கு ஆனந்தம் என்றும், மனசிலே (சத்தியிலே) ஆனந்தம் என்றும் தைத்திரீயோபநிடதமும், ௵

(53) ஆத்மசக்த்யம்ருதாஸ்வாத ப்ரமோதரசிகோயுவா‌I அநந்த பரமாநந்த மகரந்தமதுவ்ரத:II

"தமது சத்தியாகிய அமிர்தத்தை இரசித்தலினால் உண்டாகிய மகிழ்ச்சியில் விருப்புடைய இளைஞரும், அனந்த பரமானந்த மகரந்தத்தை உண்ணும் மதுகரரும்" என்று வாயுசங்கிதை பூருவபாகமும் (உ. ௫௭), அங்ஙனம் "அவன் சிவபராசத்திதனை யநுபவிப்பன்" என்று சிவதருமோத்தரத்துச் சிவஞானயோகவியலும் கூறியவாம் என்க. நிஷ்களசிவனார்க்கும் நிஷ்களாதீதசிவனார்க்கும் பேதம் பெரிதாம் என்க. தியானயோகம்பற்றியே சத்தியிலே ஆனந்தம் என்று உபநிடதமும் வாயுசங்கிதையும் ஆகமமும் கூறியவேயன்றி, ஞானத்து ஞானபாதத்து அகண்டாகாரசொரூப சிவத்தைப்பற்றிக் கூறியவன்றாம் என்க. ஆகலின், தியானயோகம் பற்றிநின்ற நிஷ்களசிவனாரை அகண்டாகாரசொரூபசிவத்தோடு கலத்தல் கூடாதாம் என்க. இதுபற்றியே உபநிடதத்தைத் தொடர்ந்துபோன சிவாத்துவிதசைவர் தவறுண்டாரல்லர் என்றும், தியானயோகம்பற்றிய நிஷ்களசிவனாரையும் ஞானத்து ஞானபாதம் பேசிய நிஷ்களாதீத சொரூப சிவத்தையும் ஒன்றாகக் கலக்கினவரே தவறுண்டார் என்றும் உணர்க.

---

† இது ஆன்மதத்துவத்தின் பாற்பட்ட மாயாசத்தி அன்று; பராசத்தியின் வேறு.

(54) கோஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத்। யதேஷ ஆகாச ஆநந்தோ ந ஸ்யாத்।

— தைத்திரீயம், உ. எ.

"இந்த ஆகாசம் (பராசத்தி) ஆனந்தமாகாதுபோயின் யார் உயிர்ப்பார்; யார் சுவாசிப்பார்."

(55) ப்ராணோ ப்ரஹ்ம கம் ப்ரஹ்ம கம் ப்ரஹ்மேதி ஸஹோவாச விஜாநாம்யஹம் யத் ப்ராணோ ப்ரஹ்ம கஞ்சது கஞ்ச ந விஜாநாமீதி தேஹோசுர் யத்வாவகந்ததேவ கம் யதேவ கம் ததேவ கமிதி ப்ராணஞ்ச ஹாஸ்மை ததாகாசஞ் சோசு:।

— சாந்தோக்கியம், ச. கO. ரு.

"பிராணசத்தி பிரமம்; கம் (Kam) (ஆனந்தம்) பிரஹ்மம்; கம் (Kham) (ஆகாயம்) பிரஹ்மம் என்று அக்கினிகள் கூற, (அதற்கு உபகோசலை காமலாயனர் கூறுகின்றார்) பிராணசத்தி பிரமம் என்று அறிகுவல்; கம் (Kam) ஆனந்தம், கம் (Kham) ஆகாயம் என்பன புலப்படவில்லை என்றார்; (அதற்கு அக்கினிகள்) எது ஆனந்தமோ அது ஆகாயம் (பராசத்தி), எது ஆகாயமோ (பராசத்தியோ) அது ஆனந்தம்; பிரஹ்மமானது பிராணசத்தியும் ஆகாயசத்தியுமாம் என்றார்.

(56) அநேஜதேகம் மநஸோ ஜவீயோ நைநத் தேவா ஆப்நுவந் பூர்வமர்ஷத்। தத்தாவதோந்யாநத்யேதி திஷ்டத் தஸ்மிந்நபோ மாதரிச்வா ததாதி।

— ஈசாவாசியம், ச.

"ஏகர் (சிவபிரான்) அசையாமல் மனசினும் வேகமாயுள்ளார்; தேவர்கள் அவரை நணுகிலர்; அவர் (அவர்களுக்கு) முன்னே நடந்தார், அவர் நிற்கினும் ஓடும் இயல்பினராகிய அனைவரையும் கடந்துள்ளார்; (அந்தப் பரமான்மாவைப் பிரியாதுள்ள) *மாதரிச்வான் (பராசத்தி) (சமஸ்தப்பிரபஞ்சத்தின் தொழில்களையும்) தாங்குகின்றது."

---

* இம்மொழி வாயுவுக்குப் பெயராயினும், சமஸ்தப்பிரபஞ்சத்தொழில்களையும் தாங்கும் வன்மை பராசத்திக்கேயுண்மையின் அவர்க்குத் திருநாமமாக ஈண்டுக் கொள்ளப்பட்டது.

(57) வித்யாஞ்சாவித்யாஞ்ச யஸ்தத்வேதோபயம் ஸஹ। அவித்யயா ம்ருத்யும் தீர்த்வா வித்யயாம்ருதமச்நுதே॥

— ஈசாவாசியம், ௧௧.

"எவன் வித்தை (அருண்ஞானம்), அவித்தை (கன்மம்) என்னும் இரண்டையும் ஒன்றாய் அநுஷ்டிக்கவேண்டுமென அறிகின்றானோ, அவன் கன்மத்தினாற் சம்சாரத்தைக் கடந்து, (அருண்) ஞானத்தினாற் சிவபிரானை அடைகின்றான்."

(58) ஆத்மநா விந்ததே வீர்யம் வித்யயா விந்ததேம்ருதம்॥

— கேநம், ௧௨.

"(சிவ) ஆன்மாவாயிலாக அருட்சத்தியை அடைகின்றான்; பின் அருண்ஞானத்தினாற் சிவபிரானை அடைகின்றான்."

(59) * ந தத்ர ஸூர்யோ பாதி ந சந்த்ரதாரகம் நேமா வித்யுதோ பாந்தி குதோயமக்நி:। தமேவ பாந்த மநுபாதி ஸர்வம் தஸ்ய பாஸா ஸர்வமிதம் விபாதி॥

— முண்டகம், ௨. ௨. ௧0.

"அவ்விடத்திலே சூரியன் பிரகாசிப்பதில்லை; சந்திரனும் நக்ஷத்திரங்களும் இந்த மின்னல்களும் பிரகாசிப்பதில்லை; அங்ஙனமாயின் இந்த அக்கினி எங்ஙனம் பிரகாசிக்கும்? அவர் பிரகாசிக்குங்கால் அவரைச் (சிவபெருமானைத்) தொடர்ந்து யாவும் பிரகாசிக்கின்றன; அவரது ஒளியினால் (பராசத்தியினால்) இவையெல்லாம் பிரகாசிக்கின்றன."

(60) பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகி ஜ்ஞாந பலக்ரியாச॥

— சுவேதாசுவதரம், ௬. ௮.

"அவரது (தாண்டவேசுவரரது) பராசத்தியார் ஆதிசத்தி ஞானசத்தி இச்சாசத்தி கிரியாசத்தி எனப் பலதிறப்படுவர்."

---

* இம்மந்திரம் கடோபநிடதத்தினும் (௫. ௧௫), சுவேதாசுவதரோபநிடதத்தினும் (௬. ௧௪) உள்ளது.

(61) யதேத் த்ருதயம் மநச்சைதத் சம்ஞாநமாஜ்ஞாநம் விஜ்ஞாநம் ப்ரஜ்ஞாநம் மேதா த்ருஷ்டிர் த்ருதிர் மதிர் மநீஷா ஜூதி: ஸ்ம்ருதி: ஸங்கல்ப: க்ரதுரஸு: காமோ வச இதி ஸர்வாண்யேவைதாநி ப்ரஜ்ஞாநஸ்ய நாமதேயாநி பவந்தி। ..........ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டா ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம।

— ஐதரேயம், ரு. உ, ௩.

"இருதயம், மனசு, சம்ஞானம், ஆஞ்ஞானம், விஞ்ஞானம், பிரஞ்ஞானம், மேதை, திருஷ்டி, திருதி, மதி, மநீஷை, சூதி, ஸ்ம்ருதி, சங்கற்பம், கிரது, அசு, காமம், வசம், பிரஞ்ஞை, பிரதிஷ்டை என்னும் திருநாமங்களனைத்தும் பிரஞ்ஞானத்தின் (பராசத்தியாரின்) திருநாமங்களாம்."

(62) ஸா சக்தி: ஸர்வகா ஸூக்ஷ்மா ப்ரபோதாநந்த ரூபிணீ। சக்திமாநுச்யதே தேவ: சிவ: சீதாம்சுபூஷண:। வேத்ய: சிவ: சிவா வித்யா ப்ரஜ்ஞாசைவ ச்ருதி: ஸ்ம்ருதி:। த்ருதிரேஷா ஸ்திதிர் நிஷ்டா ஜ்ஞாநேச்சா கர்ம சக்தய:। ஆஜ்ஞாசைவ........................॥

"அந்தச் சத்தியார் சர்வவியாபகரும், சூக்குமரும், ஞானனந்த ரூபிணியுமாய் உள்ளார்; சந்திரசேகராகிய சிவபிரான் சத்திமான் எனப்படுவர்; சிவபிரான் வேத்தியர், சத்தியார் சிவை, வித்தை, பிரஞ்ஞை, சுருதி, ஸ்மிருதி, திருதி, ஸ்திதி, நிஷ்டை, ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி, ஆஞ்ஞை எனப்படுவர்" என்று வாயுசங்கிதை கூறுமாற்றல் (61-ம் பிரிவிற் கூறிய) இருதயமுதலிய பதினெண் பெயர்களும் அருட்சத்தியார்க்குத் திருநாமங்களாகப் போந்தன என நன்கு வலியுறுத்தப்படும்.

(63) அந்தரிச்சந்தி தம் ஜநே ருத்ரம் பரோமநீஷயா க்ருப்ணந்தி ஜிஹ்வயா சசம்।

— இருக்குவேதம், அ. சுக. ௩.

"மனிதரிடத்தில் அந்தரியாமியாயிருக்கும் அந்தச் சிவபிரானை எவர்கள் அருட்சத்தியாரோடு கூட (மநீஷயா) உள்ளே தியானிக்கின்றார்களோ, அவர்கள் அன்னத்தை நாவினாற் கிரகிக்கின்றார்கள்."

(64) அந்தரிக்சந்தி யே ருத்ரம் ஸதா வந்த்யம் மநீஷயா। க்ருஹ்ணந்தி ஜிஹ்வயா தே ஹி ரஸபூர்ணம்ருதோதகம்। அந்தர்ரேச்சந்தி யேருத்ரம் பவாநீ ஸஹிதம் சிவம்। புரீஷமேவ க்ருஹ்ணந்தி ஜிஹ்வயா தே ந ஸம்சய:॥

"சத்தியாரோடுகூட (மநீஷயா) எக்காலமும் வழிபடற்பாலராகிய சிவபிரானை எவர்கள் உள்ளே தியானிக்கின்றார்களோ; அவர்கள் இரசநிறைந்த அமிர்தோதகத்தை நாவினால் உண்கின்றார்கள்; பவாநியோடு (சத்தியோடு) கூட எவர்கள் உள்ளே சிவனாகிய உருத்திரரைப் பற்றவில்லையோ, அவர்கள் நாவினால் ஐயமின்றி மலத்தையே கிரகிக்கின்றார்கள்" என்று பராசரபுராணம் மேலே கூறிய இருக்குவேதமந்திரப்பொருளை விளக்கிற்று.

(65) காமஸ் ததக்ரே ஸமவர்த்ததா।

— இருக்குவேதம், க0. கஉகூ. ச.

"காமம் (பராசத்தியார்) முதற்கண்ணே (தாண்டவேசுவரரினின்று) உளராயினர்."

(66) யதாதமஸ்தந்ந திவாநராத்ரிர் நஸந்ந சாஸந் சிவ ஏவ கேவல:। ததக்ஷரம் தத் ஸவிதுர் வரேண்யம் ப்ரஜ்ஞாச தஸ்மாத் ப்ரஸ்ருதா புராணீ॥

— சுவேதாசுவதரம், ச. கஅ.

"எப்போது இருள் உளதாய்ப் பகலுமின்றி இரவுமின்றி, சத்துமின்றி அசத்துமின்றி இருந்ததோ அப்போது சிவன் ஒருவரே இருந்தார்; அந்தச் (சிவ) சூரியனுடைய அந்த அழியாத முக்கியப்பொருளாகிய பழைய பிரஞ்ஞை (பராசத்தியார்) உதித்தார். மேல் மந்திரத்துள்ள காமம் என்னும் மொழியும் இம்மந்திரத்துள்ள பிரஞ்ஞை என்னும் மொழியும் ஒன்றாம் என்க.

(67) க்ரதோ ஸ்மர।

— ஈசாவாசியம், கஎ.

"சிவசத்தியே! நினைந்தருள்க."

(68) ஓம் க்ரதோ ஸ்மர।

— பிருகதாரணியம், ரு. கரு. க.

"சிவசத்தியே! நினைந்தருள்க." சுக—ம் இலக்கத்துள்ள பராசத்தியாரின் திருநாமங்களுள்ளே கிரது என்பது பதினைந்தாம் திருநாமமாகக் காணப்படுகின்றது.

(69) † மநஸைவேதமாப்தவ்யம் நேஹ நாநாஸ்தி கிஞ்சந। ம்ருத்யோ: ஸ ம்ருத்யும் கச்சதி ய இஹ நாநேவ பச்யதி॥

—கடம், ௪. ௧௧.

"இது (பரப்பிரஹ்மம்) மனசினாலே (அருளினாலே) தான் அடையற்பாற்று; அங்ஙனம் அடைந்தால் இங்கே (அடைந்தவிடத்திலே) யாதொருவிகற்பமும் இல்லை; இங்கே வேறுபடக் காண்போன் இறப்பினின்று இறப்புக்கே செல்கின்றான்."

(70) ஏஷ ஸர்வேஷு பூதேஷு கூடோத்மா ந ப்ரகாசதே। த்ருச்யதே த்வக்ரயயா புத்யா சூட்சுமயா சூட்சுமதர்சிபி:॥

— கடம், ௩. ௧௨.

"இவர் (சிவபிரான்) சமஸ்த சேதனா சேதனப்பிரபஞ்சத்தினும் மறைந்தவராய்ப் பிரகாசிக்கின்றாரில்லை; சிரேஷ்டமானதும் சூட்சுமமானதுமாகிய புத்தியினாலே (அருளினாலே) சூட்சுமகாட்சியுடையோராற் புலப்படுகின்றார்."

(71) ய ஏகோவர்ணோ பஹுதா சக்தியோகாத் வர்ணாநநேகாந் நிஹிதார்த்தோ ததாதி। விசைதி சாந்தே விச்வமாதௌ ஸ தேவ: ஸநோ புத்யா சுபயா ஸம்யுநக்து॥

— சுவேதாசுவதரம், ௪. ௧.

"ஓர் நிறமில்லாத ஏகர் (சிவபிரான்) நிஹிதார்த்தராய்ச் சத்தியோடு கூடுதலால் அநேக வர்ணங்களைத் தரிப்பாராயினார்; அத்தேவர் (சிவபிரான்) தொடக்கத்திலே (சிருஷ்டியினால்) உலகத்தை (விரித்து), இறுதியிலே (சங்காரகாலத்திலே) அவற்றைப் பிரித்துவிடுகின்றார்; அவர் (சிவபிரான்) எங்களைப் புத்தியினாலே (அருண்ஞானத்தினாலே) (தம்மோடு) சேர்ப்பாராக."

---

† இம்மந்திரம் அநுத்ரஷ்டவ்யம் (காணற்பாற்று) என்னும் சப்தவேறுபாட்டோடு பிருகதாரணியோபநிடதத்தினும் (௪. ௪. ௧௯) காணப்படுகின்றது.

(72) † யோ தேவாநாம் ப்ரபவச்சோத்பவச்ச விச்வாதிகோ ருத்ரோ மஹர்ஷி:। ஹிரண்யகர்ப்பம் பச்யத ஜாயமாநம் ஸநோ புத்யா சுபயா ஸம்யுநக்து॥

— சுவேதாசுவதரம், ச. கஉ.

"தேவர்களைப் படைத்துக் காப்பவரும், விசுவாதிகரும், மகர்ஷியும், இரண்ணியகருப்பர் பிறக்கக் கண்டவருமாகிய அந்த உருத்திரர் (சிவபிரான்) புத்தியினலே (அருளினலே) நம்மைத் (தம்மோடு) சேர்ப்பாராக."

(73) ந ஸம்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய நசக்ஷுஷா பச்யதி கச்சநைநம்। ஹ்ருதா ஹ்ருதிஸ்தம் மநஸா ய ஏதமேவம் விதுரம்ருதாஸ்தே பவந்தி।

— சுவேதாசுவதரம், ச. உ0.

"இவரது (சிவபிரானது) வடிவம் காண்டற்கரியது; எவரும் அவரைக் கண்ணுற் கண்டிலர்; மனஸ் ஹிருத் எனப்படும் (அருட்சத்தி) வாயிலாக இதயத்துள்ள சிவபிரானை இங்ஙனம் அறிகின்றவர்கள் முத்தராகின்றார்கள்."

(74) ஏஷ தேவோ விச்வகர்மா மஹாத்மா ஸதா ஜநாநாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட:। ஹ்ருதாமநீஷா மநஸாபிக்லருப்தோ ய ஏதத் விதுரம்ருதாஸ்தே பவந்தி॥

— சுவேதாசுவதரம், ச. கஎ.

"இந்தத் தேவர் (சிவபிரான்) விசுவகர்மாவாகவும், மகாத்துமாவாகவும், எஞ்ஞான்றும் ஜனங்களுடைய இதயத்தில் இருப்பவர்; இருதயம், மநீஷை, மனசு எனப்படும் (அருட்பராசத்தி) வாயிலாக அறியற்பாலர்; இவரை அறிபவர் முத்தராகின்றார்."

(75) ந சக்ஷுஷா க்ருஹ்யதே நாபி வாசா நாந்யைர் தேவைஸ் தபஸா கர்மணா வா। ஜ்ஞாநப்ரஸாதேந விசுத்த ஸத்வஸ்ததஸ்து தம் பச்யதே நிஷ்களம் த்யாயமாந:॥

— முண்டகம், ந. க. அ.

† இம்மந்திரம் ஜநயாமாஸபூர்வம் (முன்னர் உண்டாக்கினர்) என்னும் சப்தவேறுபாட்டோடு இந்தச் சுவேதாசுவதரோபநிடதத்திற் (ந. ச) காணப்படுகின்றது.

"கண்ணினாலேனும், வாக்கினாலேனும், மற்றைத் தேவர்களாலே னும், தபசினாலேனும் கர்மங்களினாலேனும் கிரகிக்கப்படார் (அறி யப்படார்); ஆகலின், தூயசத்துவமுடையோன் ஞானப்பிரசாத த்தினாலே அந்த நிஷ்களராகிய சிவபிரானைத் தியானித்துக்கொ ண்டு காண்கின்றான்."

(76) ஏகோ ஹி ருத்ரோ நத்விதீயாய தஸ்துர்ய இமாங் லோகாநீ சத ஈசநீபி:॥

— சுவேதாசுவதரம், ௩. ௨.

"உருத்திரர் ஒருவரே; (பிரஹ்மத்தை அறிபவர்) இரண்டாவதற் காக அவர்கள் நின்றிலர்; இவர் தமது ஆளுஞ்சத்திகளினாலே பிரபஞ்சமனைத்தையும் ஆளுகின்றார்."

(77) ‡ தாது: ப்ரஸாதாத்।

— கடம், ௨. ௨0.

"(உலகத்துக்குத்) * தாரகமாயுள்ள சிவபிரானுடைய அருளி னால்."

---

‡ இம்மந்திரம் சுவேதாசுவதரோபநிடதத்தினும் (௩. ௨0), தைத்தி ரீய ஆரணியகத்தினும் (௧0. ௧௨. ௨௬) உள்ளது.

* Dharakah = Supporter.

பத்தாவது

# ஆன்மப்பிரகரணம்



[இப்பிரகரணம் பசு ஜீவன் எனப்படும ஆன்மாவின் வடிவுமுதலிய வற்றையும், மரணகாலத்தில் அது செல்லும் தக்ஷிணாயன உத்தராயண மார்க்கங்களையும் கூறுகின்றது.]

## (க) ஆன்மா ஆண் பெண் அலி அல்லன்.



(1) நைவஸத்ரீ ந புமாநேஷ ந சைவாயம் நபும்ஸக:l யத்யச் சரீரமாதத்தே தேந தேந ஸ யுஜ்யதேll

— சுவேதாசுவதரம், ரு. க௦.

"ஆன்மாவானது பெண்ணும் அன்று, ஆணும் அன்று, அலியும் அன்று; எந்தெந்தச் சரீரத்தை எடுக்கின்றானோ, அததனோடு சேர்கின்றான்."

## (உ) ஆன்மா சார்ந்ததன்வண்ணமாதல்.



(2) ஸ வா அயமாத்மா ப்ரஹ்மவிஜ்ஞாநமயோ மநோமய: ப்ராணமய: சக்ஷுர்மய: ச்ரோத்ரமய: ப்ருதிவீமய ஆபோமயோ வாயுமய ஆகாசமயஸ் தேஜோமயோதேஜோமய: காமமயோகாமமய: க்ரோதமயோக்ரோதமயோ தர்மமயோதர்மமயஸ் ஸர்வமய:l

— பிருகதாரணியம், ச. ச. ரு.

"(அபகதபாப்மத்துவாதி குணசாம்மியத்தினாலே)பிரஹ்மம்(ஆக ஆகும்) இந்த ஆன்மா அறிவுருபன், மநோ * மயன், பிராணமயன், சக்ஷுமயன், சோத்திரமயன், பிருதிவீமயன், அப்புமயன், வாயுமயன், ஆகாயமயன், தேயுமயன், அதேயுமயன், காமமயன், அகாமமயன், கோபமயன், அகோபமயன், புண்ணியமயன், பாவமயன், எல்லாமயன்."

---

* மயன் என்றதற்குச் சார்ந்ததின் வண்ணமாய் நிற்பவன் என்பது தாற்பரியம்.

## (௩) ஆன்மவடிவம்.

(3) பாலாக்ரசதபாகஸ்ய சததா கல்பிதஸ்ய ச।
பாகோ ஜீவஸ் ஸ விஜ்ஞேயஸ் ஸசாநந்த்யாயகல்ப்யதே॥

— சுவேதாசுவதரம், ரு. கூ.

"(ஓர்) மயிர் நுனியை நூறாகக் கூறிட்டு, அதின் ஓர் பாகத்தை நூறுபாகஞ் செய்யின் அதில் ஓர் பாகம் ஆன்மா (சீவன்); மேலும், ஆன்மா அநேகம் என்றும் கூறப்படுகின்றது."

## (௪) ஆன்மா அழிவதில்லை.

(4) ந ஜாயதே ம்ரியதே வா விபச்சிந்நாயம் குதச்சிந்ந பபூவ கச்சித்। அஜோ நித்ய: சாச்வதோயம்புராணோ ந ஹந்யதே ஹந்யமாநே சரீரே।

— கடம், உ. கஅ.

"இந்த அறிஞனாகிய (சீவ ஆன்மா) பிறப்பதில்லை, இறப்பதில்லை அவன் ஒன்றினின்று பிறக்கவில்லை; அவனினின்று ஒன்று பிறக்கவுமில்லை; அவன் பிறவாதவன், நித்தியன், சாசுவதன், பழையோன், தேகம் வெட்டுண்ட போதினும் அவன் வெட்டுண்ணான்."

(5) ஹந்தா சேந் மந்யதே ஹந்தும் ஹதச்சேந் மந்யதே ஹதம்। உபௌ தௌ ந விஜாநீதௌ நாயம் ஹந்தி ந ஹந்யதே।

— கடம், உ. கக.

"கொலை செய்பவன் தான் கொலை செய்கின்றேன் என நினைத்தால், கொலையுண்டவன் கொலையுண்டேன் என நினைத்தால் அவ்விருவரும் (சீவான்ம சொரூபத்தை) அறிந்தாரில்லை; இவன் கொல்லவும் இல்லை, அவன் கொல்லப்படவும் இல்லை."

(6) கிஞ்சிஜ்ஞோ மலிந: சுத்த: சைதந்யோ மாயயா வ்ருத:। கர்த்தா போக்தா சரீராத்யைர் நித்யோ வ்யாபீஜு மூர்த்திமாந்। நிர்க்குணோ நிஷ்க்ரியச் சைவ சிவத்வப்ராப்திமாந் க்ரமாத்॥

— சிவாகமம்.

"(ஆன்மாவானவன்) கிஞ்சிஞ்ஞன், மலினன், சுத்தன், சைதன்னியன், மாயையினாற் சூழப்பட்டவன், கர்த்தா, சரீரங்களைக் கொண்டு (போகந் துய்க்கும்) போக்தா, நித்தியன், வியாபி, மூர்த்திமான், நிர்க்குணன், நிஷ்கிரியன், சிவத்துவத்தை அடைபவன்."

## (ரு) ஆன்மா அசங்கன்.

(7) ஸ யத் தத்ர கிஞ்சித் பச்யத்யனன்வாகதஸ் தேந பவத்யஸங்கோஹ்யயம் புருஷ:।

—பிருகதாரணியம், ச. ந. கரு.

"அவன் அங்கே (சுழுப்தியில்) எதனைக் கண்டானோ, அதனால் அவன் தொடக்குண்ணான்; இந்தப் புருஷன் அசங்கன் (தொடக்குண்ணான்) அன்றோ."

## (சு) ஆன்மா முக்குண வயத்தன்.

(8) குணான்வயோ ய: பலகர்ம கர்த்தா க்ருதஸ்ய தஸ்யைவ ஸ சோபபோக்தா। ஸ விச்வரூபஸ் த்ரிகுணஸ்த்ரிவர்த்மா ப்ராணாதிப: ஸஞ்சரதி ஸ்வகர்மபி:॥

—சுவேதாசுவதரம், ரு. எ.

"எவன் குணங்களோடியைந்தவனும், பலன்களையுடைய கன்மங்களைச் செய்பவனும், அங்ஙனஞ் செய்யப்பட்ட பயனைத் துய்ப்பவனும் இருக்கின்றானோ, அவன் விசுவரூபனாய், முக்குணமுடையனாய், * மும்மார்க்கமுடையனாய், பிராணாதிபனாய்த் தன் கன்மங்களோடு சஞ்சரிப்பவனாகின்றான்."

## (எ) சொப்பன சகலாவஸ்தைகள்.

(9) தத் யதா மஹாமத்ஸ்ய உபே கூலே அநுஸஞ்சரதி பூர்வஞ் சாபரஞ்சைவமேவாயம் புருஷ ஏதாவுபாவந்தாவநுஸஞ்சரதி ஸ்வப்நாந்தஞ்ச புத்தாந்தஞ்ச।

—பிருகதாரணியம், ச. ந. கஅ.

* தேவயானம், பிதிருயானம், தூமமார்க்கம் என்பன மும்மார்க்கம்.

"எங்ஙனம் ஓர் பெரிய மீனானது ஆற்றின் வலப்புறத்தினும் இடப்புறத்தினுமுள்ள இரு கரைகளினுஞ் சஞ்சரித்துக்கொண்டிருக்குமோ, அங்ஙனமே இந்தப் புருஷன் (சீவான்மா) சொப்பனாவஸ்தை சகலாவஸ்தை என்னும் இரு அவஸ்தைகளினுஞ் சஞ்சரிக்கின்றான்."

(10) ஆமோக்ஷம் ஸஞ்சரத்யேவ மத்ஸ்ய: கூலத்வயம் யதா।

—உபதேசகாண்டம், அஅ: கஅ.

"மற்சம் (நதியின்) இரு கரைகளினும் (போய்வருவதுபோல) (ஆன்மாவானவன் கேவலாவஸ்தை சகலாவஸ்தை என்பவைகளிலே) மோக்ஷ பரியந்தம் திரிகின்றான்."

## (அ) சுழுத்தியவஸ்தை.

(11) தத் யதாஸ்மிந்நாகாசே ச்யேநோ வா ஸுபர்ணோ வா விபரிபத்ய ச்ராந்த: ஸம்ஹத்ய பக்ஷௌ ஸல்லயாயைவ த்ரியத ஏவமேவாயம் புருஷ ஏதஸ்மா அந்தாய தாவதி யத்ர சுப்தோ ந கஞ்சந காமம் காமயதே ந கஞ்சந ஸ்வப்நம் பச்யதி।

—பிருகதாரணியம், ச. ங. கக.

"ஓர் பருந்தேனும் மற்றோர் அழகிய பக்ஷியேனும் ஆகாயத்திலே சுற்றித் திரிந்தபின்னர்த் தன் இறகுகளை ஒடுக்கிக்கொண்டு எங்ஙனம் இளைப்புற்றுக் கூட்டை அடைகின்றதோ, அங்ஙனம் ஒருவன் துயிலும்போது காணும் எந்தப் போகப்பொருள்களை விரும்பாமலும் கனவுகாணாமலும் இருக்கற்பாலதாகிய (சுழுப்தி) அவஸ்தையை அடைகின்றான்."

## (கூ) ஆன்மா புண்ணியன்; பாபி.

(12) யதாகாரீ யதாசாரீ ததா பவதி ஸாது காரீ ஸாதுர் பவதி பாபகாரீ பாபோ பவதி புண்ய: புண்யேந கர்மணா பவதி பாப: பாபேந।

—பிருகதாரணியம், ச. ச. ரு.

"ஒருவன் எங்ஙனஞ் செய்கின்றானோ, எங்ஙனம் ஒழுகுகின்றானோ அங்ஙனம் ஆகின்றான்; நன்மை செய்பவன் நல்லவனாகின்றான்; பாவஞ் செய்பவன் பாபியாகின்றான்; புண்ணியச் செய்கையினாற் புண்ணியனாயும், பாவச்செய்கையினாற் பாபியாயும் ஆகின்றான்."

## (௧0) ஆசைப்பிரகாரமே பயன்.

(13) அதோ கல்வாஹு: காமமய ஏவாயம் புருஷ இதி ஸ யதா காமோ பவதி தத் க்ரதுர் பவதி யத் க்ரதுர் பவதி தத் கர்ம குருதே.......ததபிஸம்பத்யதே।

— பிருகதாரணியம், ௪. ௪. ௫.

"இந்தப் புருஷனை ஆசைமயன் என்று சொல்லுகின்றார்கள்; (அவனது) ஆசை எவ்வாறோ, அவ்வாறு அவன் கருத்தாகும்; கருத்து எப்படியோ, அப்படியே கன்மஞ் செய்கின்றான்; கன்மம் எப்படியோ, அப்படியே அதனைப் பெறுகின்றான்."

## (௧௧) ஆன்மாவின் மரணகாலம்.

(14) ஸ யத்ராயமாத்மாபல்யம் ந்யேத்ய ஸம்மோஹமிவ ந்யேத் யதைநமேதே ப்ராணா அபிஸமாயந்தி ஸ ஏதாஸ்தேஜோ மாத்ரா: ஸமப்யாததாநோ ஹ்ருதயமேவாந்வக்ராமதி ஸ யத்ரைஷ சாக்ஷுஷ: புருஷ: பராங் பர்யாவர்த்ததே ததாரூபஜ்ஞோ பவதி।

—பிருகதாரணியம், ௪. ௪. ௧.

"அந்த ஆன்மா பலக்குறைவடைந்து * மோகத்தை அடையுங்கால், இந்தப் பிராணங்களனைத்தும் அவனை (ஆன்மாவை) சூழுகின்றன; அவன் அப்போது ஞானேந்திரியங்களைக் கிரகித்துக் கொண்டு இதயத்தை அடைகின்றான்; இந்தக் கண்ணுட்புருஷன் (மரணகாலத்தில்) திரும்பி விடும்போது, அவன் விஷய ஞானமில்லாதவனாகின்றான்."

* மயக்கத்தை.

(15) ஜீவாபேதம் வாவ கிலேதம் ம்ரியதே ந ஜீவோ ம்ரியத இதி

—சாந்தோக்கியம், கூ. கக. ரு.

"ஜீவன் (சரீரத்தை) விட்டபோது, அது (சரீரம்) சாகின்றது; ஜீவன் இறப்பதில்லை."

## (கஉ) ஆன்மா சரீரமெடுத்தல்.

(16) தத் யதா த்ருணஜலாயுகா த்ருணஸ்யாந்தம் கத்வா ந்ய மாக்ரமமாக்ரம்யாத்மாநமுபஸம்ஹரத்யேவமேவாயமாத்மே தம் சரீரம் நிஹத்யாவித்யாம் கமயித்வாந்யமாக்ரம மாக்ரம்யாத்மாநமுபஸம்ஹரதி

—பிருகதாரணியம், ச. ச. ரு.

"ஓர் புற்புழுவானது புல்லின் நுனியிலே போய் மற்றொன்றை நணுகச் செய்து, அதனைப் பற்றுதற்குத் தன்னை ஒடுக்குமாறு போல, ஜீவான்மாவானது இந்தச் சரீரத்தை விடுத்து, அஞ்ஞா னத்தைத் துறந்து, மற்றோர் சரீரம் அணுக, அதனை நோக்கித் தன்னை ஒடுக்குகின்றது."

## (கரு) கருத்துப்பிரகாரமே மறுமையினுமாதல்.

(17) (அத) கலு க்ரதுமய: புருஷோ யதா க்ரதுரஸ்மில்லோகே புருஷோ பவதி ததேத: ப்ரேத்ய பவதி

—சாந்தோக்கியம், ரு. கச. க.

"புருஷன் அறிவுடையவன்; எங்ஙனம் இவ்வுலகில் அவன் கருத்து நிகழ்கின்றதோ, அங்ஙனமே இவ்வுலகத்தைத் துறந்து பின்னரும் ஆவன்."

(18) பச்யாமி தாண்டவம் சம்போர் யத்யப்யஸ்மிந் நஜந்மநி॥
ஜந்மாந்தரே ச தத் ப்ரஹ்மந் பச்யாம்யேவ ந ஸம்சய:॥

—சிதம்பரமான்மியம், கடு: சஎ.

"பிரஹ்மனே! இந்தச் சென்மத்தில் எங்ஙனமாயினும் தாண்டவேசுவரர் நிருத்தத்தைக் காணாதொழிவேனாயின், (இந்த அவாவே வித்தாக) அடுத்த சென்மத்திற் சந்தேகமின்றியே காண்பேன்."

## (௧௪) ஆன்மா கன்மப்பிரகாரம் வடிவெடுத்தல்.

---

(19) யோநிமந்யே ப்ரபத்யந்தே சரீரத்வாய தேஹிந:। ஸ்தாணு மந்யேநுஸம்யந்தி யதாகர்ம யதாச்ருதம்॥

—கடம், ரு. எ.

"சில சீவர்கள் கன்மத்துக்குத் தக்கவாறும், அறிவுக்குத் தக்கவாறும் சரீரத்தின்பொருட்டு மனுஷ்யாதி யோனியை அடைகின்றன; மற்றுள்ள சில சீவர்கள் தாவரசரீரத்தை அடைகின்றன."

(20) தத: க்ஷிதிம் ஸமாஸாத்ய புநர் ஜாயந்தி தேஹிந:। ஸ்தாவரா விவிதாகாராஸ்த்ருணகுல்மாதி பேதத:। தத்ராநுபூய து:காநி ஜாயந்தே கீடயோநிஷு॥

—சிவதருமோத்தரம்.

"ஆன்மாக்கள் பூமியை அடைந்து, பின்னர் நாநாவகையாகிய புல் செடிமுதலிய ஸ்தாவரங்களாய்த் தோற்றித் துன்பம் அநுபவித்து, பின் புழு (முதலிய) யோனிகளிலே பிறக்கின்றன."

## (௧௫) ஆன்மா கன்மாநுகுணமாகப் பற்பல வடிவவெடுத்தல்.

---

(21) ஸங்கல்பந ஸ்பர்சந த்ருஷ்டி மோஹைர் க்ராஸாம்பு வ்ருஷ்ட்யாத்ம விவ்ருத்த ஜந்ம। கர்மாநுகாந்யநுக்ரமேண தேஹீ ஸ்தாநேஷு ரூபாண்யபிஸம்ப்ரபத்யதே॥

—சுவேதாசுவதரம், ரு. ௧௧.

"சரீரமானது அன்னபானங்களால் வளர்தல்போல, சங்கற்பத்தினாலும் பரிசத்தினாலும் பார்வையினாலும் மோகத்தினாலும் ஆன்மாவானது கன்மங்களுக்கு இயைந்த முறையானே (பற்பல) இடங்களிற் (பற்பல) வடிவங்களை அடைகின்றது."

(22) ஸ்தூலாநி ஸூக்ஷ்மாணி பஹூநி சைவரூபாணி தேஹீ ஸ்வ குணைர் வ்ருணோதி। க்ரியாகுணைராத்மகுணைச்ச தேஷாம் ஸம்யோக ஹேதுரபரோபி த்ருஷ்ட:॥

—சுவேதாசுவதரம், ரு. ௧௨.

"ஆன்மாவானது பெரியனவாயும் சிறியனவாயுமுள்ள அநேக ரூபங்களைத் தனது (கன்மாநு) குணமாகத் தெரிந்துகொள்ளுகின்றது; தான் அவற்ரோடு கூடுதல்காரணயாகக் கன்மாநுகுணமாகவும் சரீரகுணமாகவும் ஆன்மாவும் காணப்படுகின்றான்."

(23) தத் யதா பேசஸ்காரீ பேசஸோமாத்ராமுபாதாயாந்யம் நவதரம் கல்யாணதரம் ரூபம் தநுத ஏவமேவாயமாத்மேதம் சரீரம் நிஹத்யாவித்யாம் கமயித்வாந்யம் நவதரம் கல்யாணதரம் ரூபம் குருதே பித்ரயம் வா காந்தர்வம் வா தைவம் வா ப்ராஜாபத்யம் வா ப்ராஹ்மம் வாந்யேஷாம் வா பூதாநாம்।

—பிருகதாரணியம், ச. ச. ச.

"தட்டான் ஒருவன் பொற்றுண்டொன்றை எடுத்து அதனை மிகப் புதிதாகவும் மிகச் சிறந்த வடிவாகவும் ஆக்குமாறுபோல, சீவான்மா இந்தச் சரீரத்தை விடுத்து அஞ்ஞானம் தவிர்ந்து, பிதிரர்க்கேனும், கந்தருவர்க்கேனும், தேவர்க்கேனும், பிரஜாபதிக்கேனும், பிரமத்துக்கேனும், மற்றெந்தச் செந்துவுக்கேனும் உரிய மிகப் புதியதும் மிகச் சிறந்ததுமாகிய சரீரத்தை எடுக்கின்றான்."

## (கரு) ஞானத்தையுடையோன் போகங்களை விரும்பான்.

---

(24) தூரமேதே விபரீதே விஷூசீ அவித்யா யாச வித்யேதி ஜ்ஞாதா। வித்யாபீப்ஸிநம் நசிகேதஸம் மந்யே ந த்வா காமா பஹவோ லோலுபந்த।

—கடம், உ. ச.

"அவித்தை (அஞ்ஞானம்) என்றும், வித்தை (ஞானம்) என்றும் அறியப்பட்டன ஒன்றுக்கொன்று வேறாகித் தூரத்தனவாம்; இவற்றுள் நாசிகேதனாகிய உன்னை ஞானத்தில் விருப்புடையனாக அறிகின்றேன்; ஏனெனில், போகங்கள் அநேகமாக விருந்தும் அவை உன்னை அசைத்தில."

(25) ஸ த்வம் ப்ரியாந் ப்ரியரூபாந் ச காமாநபித்யாயந் நசிகே தோத்யஸ்ராக்ஷீ:। நைதாம் ஸ்ருங்காம் வித்தமயீமவாப்தோ யஸ்யாம் மஜ்ஜந்தி பஹவோ மநுஷ்யா:॥

—கடம், உ. ௩.

"அவ்வியல்பினனாகிய நீ இனிய வஸ்துக்களையும், இனிய ரூபங்களையுடைய போகங்களையும் நினைத்து விரும்பாதொழிந்தனை; எந்த மார்க்கத்திலே அநேக மனிதர் மூழ்கிப்போகின்றார்களோ, அவ்வியல்பினதாய பொருண்மயமாம் மார்க்கத்தை நீ அங்கீகரித்திலை."

## (௧௭) ஆசையுடையானுக்குப் பரலோகம் புலப்படாது.

(26) ந ஸாம்பராய: ப்ரதிபாதிபாலம் ப்ரமாத்யந்தம் வித்தமோஹேந மூடம்। அயம் லோகோ நாஸ்தி பர இதி மாநீ புந: புநர் வசமாபத்யதே மே।

—கடம், உ. ௬.

"சிறியனையும், ஏமாந்தவனையும், பணவாசையினால் அறிவிழந்தவனையும் உள்ளானுக்குப் பரலோகமானது புலப்படாது; 'இவ்வுலகமே உள்ளது பிறிது உலகம் இல்லை' என்பவன் அடிக்கடி எனது (யமனது) வசப்பட்டவனாய் அடைகின்றான்."

## (௧௮) மூடர் செல்லுநெறி.

(27) அவித்யாயாமந்தரே வர்த்தமாநா: ஸ்வயம் தீரா: பண்டிதம் மந்யமாநா:। தந்த்ரம்யமாணா: பரியந்தி மூடா அந்தேநைவ நீயமாநா யதாந்தா:।

—கடம், உ. ௫.

"அஞ்ஞானபோகமத்தியில் இருப்பவர்களாய்த் தங்களைத் தீரர்களென்றும், பண்டிதர்களென்றும் எண்ணிக்கொண்டிருக்கும் மூடர்கள் (ஜரைரோகாதிகளாற்) பீடிக்கப்பட்டவர்களாய், குருடர் குருடரால் வழிகாட்டப்பட்டாற்போல, (அநேக மார்க்கங்களிற்) சுழல்வாராயினர்."

(28) ‡ அவித்யாயாமந்தரே வாத்தமாநா: ஸ்வயம் தீரா: பண்டிதம் மந்யமாநா:। ஜங்கந்யமாநா: பரியந்தி மூடா அந்தேநை வநீயமாநா யதாந்தா:॥

—முண்டகம், க. உ. அ.

"அஞ்ஞானபோகமத்தியில் இருப்பவர்களாய்த் தங்களைத் தீரர்களென்றும் பண்டிதர்களென்றும் எண்ணிக்கொண்டிருக்கும் மூடர்கள் (ஜராரோகாதிகளாற்) பிடிக்கப்பட்டவர்களாய், குருடர் குருடரால் வழிகாட்டப்பட்டாற்போல (அநேக மார்க்கங்களிற்) சுழல்வாராயினர்."

(29) அவித்யாயாம் பஹுதா வர்த்தமாநா வயம் க்ருதார்த்தா இத்யபிமந்யந்தி பாலா:। யத் கர்மிணோ ந ப்ரவேதயந்தி ராகாத் தேநாதுரா: க்ஷீணலோகா: ச்யவந்தே॥

—முண்டகம், க. உ. கூ.

"அநேகபிரகாரமாக அஞ்ஞானத்திலே வசிக்கும் † பாலர்கள் தாங்கள் கிருதார்த்தர்கள் என்று மதிக்கின்றார்கள்; எந்தக்காரணம்பற்றி ஆசையினாலே கன்மஞ் செய்வோர் (மெய்ப்பொருளை) அறிகின்றிலர், அதுபற்றித் (துக்கத்தினாற்) பீடிக்கப்பட்டுப் (புண்ணியம்) குறைந்தவர்களாய்ச் (சுவர்க்கத்தினின்று பூமிக்கு) நழுவுகின்றார்கள்."

(30) இஷ்டாபூர்த்தம் மந்யமாநா வரிஷ்டம் நாந்யச் ச்ரேயோ வேதயந்தே ப்ரமூடா:। நாகஸ்ய ப்ருஷ்டே தே ஸுக்ருதேநுபூத்வேமம் லோகம் ஹீநதரஞ்சாவிசந்தி॥

—முண்டகம், க. உ. க0

"நல்வினைகளை முக்கியமெனநினைக்கின்ற மூடர்கள் புருஷார்த்தத்தை அறிகின்றிலர்; அவர்கள் புண்ணியத்தால் எய்திய சுவர்க்கலோகத்திற் (கன்மபயனை) அநுபவித்துப் (பின்னர்) இவ்வுலகத்தையும் இதிற்றாழ்ந்த (நரக) லோகத்தையும் அடைகின்றார்கள்."

---

‡ இம்மந்திரம் முன் மந்திரமபோலப் பொருளினால்வேற்றுமையுடையது அன்று; வடமொழியில் மாத்திரம் ஓர் மொழி வேறுபட்டுள்ளது.

† அறிவில்லாதவர்கள்

(31) யேநதிவ்ய சுகார்த்தாய பவத்பி: சுக்ருதம் க்ருதம்। இதம் விமாநமாருஹ்ய திவ்யஸ்த்ரீபோக பூஷிதம்। ஸ்வர்க்கம் கச் சத்வமதுலம் ஸர்வகாமஸமந்விதம்। தத்ர புக்த்வா மஹா போகாநந்தே புண்யஸ்ய ஸம்க்ஷயாத்। அஸ்தி சேதல்பம சுபம் புநஸ்ததிஹ போக்ஷ்யதே॥

— சிவதருமோத்தராகமம்.

"எந்தச் சுவர்க்க இன்பத்தின்பொருட்டு உங்களாற் புண்ணி யஞ் செய்யப்பட்டதோ, (அதன்பொருட்டுத்) திவ்யஸ்திரீ போகங்களாற் சிறப்புற்றதாயும், ஒப்பில்லாத சமஸ்தபோகங் களையுடையதாயுமுள்ள சுவர்க்கத்துக்கு இந்த விமானத்தில் இவர்ந்துகொண்டு செல்லுங்கள் (என்று யமன் ஆஞ்ஞாபித் தான்); அங்கே மஹத்தாகிய போகங்களைப் புசித்து (அங்கே துய்த்தற்குரிய) புண்ணியம் குறைந்தவுடனே இறுதியில் அவ் வற்பபுண்ணியத்தை இவ்வுலகத்தின்கண்ணே அநுபவிக்கின் றூர்கள்."

(32) உல்கா வ்ருத்தம் யதா ஜந்துர் ஸ்தித்வா ஸ்தித்வா சிவாஜ் ஞயா। லோகத்ரயஞ்ச நிமிஷாத் ஸதா குர்யாத் கதாகதம்॥

— சிவதருமோத்தராகமம்.

"கொள்ளிவட்டம்போல ஆன்மாவானது சிவாஞ்ஞையினலே (சுவர்க்கம், பூமி, நரகங்களாகிய) மூவுலகத்தையும் நிமிஷத்தின் கண்ணே எஞ்ஞான்றும் போய்வந்து கொண்டிருக்கின்றது."

## (கக) போகத்தினும் மோக்ஷமே சிறந்தமை.

(33) ச்ரேயச்ச ப்ரேயச்ச மநுஷ்யமேதஸ்தௌ ஸம்பரீத்ய விவி நக்தி தீர:। ச்ரேயோஹி தீரோபிப்ரேயஸோ வ்ருணீதே ப்ரேயோ மந்தோ யோகக்ஷேமாத் வ்ருணீதே॥

— கடம், உ. உ.

"மோக்ஷமும் போகமும் மனிதனை அடைகின்றன; திண்ணிய அறிஞன் அவைகளை நன்கு (பகுத்து) ஆலோசித்து விவேகிக் கின்றான்; (அந்த) அறிஞன் போகத்தினும் மோக்ஷமே சிறந்த தெனக்கொண்டு அம்மோக்ஷத்தை விரும்புகின்றான்; மந்தமதி யுடையான் யோகக்ஷேமத்தினும் போகத்தையே (சிறந்ததென) விரும்புகின்றான்."

## (௨௦) அவித்துவான் இறக்குஞான்று பிராணன்கள் ஆன்மாவைக் குழுமுதல்.

(34) யாஜ்ஞவல்க்யேதி ஹோவாச யத்ராயம் புருஷோம்ரியத உதஸ்மாத் ப்ராணு: க்ராமந்த்யாஹோ நேதிநேதிஹோவாச யாஜ்ஞவல்க்யோத்ரைவ * ஸமவலீயந்தே ஸ உச்வயத்யாத் மாயத்யாத்மாதோ ம்ருத: சேதே।

— பிருகதாரணியம், ௩. ௨. ௧௧.

† யாஞ்ஞவற்கியரே! அம்மனிதன் (அவித்துவான்) இறக்கும் போது பிராணன்கள் அவனைவிட்டுப் போகின்றனவா? அன்று? என்று (ஆர்த்தபாகர் கூற, அதற்கு) யாஞ்ஞவற்கியர் அன்று, அன்று; அவனிலே (ஆன்மாவிலே) பிராணன்கள் குழுமுகின்றன; அவன் வீங்கி உப்பி இறந்துகிடக்கின்றான்."

(35) தத்யதாநஸ் ஸுஸமாஹிதமுத்ஸர்ஜாத் யாயாதேவமேவாயம் சாரீர ஆத்மா ப்ராஜ்ஞேநாத்மநாந்வாரூட முத்ஸர்ஜத் யாதி யத்ரைததூர்த்வோச்வாசீ பவதி।

— பிருகதாரணியம், ௪. ௩. ௩௫.

"பாரமேற்றப்பட்ட பண்டி இரைந்துகொண்டு போதல்போல, பிரஞ்ஞான ஆன்மாவினால் (அருட்சத்தியோடு கூடிய சிவபிரானால்) இவரப்பெற்ற சரீரத்துள்ள ஆன்மாவானது சாதுங் கால் நெட்டுயிர்ப்புக்கொண்டு போகின்றது."

(36) தத் யதா ராஜாநம் ப்ரயியாஸந்தமுக்ரா: ப்ரத்யேநஸஸ் ஸூதக்ராமண்யோபிஸமாயந்த்யேவமேவமமாத்மாநமந்தகாலே ஸர்வே ப்ராணு அபிஸமாயந்திபத்ரைதத் தூர்த்வோச்வாசீ பவதி।

— பிருகதாரணியம், ௪. ௩. ௩௮.

---

* ஸமவநீயந்தே என்றும் பாடம்.

† இவ்விஷயத்தையுற்று வேதாந்த சூத்திரசைவபாஷ்யத் தமிழ் மொழிபெயர்ப்பின் ததாபீத்யதிகரணக் (௪. ௨. ௧௨.) குறிப்புரையிற் காண்க.

"பிரயாணமாகச் செல்லும் இராஜாவைச் சூழ்ந்து உக்கிரர்களும், அதிகாரிகளும், சூதர்களும், கிராமாதிகாரிகளும் சூழுமுதல்போல, ஆன்மா இறக்குங்காலத்திற் பிராணன்களெல்லாம் அவ்வான்மாவைச் சூழுமுகின்றன."

## (உக) கன்மசேஷம் அநுபவிக்குமிடம் பூமி.

(37) ததேவ ஸக்தஸ் ஸஹகர்மணைதி லிங்கம் மநோயத்ர நிஷக்தமஸ்ய। ப்ராப்யாந்தம் கர்மணஸ்தஸ்ய யத்கிஞ்சேஹ கரோத்யயம்। தஸ்மால்லோகாத் புநரேத்யஸ்மை லோகாய கர்மண இதிநு காமயமாந:॥

— பிருகதாரணியம், ச. ச. சு.

"எதிலே ஒருவனுக்கு மனசு பதிந்துளதோ, அதனையே அவன் தொடர்ந்து செய்கின்றான்; எந்தக் கன்மத்தைச் செய்கின்றானோ, அந்தக் கன்மாநுகுணமாக அந்தந்த லோகங்களை அடைந்து (போகந் துய்த்து) மீண்டு (கன்மசேஷம் அநுபவித்தற்காக) இந்தக் கன்மபூமியை அடைகின்றான்; இது பற்றுடைய அவித்துவான் விஷயம்."

## (உஉ) நரகலோகம்.

(38) அஸுர்யா நாம தே லோகா அந்தேந தமஸா வ்ருதா:।
தாந்தே ப்ரேத்யபிகச்சந்தி யே கேசாத்மஹநோ ஜநா:॥

—ஈசாவாசியம், ங.

"திண்ணிய இருளினால் மூடப்பட்ட சூரியனில்லா உலகங்கள் உள்ளன; (சிவபிரானை அறியாமையினாலே) தம்மைக் கொன்றவர்கள் (இறந்தபின்) அவ்வுலகங்களைப்போய் அடைகின்றார்கள்."

(39) அநந்தா நாம தே லோகா அந்தேந தமஸா வ்ருதா:। தாந்தே ப்ரேத்யபிகச்சந்த்யவித்வாம்ஸோ புதோ ஜநா:॥

—பிருகதாரணியம், ச. ச. கக.

"திண்ணிய இருளினால் மூடப்பட்ட அந்த ஆனந்தமில்லாத (துன்ப) உலகங்கள் உள்ளன; அவித்துவான்களும் புத்தியில்லாதவர்களும் இறந்தபின் இவ்வுலகங்களை அடைகின்றார்கள்."

(40) ஸப்தமஸ்ய தலஸ்யாதோ கோரே தமஸி ஸமஸ்திதா:।

—சிவதர்மோத்தரம்.

"ஏழாவது தலத்தின் கீழே இருணிறைந்த கோரம் என்னும் நரகத்தில் இருந்தார்கள்."

## (உ௩) ஆன்மா புறப்படும் வாயில்கள்.

(41) ஏதஸ்ய ஹ்ருதயஸ்யாக்ரம் ப்ரத்யோததே தேந ப்ரத்யோ தேநைஷ ஆத்மா நிஷ்க்ராமதி சக்ஷுஷோ வா மூர்த்நோ வாந்யேப்யோ வா சரீரதேசேப்யஸ் தமுத்க்ராமந்தம் ஸர்வே ப்ராணா அநுத்க்ராமந்தி ஸ விஜ்ஞாநோ பவதி ஸ விஜ்ஞாநமேவாந்வக்ராமதி।

—பிருகதாரணியம், ச. ச. உ.

"இந்த ஆன்மாவுக்கு (மரணகாலத்தில்) இதயத்துவாரத்தில் ஒளி உண்டாகின்றது; இந்த ஒளிகொண்டு இந்த ஆன்மா கண்வாயிலாகவோ, தலைவாயிலாகவோ, சரீரத்து மற்றோர்வாயிலாகவோ புறப்படுகின்றான்; (இங்ஙனம்) புறப்படும் (அவனைத்) தொடர்ந்து (முக்கியப்) பிராணன் புறப்பட, மற்றெல்லாப் பிராணன்களும் (அதனைத்) தொடர்ந்து புறப்படுகின்றன; அவன் அறிஞனாகவே இருக்கின்றான்; விஞ்ஞானத்தைத் தொடர்ந்து புறப்படுகின்றான்."

## (உ௪) இரு மார்க்கங்கள்.

(42) ஸம்வத்ஸரோ வை ப்ரஜாபதிஸ் தஸ்யாயநே தக்ஷிணஞ் சோத்தரஞ்ச। தத் யே ஹ வை ததிஷ்டாபூர்த்தேக்ருதமித் யுபாஸதே। தே சாந்த்ரமஸமேவ லோகமபிஜயந்தே। த ஏவ புநராவர்த்தந்தே தஸ்மாதேதே ருஷய: ப்ரஜா காமா தக்ஷிணம் ப்ரதிபத்யந்தே ஏஷ ஹவை ரயிர் ய: பித்ருயாண:॥

—பிரசினம், க. கூ.

"வர்ஷமானது பிரஜாபதி; அதற்குத் தக்ஷிணாயநம் உத்தராயணம் என இரண்டு மார்க்கங்கள் உண்டு; எவர்கள் (யாகம் தடாக முதலிய) நல்வினைகளைச் செய்கின்றார்களோ, அவர்கள் சந்திர

லோகத்தை அடைகின்றார்கள்; அவர்கள் பின்னர்ப் புநராவர்த்தி (மறுபிறவி) அடைகின்றார்கள்; இங்ஙனம் புத்திராசையுடைய இருஷிகள் தக்ஷிணாயனமார்க்கத்தை அடைகின்றார்கள்; இந்தப் பிதிர்மார்க்கம் பொருள்பற்றியது."

## (உரு) தக்ஷிணாயனமார்க்கம்.

(43) அத ய இமே க்ராம இஷ்டாபூர்த்தே தத்தமித்யுபாஸதே தே தூமமபிஸம்பவந்தி தூமாத் ராத்ரிம் ராத்ரே ரபரபக்ஷமபரபக்ஷாத் யாந் ஷட் தக்ஷிணைதி மாஸாந் தாநேதே ஸம்வத்ஸரமபிப்ராப்நுவந்தி மாஸேப்ய: பித்ருலோகம் பித்ருலோகாதாகாசமாகாசாச் சந்த்ரமஸமேஷ ஸோமோ ராஜா தத் தேவாநாமந்நம் தம் தேவா பக்ஷயந்தி தஸ்மிந் யாவத் ஸம்பாதமுஷித்வாதைதமேவாத்வாநம் புநர் நிவர்த்தந்தே யதைதமாகாசமாகாசாத் வாயும் வாயுர் * பூத்வா தூமோ பவதி தூமோ பூத்வாப்ரம் பவதி அப்ரம் பூத்வா மேகோ பவதி மேகோ பூத்வா ப்ரவர்ஷதி த இஹ ப்ரீஹி யவா ஓஷதிவநஸ்பதயஸ் திலமாஷா இதி ஜாயந்தேதோ வை கலு துர்நிஷ்ப்ரபதரம் யோ ஹ்யந்நமத்தி யோ ரேதஸ் ஸிஞ்சதி தத் பூய ஏவ பவதி॥

—சாந்தோக்கியம், ரு. ௧0. ௩, ௪, ரு, ௬.

"எவர்கள் கிராமத்திலே (யாகஞ்செய்தல் முதலிய) நல்வினைகளைச் செய்கின்றார்களோ, அவர்கள் தூமத்துக்கும், தூமத்தினின்று இரவுக்கும், இரவினின்று கிருஷ்ணபக்ஷத்துக்கும், கிருஷ்ணபக்ஷத்தினின்று (சூரியன் தெற்கே போகும்) தக்ஷிணாயனத்துக்குஞ் செல்வர்; வர்ஷத்தை அடைவாரில்லை; (தக்ஷிண)

---

* வாயோர் வ்ருஷ்டிம் வ்ருஷ்டே: ப்ருதிவீம் தே ப்ருதிவீம் ப்ராப்யாந்நம் பவந்தி தே புந: புருஷாக்நௌ ஹூயந்தே ததோ யோஷாக்நௌ ஜாயந்தே।

—பிருகதாரண்ணியம், ௬. ௨. ௧௬.

"வாயுவினின்று மழைக்கும், மழையினின்று பூமியையும் அடைகின்றார்கள்; பூமியை அடைந்தபோது அன்னமாகின்றார்கள்; அவை பின்னர்ப் புருஷாக்கினியிலே ஓமிக்கப்படுகின்றார்கள்; அங்கிருந்து யோஷிதாக்கினியிற் றோற்றுகின்றார்கள்."

அயனத்தினின்று பிதிர்லோகத்துக்கும், பிதிர்லோகத்தினின்று ஆகாயத்துக்கும், ஆகாயத்தினின்று சந்திரனுக்கும் (போகின்றார்கள்); இவன் சோமராஜன்; அவர்கள் தேவர்களுக்கு அன்னமாகின்றார்கள்; அதனை (அன்னத்தை)த் தேவர்கள் அயில்கின்றார்கள்; (கன்மாநுகூலமாகச் சின்னாள்) அங்கே (இன்பம் அநுபவித்து அங்கே இருத்தற்கு வாய்த்த) புண்ணியம் இருக்குமட்டும் இருந்து போனவழியே திரும்பி வருங்கால் ஆகாயத்துக்கும், ஆகாயத்தினின்று வாயுவுக்கும் (வருகின்றார்கள்); வாயு ஆகி, தூமம் ஆகி, மேகம் ஆகி, வர்ஷிக்கின்றான்; பின் நெல்லாயோ, யவையாயோ, ஒஷதிகளாயோ, மரங்களாயோ, திலமாயோ, உழுந்துகளாயோ பிறக்கின்றான்; இங்கே நீங்குதல் கஷ்டம்; எவர்கள் அவ்வுணவை உண்டு மக்களைப் பெறுகின்றார்களோ, அவர்கள் அவர்களைப் போலவே ஆகின்றார்கள்."

## (உகூ) புண்ணியஞ் செய்தவர்; பாபஞ் செய்தவர்.

---

(44) தத் ய இஹ ரமணீயசரணா அப்யாசோ ஹயத்தே ரமணீயாம் யோநிமாபத்யேரந் ப்ராஹ்மணயோநிம் வா க்ஷத்ரியயோநிம் வா வைச்யயோநிம் வா த ய இஹ கபூயசரணா அப்யாசோ ஹ யத்தே கபூயாம் யோநிமாபத்யேரந் ச்வயோநிம் வா சூகரயோநிம் வா சண்டால யோநிம் வா।

—சாந்தோக்கியம், ரு. க0. எ, அ.

"புண்ணியஞ் செய்தவர்கள் விரைந்து பிராமணனாயோ, க்ஷத்திரியனாயோ, வைசியனாயோ பிறக்கின்றார்கள்; பாவஞ் செய்தவர்கள் நாயாயோ, பன்றியாயோ, சண்டாளனாயோ பிறக்கின்றார்கள்."

(45) ய ஏதௌ பந்தாநௌ ந விதுஸ்தே கீடா: பதங்கா யதிதம் தந்தசூகம்।

—பிருகதாரணியம், சூ. உ. கசூ.

"(தக்ஷிணாயனம் உத்தராயணம் என்னும்) இம்மார்க்கங்களை அறியாதவர்கள் புழுக்களாயும், வெட்டுப் பூச்சிகளாயும், சர்ப்பங்களாயும் (ஆகின்றார்கள்)."

## (உஎ) தேவயானம்.

(46) * ஸத்யமேவ ஜயதே நாந்ருதம் ஸத்யேந பந்தா விததோ தேவயாந:| யேநாக்ரமந்தி ருஷயோஹ்யாப்தகாமா யத்ர தத் ஸத்யஸ்ய பரமம் நிதாநம்||

—முண்டகம், ந. க. ௬.

"பரமான்மாவே வெல்வி அடைகின்றது; பொய் அன்று; பரமான்மாவினுலே தேவயானம் விரிக்கப்பட்டது; பற்றற்றவர்களாகிய இருஷிகள் பரமான்மாவுடைய பரமபதம் (சிவலோகம்) இருக்குமிடத்தை அடையுமாறு அந்தத் § தேவயானமார்க்கத்தினுற் செல்கின்றுர்கள்."

(47) தஸ்மிந் சுக்லமுத நீலமாஹு: பிங்கலம் ஹரிதம் லோஹிதஞ்ச| ஏஷ பந்தா ப்ரஹ்மணு ஹாநுவித்தஸ் தேநைதி ப்ரஹ்மவித் புண்யக்ருத்தேஜஸச்ச||

—பிருகதாரணியம், ச. ச. ௬.

"அதிலே (பாதையிலே) வெண்மை, நீலம், மஞ்சள், பச்சை, சிவப்பு என்னும் நிறங்களில் ஒன்று உளது; அந்தப் பாதை பரப்பிரஹ்ம (சிவ)த்தினல் ஆக்கப்பட்டது; அதிலே பரப்பிரஹ்மத்தை (சிவனை) அறிந்தவனும், (சிவ) புண்ணியஞ் செய்தவனும், (சிவ) தேஜசுடையவனும் செல்கின்றுர்கள்."

(48) அணுபந்தா விதத: புராணோ மாம் ஸ்ப்ருஷ்டோ நுவித்தோ மயைவ| தேந திரா அபியந்தி ப்ரஹ்மவித: ஸ்வர்க்கம் லோகமித ஊர்த்வம்விமுக்தா:||

—பிருகதாரணியம், ச. ச. அ.

---

* சத்தியம் என்பது பரமான்மாவாகிய சிவபெருமானுக்குப் பெயரானமையை ௧௬௧-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க.

§ ந தே பூயோ நிவர்த்தந்தே தேவயாநேந யோகிந:|

"தேவயானத்தினுலே (உத்தராயணமார்க்கத்தினுலே போன) அந்தத் (ஞானிகள்) யோகிகள் மீளப் (பிறவியிற்) செல்வாரல்லர்" என்று நிச்சுவாசகாரிகை என்னும் சிவாகமங் கூறுகின்றது.

"நுண்ணியதாய் விரிக்கப்பட்ட பழைய பாதையானது என்னால் ஸ்பரிசிக்கப்பட்டது; பிரஹ்மத்தை அறிந்த ஊரனுடையார் அதுவாயிலாக நடந்து முக்தராகிச் சுவர்க்க (சிவ) லோகத்துக்குப் போகின்றார்கள்."

(49) ஸ்வர்க்கலோகே ந பயம் கிஞ்ச நாஸ்தி ந தத்ர த்வம் ந ஜரயா பிபேதி। உபே தீர்த்வாசநாயா பிபாஸே சோகாதிகோ மோததே ஸ்வர்க்கலோகே॥

—கடம், க. கஉ.

"சிவலோகத்திலே பயம் சிறிதும் இல்லை; அங்கே (யமனாகிய) நீயும் இல்லை; (ஒருவனும்) ஜரைக்குப் பயமுறவேண்டியதில்லை; பசி தாகம் என்னும் இரண்டையும் கடந்து சோகநீங்கிப் பிரஹ்ம (சிவ) லோகத்தில் ஆனந்தமடைகின்றான்."

(50) அதோத்தரேண தபஸா ப்ரஹ்மசர்யேண ச்ரத்தயா வித்யயாத்மாநமந்விச்யாதித்யமபிஜயந்த ஏதத்வை ப்ராணாநாமாயதநமேததம்ருதமபயமேதத் பராயணமேதஸ்மாந் ந புநராவர்த்தந்தே।

—பிரசினம், க. க0.

"தபசினாலும், பிரஹ்மசரியத்தினாலும், அன்பினாலும், ஞானத்தினாலும் பரமான்மாவாகிய சிவபிரானை நாடிப் பின் சூரியனை உத்தராயணமார்க்கத்தினால் அடைகின்றார்கள்; இதுதான் ஆன்மாக்களின் (முக்தர்களின்) வீடு; இது அமிர்தம் (சிவன்); 'இது அபயம்; இது உயர்ந்த கதி; * இங்கிருந்து மீளுவாரல்லர் (இது முடிவு.)"

(51) யதா வை புருஷோஸ்மால் லோகாத் ப்ரைதி ஸ வாயுமாகச்சதி தஸ்மை ஸ தத்ர விஜிஹீதே யதா ரதசக்ரஸ்யகம் தேந ஸ ஊர்த்வ ஆக்ரமதே ஸ ஆதித்யமாகச்சதி தஸ்மை ஸ தத்ர விஜிஹீதே யதாலம்பரஸ்ய கம் தேந ஸ ஊர்த்வ

* அங்கதிரோனவனையண்ணலாக்கருதவேண்டா
வெங்கதிரோன்வழியேபோவதற்கமைந்துகொண்மி
னங்கதிரோனவனையுடன்வைத்தவாதிமூர்த்தி
செங்கதிரோன்வணங்குந்திருச்சோற்றுத்துறையனாரே.

—தேவாரம்.

ஆக்ரமதே ஸ சந்த்ரமஸமாகச்சதி தஸ்மை ஸ தத்ர விஜிஹீதே யதா துந்துபே: கம் தேந ஸ ஊர்த்வ ஆக்ரமதே ஸ லோகமாகச்சத்ய சோகமஹிமம் தஸ்மிந் வஸதி சாச்வதீ: ஸமா:॥

—பிருகதாரணியம், ரு. க0. க.

"இந்தப் புருஷன் (ஆன்மா) இவ்வுலகத்தைத் துறக்குஞான்று, வாயுவை அடைகின்றான்; வாயு அவனுக்குச் சக்கரமத்தியின் துளைபோல வாயிலைக் காட்ட, அவன் அதற்கூடாக மேலே போய்ச் சூரியனை அடைகின்றான்; சூரியனும் லம்பரவாத்தியத்தின் துவாரம்போல வாயிலைக் காட்ட, அவன் அதற்கூடாகப் போய்ச் சந்திரனை அடைகின்றான்; சந்திரன் அவனுக்குத் துந்துபியின் துவாரம்போல வாயில் காட்ட, அவன் மேலே போய்த் துன்பமில்லாத (சிவ)லோகத்தை அடைந்து * நீடு வாழ்கின்றான்."

(52) தப: ச்ரத்தே யேஹ்யுபவஸந்த்யரண்யே சாந்தா வித்வாம்ஸோ பைக்ஷசர்யாம் சரந்த:। ஸூர்யத்வாரேண தே விரஜா: ப்ரயாந்தி யத்ராம்ருத: ஸ புருஷோ ஹ்யவ்யயாத்மா॥

—முண்டகம், க. உ. கக.

"எவர்கள் காடுகளிலே சாந்தியுடையர்களாய், வித்துவான்களாய், பிக்ஷைசெய்பவர்களாய் ஞானம் அன்பு என்பனகொண்டு உபாசிக்கின்றார்களோ, அவர்கள் தூகளிலராய்ச் சூரிய மார்க்கத்தினாலே போகின்றார்கள்; அங்கே அமிர்தரும் (சிவனும்), புருஷரும், அழியாத ஆன்மாவுமாகியவர் (இருக்கின்றார்.)"

(53) அர்ச்சிஷமேவாபிஸம்பவந்த்யர்ச்சிஷோஹரஹ்ந ஆபூர்யமாண பக்ஷமாபூர்யமாணபக்ஷாத்யாந் ஷடுதங்ஙேதி மாஸாந் மாஸேப்ய: ஸம்வத்ஸரம் ஸம்வத்ஸராதாதித்யமாதித்யாச் சந்த்ரமஸம் சந்த்ரமஸோ வித்யுதம் தத் புருஷோ மாநவ:। ஸ

* தேவயானமார்க்கமாகச் சிவலோகத்துக்குச் சென்ற முத்தர்கள் மீளப் பிறவியிற் செல்வாரல்லர் என்று ഩ0, ഩക, ഩூ, கூக, கூஉ-ம் பிரிவுகளினும், பரப்பிரஹ்மசிவலோகப்பிரகரணத்து க, உரு-ம் பிரிவுகளினும் கூறப்பட்டுள்ளது.

ஏநாந் ப்ரஹ்மகமயத்யேஷ தேவபதோ ப்ரஹ்மபத ஏதேந ப்ரதிபத்யமாநா இமம் மாநவமாவர்த்தந் நாவர்த்தந்தே நாவர்த்தந்தே॥

—சாந்தோக்கியம், ச. கரு. ரு, சு.

"அவர்கள் ஒளியிலிருந்து பகலுக்கும், பகலிலிருந்து பூர்வபக்ஷத்துக்கும், பூருவபக்ஷத்திலிருந்து உத்தராயணத்துக்கும், உத்தராயணத்திலிருந்து வருஷத்துக்கும், வருஷத்திலிருந்து சூரியனுக்கும், சூரியனிலிருந்து சந்திரனுக்கும், சந்திரனிலிருந்து மின்னலுக்கும் போகின்றார்கள்; அங்கிருந்து ஓர் அமானவன் அவர்களைப் பரப்பிரஹ்மசிவனரிடத்துக்கு வழிகாட்டுகின்றான்; இது சிவபிரானைப்போயடையும் தேவயானம்; இந்தப் பாதையிலே போகின்றவர்கள் மனுஷத்தன்மைக்குத் திரும்புவதில்லை; திரும்புவதில்லை."

## (உஅ) பஞ்சாக்கினிவித்தை.

(54) தஸ்மாதக்நிஸ் ஸமிதோ யஸ்ய சூர்ய: ஸோமாத் பர்ஜந்ய ஓஷதய: ப்ருதிவ்யாம்। புமாந் ரேத: ஸிஞ்சதி யோஷிதாயாம் பஹ்வீ: ப்ரஜா: புருஷாத் ஸம்ப்ரசூதா:॥

—முண்டகம், உ. க. ரு.

"பரப்பிரஹ்ம சிவபிரானினின்று துறக்கலோக அக்கினி உண்டாகின்றது; அந்த அக்கினிக்குச் சூரியன் சமித்து; சோமனிலிருந்து பர்ஜன்னியம் (மேகமண்டலம்) உண்டாகின்றது; பூமியிலிருந்து ஓஷதிகள் உண்டாகின்றன; புருஷனானவன் பெண்ணிடத்தில் ஓஷதியில் உண்டாகிய ரேதஸை விடுகின்றான்; புருஷனிடத்திருந்து அநேக பிரஜைகள் ரேதஸ்சம்பந்தத்தினால் உண்டாகின்றன."

(55) அஸௌ வாவலோகோ கௌதமாக்நிஸ் தஸ்யாதித்ய ஏவ ஸமித் ரச்மயோ தூமோஹரர்ச்சி: சந்த்ரமா அங்காரா நக்ஷத்ராணி விஸ்புலிங்கா:। தஸ்மிந்நேதஸ்மிந்நக்நௌ தேவா: ச்ரத்தாம் ஜுஹ்வதி தஸ்யா ஆஹுதே: ஸோமோ ராஜா ஸம்பவதி॥

—சாந்தோக்கியம், ரு. ச. க, உ.

"கவுதமரே! கேட்குதிர்; உலகம் அக்கினி, சூரியன் சமித்து, கிரணங்கள் புகை, பகல் ஒளி, சந்திரன் * கரி, நக்ஷத்திரம் பொறி; இந்த அக்கினியில் தேவர்கள் சிரத்தையை ஓமிக்கின்றார்கள்; அந்த ஆகுதியிலிருந்து சோமராஜன் உதிக்கின்றான்."

(56) பர்ஜந்யோ வாவ கௌதமாக்நிஸ் தஸ்ய வாயுரேவ ஸமிதப்ரம் தூமோ வித்யுதர்ச்சிரசநிரங்காரா ஹ்ராதுநயோ விஸ்புலிங்கா:। தஸ்மிந்நேதஸ்மிந்நக்நௌ தேவா: ஸோமம் ராஜாநம் ஜுஹ்வதி தஸ்யா ஆஹுதேர் வர்ஷம் ஸம்பவதி॥

—சாந்தோக்கியம், ரு. ரு. க, உ.

'பர்ஜன்னியதேவன் (மேகமண்டலதேவன்) அக்கினி, வாயு † சமித்து, மேகம் புகை, மின்னல் ஒளி, இடி கரி, கர்ச்சனை பொறி; இந்த அக்கினியிலே தேவர்கள் சோமராஜாவை ஓமிக்கின்றார்கள்; இந்த ஆகுதியிலிருந்து மழை உண்டாகின்றது."

(57) ப்ருதிவீ வாவ கௌதமாக்நிஸ் தஸ்யா: ஸம்வத்ஸர ஏவ ஸமிதாகாசோ தூமோ ராத்ரிரர்ச்சிர் திசோங்காரா அவாந்தரதிசோ விஸ்புலிங்கா:। தஸ்மிந்நேதஸ்மிந்நக்நௌ தேவா வர்ஷம் ஜுஹ்வதி தஸ்யா ஆஹுதேரந்நம் ஸம்பவதி॥

—சாந்தோக்கியம், ரு. சு. க, உ.

"பிருதிவி அக்கினி, சம்வற்சரம் சமித்து, ஆகாயம் புகை, இரவு ஒளி, திக்குகள் கரி, விதிக்குகள் பொறி, இந்த அக்கினியில் தேவர்கள் மழையை ஓமிக்கின்றார்கள்; இதில் அன்னம் உண்டாகின்றது."

---

*பஞ்சாக்கினிவித்தை கூறுமிடத்துப் பிருகதாரணியம் (சு. உ. க) திக்குகளைக் கரிகளாகவும், விதிக்குகளைப் பொறிகளாகவும் கூறுகின்றது.

† பிருகதாரணியம் (சு. உ. க0) வர்ஷத்தைச் சமித்து எனக் கூறுகின்றது.

§ பிருகதாரணியம் (சு. உ. கக) இவ்வுலகத்தை அக்கினி எனவும், பிருதிவியைச் சமித்து எனவும், அக்கினியைத் தூமம் எனவும், சந்திரனைக் கரி எனவும், நக்ஷத்திரங்களைப் பொறி எனவும் கூறுகின்றது.

(58) புருஷோ வாவ கௌதமாக்நிஸ்தஸ்ய வாகேவஸமித்l ப்ராணோ தூமோ ஜிஹ்வார்ச்சிச்சக்ஷுரங்காரா: ச்ரோத்ரம் விஸ்புலிங்கா:l தஸ்மிந்நேதஸ்மிந்நக்நௌ தேவா அந்நம் ஜுஹ்வதி தஸ்யா ஆஹுதே ரேதஸ் ஸம்பவதிll

—சாந்தோக்கியம், ரு. எ. க, உ.

"புருஷன் அக்கினி, வாக்கு சமித்து, பிராணன் புகை, நாக்கு ஒளி, கண் கரி, காது பொறி; இதில் தேவர்கள் அன்னத்தை ஓமிக்கின்ருர்கள்; இதிலிருந்து ரேதஸ் உண்டாகின்றது."

(59) யோஷா (வாவ கௌதம)ாக்நிஸ் (தஸ்யா உபஸ்த ஏவ ஸமித் யதுபமந்த்ரயதே ஸ தூமோ யோநிரர்ச்சிர்யதந்த: கரோதி தேங்காரா) அபிநந்தா விஸ்புலிங்கா:l தஸ்மிந்நேதஸ்மிந்நக்நௌ தேவா ரேதோ ஜுஹ்வதி தஸ்யா ஆஹுதேர் கர்ப்ப: ஸம்பவதிll

—சாந்தோக்கியம், ரு. அ. க, ௯.

"ஸ்திரீ அக்கினி என்பது முதற் சுகம் பொறி என்பதிறுதியாகக் கூறப்பட்டிருக்கின்றது; இதில் தேவர்கள் ரேதசை ஓமஞ் செய்கின்ருர்கள்; இதிற் கர்ப்பம் உண்டாகின்றது."

இந்தப் பஞ்சாக்கினிவித்தை பிருகதாரணியத்தினும் சு. உ. ௯-ம் மந்திரந் தொடுத்து கசு-ம் மந்திரம் இறுதியாகக் கூறப்பட்டுள்ளது.

(60) தே ய ஏவமேதத் விதுர் யேசாமீ அரண்யேச்ரத்தாம் ஸத்யமுபாஸதே தேர்ச்சிரபிஸம்பவந்தி அர்ச்சிஷோஹரஹ்ந ஆபூர்யமாணபக்ஷமாபூர்யமாணபக்ஷாத்யாந் ஷண்மாஸாநுதகாதித்ய ஏதி மாஸேப்யோ தேவலோகம் தேவலோகாதாதித்யமாதித்யாத் வைத்யுதம் தாந் வைத்யுதாந் புருஷோ மாநவ ஏத்ய ப்ராஹ்மலோகாந் கமயதி தேஷு ப்ரஹ்மலோகேஷு பரா: பராவதோ வஸந்தி தேஷாம் ந புநராவர்த்தி:ll

—பிருகதாரணியம், சு. உ. கரு.

"இதனைப் (பஞ்சாக்கினிவித்தையை) அறிகின்றவர்களும், அன்பினேடு சத்தியத்தைச் (சிவபிரானைக்) காட்டிலிருந்து உபாசிக்கின்றவர்களும், ஒளிக்குப் போய், ஒளியிலிருந்து பகலுக்கும், பகலிலிருந்து பூருவபக்ஷத்துக்கும், பூருவபக்ஷத்திலிருந்து உத்

தராயணத்துக்கும், உத்தராயணத்திலிருந்து தேவலோகத்துக்கும், தேவலோகத்திலிருந்து சூரியனுக்கும், சூரியனிலிருந்து மின்னலுக்கும் போகின்றார்கள்; அங்கே ஓர் அமானவன் வந்து சிவபிரானார் உலகங்கட்கு வழிகாட்டுகின்றான்; அந்தப் பிரஹ்மலோகங்களில் (சிவலோகங்களில்) மேலானவர்களாய் வாழ்கின்றார்கள்; அவர்களுக்குப் புநராவர்த்தி இல்லை."

(61) தத் ய இத்தம் விதுர் யேசேமேரண்யேச்ரத்தா தப இத்யுபாஸதே தேர்ச்சிஷமபிஸம்பவந்த்யர்ச்சிஷோஹ்ந ஆபூர்யமாணபக்ஷமாபூர்யமாணபக்ஷாத்யாந் ஷடுதங்ஙேதி மாஸாந் தாந்। மாஸேப்ய: ஸம்வத்ஸரம் ஸம்வத்ஸராதாதித்யமாதித்யாச் சந்த்ரமஸம் சந்த்ரமஸோ வித்யுதம் தத்புருஷோமாநவஸ் ஸ ஏநாம் ப்ரஹ்மகமயத்யேஷ தேவயாந: பந்தா இதி॥

—சாந்தோக்கியம், ரு. கo. க, உ.

"இதனைப் (பஞ்சாக்கினிவித்தையை) அறிகின்றவர்களும், அன்பையும் ஞானத்தையும் (தொடர்ந்து) உபாசிக்கின்றவர்களும் ஒளியை அடைந்து, ஒளியிலிருந்து பகலுக்கும், பகலிலிருந்து பூருவபக்ஷத்துக்கும், பூருவபக்ஷத்திலிருந்து உத்தராயணத்துக்கும், உத்தராயணத்திலிருந்து வர்ஷத்துக்கும், வர்ஷத்திலிருந்து சூரியனுக்கும், சூரியனிலிருந்து சந்திரனுக்கும், சந்திரனிலிருந்து மின்னலுக்கும் போகின்றார்கள்; அங்கே ஓர் அமானவன் வந்து அவர்களைப் பரப்பிரஹ்மசிவனிடத்துக்கு வழிகாட்டுகின்றான்; இது தேவயானம்."

(62) யத்ர காலேத்வநாவ்ருத்திமாவ்ருத்திஞ்சைவ யோகிந:। ப்ரயாதா யாந்தி தம் காலம் வக்ஷ்யாமி பரதர்ஷப। அக்நிர்ஜ்யோதிரஹ: சுக்ல: ஷண்மாஸா உத்தராயணம்। தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்மவிதோ ஜநா:। தூமோ ராத்ரிஸ் ததா க்ருஷ்ண: ஷண்மாஸா தக்ஷிணாயநம்। தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர் யோகீ ப்ராப்ய நிவர்த்ததே। சுக்லக்ருஷ்ணகதீஹ்யேதே ஜக: சாச்வதே மதே। ஏகயா யாத்யநாவ்ருத்திமந்யயா வர்த்ததே புந:॥

—மகாபாரதம்.

"பரதருள்ளே வலியனே! எக்காலத்துப் புறப்படின் யோகிகள் மீள்வாரென்றும் மீளமாட்டாரென்றும் உள்ள அந்தக் காலத்தை உனக்குச் சொல்வேன்; அக்கினி, சோதி, பகல், சுக்கிலபக்ஷம், உத்தராயண ஆறுமாசம் என்பவற்றிற் புறப்படின் பிரஹ்மத்தை அறிந்தவர்கள் பிரஹ்மத்தைப்போய் அடைகின்றார்கள்; புகை, இராக்காலம், கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயன ஆறுமாசம் என்பவற்றில் யோகி சந்திரன் ஒளியை அடைந்து திரும்புகின்றான்; உலகத்தில் இந்தக் கிருஷ்ணசுக்கிலபாதைகள் நித்தியமென்றே மதிக்கப்படுகின்றன; ஒரு மார்க்கத்தினால் மீண்டு வாராதிருக்க ஒருவன் போகின்றான்; மற்ற மார்க்கத்தினால் அவன் திரும்புகின்றான்."

(63) ஊர்த்வமேகஸ் ஸ்திதஸ் தேஷாம் யோபித்வா சூர்யமண்டலம்। ப்ரஹ்மலோகமதிக்ரம்ய தேந யாதி பராம் கதிம்॥

—யாஞ்ஞவற்கியஸ்மிருதி, ௩: ௧௬௮.

"அவைகளுள்ளே ஒன்று மேற்கொண்டு சூரியமண்டலத்தைப் பிளந்துபோகின்றது; அதனால் அவன் பிரஹ்மலோகத்தை அடைந்து மேலான கதியை அடைகின்றான்."

கந்தருவநகரம், நிர்விசேஷசின்மாத்திரம், ஆரோபம், கற்பிதம், கயிற்றிற்பாம்பு, முயற்கோம்பு, மலடிமகன், கானற்சலம், இப்பிவெள்ளி, கடாகாசமடாகாசம், மகாகாசம்; கடுகினுடைய ஓர் மூலைத்துவாரத்தில் மதயானை கட்டப்பட்டது; அணுவின் பொந்தினுள்ளே கொசுகானது சிங்கத்தோடு யுத்தஞ் செய்தது; தாமரைவிதையில் வைக்கப்பட்ட மேருபருவதத்தை வண்டின்குஞ்சு விழுங்கிவிட்டது; செம்பரத்தம் பூவினுடைய சமீபத்திருக்கின்ற ஸ்படிகமானது இரக்தவர்ணமாகக் காணப்படுகின்றது, அது சமீபத்தில்லாவிடின் ஸ்படிகம் சுத்தமாயிருக்கின்றது; (அதுபோல) பிரஹ்மத்திருக்கும் மாயோபாதியினாற் சகுணம், உபாதிநசித்தால் நிர்க்குணம்; திரிபுடிரஹிதம்; நான் சச்சிதானந்தமாயிருக்கின்றேன்; ஈசுரன் மாயையிற் பிரதிபலித்த காரணோபாதிகன், சீவன் அவித்தையிற் பிரதிபலித்த காரியோபாதிகன், அநாத்துமாவுக்கு மூலமானது எதுவோ, அதுதான் மாயை, அம்மாயை ஆகாசத்தில் மேகமுதலிய போலப் பிரஹ்மத்தினிடத்திற் காணப்படுகின்றது; விஷ்ணு இரக்ஷகர் என்பதும், பிரமா சிரு

ஷ்டிகாரணர் என்பதும், உருத்திரர் சங்காரஞ் செய்பவர் என்பதுமாகியவனைத்தும் பொய்; இங்ஙனம் ஏகான்மவாதோபநிடதங்களிற் காணப்படுகின்றன. ஈசகேநாதி தசோபநிடத மூல மந்திரங்களில் அவை காணப்படவில்லை. ஆகலின் இவை ஏகான்மவாதோபநிடதங்களன்று.

ஈசகேநாதி தசோபநிடதங்களுள்ளே (இப்புஸ்தகத்து விபூதிப்பிரகரணத்து ௬௰ம் பிரிவுமுதல் ௭௰ம் பிரிவுவரையுங் காட்டப்பட்டவாறு) ஈசாவாசியோபநிடதத்து ௧௭-ம் மந்திரத்தினும், பிருகதாரணியோபநிடதத்து ௫-ம் அத்தியாயத்து ௧௫-ம் பிராஹ்மணத்து ௧-ம் மந்திரத்தினும் விபூதியை உணர்த்தும் பஸ்மம் என்னும் பதமும், முண்டகோபநிடதத்து ௩. ௨. ௧௧-ற் காணப்படும் விபூதியை உணர்த்தும் சிரோவிரதம் என்னும் பதமும், தைத்திரீயத்து ௧. ௧௧. ௧-ல் விபூதியை உணர்த்தும் பூதி என்னும் பதமும், சுவேதாசுவதரத்து ௬. ௨௧-ல் விபூதியை உணர்த்தும் அத்தியாசிரமம் என்னும் பதமும், அவ்விபூதிப்பிரகரணத்து ௬௬-ம் பிரிவுமுதல் ௭0-ம் பிரிவிறுதியாகக் காணப்படும் சிவரகசியம், சூதசங்கிதை, சௌரசங்கிதை, காளிகாகண்டம், பிரஹ்மோத்தரகண்டம் என்னும் உபப்பிருங்கணங்களால் விபூதியை உணர்த்துவனவாக விளக்கப்பட்டிருத்தலின், அவ்விபூதியை உபேக்ஷிக்கும் வைஷ்ணவர்களுக்கும் மத்துவர்களுக்கும் அவ்வுபநிடதங்கள் உரியன அன்றாம். மேலும் நாராயணர், மகாலட்சுமி, சங்கர்ஷணர், பிரத்தியும்நர், அநிருத்தர், வாசுதேவர்முதலிய பதவழக்குகளும் இத்தசோபநிடதங்களில் இல்லை. அவ்வுபநிடதங்களை ஆதாரமாகக்கொண்டு பிறந்த (ஸ்காந்தபுராணத்துப் பிரதிபாதிக்கப்பட்ட) வேதாந்தசூத்திரமும் ஏகான்மவாதிகளுக்கேனும், வைஷ்ணவர்களுக்கேனும், மத்துவர்களுக்கேனும் உரியன அன்று.

பிருகதாரணியத்துள்ள

(4) ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி

அவனுக்குப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை" என்னும் ஆறு வேற்றுமைப்பொருள்,

(5) ந தஸ்மாத் ப்ராணா உத்க்ராமந்தி

"அவனைவிட்டுப் பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை"

என ஐந்தாம் வேற்றுமைப் பொருளாகக்கொள்ளப்படல் வேண்டும் என்றும்,பிராணன்கள் இங்கே இலயமடைவதாகக்கொள்ளல் பொருத்தமன்று என்றும் உணர்த்துதற்கு ச. உ. கஉ-ம் சூத்திரம் வேதவியாசரால் சூத்திரிக்கப்பட்டது. ஏகான்மவாதகுரவராற் பிருகதாரணியத்து ங. உ. கக-ம் மந்திரத்து ஆர்த்தபாகர் விஷயம் இங்கே இலயம் அடைவதாக ஆக்கப்பட்டமை அவித்துவான் விஷயமேயன்றி வித்துவான் விஷயமன்று. இது வேதாந்தசூத்திரசைவபாஷ்யத்து ச. உ. கஉ-ம் சூத்திரக் குறிப்புரையினும், உபநிடத உபக்கிரமணிகை உகூஅ-ம் இலக்கந்தொடுத்து ஙகங-இலக்கம் வரையுமுள்ள பிரிவுகளினும், பிரஹ்மசூத்திர உபக்கிரமணிகை சச௦-ம் இலக்கந்தொடுத்து சரு௨-ம் இலக்கம் வரையுமுள்ள பிரிவுகளினும் நிரூபிக்கப்பட்டுள்ளது. ஆண்டாண்டுக் காண்க. இங்கே வித்துவான் இலயமடைவதாக வியாசருக்குக்கருத்தாமாயின், "ஞானியானவன் எந்தெந்த இடத்திலே எங்ஙனம் மரணமடைந்தாலும், எங்கும் பரவிய ஆகாசம் போல அந்த அந்த இடத்திலே இலயமடைகின்றான்" என்னும் ஏகான்மவாதிகளுடைய உபநிடத கற்பிதவாக்கியத்தைச் சூத்திரமாக்கி, முக்திப்பயன் கூறும் வேதாந்தசூத்திரத்து நான்காம் அத்தியாயத்து "திரும்பிவருதல் இன்றெனச் சுருதி கூறலின்," என்னும் ச. ச. உஉ-ம் சூத்திரத்துக்குப் பதிலாக "இங்கே ஆன்மா இலயமடைதலின், இங்கே ஆன்மா இலயமடைதலின்" என்று சூத்திரஞ்செய்யாது போந்தமை யாது கருத்தினாலோ? ஆதலினால் தசோபநிடதங்களும், அவற்றைஆதாரமாகக்கொண்டு கிளர்ந்த வேதாந்த சூத்திரமும் ஏகான்மவாதிகள் கூறுமாறு நிர்க்குணோபாசனையினால் இங்கே இலயமுறுவதாகக் கூறவும் இல்லை; அவ்வுபநிடதங்களும் சூத்திரங்களும் அவர்கள் சார்பாய் இருக்கவுமில்லை.

(66) தியான (ஞான) யோகி அடைதற்குரிய உலகங்கள் உபநிடதங்களிலே முன்னர்க் குறிக்கப்பட்டவாறு சொல்லப்பட்டனவேயன்றி, இங்கே இலயமடைவதாக உணர்த்தும் சுருதியொன்றும் தசோபநிடதங்களுள் இல்லை.

(67) சிவலோகத்தைக் குறிக்கும் **பிரஹ்மலோகம்** என்னும் பதம் சாந்தோக்கியம், அ. ச. ங-னும், அ. கரு. க-னும், பிருகதாரணியம், ச. ங. ஙங-னும், ங. சா. க-னும், சா. உ. கரு-னும்,

முண்டகம், ௩. ௨. ௬-னும், பிரசினம், ௧. ௧௬-னும், ௫. ௫-னும், சிவலோகத்தைக் குறிக்கும் சுவர்க்கலோகம் என்னும் பதம் பிருகதாரணியம், ௪. ௪. ௮-னும், ஐதரேயம், ௪. ௬-னும், ௫. ௪-னும், கேனம், ௩௪-னும், கடம், ௧. ௧௨-னும், அச்சிவலோகத்தைக் குறிக்கும் பிரஹ்மதாமம் என்னும் பதம் முண்டகம், ௩. ௨. ௧-னும், ௩. ௨. ௪-னும் காணப்படுகின்றன. இங்ஙனம் சிவலோகத்தைக் குறிக்கும் பிரஹ்மலோகமுதலியன முக்கியோபநிடதமனைத்தினுங் குறிக்கப்பட்டிருக்கின்றன. இத்தசோபநிடதங்களிலே (தியான) யோகஞ் சொல்லப்பட்டதேயன்றி ஞானபாதம் பேசப்படவே இல்லை.

(68) இப்புஸ்தகத்து ௨௦௦-ம் பக்கமுதலியவைகளிற் கூறப்பட்ட சகுணபாவனையுடையாரும், சத்தி (நிர்க்குண) பாவனையுடையாரும் மீளப் பிறவியிற் செல்வர்; இவ்விரு பாவனையும் நேரே பிரஹ்மோபாசனை ஆகாது போதலினாலாம். இதனை நீலகண்ட சைவபாஷ்யத்திற் (௧. ௧. ௩௨) காண்க. ௨௦௨-ம் பக்கத்துக் கூறப்பட்டவாறு, நிர்க்குணோபாசனையானது கன்மயோகம் எனப்படும். கன்மயோகிகட்கு மீளப் பிறவி உண்டென்பதனை ௩௧-ம் பக்கத்து (a) பிரிவிற் காண்க.

---

## பதினோராவது

## * சிவோபாசனப்பிரகரணம்



[இப்பிரகரணமானது தாண்டவேசுவரசிவபிரானை யோகநெறியால் உபாசித்தற்கு வாய்ந்த இடம், இந்திரியங்களை அடக்குமுறை, பிரணவத்தைக்கொண்டு அவரை நாடுதல், ஷோடசகலாப்பிராசாத நெறியானே அவரை உபாசிக்குமுறை, அவ்வுபாசனையினால் முடிவிலா இன்பம் எய்துதல் முதலியவற்றைக் கூறுகின்றது.]

(1) ப்ராசீநயோக்யோபாஸ்வ॥

— தைத்திரீயம், க. சு. உ.

"பிராசீனயோக்கியனே! (பரப்பிரஹ்மசிவபிரானை) வழிபடு."

(2) ஸமே சுசௌ சர்க்கரா வஹ்நிவாலுகா விவர்ஜிதே சப்த ஜலாச்ரயாதிபி:। மநோநுகூலே நதுசக்ஷு பீடநே குஹா நிவாதாச்ரயணே ப்ரயோஜயேத்॥

— சுவேதாசுவதரம், உ. கo.

"சமமாயும், சுத்தமாயும், கோடாங்கற்கள், தீ, மணல் இலாததாயும் கண்ணுக்குப் பீடை கொடாது சப்தம், ஜலம், கொம்பர் என்பவைகளால் மநோஹரமாயும், ஏகாந்தமாயும், மிகுந்த காற்றில்லாததாயுமுள்ள ஒதுக்கிடத்திலே (யோகாப்பியாசஞ்) செய்க."

(3) சூந்யாகாரே மடே ரம்யே தேவதாயதநேசுபே। நதீதீரே விவிக்தே வா க்ருஹே கோரவநேபிவா॥

— சர்வஞ்ஞானோத்தரம்.

"நிர்ஜனமாகிய கிருகம், இன்பமாகிய மடம், தேவாலயம், நல்ல நதிதீரம் அல்லது தனியிடம், மாளிகை, கோரமாகிய வனம் (என்பனவே யோகத்துக்கு உவந்த ஸ்தானங்களாம்.)"

(4) ஸ்நாத்வா சுசிருபஸ்ப்ருச்ய ப்ரணம்ய சிரஸாசிவம்। யோகாசார்யம் நமஸ்க்ருத்ய யோகம் யும்ஜீத மாநவ:॥

— சர்வஞ்ஞானோத்தரம்.

---

* தியானயோகபரியந்தமே வேதசிரசு கூறுதலின், சிவோபாசனை என்றது அந்தத் தியானயோகத்தின் மேற்று.

"(யோகாப்பியாசஞ் செய்யத் தொடங்குதற்கு முன்) ஸ்நானஞ் செய்து, சுசியுடையனாய், ஆசமனஞ் செய்து, சிவபெருமானைச் சிரசினால் வணங்கி, யோகாசாரியரை நமஸ்கரித்து, பின்னர் மனிதன் யோகஞ் செய்யத் தொடங்குக."

(5) த்ரிருந்நதம் ஸ்தாப்ய ஸமம் சரீரம் ஹ்ருதீந்த்ரியாணி மநஸா ஸந்நிவேச்ய। ப்ரஹ்மோடுபேந ப்ரதரேத வித்வாந் ஸ்ரோதாம்ஸி ஸர்வாணி பயாவஹாநி॥

— சுவேதாசுவதரம், உ. அ.

"(நெஞ்சு கழுத்து தலை என்னும்) மூன்று உன்னதத்தையுடைய சரீரத்தை நேரே நிறுத்தி, அறிஞன் இதயத்திலே மனசினால் இந்திரியங்களை நிறுத்தி, பிரஹ்மமாகிய (சிவனாகிய) நாவாய்கொண்டு பயத்தை விளைக்கும் நதிகளனைத்தையும் கடக்கின்றான்."

(6) ஆத்மாநம் ரதிநம் வித்தி சரீரம் ரதமேவ து। புத்திந்து ஸாரதிம் வித்தி மந: ப்ரஹ்ராஹமேவ ச॥

— கடம், ங. ங.

"ஆன்மாவை இரதத்துள்ளவனாகவும், சரீரத்தைத் தேராகவும், புத்தியைச் சாரதியாகவும், மனசைக் கடிவாளமாகவும் அறிதி."

(7) இந்த்ரியாணி ஹயாநாஹுர் விஷயாந் தேஷு கோசராந்। ஆத்மேந்த்ரியமநோயுக்தம் போக்தேத்யாஹுர் மநீஷிண:॥

— கடம், ங. ச.

"இந்திரியங்களைக் குதிரைகள் என்றும், அவற்றுள் விஷயங்களை மார்க்கங்கள் என்றுஞ் சொல்கின்றார்கள்; அறிஞர் இந்திரியம் மனசு என்பவற்றோடு கூடிய ஆன்மாவைப் போக்தா என்று சொல்கின்றார்கள்."

(8) யஸ்த்வவிஜ்ஞாநவாந் பவத்யயுக்தேந மநஸா ஸஹ। தஸ்யேந்த்ரியாண்யவச்யாநி துஷ்டாச்வா இவ ஸாரதே:॥

— கடம், ங. ரு.

"எவன் எஞ்ஞான்றும் அருண்ஞானத்தோடு கூடாது, இசையாத மனசோடு கூடி இருக்கின்றானோ, அவனுக்கு இந்திரியங்கள் சாரதிக்கு வாய்த்த துஷ்டக் குதிரைகள்போல வசப்படாதனவாயிருக்கின்றன."

(9) யஸ்து விஜ்ஞாநவாந் பவதி யுக்தேந மநஸா ஸஹ। தஸ்யே ந்த்ரியாணி வச்யாநி ஸதச்வா இவ ஸாரதே:॥

— கடம், ௩. ௬.

"எவன் எஞ்ஞான்றும் அருண்ஞானத்தோடியைந்துகொண்டு இசைந்த மனசோடிருக்கின்றானோ, அவனுக்கு இந்திரியங்கள் சாரதிக்கு வாய்த்த நல்ல குதிரைகள்போல வசப்பட்டனவாகின்றன."

(10) யஸ்த்விஜ்ஞாநவாந் பவத்யமநஸ்கஸ் ஸதாசுசி:। ந ஸ தத் பதமாப்நோதி ஸம்ஸாரஞ்சாதிகச்சதி॥

— கடம், ௩. ௭.

"எவன் அருளிலனாய் மனசடக்கமில்லாதவனாய் எஞ்ஞான்றும் சுசியிலனாய் இருக்கின்றானோ, அவன் அந்தப் பதத்தைச் (சிவ லோகத்தை) அடைவானல்லன்; (பின் இறந்து பிறக்கும்) சம் சாரத்தை அடைகின்றான்."

(11) யஸ்து விஜ்ஞாநவாந் பவதி ஸமநஸ்கஸ் ஸதா சுசி:। ஸது தத் பதமாப்நோதி யஸ்மாத் பூயோ ந ஜாயதே॥

— கடம், ௩. ௮.

"எவன் அருளுடையனாய், மனசுடையனாய், நித்திய சுசியுடைய னாய் இருக்கின்றானோ, அவன் அந்தப் பதத்தைச் (சிவலோகத் தை) அடைகின்றான்; அவன் பின் பிறவியிற் செல்வானல்லன்."

(12) நாவிரதோ துச்சரிதாந் நாசாந்தோ நாஸமாஹித:। நசாந் தமாநஸோ வாபி ப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத்॥

— கடம், ௨. ௨௩.

"துரொழுக்கத்தினின்று நீங்காதவனும், சாந்தமில்லாதவனும், நிலையில்லாதவனும் அல்லது மனவடக்கமில்லாதவனும் இந்தப் பரமான்மாவை (சிவபிரானை) அருண்ஞானத்தினால் அடையமாட்டான்."

(13) தாம் யோகமிதி மந்யந்தே ஸ்திராமிந்த்ரிய தாரணாம்। அப்ர மத்தஸ்ததா பவதி யோகோ ஹி ப்ரபவாப்யயௌ॥

— கடம், ௬. ௧௧.

"இந்த ஸ்திரமாகிய இந்திரியதாரணத்தை யோகம் என்ப; அப் போது அவதானமுடையனாய் ஆகின்றான்; யோகம் எய்தலும் போதலுமாயிருத்தலின்."

(14) நைவ வாசா ந மநஸா ப்ராப்தும் சக்யோ ந சக்ஷுஷா।
அஸ்தீதி ப்ருவதோந்யத்ர கதம் ததுபலப்யதே॥

— கடம், சூ. கஉ.

வாக்கினுல் (அடைவது) அன்று; மனசினுல் அடையக்கூடிய ன்று; கண்ணினுல் (அடையக்கூடியது) அன்று; அஸ்தி (இரு கின்றது) என்று சொல்லும் (யோகியைப்பார்க்கினும்) பிறனுல் ங்ஙனம் அது (பிரஹ்மம்) அடையப்படும்?"

(15) விஜ்ஞாநஸாரதிர் யஸ்து மந: ப்ரஹ்ரஹவாந்நர:। ஸோத்வந: பாரமாப்நோதி தத் விஷ்ணோ: பரமம் பதம்॥

— கடம், ந. கூ.

எந்த அருளைச் சாரதியாகவும், மனசைக் கடிவாளமாகவும் காள்ளும் மனிதன் அத்துவாவின் கரைக்கண்ணதாகிய அந்தச் வபிரானது (பரமாகாய) திருவடியை அடைகின்றான்."

(16) த்வம் ஹி ந: பிதா யோஸ்மாகமவித்யாயா: பரம் பாரம் தாரயஸி।

— பிரசினம், சூ. அ.

நீவிரே எங்கள் பிதா, எங்களை அஞ்ஞானத்தினின்று (விடுவித் ) மற்றக் கரையை (அடையுமாறு) கடப்பிக்கின்றீர்."

(17) ப்ராணாந் ப்ரபீட்யேஹ ஸம்யுக்த சேஷ்ட: க்ஷீணே ப்ராணே நாசிகயோச்வஸீத। துஷ்டாச்வயுக்தமிவ வாஹமேநம் வித்வாந் மநோ தாரயேதாப்ரமத்த:॥

— சுவேதாசுவதரம், உ. கூ.

அறிஞன் பிராணன்களை ஒடுக்கி § நன்னடக்கையுடையனுய்ப் ராணவாயு குறைந்தவிடத்து, நாசிவாயிலாகச் சுவாசிப்பானுக, )ரதத்திற் பூட்டப்பட்ட துஷ்டக்குதிரைகள் போலுள்ள மன ச ஜாக்கிரதையாக அடக்குவானுக."

(18) ஸர்வவ்யாபிநமாத்மாநம் க்ஷீரே ஸர்ப்பிரிவார்ப்பிதம்। ஆத்மவித்யாதபோமூலம் தத் ப்ரஹ்மோபநிஷத்பரம்॥

— சுவேதாசுவதரம், க. கசு.

---

§ மிதபோஜனமுதலியவுடையனுய்.

"பாலில் நெய்போல யாண்டும் வியாபகராயுள்ள ஆன்மாவை (பிரஹ்மத்தை) தனது (சீவான்மாவினது) ஞானத்துக்கும் மூலமாயுள்ளது என்றும், அது (பிரஹ்மம்) உபநிடதத்திற் கூறப்பட்ட பரப்பிரஹ்மம் என்றும் (பார்ப்பானாக.)"

(19) திலேஷு தைலம் ததிநீவ ஸர்ப்பிராப: ஸ்ரோதஸ் ஸ்வரணீஷு சாக்நி:| ஏவமாத்மாத்மநி க்ருஹ்யதே ஸௌ ஸத்யேநைநம் தபஸா யோநுபச்யதி||

— சுவேதாசுவதரம், க. கரு.

"(பரமான்மசிவபிரான்) எள்ளில் எண்ணெய் போன்றும், தயிரில் நெய் போன்றும், (வறந்த) நதியில் ஜலம் போன்றும் * அரணியில் அக்கினிபோன்றும் (மறைந்துள்ளார்); இங்ஙனம் ஆன்மாவிலே ஆன்மா (சிவபிரான்) அறியப்படுகின்றார்; இவன் இவரைச் சத்தியத்தோடும் ஞானத்தோடும் (இயைந்து) பார்க்கின்றான்."

(20) ஸ்வதேஹமரணிம் க்ருத்வா ப்ரணவஞ் சோத்தராரணிம்| த்யாநநிர்மதநாப்யாஸாத் தேவம் பச்யேந் நிகூடவத்||

— சுவேதாசுவதரம், க. கச.

"தன் ஆன்மாவைக் (கீழ்) அரணியாகவும், பிரணவத்தை மேல் அரணியாகவுங்கொண்டு தியானஞ் செய்தலாகிய கடைதலாம் அப்பியாசத்தினால் தேவரைச் (சிவபிரானை) (இந்தனத்தின்) மறைந்துள்ள (அக்கினி கடைதலால் வெளிப்படுதல்போலக்) காண்பானாக."

(21) ஜ்ஞாத்வா தேவம் ஸர்வபாசாபஹாநி: க்ஷீணை: க்லேசைர் ஜந்ம ம்ருத்யு ப்ரஹாணி:| தஸ்யாபி த்யாநாத் த்ருதீயம் தேஹபேதே விச்வைச்வர்யே கேவல ஆப்தகாம:||

— சுவேதாசுவதரம், க. கக.

"தேவரைச் (சிவபிரானை அநுபவத்தில்) அறிந்து சமஸ்த பாசங்களுக்கும் நாசம் எய்துகின்றது; கிலேசங்களெல்லாம் க்ஷீணித்துப்போகும்போது ஜனனமும் மரணமும் நீங்குகின்றன; அவரைத் தியானஞ்செய்தலால் மூன்றாவதாகிய (கேவல சகல நீங்கிய சுத்தாவத்தை) நிலை (எய்துகின்றது); தேகம் நீங்குங்கால் ஆப்தகாமனாய் (வேண்டியவெல்லாம் அடைந்தவனாய்) ஏகனாய்ச் (சிவலோகத்திலே சமஸ்த செல்வமும் எய்துகின்றான்)."

* நெருப்பு மூட்டுதற்காக உபயோகிக்கப்படும் கட்டை.

(12) யதைவ பிம்பம் ம்ருதயோபலிப்தம் தேஜோமயம் ப்ராஜ தே தத் சுதா தம்| தத்வாத்மதத்வம் ப்ரஸமீக்ஷ்ய தேஹீ ஏக: க்ருதார்த்தோ பவதே வீதசோக:||

— சுவேதாசுவதரம், உ. கச.

மண்ணினுற் பூசப்பட்ட பிம்பமானது (அக்கினிமுதலியவற் ல்) ஒளிமயமாயும், வெண்மையாயும் பிரகாசித்தல்போல, ஆன் வானவன் அந்தப் பரமான்மதத்துவத்தைப் பார்த்துத் துக்க ங்கிக் கிருதார்த்தனுகின்முன்."

(13) யதாத்மதத்வேந து ப்ரஹ்மதத்வம் தீபோபமேநேஹ யுக் த: ப்ரபச்யேத்| அஜம் த்ருவம் ஸர்வ தத்வைர் விசுத்தம் ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசை:||

— சுவேதாசுவதரம், உ. கரு.

(அறிஞன்) தீபத்தை நிகர்த்த அருளோடு கூடிக்கொண்டு பிர ஹமதத்துவத்தை எப்பொழுது காண்கின்முனே, அப்பொ து (அந்தப்) பிறவாதவரும் நிலையுடையரும் சமஸ்த தத் வங்களுக்கு மேலான தூயருமாகிய தேவரை (சிவபிரா ர) அறிந்து சமஸ்தபாசங்களினின்றும் வீடுறுகின்முன்."

(14) ஓமித்யேததக்ஷரமிதம் ஸர்வம் தஸ்யோபவ்யாக்யாநம் பூத ம் பவத் பவிஷ்யதிதி ஸர்வமோங்கார ஏவ| யச்சாந்யத் த்ரி காலாதீதம் ததப்யோங்கார ஏவ||

— மாண்டூக்கியம், க.

ஓம் என்னும் இது அக்ஷரம்; ஈதெல்லாம் அதன் உபவியாக்கி ானம்; இருந்தது இருப்பது இருக்கப்போவதெல்லாம் ஓங்கா மே; முக்காலத்துக்கும் அதீதப்பட்டதும் ஓங்காரமே."

(15) ஸர்வே வேதா யத் பதமாமநந்தி தபாம்ஸி ஸர்வாணி ச யத் வதந்தி| யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத் தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீம்யோமித்யேதத்||

— கடம், உ. கரு.

வேதமனைத்தும் எப்பதத்தைச் சொல்கின்றனவோ, ஞானங்க ளெல்லாம் எப்பதத்தைக் கூறுகின்றனவோ, பிரஹ்மசரியத்தொ ழுவோர் எப்பதத்தை விரும்புகின்றனரோ, அப்பதத்தைச் ங்கிரகமாக ஓம் என உனக்குச் சொல்கின்றேன்."

(26) திஸ்ரோ மாத்ரா ம்ருத்யுமத்ய: ப்ரயுக்தா அந்யோந்யஸக்தா அநவிப்ரயுக்தா:। க்ரியாசு பாஹ்யாப்யந்தரமத்யமாசு ஸம்யக் ப்ரயுக்தாசு ந கம்பதேஜ்ஞ:॥

— பிரசினம், ரு. சு.

"ஒன்ருேடொன்று சேர்ந்தனவாகவும், மிகவும் பிரிந்தனவாகவும், பிரயோகிக்கப்பட்ட (அகார உகார மகாரம் என்னும்) மும்மாத்திரைகளும் அநர்த்தத்தை விளைப்பனவாம்; (யஞ்ஞாதி) கன்மங்களினும் தியானங்களினும் செபங்களினும் (அம்மும்மாத்திரைகளும் ஓம் என ஒருங்கு) நன்ருகப் பிரயோகிக்கப்படுமேயாயின், அறிஞன் சலிப்பானல்லன்."

(27) ருக்பிரேதம் யஜுர்பிரந்தரிக்ஷம் ஸ ஸாமபிர்யத் தத் கவயோ வேதயந்தே। தமோங்காரேணைவாயதநேநாந்வேதி வித்வாந் யத் தத் சாந்தமஜரமம்ருதமபயம் பரஞ்சேதி॥

— பிரசினம், ரு. எ.

"† இருக்குவேதத்தினல் இவ்வுலகத்தையும் (ஆன்மதத்துவபிரமாண்டத்தையும்), யசுர்வேதத்தினல் அந்தரிக்ஷலோகத்தையும் (வித்தியாதத்துவமாயாபதத்தையும்), சாமவேதத்திருற் பெரியோர் அறியும் தியோள எனப்படும் (பரமாகாய) சிவபதத்தையும் அடைகின்ருன்; இங்ஙனம் (மோக்ஷமார்க்கமாகிய) பிரணவத்தினல் வித்துவான் இதனைச் (சிவபதத்தை) அடைகின்ருன்; இங்ஙனம் அடைந்து சாந்தமாயும், ஜரையிலதாயும், பயமிலதாயும், பரமாயுமுள்ள சிவபிரானை அடைகின்ருன்."

(28) ஏதத் ஹ்யேவாக்ஷரம் ப்ரஹ்ம ஏததேவாக்ஷரம் பரம்। ஏதத் ஹ்யேவாக்ஷரம் ஜ்ஞாத்வா யோ யதிச்சதி தஸ்ய தத்॥

— கடம், உ. கசு.

"இந்த அக்ஷரமே பிரஹ்மம்; இந்த அக்ஷரமே பரம்; இந்த அக்ஷரத்தையே அறிந்து எதனை விரும்புகின்ருனே, அது அவனது (ஆம்)."

---

† இருக்குவேதத்தினல் ஆன்மதத்துவமும், யசுர்வேதத்தினல் வித்தியாதத்துவமும், சாமவேதத்திருற் சிவதத்துவமும் பெறப்படும்; இதனை யுற்று வாயுசங்கிதை உத்தரபாகம் உஎ-ம் அத்தியாயத்தினும், நீலகண்டசைவபாஷ்யத்துப் பிரதிபவதாவேசாதிகரணத்தினும் (ச, ச. கரு) காண்க

(29) ஆகதாஹவை காமாநாம் பவதி ய ஏததேவம் வித்வாநக்ஷர முத்கீதமுபாஸ்தே।

— சாந்தோக்கியம், க. உ. கச.

"எந்த வித்துவான் இங்ஙனம் அழியாத பிரணவத்தை உபாசிக்கின்றானோ, (அவனுக்கு) விரும்பியவனைத்தும் எய்தியவன்றோ."

(30) ப்ரணவோ தநு: சரோஹ்யாத்மா ப்ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே। அப்ரமத்தேந வேத்தவ்யம் சரவத்தந்மயோ பவேத்॥

— முண்டகம். உ. உ. ச.

"பிரணவம் வில்லு, பாணம் ஆன்மா, அந்தப் பிரஹ்மம் (சிவபிரான்) லக்ஷ்யம் எனக் கூறப்படுகின்றது; சாவதானமாயுள்ளவனால் எய்யற்பாற்று; (லக்ஷ்யத்தை ஊடுருவிய) பாணம் (அந்த லக்ஷ்யத்தோடு ஒன்றானாற்) போல, அவன் அதனோடு (பிரஹ்மத்தோடு) ஒரியல்பினனாகின்றான்."

(31) ஓமித்யேவம் த்யாயத ஆத்மாநம் ஸ்வஸ்திவ: பாராய தமஸ: பரஸ்தாத்।

— முண்டகம், உ. உ. சு.

"ஓம் என்று (பரம) ஆன்மாவைச் (சிவபிரானைத்) தியானிக்க; இருளைக் கடக்குமாறு உங்களுக்கு மங்களம் (எய்துக.)"

(32) தநுர் க்ருஹீத்வௌபநிஷதம் மஹாஸ்த்ரம் சரம் ஹ்யுபாஸா நிசிதம் ஸந்தீயத। ஆயம்ய தத்பாவகதேந சேதஸா லக்ஷ்யம் ததேவாக்ஷரம் ஸோம்ய வித்தி॥

— முண்டகம், உ. உ. ங.

"சோமிய! உபநிடதத்திலே கூறப்பட்ட வில்லை (பிரணவத்தை) எடுத்துக்கொண்டு, உபாசனையினாற் கூராக்கப்பட்ட மகாஸ்திரமாகிய பாணத்தை (ஆன்மாவை) (அதிலே) சந்தானம் பண்ணுக; அந்தப் பரப்பிரஹ்ம சிவபாவனையோடு கூடிய அருளினால் ஆகர்ஷித்து அந்த அக்ஷரப்பிரஹ்மசிவனை இலக்காக (லக்ஷ்யமாக) அறிகுதி."

(33) உத்கீதமேதத் பரமந்து ப்ரஹ்ம தஸ்மிந் த்ரயம் சுப்ரதிஷ்டாக்ஷரஞ்ச। அத்ராந்தரம் ப்ரஹ்மவிதோ விதித்வா லீநா ப்ரஹ்மணி தத் பராயோநிமுக்தா:॥

— சுவேதாசுவதரம், க. எ.

"உற்கீதமானது இந்தப் பரப்பிரஹ்மசிவன், அந்தப் பரப்பிரஹ்மசிவனிலே (போக்கியகாண்டமாகிய ஆன்மதத்துவம், போககாண்டமாகிய வித்தியாதத்துவம், பிரேரகாண்டமாகிய சிவதத்துவம் என்னும்) மூன்றும் உள்ளன; (பரப்பிரஹ்மமானது) நன்கு பிரதிஷ்டை செய்யப்பட்டதும், அழியாப் பொருளாயும் (உள்ளது); (அம்முத்திற) உலகத்துள்ளேயுள்ள பிரஹ்மத்தைப் பிரஹ்மவித்துக்கள் அறிந்து பரப்பிரஹ்மசிவத்தில் ஒடுங்கித் தற்பரராய்ப் பிறவியினின்று நீங்குகின்றார்கள்."

(34) தஸ்யை தபோ தம: கர்மேதி ப்ரதிஷ்டா வேதா: ஸர்வாங்காநி ஸத்யமாயதநம்|

—கேனம், ௩௩.

"அதற்குப் (பரப்பிரஹ்மதியானயோகத்துக்குத்) தபசும் (ஞானமும்), இந்திரிய அடக்கமும் (யஞ்ஞ) கன்மமும் ஆதாரம்; வேதங்கள் அதின் (தியானயோகத்தின்) அங்கங்களாம்; சத்தியம் (உண்மை) (தியானயோகத்தின்) இருப்பிடமாம்."

(35) யோ வா ஏதாமேவம் வேதாபஹத்ய பாப்மாநமநந்தே ஸ்வர்க்கே லோகே ஜ்யேயே ப்ரதிதிஷ்டதி ப்ரதிதிஷ்டதி|

—கேனம், ௩௪.

"எவன்தான் இதனைத் (தியானயோகத்தை) இங்ஙனம் அறிகின்றானோ, (அவன்) சர்வஞ்ஞதையை (அபகதபாப்மத்துவாதி குணங்களை) அடைந்து, முடிவிறந்ததும் மகிமை பொருந்தியதுமாகிய சிவலோகத்தில் நிலைக்கின்றான், நிலைக்கின்றான்."

(36) ஓமிதி ப்ரஹ்ம|

—தைத்திரீயம், க. அ.

"ஓம் என்பது பிரஹ்மம்."

(37) ஓமிதீதம் ஸர்வம்|

—தைத்திரீயம், க. அ.

"ஈதெல்லாம் ஓம்."

(38) யதைதமநுபச்யத்யாத்மாநம் தேவமஞ்ஜஸா| ஈசாநம் பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே||

—பிருகதாரண்ணியம், ச. ச. கரு.

"ஒருவன் இந்த ஆன்மாவைச் (சிவபிரானைத்) தெளிவாக (மஹா) தேவரென்றும், இறப்பு எதிர்வுக்குச் சர்வேசுவரர் என்றும் அறிகின்றானே, பின் அவன் அஞ்சவேண்டியதில்லை."

(39) யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யேஸ்யஹ்ருதி ச்ரிதா தா:। அத மர்த்யோம்ருதோ பவத்யத்ர ப்ராஹ்ம ஸமச்நுதே॥

—பிருகதாரணியம், ௪. ௪. எ.

"எப்போது இதயத்தைப்பற்றிய பற்றுக்களனைத்தும் அற்றுப் போகின்றனவோ, அதன்பின் மனிதன் மரணமில்லாதவனாகிப் பிரஹ்மத்தை அடைகின்றான்."

(40) இந்த்ரியாணாம் ப்ருதக்பாவமுதயாஸ்தமயௌச யத்। ப்ருதகுத்பத்யமாநாநாம் மத்வா தீரோ ந சோசதி॥

— கடம், ௬. ௬.

"(ஆன்மாவினின்று) வேறாக உண்டாகின்ற இந்திரியங்களின் பேதத்தையும், (அவற்றின்) தோற்ற ஒடுக்கங்களையும் அறியும் திண்ணிய அறிஞன் சோகிப்பானல்லன்."

(41) தமேவ தீரோ விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத ப்ராஹ்மண:। நாநுத்யாயாத் பஹூஞ் சப்தாந் வாசோ விக்லாபநம் ஹிததி॥

—பிருகதாரணியம், ௪. ௪. உக.

"திண்ணிய அறிவினையுடைய அந்தணன் அதனை (பிரஹ்மத்தை) அறிந்து அருளையே திளைக்க; அதனை அநேக சப்தங்கள் கொண்டு நாடற்க; அது நாவுக்கு மிகுதியும் இளைப்பை விளைக்குமன்றோ."

(42) ஏகோ ஹம்ஸோ புவநஸ்யாஸ்ய மத்யே ஸ ஏவாக்நிஸ் ஸலிலே ஸந்நிவிஷ்ட:। தமேவ விதித்வாதிம்ருத்யுமேதி நாந்ய: பந்தா வித்யதேயநாய॥

— சுவேதாசுவதரம், ௬. கரு.

"இப்புவனமத்தியிலே ஒரு ஹம்சர் (தாண்டவேசுவரசதாசிவநாயனார்) உளர்; அவர் ஜலத்திலுள்ள அக்கினி; அவரையே அறிந்து பாசத்தை (மிருத்தியுவைக்) கடக்கின்றான்; போதற்கு வேறு வழி இல்லை."

(43) க்ருதாத் பரம் மண்டமிவாதிஸூக்ஷ்மம் ஜ்ஞாத்வா சிவம் ஸர்வபூதேஷுகூடம்l விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசை:ll

— சுவேதாசுவதரம், ச. கசு.

"(நெய்யின்) மேலுள்ள தெளிவுபோல, அதிசூக்குமமாய்ச் சமஸ்த சேதனாசேதனப்பிரபஞ்சத்தில் மறைந்துள்ளவராயும், பிரபஞ்சத்தை ஏகராய்ச் சூழ்ந்துநிற்பவருமாகிய தேவரைச் (சிவபிரானை) அறிந்து சமஸ்தபாசங்களினின்றும் வீடுறுகின்றான்."

(44) யோ யோநிம் யோநிமதிதிஷ்டத்யேகோ யஸ்மிந்நிதம் ஸஞ்ச விசைதி ஸர்வம்l தமீசாநம் வரதம் தேவமீட்யம் நிசாய்யேமாம் சாந்திமத்யந்தமேதிll

—சுவேதாசுவதரம், ச. கக.

"எவர் ஒருவரேயாய் ஒவ்வோர் காரணத்தையும் அதிஷ்டிக்கின்றாரோ, எவரிலே ஈதெல்லாம் தோற்றி ஒடுங்குகின்றனவோ அவரை ஈசானர் (தாண்டவேசுவரர்) எனவும், ஸ்துதிக்கற்பாலராகிய தேவர் எனவும் அறிந்து அத்தியந்த சாந்தியை (ஆனந்தத்தை) அடைகின்றான்."

(45) (ததோ) யதுத்தரதரம் தத்ரூபமநாமயம்l ய ஏதத் விதுரம்ருதாஸ்தே பவந்த்யதேதரே து:கமேவாபியந்திll

— சுவேதாசுவதரம், ந. கo.

"அப்பாலுக்கப்பாலாயும், அரூபமாயும், * அநாமயமாயும் உள்ளது எதுவோ (பிரஹ்மமோ), அதனை (பிரஹ்மத்தை) அறிந்தவர்கள் முக்தர்கள் ஆகின்றார்கள்; ஏனையோர் துக்கத்தையே அடைகின்றார்கள்."

(46) வேதாஹமேதம் புருஷம் மஹாந்தமாதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்l தமேவ விதித்வாதிம்ருத்யுமேதி நாந்ய: பந்தா வித்யதேயநாயll

— சுவேதாசுவதரம், ந. அ.

*நோயில்லாததாயும்.

"இந்தப் புருஷரைச் (சிவபிரானைத்) * தமசுக்குமேல் ஆதித்திய வர்ணராகவும், மஹானாகவும் அறிவேன்; அவரையே (அநுபூதியில்) அறிந்து பாசத்தை (மிருத்யுவைக்) கடக்கின்றான்; மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை."

(47) தத: பரம் ப்ரஹ்ம பரம் ப்ருஹந்தம் யதாநிகாயம் ஸர்வபூதேஷு கூடம்| விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரமீசந்தம் ஜ்ஞாத்வாம்ருதா பவந்தி||

—சுவேதாசுவதரம், ௩. எ.

"அதன் பின்னர்ப் பரப்பிரஹ்மமாயும், பெரிதாயும், சமஸ்த செந்துக்கடோறும் (அவற்றின்) வடிவத்துக்குத் தக்கவாறு மறைந்ததாயும், பிரபஞ்சத்துக்கு ஒரு ஆவரணமாயுமுள்ள அந்த ஈசரைத் (தாண்டவேசுவரரை) அறிந்து முக்தராகின்றார்."

(48) அநாத்யநந்தம் கலிலஸ்ய மத்யே விச்வஸ்யச்ரஷ்டாரமநேகரூபம்| விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வா தேவம் முச்யதே ஸர்வபாசை:||

—சுவேதாசுவதரம், ரு. கங.

"ஆதி அந்தம் இல்லாதவராயும், கலில (பிரளய) மத்தியிலே உலகத்தைப் படைப்பவராயும், அநேக வடிவங் கொள்பவராயும், பிரபஞ்சத்துக்கு ஒரு ஆவரணமாயுமுள்ள தேவரை (சதாசிவநாயனாரை) அறிந்து சமஸ்தப் பிரபஞ்சங்களினின்று நீங்குகின்றான்."

(49) பாவக்ராஹ்யமநீடாக்யம் பாவாபாவகரம் சிவம்| கலாசர்க்ககரம் தேவம் யே விதுஸ்தே ஜஹுஸ்தநும்||

—சுவேதாசுவதரம், ரு. கச.

"(சோஹம்) பாவனையினாற் பற்றற்பாலரும், அசரீரி எனப்படுபவரும், உண்மை இன்மைகளை இயற்றுபவரும் (சாந்தியதீதை

* அண்டமாரிருளூடுகடந்தும்ப
ருண்டுபோலுமோரொண்சுடரச்சுடர்
கண்டிங்காரறிவாரறிவாரெலாம்
வெண்டிங்கட்கண்ணிவேதியனென்பரே.

—தேவாரம்.

முதலிய ஐங்) * கலைகளைச் சிருஷ்டி செய்பவருமாகிய சிவபெருமானை யார் அறிவார்களோ, அவர்கள் (தமது) சரீரத்தை விட்டார்கள்."

(50) ஸ வ்ருக்ஷகாலாக்ருதிபி: பரோந்யா யஸ்மாத் ப்ரபஞ்ச: பரிவர்த்ததேயம்। தர்மாவஹம் பாபநுதம் பவேசம் ஜ்ஞாத்வாத்மஸ்தமம்ருதம் விச்வதாம॥

—சுவேதாசுவதரம், சு. சு.

"எவரால் இந்தப் பிரபஞ்சம் சுழல்கின்றதோ, அவர் (உலக) விருக்ஷம் காலம் என்பவற்றின் அளவுகளுக்கு வேறானவர்; புண்ணியத்தைப் பாலிப்பவரும், பாவத்தைப் போக்குபவரும், சம்சாரத்துக்கு ஈசுவரரும், அனைத்துக்கும் உறைவிடமாயுள்ள அமிர்தரைச் (சிவபிரானை) ஆன்மாவில் இருப்பவராக (அநுபவத்திற்) கண்டு (ஆனந்தத்தை அடைகின்றார்.)"

(51) தரதி சோகமாத்மவித்।

—சாந்தோக்கியம், எ. க. ங.

"ஆன்மாவைச் (சிவபிரானை) அறிந்தவன் துன்பத்தைத் தாண்டுகின்றான்."

(52) ஆத்மவிச்ச்ருதம் ஹ்யேவமே பகவத் த்ருசேப்யஸ் தரதி சோகமாத்மவிதிதி ஸோஹம் பகவ: சோசாமி தம் மா பகவாந் சோகஸ்ய பாரம் தாரயது॥

—சாந்தோக்கியம், எ. க. ங.

"ஆன்மாவைச் (சிவபிரானை) அறிந்தவன் துக்கத்தைத் தாண்டுகின்றான் என்று நும்போலியரிடத்திற் கேள்வியுற்றிருக்கின்றேன்; நான் துன்புறுகின்றேன்; பகவானே! என் துக்கத்தின் எல்லையைக் கடக்குமாறு செய்க."

(53) யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யேஸ்யஹ்ருதி ச்ரிதா:।
அத மர்த்யோம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமச்நுதே॥

—கடம், சு. கசு.

"எப்போது இயத்துள்ள பற்றுகளனைத்தும் அற்றுப்போகின்றனவோ, அதன்பின்னர் மனிதன் சிவனாகின்றான், தியானகாலத்திற் பிரஹ்ம (ஆனந்தத்தைத்) துய்க்கின்றான்."

---

* கலைகளையுற்று இப்புஸ்தகத்து ௫எ-ம் பக்கத்து ௨00, ௨0௫, ௨0எ, ௨0சு, ௨கக-ம் பிரிவுகளை நோக்குக.

(54) யதா ஸர்வே ப்ரபித்யந்தே ஹ்ருதயஸ்யேஹ க்ரந்தய:l அத மர்த்யோம்ருதோ பவத்யேதாவதநுசாசநம்ll

— கடம், சு. கரு.

"எப்போது இதயத்துள்ள பாசமுடிச்சுக்களனைத்தும் இங்கே அற்றுப்போகின்றனவோ, அதன்பின்னர் மனிதன் சிவனாகின்றான்; இவ்வளவுதான் உபதேசம்."

(55) காமஸ்யாப்திம் ஜகத: ப்ரதிஷ்டாம் க்ரதோ ரநந்த்யமபயஸ்ய பாரம்l ஸ்தோமமம் மஹதுருகாயம் ப்ரதிஷ்டாம் த்ருஷ்ட்வா த்ருத்யா தீரோ நசிகேதோத்யஸ்ராக்ஷீ:ll

— கடம், உ. கக.

"நாசிகேதசே! (எல்லாப்) போகங்களின் முடிவாயும், பிரபஞ்சத்துக்கு ஆதாரமாயும், யஞ்ஞத்தின் முடிவிறந்த பயனாயும், பயமிலாமைக்கு எல்லையாயும், துதிக்கற்பாலதாயும், மகத்தாயும் பெரும்புகழ் படைத்ததாயுமுள்ள பிரதிஷ்டையை (அருட்சத்தியை) நோக்கித் திண்ணிய அறிவினையுடையையாதலின் தைரியத்தோடு அனைத்தையும் தவிர்த்துவிட்டனை."

(56) தம் துர்தர்சம் கூடமநுப்ரவிஷ்டம் குஹாஹிதம் கஹ்வரேஷ்டம் புராணம்l அத்யாத்மயோகாதிகமேநதேவம் மத்வா தீரோ ஹர்ஷசோகௌ ஜஹாதிll

— கடம், உ. கஉ.

"(பாச பசு ஞானங்களாற்) காண்டற்கரியரும், மறைப்புண்டவரும், அனைத்தையும் பிரவேசித்தவரும், (இதய) குகைக்கண்ணரும், அந்தரியாமியும், பழையோருமாகிய அந்தத்தேவரைச் (சிவபிரானை) அத்தியான்ம (அருட்சத்தி) யோகத்தினாற் சிந்தித்துத் திண்ணிய அறிஞன் இன்பதுன்பங்களை விடுகின்றான்."

(57) ஏதச் ச்ருத்வா ஸம்பரிக்ருஹ்ய மர்த்ய: ப்ரவ்ருஹ்ய தர்ம்யமணுமேதமாப்யl ஸ மோததே மோதநீயம் ஹி லப்தவா விவ்ருதம் ஸத்ம நசிகேதஸம் மந்யேll

— கடம், உ. கங.

"மனிதன் இதனைப் (பிரஹ்மசொரூபத்தைக்) கேட்டு உணர்ந்துகொண்டு தர்மத்துக்குரிய சரீரத்தை விடுத்து, இந்த இன்பத்துக்குரிய நுண்ணிய (பரமான்மாவை) அடைந்து இன்பமடை

கின்றான்; ஆகலின், நாசிகேதசாகிய (உன்பொருட்டுப் பரப்பிரஹ்மசிவபிரானாது) உலகமானது திறக்கப்பட்டதாக நினைக்கின்றேன்."

(58) ஏததாலம்பநம் ச்ரேஷ்டமேததாலம்பநம்பரம்॥ ஏததாலம்பநம் ஜ்ஞாத்வா ப்ரஹ்மலோகே மஹீயதே॥

—கடம், உ. கஎ.

"இந்தக் களைகண் (அக்ஷரப்பிரஹ்மசிவன்) சிரேஷ்டமானது; இந்தக் களைகண் பரம்; இந்தக் களைகண்ணை (ஞானயோகத்தினால்) அறிந்து பிரஹ்ம(சிவ)லோகத்திற் பூசிக்கப்படுகின்றான்."

(59) அசரீரம் சரீரேஷ்வநவஸ்தேஷ்வவஸ்திதம்॥ மஹாந்தம் விபுமாத்மாநம் மத்வா தீரோ நசோசதி॥

— கடம், உ. உக.

"நிலையில்லாத சரீரங்களிலே நிற்பவராயும், அசரீரமாயும், பெரிதாயும், விபுவாயுமுள்ள ஆன்மாவைச் (சிவபிரானைத்) திண்ணிய அறிஞன் அறிந்து சோகிக்கின்றானில்லை."

(60) பராஞ்சி காநி வ்யத்ருணத் ஸ்வயம்பூஸ் தஸ்மாத்பராங் பச்யதி நாந்தராத்மந்॥ கச்சித் தீர: ப்ரத்யகாத்மாநமைக்ஷதாவ்ருத்தசக்ஷுரம்ருதத்வமிச்சந்॥

— கடம், ச. க.

"சுவயம்பு (சிவபிரான்) இந்திரியங்களைப் புறத்தனுவாகப் படைத்தார்; ஆகலின், ஒருவன் புறவிஷயங்களைப் பார்க்கின்றான்; அந்தரியாமியாகிய சிவபிரானைப் (பார்க்கின்றான்) இல்லை; திண்ணிய அறிஞன் ஒருவன் கண்களைப் (புறத்தே செல்லவொட்டாது) உள்ளே மடக்கிச் சிவத்துவம் வேண்டி உள்ளேயுள்ள ஆன்மாவைச் (சிவபிரானைப்) பார்க்கின்றான்."

(61) புருஷ ஏவேதம் விச்வம் கர்மதபோ ப்ரஹ்ம பராம்ருதம்॥ ஏதத் யோ வேத நிஹிதம் குஹாயாம் ஸோவித்யாக்ரந்திம் விகிரதீஹ ஸோம்ய॥

— முண்டகம், உ. க. க0.

"சோமிய! யாகம் ஞானமாகியவனைத்தும் (மஹா) புருஷரே (சிவபிரானே); இதயகுகையயின்கண்ணே இருக்கும் அந்தப்பராமிர்தமாகிய பிரஹ்மத்தை அறிகின்றவன் ஈண்டுப் பாசமுடிச்சைப் போக்கிவிடுகின்றான்."

(62) பராச: காமாநநுயந்தி பாலாஸ் தே ம்ருத்யோர் யந்தி வித தஸ்ய பாசம்। அத தீரா அம்ருதத்வம் விதித்வா த்ருவமத்ருவேஷ்விஹ ந ப்ரார்த்தயந்தே॥

— கடம், ௪. ௨.

"பாலர்கள் (அறிவிலிகள்) புறவிஷயங்களாகிய போகங்களைத் தொடர்கின்றார்கள்; இவர்கள் விரிந்த மரணத்தின் வலையை அடைகின்றார்கள்; பின்னர்த் திண்ணிய அறிஞர் நிலையாய சிவத்துவத்தை அறிந்து நிலையில்லாத பொருள்களிற் பற்றுவைப்பாரல்லர்."

(63) ஸ்வப்நாந்தம் ஜாகரிதாந்தஞ்சோபௌயேநாநுபச்யதி। மஹாந்தம் விபுமாத்மாநம் மத்வாதீரோ ந சோசதி॥

— கடம், ௪. ௪.

"கனவுமத்தியினும், நனவுமத்தியினுமுள்ள இரண்டையும் எவராற் (சிவபிரானால்) அறிகின்றானோ (அந்த) மஹானையும் சர்வவியாபகருமாயுள்ள ஆன்மாவைச் (சிவபிரானை) உரனுடையான் (அநுபவத்தில்) அறிந்து துன்புறுவானல்லன்."

(64) ய இமம் மத்வதம் வேத ஆத்மாநம் ஜீவமந்திகாத்। ஈசாநம் பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே॥

— கடம், ௪. ௫.

"எவன் கன்மபலத்தை அநுபவிக்கின்ற (பசுவாகிய) சீவான்மாவையும், இவனுக்குச் சமீபத்தில் இறந்தகாலம் நிகழ்காலம் என்பவற்றுக்கு ஈசானராகிய (தாண்டவேசுவரரையும்) (அறிகின்றானோ), அவன் பின்னர் நிந்திக்கப்படுவானல்லன்."

(65) ப்ரஹ்மவிதாப்நோதி பரம்।

— தைத்திரீயம், ௨. க. க.

"பிரஹ்மத்தைச் (சிவபிரானை) அறிந்தவன் மேலானதை (ஆனந்தத்தை) அடைகின்றான்."

(66) யோ தேவாநாமதிபோ யஸ்மில்லோகா அதிச்ரிதா:। ய ஈசேஸ்ய த்விபத: சதுஷ்பத: கஸ்மை தேவாய ஹவிஷா விதேம॥

— சுவேதாசுவதரம், ௪. கங.

"எவர் (சிவபிரான்) தேவர்களுக்கு அதிபராயும், பிரபஞ்சமனைத்தும் தம்மிற் பற்றியிருக்கப்பெற்றவராயும், இருகால் நாற்காற் பசுக்களை ஆளுகின்றவருமாயுள்ளாரோ (அவரை விடுத்து) எவரை ஹவிசுகொண்டு வழிபடுவோம்."

(67) ஸூக்ஷ்மாதிஸூக்ஷ்மம் கலிலஸ்ய மத்யே விச்வஸ்ய ஸ்ரஷ்டாரமநேகரூபம்। விச்வஸ்யைகம் பரிவேஷ்டிதாரம் ஜ்ஞாத்வா சிவம் சாந்திமத்யந்தமேதி॥

— சுவேதாசுவதரம், ச. கச.

"சூட்சுமாதிசூட்சுமரும், பிரளயமத்தியிற் பிரபஞ்சத்தைச் சிருஷ்டிப்பவரும், அநேக வடிவங்கொள்பவரும், பிரபஞ்சத்துக்கு ஒரு ஆவரணமாயுமுள்ள சிவபிரானை (அநுபூதியில்) அறிந்து அத்தியந்த ஆனந்தத்தை அடைகின்றான்."

(68) யோசநாயா பிபாஸே சோகம் மோஹம் ஜராம் ம்ருத்யுமத்யேத்யேதம் வை தமாத்மாநம் விதித்வா ப்ராஹ்மணா: புத்ரைஷணாயாச்ச வித்தைஷணாயாச்ச லோகைஷணாயாச்ச வ்யுத்தாயாத பிக்ஷாசர்யம் சரந்தி।

— பிருகதாரணியம், ங. ரு. க.

"எவர் (சிவபிரான்) பசி, தாகம், சோகம், மோகம், ஜரை, மரணம் என்பவற்றைக் கடந்துள்ளாரோ, அந்த ஆன்மாவைச் (சிவபிரானை) அறிந்து அந்தணர் புத்திராசை, பொருளாசை, பிரபஞ்சாசை என்பவற்றைக் கடந்து துறவிகளாய்த் திரிகின்றார்கள்."

(69) அபயம் வை ஜநக ப்ராப்தோஸி।

— பிருகதாரணியம், ச. உ. ச.

"ஜனகரே! நீவிர் பயமிலாததை (பரமான்மாவை) அடைந்தீர்."

(70) (ஸ வா) ஏஷ மஹாநஜ ஆத்மாஜரோ ம்ருதோபயோ ப்ரஹ்மாபயம் வை ப்ரஹ்மாபயம் ஹிவை ப்ரஹ்ம பவதிய ஏவம் வேத॥

— பிருகதாரணியம், ச. ச. உரு.

"மகானும், பிறவாதவரும், ஜரையிலாதவரும், அழியாதவரும், பயமில்லாதவரும், சிவனுமாயுள்ள இந்த ஆன்மா பிரஹ்மமே; பிரஹ்மம் உண்மையாகவே பயமிலது; இந்தப் பிரஹ்மத்தை அறிபவன் உண்மையாய்ப் பயமிலதாகிய பிரஹ்மமே ஆவன்."

(71) ஸம்ப்ராப்யைநம்ருஷயோ ஜ்ஞாநத்ருப்தா: க்ருதாத்மாநோ வீதராகா: ப்ரசாந்தா:। தே ஸர்வகம் ஸர்வத: ப்ராப்ய தீரா யுக்தாத்மாந: ஸர்வமேவாவிசந்தி॥

— முண்டகம், ௩. உ. ரு.

"இருஷிகள் இவரை (சிவபிரானை) அடைந்து ஞானதிருப்தர்களாய், அனைத்தையும் அடைந்தவர்களாய், ஆசையற்றவர்களாய், சாந்தகுணமுடையவர்களாய் (எவர்கள் இருக்கின்றார்களோ), அவர்கள் பரமான்மசிவனுரோடியைந்து (சொரூபாவிர்ப்பாவம் பெற்று) எந்த வஸ்துக்களினும் எங்கும் வியாபித்த (சிவபிரானைச் சிவலோகத்திற் போய்) அடைந்து அனைத்தையும் பிரவேசித்தோராவர்."

(72) காமாந் ய: காமயதே மந்யமாந: ஸ காமபிர் ஜாயதே தத்ர தத்ர। பர்யாப்தகாமஸ்ய க்ருதாத்மநஸ்து இஹைவ ஸர்வே ப்ரவிலீயந்தி காமா:॥

— முண்டகம், ௩. உ. உ.

"எவன் போகப்பொருள்களை விரும்பி ஆசை வைக்கின்றானோ அவன் அந்த அந்த இடங்களிற் (போய்) ஆசையினாற் பிறக்கின்றான்; ஆசையொழிந்தவனாயும் ஆன்மாவைச் (சிவபிரானை) அறிந்தவனாயுமுள்ளவனுக்கு இவ்வுலகத்திலே பற்றுக்களனைத்தும் ஒழிந்துபோகின்றன."

(73) ஸத்யேந லப்யஸ் தபஸாஹ்யேஷ ஆத்மா ஸம்யக் ஜ்ஞாநேந ப்ரஹ்மசர்யேண நித்யம்। அந்த: சரீரே ஜ்யோதிர்மயோ ஹி சுப்ரோ யம்பச்யந்தி யதய: க்ஷீணதோஷா:॥

— முண்டகம், ௩. க. ரு.

"தோஷமில்லாதவர்களாகிய யதிகள் எவரைச் (சிவபிரானைச்) சரீரத்துள்ளே சோதியாயும், தூய்தாயும் (இருக்கக்) காண்கின்றார்களோ, (பரம) ஆன்மாவாயுள்ள இவர் சத்தியத்தினாலும், தவசினாலும், நல்ல ஞானத்தினாலும், பிரஹ்ம சரியத்தினாலும் எப்போதும் அடையற்பாலர் (தியானிக்கற்பாலர்.)"

(74) ப்ராணோஹ்யேஷ ய: ஸர்வபூதைர் விபாதி விஜாநந் வித்வாந் பவதேநாதிவாதீ। ஆத்மக்ரீட ஆத்மரதி: க்ரியாவாநேஷ ப்ரஹ்மவிதாம் வரிஷ்ட:॥

— முண்டகம், ௩. க. ௪.

"எவர் (சிவபிரான்) சமஸ்த சென்துக்களாலும் (ஆசிரயக்கப்பட்டவராய்) விளங்குகின்றாரோ, இவரே பிராணன்; இவரை) அறிந்து அறிஞனுகின்றான்; § அதிவாதி அன்று; இவன் (சத்தியம், தபசு, தியானமுதலிய) கிரியைகளைச் செய்துகொண்டு (பரம) ஆன்மாவிலே (சிவபிரானிலே) திளைத்தவனுயும், (பரம) ஆன்மாவிலே இன்பமுற்றவனுயும் இருக்கின்றான்; இவன் பிரஹ்மத்தை அறிந்தவர்களுள்ளே சிரேஷ்டன்."

(75) பித்யதே ஹ்ருதயக்ரந்தி: சித்யந்தே ஸர்வஸம்சயா:। க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே॥

— முண்டகம், உ. உ. அ.

* "மேலானவரும் கீழானவருமான சிவபிரான் அநுபவத்திற் காணப்படுங்காற் சீவான்மாவினது இதயத்துள்ள பாசமுடிச்சு நசிக்கின்றது; சந்தேகமனைத்தும் நீங்கிப்போகின்றன; கன்மங்களும் நசித்துப்போகின்றன."

(76) வேதாந்தவிஜ்ஞாநசுநிச்சிதார்த்தா: ஸந்யாஸ யோகாத் யதய: சுத்தஸத்வா:। தே ப்ரஹ்மலோகேஷு பராந்தகாலே பராம்ருதா: பரிமுச்யந்தி ஸர்வே॥

— முண்டகம், ந. உ. சு.

"வேதாந்தங்களை அறிந்தமையால் நல்ல நிச்சயார்த்தமுடையவர்களாய், காமியகன்மங்களைத் தவிர்த்தமையால் தூய நெஞ்சுடையராயிருக்கின்ற துறவிகளாகிய அவரெல்லாம் சரீரம்நீங்குங்காற் சிவலோகத்துக்குப் போய்ப் பரமுத்தர்களாய்ப் பாசத்தினின்று நீங்குகின்றார்."

(77) ஏஷ ஹி த்ரஷ்டா ஸ்ப்ரஷ்டா ச்ரோதா க்ராதா ரஸயிதா மந்தா போத்தா கர்த்தா விஜ்ஞாநாத்மா புருஷ:। ஸ பரேக்ஷரே ஆத்மநி ஸம்ப்ரதிஷ்டதே॥

— பிரசினம், ச கூ.

---

§ வெற்றுரைபகர்வோன்.

* இக்கருத்துக்கொண்டே கச்சியப்பமுனிவர் பேரூர்ப்புராணத்தில்
உயர்ந்தவுந்தாமேயிழிந்தவுந்தாமேயெனமறையோலமிட்டுரைக்கும்
வியந்ததஞ்செய்கையிரண்டனுளொன்றுவேதியனுகமுன்காட்டிப்
பயந்தருமிறைவர்மற்றதுங்காட்டப்பள்ளனுய்த்திருவிளையாட்டா
னயந்தபூம்பணையின்வினைசெயவன்பர்நன்னூழுணண்ணினரம்மா.
என அருளினர்.

"பார்ப்பவனும், பரிசிப்பவனும், கேட்பவனும், மணப்பவனும், உருசிப்பவனும், ஸ்மரிப்பவனும், அறிபவனும், செய்பவனும், விஞ்ஞானத்துமாவுமாகிய இந்தப் புருஷன் (ஜீவான்மா) அக்ஷரப் (பிரமம்) ஆகிய பரமான்மாவிலே (சிவபிரானிலே) நிலைபெற்றுள்ளானன்றோ."

(78) யதா பஞ்சாவதிஷ்டந்தே ஜ்ஞாநாநி மநஸாஸஹ। புத்திச்ச ந விசேஷ்டதே தாமாஹு: பரமாம் கதிம்॥

— கடம், கூ. ௧0.

"எப்போது ஐந்து ஞானேந்திரியங்களும் மனசோடுகூடச் (சலியாது) நிற்கின்றனவோ, புத்தியும் அங்ஙனம் சலியாது நிற்கின்றதோ, அந்த நிலையை மேலானதென்று சொல்லுகின்றார்கள்."

(79) விஜ்ஞாநாத்மா ஸஹ தேவைச்ச ஸர்வை: ப்ராணா பூதாநி ஸம்ப்ரதிஷ்டந்தி யத்ர। ததக்ஷரம் வேதயதே யஸ்து ஸோம்ய ஸ ஸர்வஜ்ஞ: ஸர்வமேவாவிவேசேதி॥

— பிரசினம், ச. ௧௧.

"எதிலே (அக்ஷரப்பிரஹ்மசிவபிரானிலே) இந்திரியங்களோடு கூடப் பிராணன்களும், (ஐந்து) பூதங்களும், அறிவுடைய ஜீவான்மாவும் நிலைபெற்றிருக்கின்றனவோ, அதனை (அக்ஷரப்பிரஹ்ம சிவபிரானை) ஓ சௌமிய! எவன் (அநுபவத்தில்) அறிகின்றானோ, அவன் சர்வஞ்ஞனாய் எல்லாவற்றையும் பிரவேசிக்கின்றான் (சர்வவியாபியாகின்றான்) என்பது."

(80) ஸ யோ ஹவை தத் பரம் ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி நாஸ்யாப்ரஹ்மவித் குலே பவதி। தரதி சோகம் தரதி பாப்மாநம் குஹாக்ரந்திப்யோவிமுக்தோம்ருதோ பவதி॥

— முண்டகம், ௩. ௨. ௧0.

"எவன் ஒருவன் அந்தப் பரப்பிரஹ்மத்தைச் (சிவபிரானை) அறிகின்றானோ, பிரஹ்ம †(சாமியம்) அடைகின்றான்; அவன் குலத்திற் பிரஹ்மத்தை அறியாதவன் (பிறப்பது) இல்லை; சோகத்தைக் கடக்கின்றான்; பாவத்தைத் தாண்டுகின்றான்; (இதய) குகைக்கண்ணே பாசங்களினின்று நீங்கிச் சிவனாகின்றான்."

---

† நீலகண்ட சைவபாஷ்யத்துத் தத்வசனாதிகரணத்தில் (௩. ௩. ௪) முக்தன் சிவசாமியமடைதல் கூறப்பட்டுள்ளது.

இருந்துகொண்டு சிவபிரானைத் தியானித்தல்வேண்டுமென்று நீலகண்டசைவபாஷ்யத்து ஆசீநாதிகரணத்திற் (ச. க. எ) கூறப்பட்டுள்ளது. அது முன் வரும் மந்திரத்தினால் அறியப்படும்.

(81) விவிக்ததேசேது சுகாஸநஸ்த: சுசி: ஸமக்ரீவசிர: சரீர:l அத்யாச்ரமஸ்த: ஸகலேந்த்ரியாணி நிருத்ய பக்த்யா ஸ்வகுரும் ப்ரணம்யl ஹ்ருத்புண்டரீகம் விரஜம்விசுத்தம் விசிந்த்ய மத்யே விசதம் விசோகம்l அநந்தமவ்யக்தமசிந்த்யரூபம் சிவம் ப்ரசாந்தமம்ருதம் ப்ரஹ்மயோநிம்l ததாதிமத்யாந்தவிஹீநமேகம் விபும் சிதாநந்தமரூபமத்புதம்l உமாஸஹாயம் பரமேச்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரசாந்தம்l த்யாத்வா முநிர் கச்சதி பூதயோநிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத்ll

— கைவல்லியம்.

"தனியிடத்திலே * சுகாசனத்திருந்து, சுத்தனாகி, நேரிய கழுத்துத்தலை சரீரமுடையவனாய், வைதிகபாசுபதவிரதமுடையனாய், இந்திரியங்களனைத்தையும் அடக்கி, அன்பினோடு தன் குருவை வணங்கி ‡ இதயகமலத்தைத் தூளற்றதாய்ச் சுத்தமாகக் கருதி (அதன்) நடுவே தெளிவுடையராய், சோகமிலராய், அனந்தராய், வெளி

---

* ஆஸநம் விம்சதி ப்ரோக்தம் ச்ரேஷ்டம் ஸ்திரசுகாஸநம்|
ஊர்ஜாநுத்வயஞ்சைவ பாதாக்ரஞ்சைவ ஸம்புடம்|
ஈஷந் நாஸாக்ரத்ருஷ்டிஸ்து தேஹீ தீர்க்கந்து தம்ருஜு|
ருசிராஸநமாக்யாதம் ஸர்வகார்யேஷு பூஜிதம்||

— காரணாகமபூருவபாகம், படலம், ௬0: கூக, எ0.

"ஆசனம் இருபது வகைத்து; இவற்றுள்ளே சிரேஷ்டமானது சுகாசனம்; தொடைகளையும் முழங்கால்களையும் மடித்து, அட்டணைக்காலேிட்டுத் தேகத்தை நேரே நிறுத்தி, கண்ணைச் சிறிது நாசிநுனியில் வைத்திருத்தலே சுகாசனம் எனப்படும்."

‡ இருதயம் என வாளா கூறப்படினும், இதயகமலத்துள்ளது ஆகாசம் எனவும், அதிலே உமாசகாயராகிய தாண்டவேசுவரர் உளர் எனவும் கூட்டி முடிக்க; இக்கைவல்லியமந்திரத்தைத் தொடர்ந்தே உத்தரவேதமுடையாரும் "மலர்மிசையேகினான்" எனக் கூறினர்; மலர் என்றது தகாபுண்டரீகத்தையும், ஏகினான் என்றது ஆதிபகவன்மேலதாய் ஆதிசத்தியாகிய பராசத்தியோடியைந்த தாண்டவேசுவரரையும் உணர்த்தியவென்க.

ம்படாதவராய், நினைத்தற்கரியராய், பிரசாந்தராய், அமிர்தராய், பிரமாவுக்குக் காரணராய், முதனடுவீறிலராய், ஏகராய், வியா பியாய், சிதானந்தரூபியாய், நிஷ்களராய், அற்புதராய், பிரபு வாய், முக்கண்ணராய், நீலகண்டராய், பிரசன்னராய், பூத காரணராய், சமஸ்த சாக்ஷியாய், * உமாசகாயராயுள்ள பரமேசு வரரை முனியானவன் தியானித்து இருளுக்கு மேலே (அவரை) அடைகின்றான்."

(82) அமாத்ர: சதுர்த்தோவ்யவஹார்ய: ப்ரபஞ்சோபசம: சி வோத்வைத ஏவமோங்கார ஆத்மைவ ஸம்விசத்யாத்மநாத் மாநம் ய ஏவம் வேத।

— மாண்டூக்கியம்.

"அளவிலாதவராய், வியவகரித்தற்கியலாதவராய், பிரபஞ்சோப சமராய், இங்ஙனம் ஓங்காரராயினர் துரியமூர்த்தியாய்த் (துவாதசா ந்தராய்) சிவ அத்துவைதராய் இருக்கின்றார்; எவன் இங்ஙனம் அறிகின்றானோ, அவன் பரமான்மாவின் அருளினாற் பரமான்மா வை அடைகின்றான்."

83) அகாரம் ப்ரஹ்மாணம் நாபாவுகாரம் விஷ்ணும் ஹ்ருதயே மகாரம் ருத்ரம் ப்ரூமத்யே ஓங்காரம் ஸர்வேச்வரம் த்வாத சாந்தே।

— நிருசிம்மோத்தரதாபிநி.

"அகாரவச்சியராகிய பிரமாவை நாபியினும், உகாரவாச்சியராகிய விஷ்ணுவை இதயத்தினும், மகாரவாச்சியராகிய உருத்திரரைப் புருவமத்தியினும், ஓங்காரவாச்சிய சர்வேசுவரராகிய சிவபிரான் (தாண்டவேசுவரர்) துவாதசாந்தத்தினும் (தியானிக்கற்பாலர்.)

84) அநுத்தரவிஸர்க்காந்தசிவசக்தித்வயாத்மக:। பராமர்சோநி ர்க்குணத்வாதஹமித்யுச்யதே விபோ:। ஹ்ருத்யகாரோ த் வாதசாந்தே ஹகாரஸ் ததிதம் வித:। அஹமாத்மகமத்வை தம் யத் ப்ரகாசாத்மவிச்ரம:।।

* இந்த உமாசகாயராகிய பரமேசுவரர் இருளுக்குமேல் முப்பத்தா ம் தத்துவத்துள்ள சதாசிவதாண்டவேசுவரராம் என்க. இதனையுற்று 4-ம் பக்கத்து 299-ம் பிரிவிற் காண்க.

"நிரதிசயவாய், முடிவிலதாய், சிவசத்திதுவயமாய், வியாபகமாயுள்ள பரமான்மாவானது பரிச்சேதமாக ஹேயகுணமிலதாயிருத்தல்பற்றி § அஹம் எனக் கூறப்படும்; இதயத்தில் அகாரமாய்த் துவாதசாந்தத்தில் ஹகாரமாய் இருக்கின்றது; ஆகலின், பெரியோர் பிரகாசமாகிய ஆன்மாவில் முற்றும் அத்வைத அஹமாக இதனைப் (பிரபஞ்சத்தை) அறிகின்றனர்" என்று நீலகண்டபாஷ்யத்து ஜகத்வியாபாராதிகரணத்திற் (ச. ச. கசு) கூறப்படுகின்றது. சுக-ம் பக்கத்து உகச-ம் பிரிவிற் கண்டவாறு

(85) காரணந்து த்யேய: ஸர்வைச்வர்ய ஸம்பந்ந: ஸர்வேச்வர சம்புராகாசமத்யே।

"சர்வைசுவரியசம்பன்னரும், சர்வேசுவரரும், சம்புவும், காரணருமாயுள்ளார் ஆகாயமத்தியிலே தியானிக்கற்பாலர்" என்று ஆசிறுதிகரணத்தில் (ச. க. அ)

(86) த்யாநாச்ச।

"தியானத்தினாலும்" என்ற வேதாந்தசூத்திரத்தின் கீழ் உதகரிக்கப்பட்டிருக்கின்றது. அதர்வசிகையில் தாண்டவேசுவரசிவபிரான் சர்வைசுவரியசம்பன்னரென்று கூறப்பட்டாற்போலவே, அஉ-ம் பிரிவிற் கூறப்பட்ட சிவபிரானையும் மாண்டூக்கியோபநிடதமும் சு-ம் மந்திரத்தில் "ஸர்வேச்வரர்" என்று கூறுகின்றது. ஆகாயமத்தியாகிய துவாதசாந்தத்தில் தியானிக்கற்பாலராய்நின்றார் நிருத்தமூர்த்தியாகிய தாண்டவேசுவரர் என்று காரணாகமத்து ரு௦-வது நித்தியார்ச்சனைவிதிப்படலத்து கக௪, ககரு-ம் சுலோகத்திற் கூறப்பட்டிருக்கின்றது. இது திருச்சிற்றம்பலேசர் (தகரவித்தைக்குரியார்) உபாசனை.

(87) பாசுபதாதிகரணத்தில் (உ. உ ஙஅ) பிரஹ்மம், பிரணவம், பஞ்சாக்ஷரம், பிராசாதாதி மந்திரமுதலிய பரதருமங்கள் வேதத்திலும் ஆகமத்திலுஞ் சமமாகக் காணப்படுகின்றமையின், வேதமும் சிவாகமமும் பிரமாணங்களே என்று கூறப்பட்டிருக்கின்றது. அங்கே அதர்வசிகையிற் கூறப்பட்ட "ஹ்ருஸ்ய தீர்க்க ப்லுதபிராசாதமா"னது விரிவுறப் பிராசாத ஷட்சுலோகிவியாக்கியானம் சித்தாந்தசாராவளி முதலியவைகளிற் காணப்படுகின்றது. பிராசாதத்துக்குரிய காலம், ஒளி, வடிவு, தேவதை, தத்து

§ இதன் பொருளை நீலகண்டசைவபாஷ்யத்து 133-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க.

வம், அங்குலம், வியாத்தி, சூனியம் என்பன எங்ஙனம் அச்சிவாகமங்களிற் கூறப்பட்டிருக்கின்றனவோ, அங்ஙனம் பிராசாதநெறியானே மாண்டூக்கியோபநிடதமுதலியவைகளிற் பிரதிபாதிக்கப்பட்ட சிவபெருமானைத் துவாதசாந்தத்தில் தியானிக்க.

(88) ஹ்ருஸ்வஞ்சைவாத்மதத்வந்து தீர்க்கம் வித்யா ப்ரகீர்த்திதம்। ப்லுதேநது ஸதா குர்யாச் சிவதத்வந்து ஸர்வத:।

"ஹ்ருஸ்வப்பிராசாதம் ஆன்மதத்துவமாகவும், தீர்க்கப்பிராசாதம் வித்தியாதத்துவமாகவும் கூறப்பட்டன; புலுதப்பிராசாதத்தினால் எப்போதும் எவ்விடத்தினும் (பாவனை) செய்க" என்று நிச்சுவாசகாரிகை என்னும் சிவாகமத்திற் கூறப்பட்டுள்ளது. படவே, ஷோடசகலாப்பிராசாதத்தில், மேதாகலை பிருதிவிமுதற் பிரகிருதியீறாகிய ஆன்மதத்துவத்தையும்; அர்க்கீசகலை வித்தியாதத்துவத்தில் இராகம், வித்தை, நியதி, கலை, காலம், புருஷன் என்னும் ஆறு தத்துவங்களையும்; விஷகலை அசுத்தமாயையையும், விந்துகலை சிவதத்துவத்திற் சுத்தவித்தை ஈசுரம் என்னும் இரு தத்துவங்களையும்; அர்த்தசந்திரகலை நிரோதிகலை என்பன சாதாக்கியதத்துவத்தையும்; நாதகலை நாதாந்தகலை என்பன சத்திதத்துவத்தையும்; சத்திகலை, வியாபினிகலை, வியோமரூபினிகலை, அனந்தை, அநாதை, அநாசிருதை, சமனை, உன்மனை என்பன சிவதத்துவத்தையும் அடக்கிநிற்கும்.

அஉ, அரு, அச, அநு-ம் பிரிவுகளிற் கூறப்பட்டவாறு, துவாதசாந்தத்தில் தியானிக்கற்பாலராய் நின்ற சிவபெருமான் அதர்வசிகை, நிருசிம்மதாபினி, மாண்டூக்கியம் என்பவற்றிற் பிரதிபாதிக்கப்பட்ட சர்வேசுவரரும், சர்வைசுவரியசம்பன்னருமேயாம். இவர் ஷோடசகலாப்பிராசாதநெறியானே தியானிக்கப்படுங்கால், (அஎ-ம் பிரிவிற் கண்டவாறு) உன்மனாதீதரேயாம். உன்மனை சமனை என்பவற்றை அதிஷ்டிப்பவரும் அவ்வுன்மனாதீத பரசிவனேயாவர்.

(89) உந்மநா ஸமநாஸ்தாநம் சிவேந ஸமதிஷ்டிதம்।

"உன்மனை சமனை (என்னும்) ஸ்தானங்கள் சிவபெருமானால் அதிஷ்டிக்கப்பட்டன" என்று சுவச்சந்தபைரவத்திற் கூறப்பட்டுள்ளது. ஆகலின், அவர் உன்மனேசர் எனப்படுவர்.

(90) ஏதாநி நவ தத்வாநி லீயந்தே யத்ர வஸ்துநி।
தத் வஸ்து த்வாதசாந்தஸ்தம் பரமானந்ததாண்டவம்॥

"இந்தப் (பிரமாதி) நவதத்துவங்கள் எந்த வஸ்துவிலே இலயமடைகின்றனவோ, அது துவாதசாந்தத்திலுள்ள பரமானந்ததாண்டவவஸ்து" என மகுடாகமத்திற் கூறப்பட்டுள்ளது. ஆகவின், மேலே கூறப்பட்ட உன்மனேசர் தாண்டவேசுவரரேயாம். எகூ-ம் பக்கத்து உஅச, உஅ௫-ம் பிரிவுகளிற் காரணாகமம் துவாதசாந்தத்தினரை நிருத்தமூர்த்தி என்று அம்மகுடாகமம் கூறியவாறு கூறுகின்றது. ஆகவே அஉ-முதலிய பிரிவுகளிற் கூறப்பட்ட துவாதசாந்தத்தினர் முமுக்ஷுக்களனைவராலும் ஆகாசமத்தியிலே (திருச்சிற்றம்பலமத்தியிலே) தியானிக்கற்பாலராய் நின்றார் என்று சிவார்க்கமணிதீபிகையின் "அத்திரதிகரண"த்தினும் (க. உ. கூ) கூறப்படுகின்றது.

(91) க்ஷேத்ரஸ்யேச்வரஜ்ஞாநாத் விசுத்தி: பரமா மதா।
மஹாபாதகயுக்தோ வாயுக்தோவாப்யுபபாதகை:।
ப்ரவிச்யரஜநீயாமம் ப்ரஹ்மத்யாநம் ஸமப்யஸேத்॥

"சிவஞானத்தினால் ஆன்மாவுக்கு எய்தும் தூய்மை மேலானதாகக் கருதப்படுகின்றது; மகாபாதகஞ் செய்தானாயினும் உபபாதகஞ் செய்தானாயினும் இரவில் ஓர் சாமம் தாண்டவேசுவரசதாசிவநாயனாரைத் தியானஞ் செய்வானாக" என்று சைவபாஷ்யத்து "ஆவிருத்தியதிகரண"த்திற் (ச. க உ) கூறப்பட்டிருக்கின்றது. மேலும், அதிலே அங்கசேஷ்டையற்றவராய் ஓரே விஷயத்தில் மனஞ் செலுத்தினவராயுள்ளவரிடத்திலே தியானம் வியவகரிக்கப்படுகின்றது. அன்னிய சிந்தனையினால் தடுக்கப்படாது தைலதாரைபோல நினைவின் தொடர்ச்சிரூபமாகிய ஏகாக்கிரசித்தம் தியானத்தில் ஆவசியகமாக இன்றியமையாதுள்ளது; உரோகத்தினாலும் வயோதிகத்தினாலும் ஆசனத்திருந்து தியானித்தல் கூடாதாயின், சுவர் முதலியவைகளிற் சாய்ந்துகொண்டு தியானித்தல் வேண்டுமென்று "சிவார்க்கமணிதீபிகை" கூறுகின்றது. பூமிமுதலியனபோலச் சலனமற்றிருப்பவர்க்கே தியானசந்ததிகூடும். ஏகாக்கிரசித்தமுடைய உபாசகனுக்குத் திக்கு, தேச, கால,நியமம் இல்லை. ஜீவகாலமுழுமையும் இங்ஙனம் ஒழுகுகின்றவன் சிவலோகத்தை அடைகின்றான்; சிவோபாசனை செய்து வருங்கால் இடையில் அதனை விட்டுவிடல் கூடாது; உபாசகர்கள் சிவபெருமானைத் தமது ஆன்மாவாக இடையீடின்றித் தியானித்தபின்னரே சிவரூபம் உபாசகர்களுக்குப் பிரகாசிக்கின்றது.

"தாண்டவேசுவரபதிப்பிரகரண"த்து ருச-ம் பிரிவுச் சுவேதாசுவதரச் சுருதியானது சிவபெருமானை வழிபட்டாற்றான் பிறவி அறும் என்று கூறுகின்றது. அரதத்தாசாரியர் சுருதிசூக்திமாலையிலே "சசேச்ருங்கம்" என்றற் றொடக்கத்த கசாரு-ம் சுலோகத்தில் "முயலிற் கொம்பும், ஆகாயத்திற் பூவும், கானலில் நீரும், மலடியிடத்து மகப்பேறும் உளவாயின், ஏனைத் தேவரை உபாசித்தலால் வீடுபேறு எய்தும்" என்று கூறியிருக்கின்றார்.

(92) யோ வை பூமா தத்சுகம் நால்பே சுகமஸ்தி பூமைவ சுகம்।

— சாந்தோக்கியம், எ. உரு. க.

"எவர் (சிவபிரான்) * பூமாவோ அது (பூமா) இன்பம்; அற்பத்தில் ஆனந்தம் இல்லை; பூமாவே ஆனந்தம்."

(93) யத்ர நாந்யத் பச்யதி நாந்யச் ச்ருணோதி நாந்யத் விஜாநாதி ஸ பூமா।

— சாந்தோக்கியம், எ, உச. க.

"எங்கே ஒன்றையும் காண்கிலனோ, ஒன்றையும் கேட்கிலனோ, ஒன்றையும் அறிகிலனோ அதுதான் அந்தமிலாவானந்தம் (பூமா.)

(94) ஹார்த்தாய ஸர்வஜந்தூநாம் துப்யம் பூமாய தே நம:। த்வயி வாராந்நிதெள தேவ சீகரா: ஸ்ம சுராசுரா:॥

— ஸ்காந்தபுராணசம்பவகாண்டம், கக: ருஉ.

"சமஸ்தப்பிராணிகளுடைய இதயத்துள்ளோரும், அந்தமிலாவானந்தம் (பூமா) உடையருமாகிய உமக்கு நமஸ்காரம்; மஹாதேவரே! சமஸ்ததேவர்களும் அசுரர்களுமாகிய நாங்கள் தேவரீராகிய மகோததியின் திவலைகளாகின்றோம்."

(95) ஏஷஹ்யேவாநந்தயாதி।

— தைத்திரீயம், உ. எ.

"இவரன்றோ (சிவபிரானன்றோ) (ஆன்மாவுக்கு) ஆனந்தத்தை விளைவிக்கின்றார்."

(96) ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி।

— தைத்திரீயம், உ. எ. க.

"(ஜீவான்மா) (பரப்பிரஹ்ம சிவ) ஆனந்தத்தை அடைந்து ஆனந்தமாயிருக்கின்றான்."

* முடிவிறந்த ஆனந்தம்.

(97) யதா புஷ்கரபலாச ஆபோ ந ச்லிஷ்யந்த ஏவமேவம் விதி பாபம் கர்ம ந ச்லிஷ்யதே।

— சாந்தோக்கியம், ௪. ௧௪. ௩.

"தாமரையிலையில் நீர் பற்றாதவாறுபோல, (பரப்பிரஹ்ம சிவபிரானை) அறிந்தவனைப் பாவகன்மம் பற்றாது."

(98) தத் யதேஷிகா தூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயதைவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே।

— சாந்தோக்கியம், ரு. உ௪. ௩.

"நாணற் புற்பஞ்சு நெருப்பில் இடப்பட்டுத் தீய்ந்து போதல் போல, அவனுடைய பாவமனைத்தும் எரிந்துபோகின்றன."

(99) ப்ரஹ்மவித இவ ஸௌம்ய தே முகம் பாதி।

— சாந்தோக்கியம், ௪. ௧௪. உ.

"(உபகோசலரைநோக்கி) சௌமிய! பிரஹ்மஞானிக்குப் போல உன் முகம் பிரகாசிக்கின்றது (என்றார் சத்தியகாமஜாபாலர்.)"

(100) ம்ருத்யுப்ரோக்தாம் நசிகேதோத லப்த்வா வித்யாமேதாம் யோகவிதிஞ்ச க்ருத்ஸ்நம்। ப்ரஹ்மப்ராப்தா விரஜோபூத் விம்ருத்யுரந்யோப்யேவம் யோ விதத்யாத்மமேவ॥

— கடம், ௬. ௧௮.

"பின்னர் நாசிகேதசானவர் (யமன் கூறிய இந்தப் பிரஹ்ம) வித்தையையும் சமஸ்த யோகவிதியையும் பெற்று, குற்றமற்றவனாய்ப் பாசமின்றிப் பிரஹ்மத்தைச் (சிவபிரானை) அடைந்தவனானான்; இங்ஙனமே அத்தியான்ம (சிவஞான) யோகத்தை அறியும் மற்றொருவனும் (பிரஹ்மத்தை அடைகின்றான்.)"

(101) ஸோந்தவேலாயாமேதத் த்ரயம் ப்ரதிபத்யேதாக்ஷிதமஸ்ய ச்யுதமஸி ப்ராணஸம்சிதமஸி।

— சாந்தோக்கியம், ௩. ௧௭. ௬.

"அவன் முடிவுகாலத்தில் நீவிர் அழிவிலாதவர், நீவிர் வேறுபடாதவர், பிராணனின் கூராயினீர் (என்று பரப்பிரஹ்மசிவபிரானை நோக்கி) மூன்றையும் கூறி அவரைப் புகலடைவானாக."

(102) சதஞ்சைகாச ஹ்ருதயஸ்ய நாட்யஸ்தாஸாம் மூர்த்தா நமபிநி:ஸ்ருதைகா। தயோர்த்வமாயந்நம்ருதத்வமேதி விஷ்வங்ங்யா உத்க்ரமணே பவந்தி॥

—கடம், சு. கசு.

"இதயத்தில் நூற்றோர் நாடிகள் உண்டு; அவற்றுள் ஒரு (நாடி) தலையை ஊடுருவிப்போகின்றது; இந்த நாடிவாயிலாக (வித்துவான் மரணகாலத்தில்) மேலே (சிவலோகத்திலே) போய்ச் சிவத்துவத்தை அடைகின்றான்; மற்ற நாடிகளெல்லாம் வெவ்வேறு கதியை அடைவித்தற்காயுள்ளன."

## பன்னிரண்டாவது
# சோகம்பாவனுப்பிரகரணம்



[இப்பிரகரணம் சிவஞானபோத சிவஞானசித்தியார் ஒன்பதாஞ் சூத்திரத்திற் சிவோஹம்பாவனை கூறப்பட்டாற்போல, வேதோபநிடதநெறியானே ஆன்மா சோஹம்பாவனை செய்யுமாறு கூறுகின்றது.]

(1) அஹம் மநுரபவம் சூர்யச்சாஹம் கக்ஷீவாந்ருஷிரஸ்மி விப்ர:। அஹம் குத்ஸமார்ஜுநேயந்ய்ருஞ்ஜே ஹம் கவிருசநா பச்யதா மா। அஹம் பூமிமததா மார்யாயாஹம் வ்ருஷ்டிம் தாசுஷே மர்த்யாய। அஹமபோ அநயம் வாவசாநா மம தேவா ஸோ அநுகேதமாயந்। அஹம் புரோ மந்தஸாநோ வ்யைரம் நவஸாகம் நவதீ: சம்பரஸ்ய। சததமம் வேச்யம் ஸர்வதாதா திவோ தாஸமதிதிக்வம் யதாவம்॥

"§நான் மனுவாயினேன், சூரியனுமாயினேன், நான் கக்ஷீவான் (என்னும்) இருஷியாயினேன், விப்பிரனாகின்றேன், அர்ஜுனி குமாரனாகிய குற்சர்க்கு மிகவும் அருள்பாலிக்கின்றேன், மேதாவியாகிய உசனராயுள்ளேன், என்னைப் பாருங்கள்; நான் ஆரியர்க்குப் பூமியைக் கொடுத்தவனாகின்றேன்; நான் ஹவிசுகொடுக்கும் மனிதன் (யஜமானன்) பொருட்டு மழையைப் (பாலிப்பவனாகின்றேன்); நான் ஒலிக்கும் ஜலத்தைச் செல்லுமாறு வழிகாட்டினவனாகின்றேன்; அக்கினிமுதலிய தேவர்கள் என் கருத்தின் பிரகாரம் ஒழுகுபவராகின்றார்கள்; நான் சோமரசபானத்தினால் மகிழ்வுற்றுச் சம்பராசுரனுடைய தொண்ணூற்றொன்பது புரங்களையும் ஒருங்கே அழித்தேன்; (மேலும்), சர்வதாதா என்னும் யஞ்ஞத்திலே அதிதிக்குவர் என்னும் திவோதாசமுனிவரைக் காக்குங்கால் நூறாவது வீட்டை அழித்தேனாயினேன்" என்று இருக்குவேதத்து ச. உசு க, உ, ந-ம் மந்திரங்களில் உபாசகராகிய வாமதேவமுனிவரேனும், இந்திரனேனும், உபாசகரெவரேனும் பரப்பிரஹ்மசிவனாரோடு அபேதமுற்நின்று பாவனை செய்யுமாறு கூறப்படுகின்றது.

---

§ நான் என்றது வாமதேவமுனிவரையாவது, இந்திரனையாவது குறிக்கின்றது.

(2) ருஷிர் வாமதேவ: ப்ரதிபேதேஹம் மநுரபவம் சூர்யச்சேதி। ய ஏவம் வேதாஹம் ப்ரஹ்மாஸ்மி ஸ இதம் ஸர்வம் பவதி ............யோ (ந்யாம்) தேவதாமுபாஸ்தேந்யோஸாவந் யோஹமஸ்மீதி ந ஸவேத............॥

"வாமதேவமுனிவர் * நான் மனுவாயினேன் சூரியனுமாயினேன் என்று கூறினர்; நான் பிரமமாகின்றேன் என்று எவன் இங்ஙனம் அறிகின்றானோ, அவன் இவையனைத்தும் ஆகின்றான்; இவர் (கடவுள்) வேறு, நான் வேறு என்று எவன் கடவுளை உபாசிக்குங்கால், அவன் அந்தக் கடவுளை அறிவானல்லன்" என்று பிருகதாரணியோபநிடதம் க. ச. ௧௦-கூறுமாற்றால், அபேதபாவனை செய்தல்வேண்டும் என்றும், துவிதபாவனை கூடாதென்றும் கூறியவாறாயிற்று.

(3) (யத்ர) தேவ இவ ராஜேவாஹமேவேதம் ஸர்வோஸ்மீதி மந்யதே ஸோஸ்ய பரமோலோக:॥

—பிருகதாரணியம், ச. ங. ௨௦, ௨௧.

"கடவுள்போலவேனும், அரசன்போலவேனும் எல்லாம் நானென்று எண்ணு (பாவிக்) கின்றானோ, அது (எல்லாமாதல்) அவனது பரமலோகம் (மேலாகிய நிலை.)"

(4) ஸலில ஏகோ த்ரஷ்டாத்வைதோ பவத்யேஷ ப்ரஹ்மலோக: ......யாஜ்ஞவல்கிய ஏஷாஸ்ய பரமா கதிரேஷாஸ்ய பரமா ஸம்பதேஷாஸ்ய பரமோ லோக ஏஷோஸ்ய பரம ஆநந்த:॥

—பிருகதாரணியம், ச. ங. ௩௨.

"(நதியைத் தன்னுள்ளே அடக்கி இரண்டற நிற்கும்) சமுத்திரம் போல ஒன்றாகப்பார்ப்பவன் துவிதமின்றி இருக்கின்றான்; இது பிரஹ்மலோகம் (என்றார்) யாஞ்ஞவற்கியர்; இது இவனுக்கு மேலாகிய கதி; இது இவனுக்கு மேலாகிய செல்வம்; இது இவனுக்கு மேலாகிய உலகம்; இது இவனுக்கு மேலாகிய இன்பம்."

---

* பேதமாகியபாவனைபேணுவதெல்லா
மேதமாகியபந்தமேயெனதியானெனுமால்
போதவாருயிரபேதபாவனைபுரிவஃதே
மாதராயுயர்முத்தியென்றுரைத்திடுமறையும்.

—திருவானைக்காப்புராணம்.

நதி போல்வது ஜீவான்மா; சமுத்திரம் போல்வது பரமான்மா; நதியானது சமுத்திர ஜலத்தோடு சேர்ந்து சமுத்திரஜலமாக இருத்தல்போல, ஜீவான்மா பரமான்மாவோடு சேர்ந்து பரமான்மாவுடைய சர்வஞ்ஞதாதி குணங்களை அடைந்து, பரமான்மா என இரண்டற்று ஒன்றாக இருத்தல் என்பது கருத்து.

(5) யதா நத்யஸ் ஸ்யந்தமாநாஸ் ஸமுத்ரேஸ்தம் கச்சந்தி நாமரூபே விஹாய। ததா வித்வாந் நாமரூபாத் விமுக்த: பராத்பரம் புருஷமுபைதி திவ்யம்॥

— முண்டகம், ௩. ௨. அ.

"பிரவாகிக்கின்ற நதிகள் சமுத்திரத்தில் எங்ஙனம் நாமரூபங்களை விடுத்து இலயமடைகின்றனவோ, அங்ஙனம் அறிஞன் நாமரூபங்களினின்று நீங்கினோய் மஹத்துக்கு மஹத்தாயிருக்கின்ற திவ்யபுருஷரை (சிவபிரானை) அடைகின்றான்."

(6) நதீநாம் ஸாகரம் ப்ராப்ய நாமரூபம் நிவர்த்ததே।
தே தத்ர விஜாநந்தி பரஸ்பரவிசேஷணம்।
நசாங்யஜ் ஜாயதே தத்ராப்யுதகஸ்ய விசேஷணம்।
ஜலம் ஸாமுத்ரீமாஸாத்ய நதீ ஹ்ருஷ்டாம்புவாஹிநீ।
க்ஷாரதோயத்துவமாயாதி ப்ரபாவாத்தி மஹோததே:।
ஏவம் வை தேஹபிந்நாத்மா சிவமேவாதிகச்சதி॥

— சிவாகமம்.

"சமுத்திரத்தை அடையுங்கால் நதிகளுக்கு நாமரூபம் நீங்குகின்றது; நதிக்கும் சமுத்திரத்துக்கும் உள்ள விசேஷத்தை எவர்களும் அறிந்திலர்; ஆண்டு இரு ஜலத்துக்கும் வேறாக விசேஷம் தோன்றவில்லை; தூயஜலத்தைக்கொண்டு செல்லும் நதியானது சமுத்திரஜலத்தை அடைந்து உப்புநீரியல்பைச் சமுத்திரத்தின் பிரபாவத்தினாலன்றோ அடைகின்றது; இங்ஙனம் தேகத்துக்கு வேறாயுள்ள ஆன்மாவானது (சிவத்தின் ஆனந்தத்தினால்) சிவத்தை அடைகின்றது."

(7) ஸர்வபாபவிநிர்முக்தோ கருடத்யாநே விஷக்ஷய:।
சிவாநந்தபராத்யாநே ஸ யாதி பரமாம் கதிம்॥

— வாதுளாகமம்.

"கருடதியானத்தினல் விஷம் நீங்குமாறுபோல, சிவானந்த பரப்பிரஹ்மதியானத்தினற் சமஸ்தபாசங்களினின்றும் நீங்கினேனுய் மேலாகிய முத்தியை அடைகின்ருன்."

(8) யதா பச்ய: பச்யதே ருக்மவர்ணம் கர்த்தாரமீசம் புருஷம் ப்ரஹ்மயோநிம்। ததா வித்வான் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி॥

— முண்டகம், ௩. க. ௩.

"எப்போது பார்ப்பவன் (ஆன்மா) பொன்வண்ணரும், கர்த்தாவும், ஈசரும், புருஷருமாகிய சிவபிரானைச் (சிவோஹம்பாவனையினுற்) பார்க்கின்ருனே, அப்போது அந்த வித்துவான் புண்ணிய பாவநீங்கிப் [பரப்பிரஹ்மசிவனுரோடு சாந்தோக்கியம், அ. க. கரு-ம் மந்திரத்திற் கூறப்பட்டவாறு, அபகதபாப்மத்துவாதி (சர்வஞ்ஞதாதி) குணங்களாற்] பரமசாமியத்தை அடைகின்ருன்."

(9) சிவோஹமிதி சிவஸாம்யபாவநாரூபம்।

"சிவோஹம் என்பது (சிவகுணங்கள் ஆன்மாவிற் பதியுமாறு செயப்படும்)* சிவசாமியபாவனுரூபம்" என்று அப்பயதீக்ஷிதர் "சிவார்ச்சஞசந்திரிகை"யிற் கூறினர்.

(10) ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி।

— முண்டகம், ௩. உ, க௦.

"பிரஹ்மத்தை அறிபவன் (சர்வஞ்ஞதை, திருப்தி, அநாதிபோதம், அலுப்தசத்தி, அனந்தசத்தி, சுவதந்திரத்துவம் என்னும் அறுகுணங்களையுடைய) பிரஹ்மமாகவே ஆகின்ருன்." இதனை நீலகண்டசைவபாஷ்யத்து "அவிபாகேநதிருஷ்டத்துவாதிகரண"த்திற் (ச. ச. ச) காண்க."

(11) ப்ரஹ்மைவ ஸந் ப்ரஹ்மாப்யேதி।

—பிருகதாரணியம், ச. ச. சு.

"(பிரஹ்மத்துக்குரிய சர்வஞ்ஞதை திருப்திமுதலிய அறு குணங்களையும் ஆன்மா அடைந்து) பிரஹ்மமாகிப் பிரஹ்மத்தைச் (சிவலோகத்திற் போய்) அடைகின்ருன்."

---

* சிவபெருமானுக்குரிய சர்வஞ்ஞதை (முற்றறிவு) முதலிய குணங்கள் சார்ந்ததின்வண்ணமாமியல்புடைய ஆன்மாவுக்குரிய குணமாம்படி பதிதலால் எய்தும் சிவானந்தமே சிவசாமியபாவனுரூபம்.

(12) அயமாத்மா ப்ரஹ்ம।

— மாண்டூக்கியம், உ.

"இந்த ஆன்மா (சர்வஞ்ஞத்துவாதி ஆறு குணங்களையும் அடைந்து) பிரஹ்மம் (ஆகின்றான்.)

(13) ஸோஹமஸ்மி।

—ஈசாவாசியம், கஎ.

—பிருகதாரணியம், ச. ச. எ.

(சர்வஞ்ஞதைமுதலிய ஆறு குணங்களையுடைய) அவர் (ஆக ஆன்மா ஆகிய) நான் இருக்கின்றேன்."

(14) அஹம் ப்ரஹ்மாஸ்மி।

— பிருகதாரணியம், க. ச. க0.

"நான் (சர்வஞ்ஞதைமுதலிய குணங்களையுடைய) பிரஹ்மமாக இருக்கின்றேன்."

(15) தத் த்வமஸி।

— சாந்தோக்கியம், சூ. அ. எ.

"அது (ஆகச்சர்வஞ்ஞதைமுதலிய குணங்களையுடைய பதியாக) நீ ஆகின்றனை."

* அபகதபாப்மத்துவம், விரஜத்துவம், விம்ருத்யுத்வம், விசோகத்துவம், விஜிகத்ஸத்வம், அபிபாசத்துவம், சத்தியகாமத்துவம், சத்தியசங்கற்பத்துவம் என்னும் எட்டுக் குணங்களும் சாந்தோக்கியத்து அ-வது பிரபாடகத்து, க-ம் கண்டத்து, ரு-ம் மந்திரத்திற் காணப்படுகின்றது. இவ்வெண்குணங்களையும் மேலே கூறிய சர்வஞ்ஞத்துவாதி குணங்களுள்ளே நீலகண்டசிவாசாரியர் "சங்கற்பாதிகரண"த்தில் (ச. ச. சூ) அடக்கிக் கூறினர். ஆண்டுக் காண்க.

(16) அஹமந்நமஹமந்நமஹமந்நம்। அஹமந்நாதோஹமந்நாதோஹமந்நாத:!

—தைத்திரீயம், ௩. க0. சூ.

---

* இவ்வெண்குணங்களையே உத்தரவேதமுடையார்
கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை
என்றருளினர்.

"நான் அன்னம், நான் அன்னம், நான் அன்னம்; அன்னம் புசிப்பவன் யான், அன்னம் புசிப்பவன் யான், அன்னம் புசிப்பவன் யான்" என்றற்றொடக்கத்தவற்றால், போக்கிய போக்தாமுதலிய சமஸ்தப்பிரபஞ்சாத்மகபாவபரிபூரண அஹம்பாவனையானது உபாசகனுக்கு எய்துகின்றது என நீலகண்டசைவபாஷ்யத்து "ஜகத்வியாபாராதிகரண"த்திற் (௪. ௪. ௧௬) கூறப்படுகின்றது.

(17) த்வம் வாஹமஸ்மி பகவோ தேவதே! அஹம்வை த்வமஸி!
"பகவானாகிய தேவரே! நீவிரே நான், நானே நீவிர்" என்று உபாசிப்பவனுக்கு உபாசியராகிய சிவபிரான் வேறாயவழியும் சிவபிரான் தமது ரூபத்தை அவனுக்குக் கொடுத்து அநுக்கிரகின்றார்" என்று "ஆத்துமாதிகரண"த்திற் (௪. ௧. ௩) கூறப்படுகின்றது.

உலகத்திலே மாந்திரிகர் கருடமந்திராப்பியாசத்தினாலே கருடனுடைய அசாதாரணகுணத்தை அடைகின்றனர். ஆகலின், பிரஹ்மாஹம்பாவனை முற்றியபோது பிரஹ்மத்துக்குரிய அசாதாரணகுண அம்சத்தின் விசேஷநிலை உபாசகர்க்கு எய்தும் என்பதில் யாதும் தடையில்லை என்று "பிருகிருதைதாவத்துவாதிகரண"த்திற் (௩. ௨ ௨௪) கூறப்படுகின்றது.

(18) யதா கீடஸ்ய கீடத்வநிவ்ருத்திபூர்வகப்ரமரத்வ ப்ராப்திர் ப்ரமராஹம்பாவஸாத்யா ஏவம் பசோ: பசுத்வ நிவ்ருத்தி பூர்வகநிரஸ்த ஸமஸ்த தோஷ கல்யாணகுணாவிர்பாபரூப சிவத்வப்ராப்தி: சிவாஹம்பாவஸாத்யேதி!

"புழுவானது பிரமர அஹம்பாவனையினால் (வேட்டை வாளி நான் என்னும் பாவனையினால்) தனது கீடத்துவம் (புழுத்தன்மை) நீங்குதல்வாயிலாக வேட்டைவாளியினது இயற்கையை எய்துமாறு போல, பசுவாகிய ஆன்மா சிவோஹம்பாவனையினாற் பசுத்துவநிவிர்த்திபூர்வமாகச் சமஸ்த தோஷங்களும் நீங்கிச் சர்வஞ்ஞத்துவாதி அறுவகைப்பட்ட கலியாணகுணங்களின் ஆவிர்ப்பாவரூபசிவத்துவப்பிராப்தி எய்துகின்றது" என அப்பயதீக்ஷிதர் "சிவார்க்கமணிதீபிகையின்" "ஆத்துமத்துவோபாசனாதிகரண"த்திற் (௪. ௧. ௩) கூறியிருக்கின்றார்."

(19) யதா கருடோ விஷஸம்ஹரணஸாமர்த்யவிசேஷப்ரதாநேந மந்த்ரிணோநுக்ருஹ்ணாதி ததா பரமேச்வர: பசுத்வநிவ்ருத்திரூபபலப்ரதாநேநோபாஸகாநநுக்ருஹ்ணாதி।

"எங்ஙனம் கருடன் விஷத்தை ஒழிக்கும் சாமர்த்தியவிசேஷத்தைக் கொடுத்தலினால் மாந்திரிகரை அநுக்கிரகிக்கின்றதோ, அங்ஙனம் சிவபிரான் பசுத்துவத்தை நீக்கும் பயனைக் கொடுத்தலினால் உபாசகர்களை அநுக்கிரகிக்கின்றார்" எனவும் அப்பயதீக்ஷிதர் "சிவார்க்கமணிதீபிகை" "ஆத்மத்துவோபாசனாதிகரண"த்திற் (௪. ௧. ௨) கூறியிருக்கின்றார்.

(20) யத்ர ஹி த்வைதமிவ பவதி ததிர இதரம் பச்யதி ததிதர இதரம் ஜிக்ரதி ததிதர இதரம் ச்ருணோதி ததிதர இதரமபிவததி ததிதர இதரம் மநுதே ததிதர இதரம் விஜாநாதி யத்ர வா அஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத் கேந கம் ஜிக்ரேத் தத் கேந கம் பச்யேத் தத் கேந கம் ச்ருணுயாத் தத் கேந கமபிவதேத் தத் கேந கம் மந்வீத தத் கேந கம் விஜாநீயாத் யேநேதம் ஸர்வம் விஜாநாதி தம் கேந விஜாநீயாத் விஜ்ஞாதாரமரேகேந விஜாநீயாதிதி।

— பிருகதாரணியம், ௨. ௪. ௧௪.

"எவ்விடத்திலே துவைதம் உளதோ, அங்கே ஒருவன் மற்றொன்றைப் பார்க்கின்றான்; மற்றொன்றை மணக்கின்றான்; மற்றொன்றைக் கேட்கின்றான்; மற்றவனை வாழ்த்துகின்றான்; மற்றவனை அறிகின்றான்; அவனுக்கு எல்லாம் பரமான்மசிவபிரானாகச் (சிவோஹம்பாவனையினால்) ஆயபோது, அவன் (பரமானந்தத்தை அறிதலொழிந்து) மற்றொன்றை மணப்பதெங்ஙனம்? காண்பதெங்ஙனம்? கேட்பதெங்ஙனம்? வாழ்த்துவதெங்ஙனம்? அறிவதெங்ஙனம்? தெரிவதெங்ஙனம்? (மேலே கூறியவாறு) ஈதெல்லாவற்றையும் எவரைக்கொண்டு அறிகின்றானோ, அவனுக்கு அவரையும், அறியும் தன்னையும் எங்ஙனம் பகுத்தறிய முடியும்? (முடியாதென்பதாம்.)"

(21) யத்ர ஹி த்வைதமிவ பவதி ததிதர இதரம் பச்யதி ததிதர இதரம் ஜிக்ரதி ததிதர இதரம் ரஸயதே ததிதர இதரமபிவததி ததிதர இதரம் ச்ருணோதி ததிதர இதரம் மநுதே ததிதர இதரம் ஸ்ப்ருசதி ததிதர இதரம் விஜாநாதி யத்ர

த்வஸ்ய ஸர்வமாத்மைவாபூத் தத் கேந கம் பச்யேத் தத் கேந கம் ஜிக்ரேத் தத் கேந கம் ரஸயேத் தத் கேந கமபிவதேத் தத் கேந கம் ச்ருணுயாத் தத் கேந கம் மந்வீத தத் கேந கம் ஸ்ப்ருசேத் தத் கேந கம் விஜாநீயாத் யேநேதம் ஸர்வம் விஜாநாதி தம் கேந விஜாநீயாத் ஸ ஏஷ நேதி நேத்யாத்மா க்ராஹ்யோ நஹி க்ருஹ்யதேசீர்யோ நஹி சீர்யதேஸங்கோ நஹி ஸஜ்ஜதே சிதோ ந வ்யததே ந ரிஷ்யதி।

—பிருகதாரணியம், ச. ரு. கரு.

"எவ்விடத்திலே துவைதம் உளதோ அங்கே ஒருவன் மற்றொன்றைப் பார்க்கின்றான்; மற்றொன்றை மணக்கின்றான்; மற்றொன்றை உருசிக்கின்றான்; ஒருவன் மற்றொருவனை வாழ்த்துகின்றான்; மற்றொருவன் சொல்வதைக் கேட்கின்றான்; மற்றொன்றைத் தேர்கின்றான்; மற்றொன்றைப் பரிசிக்கின்றான்; மற்றொன்றை அறிகின்றான்; ஆயின் (பிரஹ்ம சிவோஹம்பாவனையினாற் சீவான்மா சிவாணந்தத்தில் அமிழ்ந்திச்) சர்வமும் பரமான்மாவாய் (அடங்கிநின்றபோது), சீவான்மாவாகிய) அவன் மற்றொன்றைப் பார்ப்பதெங்ஙனம்? மற்றொன்றை மணப்பதெங்ஙனம்? மற்றொன்றை உருசிப்பதெங்ஙனம்? மற்றொருவனை வாழ்த்துவதெங்ஙனம்? மற்றொருவன் சொல்வதைக் கேட்பதெங்ஙனம்? மற்றொன்றைத் தொடுவதெங்ஙனம்? மற்றொன்றை அறிவதெங்ஙனம்? ஈதெல்லாவற்றையும் எவரால் அறிகின்றானோ, அவரை அவன் அறிவதெங்ஙனம்? (பரமான்மாவாகிய) அவர் இல்லை இல்லை என்றே சொல்லப்படுவர்; அவர் அக்கிராகியராய்க் கிரகிக்கப்படார் (பற்றப்படார்); அவர் அசீரியராய் சீரியராகார் (அழிவுறார்); அவர் அசங்கராய்ச் சங்கராகார் (தொடக்குண்ணார்;) கட்டுண்ணப்பட்டவராய் வருந்தார்; தவறார்."

(22) ந ச்ருணோதி ந ஜிக்ருஹ்ணாதி ந ரஸ்யதி ந பச்யதி।

—வாதுளாகமம்.

"ஒருவன் (மற்றொன்றைக்) கேட்பானல்லன்; மற்றொன்றை மணப்பானல்லன்; மற்றொன்றை இரசிப்பானல்லன்; மற்றொன்றைக் காண்பானல்லன்."

(23) க்ருஷ்ணதிநாம் ததைக்யபாவநயா ததைச்வர்ய ப்ரகாசநம் த்ருச்யதே। ப்ரஹ்மபாவநாப்யாஸேந சவிச்வாமித்ராகஸ்த்

யாதிநாம் ஸ்வர்க்காந்தரகரணஜலதிகபலநாதி ஸாமர்த்யம்। லோகே ச மந்த்ரிணும் கருடபாவநயா கருடாஸாதாரண தர்மப்ராப்தி:। தஸ்மாத் ப்ரஹ்மாஹந்தாயா: ப்ரௌடபாவே ஸதி ப்ரஹ்மாஸாதாரண தர்மாம்ச வைசிஷ்ட்யமுபாஸகாநாமஸாதாரணமித்யநவத்யம்।

"ஐக்கியபாவனையினாலே கிருஷ்ணர்முதலாயினோர்க்கு அந்த ஜகதீசுவரத்துவம் பிரகாசிக்கின்றது எனக் காணப்படுகின்றது; பிரஹ்மபாவனுப்பியாசத்தினாலேதான் விசுவாமித்திரர் அகஸ்தியர் முதலாயினோர் (முறையே) மற்றோர் உலகத்தைச் சிருஷ்டித்தல், சமுத்திரத்தைக் கபளீகரித்தன்முதலிய செய்கைகளைச் செய்யச் சாமர்த்தியமுடையராகின்றனர்; உலகத்திலே மாந்திரிகர் கருடமந்திராப்பியாசத்தினாலே கருடனுடைய அசாதாரணகுணத்தை அடைகின்றனர்; ஆகலின், பிரஹ்மாஹம்பாவனை முற்றியபோது பிரஹ்மத்துக்குரிய அசாதாரணகுண அம்சத்தின் விசேஷநிலை உபாசகர்களுக்கு எய்தும் என்பதில் யாதும் தடையில்லை" என்று வேதாந்தசூத்திரசைவபாஷ்யத்து ௩-ம் அத்தியாயத்து ௨-ம் பாதத்து ௨௪-ம் சூத்திரபாஷ்யத்திற் கூறப்படுகின்றது.

(24) த்யாயங் கருடதாம் யத்வத் குரு நிர்விஷதாபலம்। ப்ராப்நோதி தத்வதத்ராபி பலமிஷ்டமவாப்நுயாத்॥

"கருடமந்திரத்தைத் தியானிப்பவன் பெரிதாகிய விஷமில்லாமை என்னும் பயனை அடைகின்றானே, அங்ஙனம் இங்கும் (சிவத்தியானவிஷயத்தில்) தன்னால் இச்சிக்கப்பட்ட பயனைப் பெறுவான்" என்று காமிகாகமத்து அர்ச்சனாவிதிப்படலத்து ௧௩0-ம் சுலோகத்திற் கூறப்படுகின்றது.

## பதின்மூன்றாவது

# அண்டபிண்டோபாசனாப்பிரகரணம்

[இப்பிரகரணம் சிவஞானபோத சிவஞானசித்தியார் ஒன்பதாம் பத்தாஞ் சூத்திரங்களில் கூறப்பட்ட அண்டபிண்டோபாசனையாகிய ஞானயோகத்தை உபநிடதநெறியால் உணர்த்துகின்றது.]

### (க) பிண்டத்தில் வழிபடுமாறு.

(1) அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி।
ஈசாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே॥

— கடம், ௪. கஉ.

"அங்குஷ்டப்பிரமாணத்தினராய்ப் புருஷர் (சிவபிரான்) இதயமத்தியில் நிற்பாராயினர்; இவர் இறந்தகால எதிர்காலத்துக்கும் ஈசானர் (தாண்டவேசுவரர்); ஆகலின் எவர்க்கும் அஞ்சுவாரல்லர்."

(2) அங்குஷ்டமாத்ர: புருஷோ ஜ்யோதிரிவாதூமக:। ஈசாநோ பூதபவ்யஸ்ய ஸ ஏவாத்ய ஸ உச்வ:॥

— கடம், ௪. கங.

"இறப்பு எதிர்விலுள்ள பொருள்களுக்குப் புருஷர் (தாண்டவேசுவரர்) புகையில்லாத சோதிபோல இன்றும் நாளையும் இருக்கின்றார்."

(3) ஊர்த்வம் ப்ராணமுந்நயத்யபாநம் ப்ரத்யகஸ்யதி। மத்யே வாமநமாஸீநம் விச்வே தேவா உபாஸதே॥

— கடம், ரு. ங.

"பிராணவாயுவை மேலே உந்துகின்றார்; அபானவாயுவைக் கீழே உந்துகின்றார்; மத்தியிலே உள்ள அங்குஷ்ட அளவினரை (தாண்டவேசுவரரை) சமஸ்த தேவர்களும் உபாசிக்கின்றார்கள்."

(4) அங்குஷ்டமாத்ர: புருஷோந்தராத்மா ஸதாஜநாநாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட:। தம் ஸ்வாச் சரீராத் ப்ரவ்ருஹேந்முஞ்ஜாதிவேஷிகாம் தைர்யேண। தம் வித்யாச் சுக்ரமம்ருதம் தம் வித்யாச் சுக்ரமம்ருதம்॥

— கடம், சு. கஎ.

"(தகரபுண்டரீகத்திற் கிடத்தலாற்) புருஷர் (எனப்படும் தாண்டவேசுவரர்) எஞ்ஞான்றும் ஜனங்களுக்கு அந்தரியாமியாய் (அவர்கள்) இதயத்திலே அங்குஷ்ட அளவினராய் இருக்கின்றார்; நாணற்புல்லுள் இருக்கும் சோற்றியை வேறாக அறிவதுபோல, (தமக்குச் சரீரமாகிய) ஆன்மாவுக்கு வேறாகப் புருஷரைத் (தாண்டவேசுவரரைத்) தைரியத்தினால் (அறிவினால்) வேறாய் அறிக; அந்தப் பரமான்மாவைத் தூயதென்றும் சிவபிரான் என்றும் அறிக; அந்தப் பரமான்மாவைத் தூயதென்றும் சிவபிரான் என்றும் அறிக."

(5) அங்குஷ்டமாத்ர: புருஷோந்தராத்மா ஸதா ஜநாநாம் ஹ்ருதயே ஸந்நிவிஷ்ட:। ஹ்ருதா மநீசா மநஸாபிக்லுப்தோ ய ஏதத் விதுரம்ருதாஸ்தே பவந்தி॥

— சுவேதாசுவதரம், ௩. ௧௩.

"(இதயபுண்டரீகத்துள்ள) புருஷர் (தாண்டவேசுவரர்) அங்குஷ்டப்பிரமாணமாத்திரமுடையர்; அந்தரியாமியாய் எக்காலமும் ஆன்மாக்களுடைய இதயத்தில் வசிப்பவர்; (அவர்) ஹ்ருத் மனஸ் (எனப்படும் அருட்)சத்தியினால் உணரப்படுகின்ற ஞானேசர் அவரை (உள்ளக்கண்ணினால்) உணர்ந்தவர்கள் முக்தராகின்றார்கள்."

(6) அங்குஷ்டமாத்ர: புருஷோ ஜ்யோதிரிவாதூமக:। ஈசாநோ பூதபவ்யஸ்ய ஸ ஏவாத்ய ஸ உ.ச்வ:॥

— தைத்திரீய ஆரணியகம்.

"இறந்தகாலம் எதிர்காலம் என்பவற்றிலுள்ள எப்பொருள்களுக்கும் ஈசானராகிய(தாண்டவேசுவரராகிய) புருஷர் புகையில்லாத சோதிபோல இன்றும் நாளையும் இருக்கின்றார்."

(7) ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்।

— தைத்திரீய ஆரணியகம், ௩. ௧௨. ௨௦.

"இருளுக்குமேலே ஆதித்தியவண்ணராகிய சிவபிரானே."

(8) அங்குஷ்டமாத்ரோ ரவிதுல்யரூப: ஸங்கல்பாஹங்காரஸமந்விதோய:। புத்தேர் குணேநாத்மகுணேநசைவ ஆராக்ரமாத்ரோபரோபி த்ருஷ்ட:॥

— சுவேதாசுவதரம், ரு. அ.

"அங்குஷ்ட அளவினனாய், சீவான்மா † சூரியனை ஒத்த (ஒளி) யுருவனாய், சங்கற்ப அகங்காரங்களோடியைந்தவனாய், புத்தி குணங்களோடும் சரீரகுணங்களோடும் (இயைந்து) ஆரத்தின் நுனிப்பிரமாணத்தனாய், சிறியனாய்க் காணப்படுகின்றான்."

(9) யஸ்யாத்மா சரீரம்।
ய ஆத்மநி திஷ்டந்।

—மத்தியந்தினசாகை.

"எவருக்கு (சிவபிரானுக்கு) ஜீவான்மா சரீரம்; எவர் (சிவபிரான்) ஆன்மாவில் உள்ளார்."

(10) யஸ்ய விஜ்ஞாநம் சரீரம்।
யோ விஜ்ஞாநே திஷ்டந்।

—கண்ணுவசாகை.

"எவர்க்குச் (சிவபிரானுக்கு) ஜீவான்மா சரீரம்; எவர் (சிவபிரான்) ஜீவான்மாவில் உளர்."

(11) அங்குஷ்டமாத்ர: புருஷோங்குஷ்டஞ்ச ஸமாச்ரித:। ஈச: ஸர்வஸ்ய ஜகத: ப்ரபு: ப்ரீணாதி விச்வபுக்॥

—தைத்திரீய ஆரணியகம், ௧௦. ௭௧. ௬௨.

"அங்குஷ்ட அளவினராகிய புருஷராம் சிவபிரான் (அ-ம் பிரிவிற் கண்ட அளவினனாகிய) ஜீவான்மாவைப் பற்றிக்கொண்டுளர்; சமஸ்த ஜகத்துக்கும் பிரபுவும், விசுவத்தைக் கபளீகரிப்பவருமாகிய ஈசர் (சிவபிரான்) மகிழ்கின்றார்."

இவற்றாற் சிவபிரான் உயிர்க்கு உயிராதல் பெறப்பட்டது.

(12) அவஸ்திதேரிதி காசக்ருத்ஸ்ந:।

— வேதாந்தசூத்திரம், ௧. ௪. ௨௨.

"(சிவபிரான் ஆன்மாவில்) உறுதியாய் வசிக்கின்றமையின் எனக் காசகிருத்சினர் (கூறுகின்றார்.)"

உபாசகர்பொருட்டு அங்குஷ்ட அளவினராகவும், ஆதித்தியனைப் போலச் செவ்வண்ணராகவும் சிவபிரான் (தாண்டவேசுவரர்) கூறப்படுகின்றார்; இவர் ஜீவான்மாவைத் தமக்குச் சரீர

† சீவான்மா ஆதித்தியவண்ணமாதற்குக் காரணம் இப்பிரகரணத்து ௬௨-ம் பிரிவின் கீழ்க் காண்க.

மாகக்கொண்டமையின், ஜீவான்மாவும் ஆதித்தியனைப் போலச் சேவ்வண்ணமாயிற்று. மாணிக்கத்தைச் சார்ந்த படிகமும் மாணிக்கமாதல்போல, சிவபிரானைத் தனக்கு உயிராகக்கொண்ட ஆன்மாவும் ஆதித்தியனைப்போலச் செவ்வண்ணமாயிற்று. ஒரு படி ஜலமும் ஒரு படி இலவணமுஞ் சேர்ந்தவிடத்து இரண்டு படி ஆகாது, ஜலத்தின் ஒரு படியையே இலவணமானது கொண்டாற்போல, ஜீவான்மாவின் அங்குஷ்டப்பிரமாணமும் சிவபிரானது (தாண்டவேசுவரரது) அங்குஷ்டப் பிரமாணத்தையே பிரமாணமாகக் கொண்டது.

ஸ்தூல சூக்குமதேகம் இரண்டையும் பிரகாசிப்பித்தலால் ஜீவான்மா ஆதித்தியவண்ணமுடையதெனல் பொருத்தமன்று.

(13) அதவா பரமாத்மாநம் பரமாநந்த விக்ரஹம்। குருபதேசாத் விஜ்ஞேயம் புருஷம் கிருஷ்ணபிங்களம்। ப்ரஹ்ம ப்ரஹ்ம புரே கார்க்கி தஹராப்ஜ கமத்யமே। அப்யாஸாத் ஸம்ப்ர பச்யந்தி ஸந்தஸ் த்வஞ்ச ததா குரு॥

— யோகயாஞ்ஞவற்கியம், தியானத்தியாயம்.

"இன்றேற் பரமானந்தவிக்கிரகரும், புருஷரும், கிருஷ்ணபிங்களருமாகிய பரப்பிரஹ்மசிவபிரானரை (தாண்டவேசுவரரை) குருவுபதேசத்தினலே அப்பியசித்து, கார்க்கியே! பெரியோர் பிரஹ்மபுரத்துத் தகரபுண்டரீகத்துச் (சிதம்பர) ஆகாயமத்தியிலே காண்கின்றனர்; நீயும் அங்ஙனஞ் செய்."

இந்த ஆகாயமத்தியிலுள்ள தாண்டவேசுவரர் செந்நிறத்தினராயும், பராசத்தியாராகிய ஆதிசத்தியார் பச்சைத் திருமேனியினராயுமிருத்தலினற் கிருஷ்ணபிங்களர் எனக் கூறப்பட்டது.

(14) ஈசாநோ பூதபவ்யஸ்ய।

— கடம், ச. கஉ.

"இறந்தகால எதிர்காலத்துக்கு ஈசானர் (தாண்டவேசுவரர்)" என்னும் சுருதியை ஆதாரமாகக்கொண்ட

(15) சப்தாதேவ ப்ரமித:।

"(கடவல்லிச்) சுருதிபற்றியே (அவர் அங்குஷ்ட அளவினராக) அளக்கப்பட்டனர்" என்று பிரமிதாதிகரணத்திற் (க. ங. உங) கூறப்பட்டுள்ளது. இதுபற்றியே சிவதத்துவவிவேகம்

பிறநய மாகும் புருடனங் குட்டப் பிரமிதி தனைவிரும் பா
ம, லரவனை யுனதி சானநற் சுருதி யாற்பர மென்றுநிச் சயித்
தோன், செறியும்வே தாந்தப் பொருளினைத் தெரிக்குஞ் சூத்தி
ரஞ் செய்தவன் கருத்து, மிறைவநின் பெருமை கண்டதே யாகு
மென்பரா லாயவல்லவரே.

என்று கூறுகின்றது. இப்பிரகரணத்து க-ம் பிரிவிற் கூறப்பட்ட
ஈசானரை மகுடாகமமானது (எசு-ம் பக்கத்து உகூகூ-ம் பிரிவுப்
பிரகாரம்) ஐம்முகமுடையர், பத்துப்புயமுடையர், இரண்டுபோத
முடையர், விருத்தமத்தியிலுள்ளார், அங்குஷ்ட அளவினர் எனக்
கூறுகின்றது.

(16) பார்த்திவம் ஸகலம் கந்தோ பவத்யாபோபிஷேசநம்। தா
ஏவ பாநநைவேத்யஸ் தேஜஸம் தீபமாலிகா। வாயவ்யம்
தாலவ்ருந்தாத்யம் காநாத்யம் வ்யோமஸம்பவம்॥

— காமிகம், நான்காவது அர்ச்சனாவிதிப்படலம்.

பிருதிவி பீஜத்தை உச்சரித்துப் பிருதிவிக்குரிய கந்தம், புஷ்பம்,
கந்தமூலம், பழமுதலியகொண்டும்; அப்புபீஜத்தை உச்சரித்து
அப்புவுக்குரிய ஜலம், பால், வஸ்திரம், தயிர் கோசலமுதலிய
கொண்டும்; அக்கினிபீஜத்தை உச்சரித்து அக்கினிக்குரிய சுவர்
ணம், இரத்தினம், தீபம், ஆபரணமுதலியகொண்டும்; வாயுபீஜ
த்தை உச்சரித்து வாயுவுக்குரிய சாமரம், தூபம், விசிறி; ஆல
வட்டமுதலியகொண்டும்; ஆகாயபீஜத்தை உச்சரித்து ஆகாயத்
துக்குரிய கானத்தோடியைந்த வாத்தியம், வீணை, வேய்ங்குழல்
முதலியகொண்டும் தாண்டவேசுவரரை மானசிகமாக உபசரிக்க.

ஆனந்ததாண்டவேசுவரர்க்கு மகுடாகமவிதிப்படி முன்வரும்
பரமானந்தார்ச்சனையை மானசமாகச்செய்க.

(17) ஆநந்தபரமாநந்தபராநந்தாத்மநேபிச।
சிவாநந்தசுகாநந்தசக்த்யாநந்தாத்மநேபிச।
பக்த்யாநந்தகுணாநந்தநாதாநந்தாத்மநேபிச।
பூதாநந்தாம்ருதாநந்த ஸ்வஸ்த்யாநந்தாத்மநேபிச।
ஜ்ஞேயாநந்தபவாநந்தஜ்ஞாநாநந்தாத்மநேபிச।
சராநந்தாசராநந்தஜலாநந்தாத்மநேபிச।
குஹ்யாநந்தபலாநந்தரஸாநந்தாத்மநேபிச।
ஸோமாநந்தஸூர்யாநந்ததிவ்யாநந்தாத்மநேபிச।

ஜ்யோத்ஸ்நாநந்தசுபாநந்தபோதாநந்தாத்மநேபிச।
ந்ருத்யாநந்தஸதாநந்தப்ருஹ்மாநந்தாத்மநேபிச।
இத்யாதிஸ்வயம்ப்ரகாசமத்யஸ்தம் பரம்ந்ருத்தமநுஸ்மரந்।
அஷ்டத்ரிம்சத்பராநந்தாத்மமந்த்ரம் நமோந்தகம்।
ப்ருதக் ப்ருதக் ஸக்ருஜ்ஜப்த்வா பூஜயேத் தக்ஷிணேச்வரம்॥

1. ஆனந்தாத்மநேநம:।
2. பரமானந்தாத்மநேம:।
3. பராநந்தாத்மநேநம:।
4. சிவாநந்தாத்மநேநம:।
5. சுகாநந்தாத்மநேநம:।
6. சக்த்யாநந்தாத்மநேநமா:।
7. பத்யாநந்தாத்மநேம:।
8. குணாநந்தாத்மநேநம:।
9. நாதாநந்தாத்மநேநம:।
10. பூதாநந்தாத்மநேநம:।
11. அம்ருதாநந்தாத்மநேநம:।
12. ஸ்வஸ்த்யாநந்தாத்மநேநம:।
13. ஜ்ஞேயாநந்தாத்மநேநம:।
14. பவாநந்தாத்மநேநம:।
15. ஜ்ஞாநாநந்தாத்மநேநம:।
16. சராநந்தாத்மநேநம:।
17. அசராநந்தாத்மநேநம:।
18. ஜலாநந்தாத்மநேநம:।
19. குஹ்யாநந்தாத்மநேநம:।
20. பலாநந்தாத்மநேநம:।
21. ரஸாநந்தாத்மநேநம:।
22. ஸோமாநந்தாத்மநேநம:।
23. சூர்யாநந்தாத்மநேநம:।
24. திவ்யாநந்தாத்மநேநம:।
25. ஜ்யோத்ஸ்நாநந்தாத்மநேநம:।
26. சுபாநந்தாத்மநேநம:।
27. போதாநந்தாத்மநேநம:।
28. ந்ருத்தாநந்தாத்மநேநம:।
29. ஸதாநந்தாத்மநேநம:।
30. ப்ரஹ்மாநந்தாத்மநேநம:।

பரமானந்தார்ச்சனை முப்பத்தெட்டனுள் முப்பதுதான் கிடைத்தன. இவற்றைக்கொண்டு பூஜிக்க.

ஆசனம், பாத்யம், அர்க்கியம், ஆசமனம், ஸ்நானம், வஸ்திரம், உபவீதம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம், முகவாசம், ஸ்தோத்திரம், நமஸ்காரம், பிரதக்ஷிணம் என்னும் ஷோடசோபசாரங்கள் கொண்டு வழிபடுக.

## (உ) அண்டத்தில் வழிபடுமாறு.

பிருதிவிமுதலிய முப்பத்தாறு தத்துவங்களின் தொகையும் அவற்றின் விரிவும் பிரமாணங்களோடு இப்புஸ்தகத்து எ௫-ம் பிரிவுமுதலியவைகளிற் காணப்படுகின்றன.

அவர் அணுவுக்கு அணுவாயும், பெரிதுக்குப் பெரிதாயும் நிற்குநிலையை (தாண்டவேசுவரபதிப்பிரகாணத்து கூகூ-ம் பிரிவு

முதலியவைகளிற் கண்டவாறு) கடோபநிடதம், ௨. ௨0-னும்;) சுவேதாசுவதரம், ௩. ௨0-னும்; கைவல்லியம் ௨0-னும்; தைத்திரீய ஆரணியகம், க0. கஉ. க-னுங் காண்க. (௨0௨-ம் பக்கத்து அஅ-ம் பிரிவிற் கண்டவாறு பிண்டத்திலே ஆன்மாவில் *(அருட் பராசத்தியோடு) பரமான்மாவாகிய தாண்டவேசுவரசிவபிரானை (கக-ம், கஉ-ம், க௩-ம் பிரிவுகளிற் சொல்லப்பட்டவாறு) கண்டு, "பின்னர்த் (அண்டத்திலே) தனக்குப் பரமான்மாவாயுள்ளவரிலேதானே உலகமனைத்தும் இருப்பனவாக நோக்க" வேண்டுமென்று (அத்தியாசிரம) பாசுபதயோகம் மூன்றுவதுபாவனையாகக் காட்டப்பட்டுள்ளது.

(18) யஸ்து ஸர்வாணி பூதாந்யாத்மந்யேவாநுபச்யதி।
ஸர்வபூதேஷுசாத்மாநம் ததோ ந விஜுகுப்ஸதே॥

— ஈசாவாசியம், ௬.

"(தியானயோகியானவன்) சமஸ்த (சேதனுசேதனப்) பொருள்களைப் பரமான்மசிவபிரானிலும், சமஸ்த சேதனுசேதனப் பிரபஞ்சத்துள்ளே பரமான்மாவும் (சிவபிரானும்) இருப்பதாகப் பார்க்கின்றனே, அவன் எவற்றையும் அவமதிப்பானலலன்."

(19) யஸ்மிந் ஸர்வாணி பூதாந்யாத்மைவாபூத் விஜாநத:।
தத்ர கோ மோஹ: க: சோக ஏகத்வமநுபச்யத:॥

— ஈசாவாசியோபநிடதம், எ.

(தியான)யோகிக்கு எந்தப் (பரமான்மாவிலுள்ள) சமஸ்த (சேதனுசேதனப்) பிரபஞ்சமும் பரமான்மசிவபிரானுக இருந்தன; அனன்னியமாய்ப் பார்ப்பவனுக்கு அதில் மோகம் ஏது? சோகம் ஏது?"

(20) ஸர்வபூதஸ்தமாத்மாநம் ஸர்பூதாநி சாத்மநி।

— கைவல்லியம்.

"சமஸ்த (சேதனுசேதனப்) பிரபஞ்சத்திலே பரமான்மா (சிவபிரான்) இருப்பதாகவும், பரமான்மாவிலே (சிவபிரானிலே) சமஸ்த (சேதனுசேதனப்) பிரபஞ்சம் இருப்பதாகவும் பார்க்க."

* க௩-ம் பிரிவிற் கூறப்பட்ட பச்சைத் திருமேனியினராகிய பராசத்தியின் மேற்று.

(21) பூதேஷு பூதேஷு விசிந்த்ய தீர: ப்ரேத்யஸ்மால் லோகா தம்ருதா பவந்தி

— கேனம், கரு.

"சமஸ்தப்பிரபஞ்சங்கடோறும் அறிஞர்கள் (தியானயோகிகள்) சிவபரம்பொருளைச் சிந்தித்துணர்ந்து, இவ்வுலகத்தை விட்ட பின்னர்ச் சிவலோகத்திற் சிவராகின்றார்."

அணுவுக்கு அணுவாயும் மகத்துக்கு மகத்தாயுமுள்ளார் என்ற சுருதிகளைத் தொடர்ந்து திருவிசைப்பாவும் "அண்டமோரணுவாம் பெருமைகொண்டணுவோ ரண்டமாஞ்சிறுமை கொண்டு" என்றும், பெரியபுராணமும் "நிகரிலாமேருவரை யணுவாகநீண்டானை நுகர்கின்றதொண்டர்தமக்கமுதாகிநொய்யானை" என்றும் கூறுகின்றன.

சிவஞானசித்தியார் அ-ஞ் சூத்திரத்து "இந்நிலைதானில்லையேல்" என்ற செய்யுளிற் கண்டவாறு, அறிவைக்குவித்துத் தாண்டவேசுவார் பிண்டத்து நிற்குநிலையை அறிந்தும், பின்னர்த் தமது அறிவை விரித்து எல்லாமீசனிடத்தினு மீசனெல்லாவிடத்தினுநின்ற அந்நிலையை அறியுமுகத்தால், தாண்டவேசுவரர் அண்டத்துநின்ற நிலையை அறிந்தும், (எனவே), "† விரிந்தும் குவிந்தும் விழுங்குவர்கள்" என மேலே திருவிசைப்பாவிற் கூறப்பட்ட சிவக்கனியை விழுங்குவர்கள். அத்தியாசிரம (பாசுபத) அண்டபிண்டோபாசனைக்குச் சிரத்தை பக்திமுதலியன இன்றியமையாது வேண்டப்படும். அது

(22) ச்ரத்தா பக்தி த்யாநயோகாதவைஹி

— கைவல்லியோபநிடதம்.

என்னுஞ் சுருதியினால் அறியப்படும்.

---

† திருக்களிற்றுப்படியார்

## பதினைந்காவது

# பரப்பிரஹ்மசிவலோகப்பிரகரணம்



[இப்பிரகரணமானது ஜீவான்மா சிவோபாசனை சிவோஹம்பாவனை செய்தபின்னர்ச் சிவசாரூப்பியமுற்றுத் தாண்டவேசுவர பரப்பிரஹ்ம சிவலோகத்தை அடையுமாறு கூறுகின்றது.]

(1) பரமோ யோகபர்யந்தோ தர்ம: ச்ருதி சிரோகத:।

"(தியான) யோகபரியந்தமாகிய பரதருமமானது **வேதசிரசிலே** (உபநிடதத்திலே) அமைந்தது" என்று உபப்பிருங்கணம் கூறலின், முக்தர்கள் அடையும் ஸ்தானம் புநராவர்த்திகொடாத தாண்டவேசுவரபரப்பிரமசிவலோகமேயாம்.

(2) யோகாமோ நிஷ்காம ஆப்தகாம ஆத்மகாமோ ந தஸ்ய ப்ராணா உத்க்ராமந்தி ப்ரஹ்மைவஸந் ப்ரமாப்யேதி।

— பிருகதாரணியம், ச. ச. சு.

"எவன் அகாமனாய் (விரும்பாதவனாய்), நிஷ்காமனாய் (விருப்பத்தினின்று நீங்கினவனாய்), தன் விருப்பங்களிற்றிருப்தியுற்றவனாய், ஆப்தகாமனாய், ஆன்மாவைச் (சிவபிரானை) விரும்புகின்றானாயுள்ள † அவனினின்று பிராணன்கள் உற்கிரமிப்பதில்லை; (பரப்) பிரஹ்ம (சிவசாமிய) மாகிப் (பரப்பிரஹ்ம) சிவனைச்(சிவலோகத்திற்) போய் அடைகின்றான்."

இங்கே "பரப்பிரஹ்மசிவனைப் போய் அடைகின்றான்" என்றமையால், முக்தன் சிவலோகத்துக்குப்போதல் பெறப்பட்டது.

(3) ஏவமேவைஷ ஸம்ப்ரஸாதோஸ்மாச் சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே।

— சாந்தோக்கியம், அ. கஉ. ங.

"இங்ஙனம் இந்த ஜீவான்மா இந்தச் சரீரத்தினின்று நீங்கிச் சிவபரஞ்சோதியை அடைந்து தன் சொரூபத்தோடு ஆவிர்ப்பவிக்கின்றான்."

---

‡ ஆரும் வேற்றுமையை ஐந்தாம் வேற்றுமைப்பொருளிற் கொண்டமை நீலகண்டசைவபாஷ்யத்து ௫00-ம் சூத்திரபாஷ்யத்துள்ள மாத்தியந்தினசாகாமந்திரங் கொண்டேயாம்.

இதனாற் பரஞ்சோதிரூபமாகிய மகாப்பிரகாசபரப்பிரஹ்மத்தை அடைந்தவனுக்குச் சொரூபாவிர்ப்பாவம் பிரஹ்மலோகத்தில் எய்துவதாகக் கூறப்படுகின்றது.

(4) ஸ ஆகச்சதி வ்ரஜாம் நதீம் தாம் மநஸாத்யேதி தத்ர சுக்ருதது ஷ்க்ருதே விதூநுதே।

— கௌஷீதகிப்பிராஹ்மணம், க. ச.

"அவன் விரஜாநதியை அடைந்து, அருட்சத்தியினால் அதனைக் கடந்து அங்கே தனது புண்ணியபாவங்களை உதறுகின்றான்."

(5) தஸ்ய தாவதேவ சிரம் யாவந்ந விமோக்ஷ்யேத ஸம்பத்ஸ்யே।

— சாந்தோக்கியம், சூ. கச. உ.

"(அவன் புண்ணியபாவங்களினின்று) விடுபடாதவரையில் அவனுக்கு அங்கே (விரஜாநதியிலே) தாமசமே; அவன்பின்னர்ச் சிவப்பிரஹ்ம சம்பன்னனாகின்றான்."

(6) அச்வ இவ ரோமாணி விதூய பாபம்......தூத்வா சரீரம்।

— சாந்தோக்கியம், அ. கங. க.

"குதிரை (தன்) ரோமங்களை உதறுவதுபோல, பாவமனைத்தையும் உதறிப் பின்னர்த் தன் சரீரத்தை உதறுகின்றான்."

(7) பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே।

— சாந்தோக்கியம், அ. கஉ. ங.

"பரஞ்சோதியோடிசைந்து தனது ரூபத்தை அடைகின்றான்."

(8) ஸோத்வந: பாரமாப்நோதி தத் விஷ்ணோ: பரமம் பதம்।

— கடம், ங. கூ.

"அவன் அத்துவாவின் கரைக்கண்ணதாகிய சிவபிரானுடைய அந்தப் (பரமாகாய) பரமபதத்தை அடைகின்றான்"

விஷ்ணுபதசம்பந்தமாகிய விரஜாநதிதான் பிராகிருத பிரபஞ்ச எல்லை ஆகும். நதியைக் கடக்கும்போது புண்ணியபாவங்களாகிய சமஸ்தகன்மங்களினின்றும் நீங்கிய யோகிகள் வைகுண்டபதத்தைக் கடந்து, ஷடத்துவாதீதமாகிய பரமானந்தமய தாண்டவேசுவர பரப்பிரஹ்மசிவலோகத்தைப் பிரவேசிக்கின்றார்கள்.

(9) தேர்ச்சிஷமபிஸம்பவந்த்யர்ச்சிஷோ ஹரஹ்ந ஆபூர்யமாண பக்ஷமாபூர்யமாணபக்ஷாத்யாந் ஷடுதங்ஙேதிமாஸாந் தாந் மாஸேப்ய: ஸம்வத்ஸரம் ஸம்வத்ஸராதாதித்யமாதித்யாச் சந்த்ரமஸஞ்சந்த்ரமஸோ வித்யுதம்தத்புருஷோமாநவ: ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி!

—சாந்தோக்கியம், ரு. ௧0. ௧, ௨.

"அவர்கள் ஒளியை அடைந்து, ஒளியிலிருந்து பகலுக்கும், பகலிலிருந்து பூருவபக்ஷத்துக்கும், பூருவபக்ஷத்திலிருந்து உத்தராயணத்துக்கும், உத்தராயணத்திலிருந்து வருஷத்துக்கும், வருஷத்திலிருந்து சூரியனுக்கும், சூர்யனிலிருந்து சந்திரனுக்கும், சந்திரனிலிருந்து மின்னலுக்கும் போகின்றார்கள்; அங்கே இருக்கும் ஓர் அமானவன் இவர்களைப் (பரப்பிரஹ்மசிவ * லோகத்துச்) சிவபிரானிடத்துக்கு வழிகாட்டுகின்றான்."

இம்மந்திரத்தினும் யோகிகள் பரப்பிரஹ்ம சிவலோகத்தை அடைதல் கூறப்பட்டது.

(10) ஆப்நோதி ஸ்வாராஜ்யமாப்நோதி மநஸஸ்பதிம்!

— தைத்திரீயம், ௧. ௬.

"அவன் (யோகி) சுவர்க்கலோக (சிவலோக) ராச்சியத்தை அடைகின்றான்; அவன் உமைக்குப் பதியாயினாரை அடைகின்றான்."

(11) ஸ்வர்க்கோ லோகோ ஜ்யோதிஷாவ்ருதம்!

— தைத்திரீய ஆரணியகம், ௧. ௨௭. ௧௧௬.

"சுவர்க்கலோகம் (சிவலோகம்) சோதியினாற் சூழப்பட்டது."

(12) வாக்பதி: சக்ஷுஷ்பதி: ச்ரோத்ரபதிர் விஜ்ஞாநபதி:!

— தைத்திரீயம், ௧. ௬. ௨.

"வாக்குக்குப் பதி, கண்ணுக்குப் பதி, காதுக்குப் பதி, ஞானத்துக்குப் பதி."

இம்மந்திரத்தினால், முக்தன் அப்பிராகிருதமாய விசுத்த வாக்கிந்திரியமுதலியவைகளையுடையனாதல் பெறப்பட்டது.

* இம்மந்திரவிஷயம் ஆன்மப்பிரகரணத்து ருக-ம் பிரிவு முதலியவைகளோடு இயைந்து நிற்றலைக் கவனிக்க.

(13) ஸ்திரேபிரங்கை: புருரூப உக்ர:।

—இருக்குவேதம், உ. ௩௩. ௯.

"சிவபிரான் ஸ்திரமாகிய அங்கங்களோடு பல ரூபமுடையர்."

இம்மந்திரத்தினல் முக்தன் சிவசாரூப்பியமுற்றமையாற் சிவபிரானைப்போல ஸ்திரமாகிய * விசுத்த அங்கங்களையுடைய னுதல் பெறப்பட்டது.

(14) ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி பஞ்சதா ஸப்ததா நவதா சைவ புநச்சேகாதச ஸ்ம்ருத: சதஞ்ச தச சைகச்ச ஸஹஸ்ராணி ச விம்சதி:।

— சாந்தோக்கியம், எ. உ௬. உ.

"அவன் (முக்தன்) ஒரு பிரகாரம் ஆகின்ருன்; மூன்று பிரகாரம் ஆகின்ருன்; ஐந்து பிரகாரமாயும், ஏழு பிரகாரமாயும், ஒன்பது பிரகாரமாயும், பின் பதிஞெரு பிரகாரமாயும், நூறும் பத்தும் ஓராயிரத்திருபது (பிரகாரமாயும் ஆகின்ருன் என) எண்ணப் படுகின்ருன்."

இம்மந்திரத்தினல் முக்தன் சுவேச்சையாக அநேக சரீரங்கள் எடுக்கின்ருன் எனப் பெறப்படுகின்றது.

(15) ஸ யதி பித்ருலோககாமோ பவதி ஸங்கல்பாதேவாஸ்ய பிதரஸ் ஸமுத்திஷ்டந்தி।

—சாந்தோக்கியம், அ. உ. க.

"அவன் (முக்தன்) பிதிர்லோகத்தை விரும்பினல், அவனது சங்கற்பமாத்திரத்தினலே பிதிர்கள் அவனை எதிர்கொள்ளுமாறு எழுந்திருக்கின்ருர்கள்."

(16) ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி।

—சாந்தோக்கியம், எ. உ௫. உ.

"(முக்தன்) உலகமனைத்தினும் விரும்பியவாறு சரிக்கின்ருன்."

(17) ஸ தத்ர பர்யேதி ஜக்ஷந் க்ரீடந் ரமமாண: ஸ்திரீபிர் வா யாநைர் வா ஜ்ஞாதிபிர் வா।

—சாந்தோக்கியம், அ. க௨. ௩.

---

* இதனையுற்று வேதாந்தசூத்திர சைவபாஷ்யத்துப் பூமாதிகரணத்தினும் (க. ௩. அ), ஜகத்வியாபாராதிகரணத்தினும் (௪. ௪. ௨௨) காண்க.

"அவன் (முக்தன்) பெண்களோடாயினும், யானங்களோடாயினும், ஞாதிகளோடாயினும் உண்டு, களித்து, ரமித்து அங்கே சஞ்சரிக்கின்றான்."

(18) ஸ ஸர்வாஞ்ச லோகாநாப்நோதி ஸர்வாஞ்ச காமாந் யஸ்த மாத்மாநமநுவித்ய விஜாநாதி।

—சாந்தோக்கியம், அ. கஉ. சு.

"அந்த ஆன்மாவை (சிவபிரானை) அறிந்து, (அநுபவத்தில்) உணர்ந்தவன் எவனோ, அவன் சமஸ்த லோகங்களையும் சமஸ்த போகங்களையும் அடைகின்றான்."

(19) ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா।

—தைத்திரீயம், உ. க.

"சர்வஞ்ஞராகிய (பரப்) பிரஹ்ம (சிவனோரோடு) சமஸ்த போகங்களையும் துய்க்கின்றான்."

(20) இமாந் லோகாந் காமாந்நீ காமரூப்ய நுஸஞ்சரந்।

—தைத்திரீயம், ங. கO. ரு.

"(முக்தன்) வேண்டிய வடிவங்களை எடுத்துக்கொண்டு இவ்வுலகங்களிற் சஞ்சரித்து, வேண்டிய போகங்களைத் துய்க்கின்றான்."

(21) விரூபேப்யோ விச்வரூபேப்யச்ச வோ நம:।

— யசுர்வேதம், ச. ரு. ச. க.

"விரூபர்க்கும், விசுவரூபர்க்கும் நமஸ்காரம்."

இம்மந்திரத்தினால் முக்தர்கள் நித்தியசுத்தராதலின், இவர்களுக்கு ரூபமிலதாதலும், அநேக ரூபங்கொள்ளுதலும் பெறப்பட்டன.

(22) நீலக்ரீவா: சிதிகண்டா:।

— யசுர்வேதம், ச. ரு. கக. உ.

"நீலகண்டர்கள், சிதிகண்டர்கள்."

இம்மந்திரத்தினால் முக்தர்க்குச் சிவபிரானைப்போல நீலகண்டத்துவாதி இலக்ஷணங்கள் உள என அறியப்படுகின்றது.

(23) ஆத்மநி ஸர்வேந்த்ரியாணி ஸம்ப்ரதிஷ்டாப்யாஹிம்ஸந் ஸர்வபூதாந்யந்யத்ர தீர்த்தேப்யஸ் ஸகல்வேவம் வர்த்தயந் யாவதாயுஷம் ப்ரஹ்மலோகமபிஸம்பத்யதே நச புநராவர்த்ததே நச புநராவர்த்ததே।

— சாந்தோக்கியம், அ. கரு.கக.

"யஞ்ஞங்களினன்றிப் பிறவிடங்களில் உயிர்களுக்குத் தீங்கு விளைக்காது, இந்திரியங்களனைத்தையும் ஒன்றுபட ஆன்மாவிற் (சிவபிரானில்) நிறுத்தி, இங்ஙனம் ஆயுசுபரியந்தம் ஒழுகுகின்றவன் (பரப்) பிரஹ்ம (சிவ) லோகத்தை அடைந்து, மீண்டு பிறவியிற் செல்வானல்லன், மீண்டு பிறவியிற் செல்வானல்லன்."

(24) அநாவ்ருத்தி: சப்தாதநாவ்ருத்தி: சப்தாத்॥

— வேதாந்தசூத்திரம், ச, ச. உஉ.

"திரும்பிவருதல் இன்றெனச் சுருதி கூறலின்; திரும்பிவருதல் இன்றெனச் சுருதி (சாந்தோக்கியம், அ. கரு. க) கூறலின்."

இதனையுற்றே திருவள்ளுவநாயனுர்

மலர்மிசை யேகினுன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்

என்றும்,

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி

எனவுங் கூறியருளினர்.

"நிலம்" என்றது பிரஹ்மலோகமாகிய சிவலோகம். இது முப்பத்தாறு தத்துவங்கட்கு மேலாயது. இதனையுற்றே திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் "சிவலோகத்திலெய்தி நல்லவிமையோர்களேத்தவிருப்பார்களே" எனவும், மாணிக்கவாசகசுவாமிகள் "அண்டர்நாடாள்வோநாமல்லற்படைவாராமே" எனவும் அருளிச்செய்தார்கள்.

(25) ததூர்வமுந்மநாலோகாத் ஸோமலோகமலௌகிகம்।
ஸோமஸ்ஸஹோமயா நித்யம் நிவஸதீச்வர:।
ததூர்வமுந்மநாலோகாத் யம் ப்ராப்தோ ந நிவர்த்ததே॥

— வாயுசங்கிதை உத்தரபாகம், உஎ: சுஉ, சுரு.

"உன்மனுலோகத்துக்கு மேலுள்ளது அலௌகிகமாகிய சோமலோகம்; உமையோடிசைந்த சோமர் எனப்படும் சிவபிரான் அந்தச் சோமலோகத்தில் எக்காலமும் வசிக்கின்றனர்; உன்மனுலோகத்துக்கு மேலுள்ள இந்தச் சோமலோகத்தை அடைந்தவன் மீளப் பிறவியிற் செல்வானல்லன்."

(26) அண்டாதூர்த்வம் புரம் ஜ்ஞேயம் ப்ரக்ருதேர் மத்யத: ஸ்தி
ப்ரஹ்மண: பரமம் ஸ்தாநம் பத்மராகஸமப்ரபம்। [தம்।
ப்ரஹ்மலோகாத் பரம் ஜ்ஞேயம் விஷ்ணோஸ் ஸ்தாநம் ஸநா
இந்த்ரநீலப்ரதிகாசம் மஹாபோகைரலங்க்ருதம்। [தநம்।
தே யாந்தி விஷ்ணுபவநம் திவ்யைர் போகை ரமந்தி ச।
ஜ்ஞேயம் விஷ்ணுபுராதூர்த்வம் திவ்யம் சிவபுரம் மஹத்।
தத் போகஸ்தாநமதுலம் கர்மயோகரதாத்மநாம்।
அப்ரமேயகுணைர் திவ்யைர் விமாநை: ஸார்வகாமிகை:।
அஸங்க்யைஸ் தத்புரம் வ்யாப்தம் ஸர்வப்ராண்யுபகாரகை:।
ஸஹஸ்ரபூமிவிஸ்தீர்ணை: சூர்யகோடிஸமப்ரபை:।
ருத்ரலோகமிதி ப்ரோக்தமசேஷகுணஸம்யுதம்।
ஸர்வேஷாம் சிவபக்தாநாம் தத் புரம் பரிகீர்த்திதம்।
தேஹிநாம் கர்மநிஷ்டாநாம் புநராவர்த்தநம் ஸ்ம்ருதம்।
ஊர்த்வம் சிவபுரம் ஜ்ஞேயம் ஸ்தாநத்ரயமநுத்தமம்।
நித்யம் பரம் விசுத்தஞ்ச ஸ்கந்தோமாசங்கராத்மகம்।
ஸ்கந்தசக்திதரம் சாந்தம் ஷண்முகம் சிகிவாஹநம்।
தப்த சாமீகரப்ரக்யத்ரிசிகம் பாலரூபிணம்।
ப்ரபாவபாசிததநும் ஸர்வலோகாநுகம்பகம்।
த்யாயமாந: ப்ரஸந்நாத்மா குஹஸ்தாநமவாப்நுயாத்।
ஸ்கந்தஸ்தாநாத் பரம் ஸ்தாநமுமாதேவ்யா: ப்ரகீர்த்திதம்।
தப்தசாமீகரப்ரக்யமசேஷகுணஸம்யுதம்।
உமாஸ்தாநாச்ச பரத: ஸ்தாநமாத்யமுமாபதே:॥

— சிவதருமோத்தரம்.

"பிரமாண்டத்துக்குமேற் பிரகிருதிக்கு நடுப்புறமாய்ப் பதுமராக ஒளியுடைய பிரமாவினது மேலாகிய உலகம் இருக்கின்றது; பிரஹ்மலோகத்துக்குமேல் நித்தியமாகிய விஷ்ணுலோகம் (வைகுண்டலோகம்) இருக்கின்றது; இது இந்திரநீலப்பிரகாசமுடையது; மஹாபோகங்களினால் அலங்காரமுற்றது; அவர்கள் (விஷ்ணுபக்தர்கள்) விஷ்ணுலோகத்தை அடைந்து திவ்யபோகங்களினால் மகிழ்வடைகின்றார்கள்; விஷ்ணுலோகத்துக்குமேல் திவ்யமாகிய உருத்திரலோகம் இருக்கின்றது; கன்மயோகத்தில் விருப்பமுடையவர்களுக்கு அது உவமை கூறற்கரிய போகஸ்தானமாகும்; அளவிடப்படாத திவ்ய விமானங்களினாலும், அளவிறந்த சமஸ்தப்பிராணிகளுக்கு உபகாரமாகிய போகங்களனைத்தினாலு

ம் அந்தப் புரமானது வியாபித்துள்ளது; ஆயிரபூமி விஸ்தீர்ண முடையதாய், சூரியகோடிப்பிரகாசமுடையதாய், சமஸ்த குணங்களோடு கூடியதாயுள்ள இந்த லோகம் உருத்திரலோகம் எனப் படும்; (உருத்திரமூர்த்தியை வழிபடும்) சமஸ்த சிவபக்தர்களுக்கும் அவ்வுருத்திரலோகப்பிராப்தியே கூறப்பட்டிருக்கின்றது; † கன்மநிஷ்டர்களாகிய ஜனங்களுக்குப் புநராவர்த்தி உண்டென்று சொல்லப்படுகின்றது; உருத்திரலோகத்துக்குமேல் உத்தமமாய், நித்தியமாய், பரமாய், தூய்தாயுள்ள ஸ்கந்தலோகம், உமாலோகம், சிவலோகம் என மூன்று லோகங்கள் உள்ளன; சுடப்பட்ட பொன்னைநிகர்த்த முத்தலையுடைய வேலாயுதத்தையுடையரும், மயில்வாகனத்தையுடையரும், பாலரூபத்தையுடையரும், சாந்தரும், பிரபாவத்தினற் பிரகாசிக்கும் திருமேனியுடையரும், சர்வலோகங்களை நடுங்கச் செய்பவருமாகிய ஸ்கந்தசக்திதரசுவாமியைத் தியானிக்கின்ற தூயோன் ஸ்கந்தலோகத்தை அடைகின்றன்; ஸ்கந்தலோகத்துக்கு மேலாயுள்ளது சுடப்பட்ட பொற்பிரகாசத்தையுடையதும், சமஸ்த குணங்களோடு கூடியதாயுமுள்ள உமாலோகம்."

(27) * திரக்ருத்கோடி ஸங்காசம் ஸ்தாநமாத்யமுமாபதே:।
ஸர்வகாமஸமாயுக்தம் விசுத்தம் நித்யமக்ஷயம்॥
ஸம்ப்ராப்ய தத் பதம் திவ்யம் ஸமஸ்தக்லேசவர்ஜிதா:।
ஸர்வஜ்ஞா: ஸர்வகா: சுத்தா: பரிபூர்ணு பவந்தி ச।
விசுத்தகார்யகரணு: பரமைச்வர்யஸம்யுதா:।
ஸதேஹாச்ச விதேஹாச்ச பவந்த்யாத்மேச்சயா புந:।
யே ஸம்ப்ராப்தா: பரம் ஸ்தாநம் ஜ்ஞாநயோகரதாநரா:।
ந தேஷாம் புநராவர்த்திர் கோரே ஸம்ஸாரமண்டலே॥
—சிவதருமோத்தரம்.

"இதற்குமேற் பரமாயுள்ளது (அறுவகை அத்துவாதீத) உமாபதியாரது சிவலோகம்; உமாபதியாருடைய முதலாவதாய ஸ்தாநம் கோடிசூரியப்பிரகாசமுடையதாய், சர்வபோகங்களோடு கூடியதாய், விசுத்தமாய், நித்தியமாய், அக்ஷயமாயுள்ளது, இந்தத்

† உருத்திரபக்தர்களும் கன்மநிஷ்டரெனப்படுவர்கள்; பிரகிருதிப் பாற்பட்டோரனைவர்க்கும் புநராவர்த்தி உளதாம்.

* இந்தச் சிவதருமோத்தரச் சுலோகங்கள் வேதாந்தசூத்திரநீலகண்டசைவபாஷ்யத்து ஜகத்வியாபாராதிகரணத்தில் (ச. ச.உ) உதகரிக்கப் பட்டுள்ளன.

திவ்யபதத்தை அடைந்து சமஸ்தக்கிலேசமிலர்களாய், சர்வஞ்ஞர்களாய், சர்வவியாபகர்களாய், சுத்தர்களாய், பரிபூரணர்களாய் இருக்கின்றார்கள்; அவர்கள் தாம் விரும்பியவாறு விசுத்த காரியகரணங்களையுடையர்களாய், பரமைசுவரியங்களோடியைந்தவர்களாய், விரும்பியவாறு சதேகர்களாயேனும் விதேகர்களாயேனும் ஆகின்றார்கள்; ஞானயோகத்தில் விருப்பமுடையவர்களாய் எந்த மனிதர்கள் அந்தப் பரம ஸ்தானத்தை அடைகின்றார்களோ, அவர்களுக்குக் கோரமாகிய சம்சாரமண்டலத்தில் மீளத் திரும்புதல் இல்லை.''

பதினைந்தாவது

# சைவவேதாந்த

# சித்தாந்த சமரசப்பிரகரணம்

(1) *தத்ரோக்த: பரமோதர்ம: சர்யாத்மா சதுர்வித:।*
*தேஷு பாசுபதோ யோக: சிவம் பரத்யக்ஷயேத் த்ருடம்॥*

"சரியை கிரியை யோகம் ஞானம் எனச் சிவபுண்ணியம் நால்வகைப்படும்; அவற்றுட் பாசுபத (தியான) யோகமானது உறுதியாகத் (தாண்டவேசுவர) சிவபிரானைப் பிரத்தியக்ஷமாக்கும்" என்று வாயுசங்கிதோபப்பிருங்கணம் கூறுகின்றது.

சிவசாரூப்பியம் கொடுக்கும் சிவலோகமாகிய பிரஹ்மலோகமானது சாந்தோக்கியம் பிருகதாரணியமுதலிய உபநிடதங்களிலே உத்தராயணமார்க்கமாகச் செல்லும் முக்தர்களுக்குச் சித்திக்குமென்று "ஆன்மப்பிரகரண"த்து கூஎ-ம் பிரிவிற் கூறப்பட்டிருக்கிறது. "சிவோபாசனப்பிரகரண"த்து அஉ-ம் பிரிவுமுதல் கூ0-ம் பிரிவிறுதியாயுள்ள பிரிவுகளிலே, சிவபிரான் "துவாதசாந்தத்திலே தியானிக்கற்பாலர்" என்று மாண்டூக்கியோபநிடதம், நிருசிம்மதாபினி, அதர்வசிகை முதலியவைகளினும் வேதாந்தசூத்திர சைவபாஷ்யத்தினும் விதிக்கப்பட்டிருக்கின்றது.

(2) *த்வாதசாந்தபர்யந்தமுச்சாரயநேவ புஷ்பாம்ஜலிமபி த்வாதசாந்தபர்யந்தம் நீத்வா மந்த்ரமயம் ஜ்யோதிம் த்வாதசாந்தஸ்திதபரமசிவேந ஸம்யோஜ்ய।*

"துவாதசாந்தபரியந்தம் உச்சரித்து, இங்ஙனம் புஷ்பாம்ஜலியைத் துவாதசாந்தபரியந்தம் கொண்டுபோய் மந்திரமயமாகிய சோதியைத் துவாதசாந்தத்துள்ள பரமசிவனோடு யோஜிக்க" என்றும்,

(3) *சிவோஹமிதி சிவஸாம்யபாவநாரூபமாத்மநிவேதநஞ்ச குர்யாத்।*

"சிவோகம் என்று சிவபிரானுடைய (சர்வஞ்ஞதை முதலிய குணங்கள்) சாமியபாவனாரூபமாய் ஆன்மாவை நிவேதிக்க" என்றும் சிவார்ச்சனாசந்திரிகையில் துவாதசாந்த ஸ்தானமும் சோஹம்பாவனையும் கூறப்பட்டிருக்கின்றன.

(4) ப்ராக்ருதமுத்ஸ்ருஜ்ய சிவோஹமிதி பாவயேத்।

"பிராகிருதமாகிய பாவனையை விட்டுச் சிவோஹம் என்று (சிவ குணங்கள் ஆன்மாவிற் சாமியமாகப்) பாவிக்க" என்று ஸ்கந்த காலோத்தராகமத்தினின்று வருணபத்ததியுடையாரும்,

(5) த்வாதசாந்தே பதே தத்வே பரமானந்தலக்ஷணம்।

"மேலாகிய தத்துவமாய துவாதசாந்தத்திற் பரமானந்தலக்ஷணம்" என்று சோமசம்புபத்ததியுடையாரும்,

(6) த்வாதசாந்த ஸ்திதா ஸ்வச்சாம்பஸ் ஸத்ருச ப்ரபம் பர
சிவம் யோகி சிதா பச்யதி।

"துவாதசாந்தத்தில் இருக்கின்ற நிர்மலோதகத்துக்கு ஒத்த பிரபையுள்ள பரமசிவனை ஞானத்தினாற் காண்கின்றான்" என்று திரிலோசனசிவாசாரியரும்,

(7) த்வாதசாந்தே பதே யோஜ்ய தத் தேஜ: பும்ஜ பிம்ஜரம்।
தேந விந்யஸ்தமார்க்கேண ஸர்வகர்மார்ஹகோ பவேத்॥

"துவாதசாந்தத்திற் போய்க் கலந்து பிந்துவக்கினி வந்து நாபிகுண்டத்தில் வீழ்ந்ததாகப் பாவிக்க" என்று அகோரசிவாசாரியரும் கூறுகின்றார்கள்.

"சோஹம்பாவனாப்பிரகரண"த்தையும் "சிவோபாசனாப்பிரகரண"த்தையும் இந்தப் பிரகரணத்தோடு ஒத்துப்பார்க்கின், பாவனையினாலும் துவாதசாந்த ஸ்தானத்தினாலும் வேதங்களும் ஆகமங்களும் ஒரே கருத்துற முடிவுற்று நின்றவாறு கண்டு தேர்க. இது பற்றியே திருமூலநாயனார்

வேதமோ டாகம மெய்யா மிறைவனூ
லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாத னுரையவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே

என்றும், அருணந்திசிவாசாரியர் "பண்டைமறைகளுமதுநானானேனென்று பாவிக்கச்சொல்லுவதிப்பாவகத்தைக்காணே" என்றும், தாயுமானசுவாமிகள் "வேதாந்தசித்தாந்தசமரசநன்னிலை" என்றும் கூறியருளினர்கள். இங்ஙனஞ் சிலர் மாத்திரமே வேதாந்தத்தினதும் (உபநிடதத்தினதும்) ஆகமத்தினதும் உண்மையை அறிந்தார்கள்.

கண்ணுடையவள்ளல் என்பார் "ஒழிவிலொடுக்க"த்துப் பொதுவிலுபதேசத்துச் "சத்தாதி" என்றற்றொடக்கத்த ௰உ-ம் செய்யுளுரையில் "இரண்டென்று கூறுஞ் சித்தாந்தச் சிறப்பு, ஒன்றென்று கூறும் வேதாந்தச் சிறப்பு"எனவும், "சத்திநிபாதத் துத்தமரொழிவு" என்றற்றொடக்கத்த உஅ-ஞ் செய்யுளில் "அறிவுக்கறிவென்னுமாகமங்கள், சுத்தவறிவென்னும் வேதத்தினந்தம்" எனவும் கூறினர். "சுத்தவறிவு" என்றமையால் அடிமையாகிய ஆன்மாவையும், "அறிவுக்கறிவு" என்றமையால் ஆண்டவராகிய சிவபிரானையும் ஒன்றென்று குழறுபடைசெய்தார். அங்ஙனஞ் சிவஞானவள்ளலார் முதலாயினோருமேயாம்.

துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள் எழுதிய "வேதாந்த சூளாமணி" என்னும் நூலின் சிறப்புப்பாயிரத்து கூ-ஞ் செய்யுளானும், அதன் உரையானும், அவரும் ஏகான்மவாதத்தையே உண்மை வேதாந்தம்என உணர்ந்தாராகத் தெரிகின்றது. அங்ஙனமே இக்காலத்திலே சிலரொழிந்து ஏனையோர் வேதாந்த சித்தாந்த சமரசம் தெரியாது மயங்கிப்போயினர்.

ஆதிசைவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் சிவாகமங்களிற் பிரதிபாதிக்கப்பட்ட சரியையாதி பாதங்களோடு பதிபசுபாசம் என்னும் திரிபதார்த்தங்களை உணர்ந்து சிவபிரானைத் துவாதசாந்தத்திற் சிவோஹம்பாவனை செய்து வழிபட்டு வந்தார்கள் என அறியப்படுகின்றது.

---

பதினாறாவது

# சைவவேதாந்தசார சைவசித்தாந்தப்பிரகரணம்

## (க) வேதாந்தத்தெளிவு சைவசித்தாந்தம்.

(1) சித்தாந்தோ வேதசாரத்வாத்।

"சைவசித்தாந்தம் வேதசாரமாயிருத்தலின்" என்று சுப்பிரபேதாகமமும்,

(2) வேதஸாரமிதம் தந்த்ரம்।

"இந்தச் சித்தாந்தம் வேதசாரம்" என்றும்,

(3) வேதாந்தார்த்தமிதம் ஜ்ஞாநம்।
சித்தாந்தம் பரமம் சுபம்।

"இந்த ஞானம் † வேதாந்தார்த்தம்"

"பரமானந்தமாகிய சித்தாந்தத்தை" என்றும் மகுடாகமமும் கூறுகின்றன.

(4) சித்தாந்த ஏவ சித்தாந்த: பூர்வபக்ஷாஸ்ததஃ பரே!
— இரத்தினத்திரயபரீக்ஷை.

"சித்தாந்தமே சித்தாந்தம்; அவைகளுக்கு வேறானவை பூருவ பக்ஷங்கள்."

(5) ஸநகாதி முநீந்த்ரேப்யஸ்த்ரிபதார்த்தார்த்தஸம்மிதம்।
ரஹஸ்யமாகமாந்தாக்யம் சித்தாந்தம் கதயந் ஸ்தித:॥
— ஸ்காந்தசம்பவகாண்டம், ௩: ௫க.

"கைலாசத்திலே (சிவபெருமான்) சனகர்முதலிய முனீந்திரர்களுக்குப் பதிபசுபாசம் என்னும் திரிபதார்த்தங்களோடு கூடியதாயும் இரகசியமாயுமுள்ள ஆகமாந்தம் என்னும் பெயருடைத்தாகிய சித்தாந்தத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார்."

---

† ஈண்டு வேதாந்தம் என்றது "திரிபதார்த்தப்பிரகரணத்தினும் ஏனையபிரகரணங்களினும் நித்தியபதார்த்தம் என்று கூறப்பட்ட பதிபசுபாசத்தைப் பிரதிபாதிக்கும் வேதசிரசினையேயாம்.

## (உ) சைவசித்தாந்தம்.

(6) ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் தமது பாஷ்யத்து அக்கினிஹோத்திராதிகரணத்திற் (ச. க. கசு) சிவோபாசனையானது கன்மயாகம், தபயாகம், செபயாகம், தியானயாகம், ஞானயாகம் என ஐவகைப்படும் என்றும், அவற்றுள்ளே * ஞானதியானமானது பரப்பிரஹ்மசிவனுர் சொரூபத்தை நேரே அடைதற்கு ஏதுவாகும் என்றும் (சைவவேதாந்த சித்தாந்த சமரசப்பிரகரணத்து க–ம் சுலோகம் கூறியதற்கிசையக்) கூறினர். அதுபற்றி யோக பரியந்தமே உபநிடதங்களாற் கூறக்கிடந்தது. பதினைந்தாம் பிரகரணத்து உதகரிக்கப்பட்ட பிரமாணங்களானும், அந்தத் தியானயோகமுடிபுதான் பெரும்பான்மையாய் ஆகமங்களினுலும் அறியக்கிடந்தது. ஆகலின், ஞானபாதம் சைவசித்தாந்தத்தினுற் கூறக்கிடந்தது.

(7) சரியையாதி நான்கு பாதங்களுள் மூன்ருவது அத்தியாசிரமபாசுபதயோகத்தை உபநிடதங்கள் கூறுகின்றமையானும், அந்த யோகத்துக்குப் பயன் பிரஹ்மலோகமாகிய சிவலோகம் என்று "ஆன்மப்பிரகரண"த்தினும் "பரப்பிரஹ்ம சிவலோகப்பிரகரண"த்தினும் கூறப்பட்டமையானும், ஞானபாதம் சைவசித்தாந்தத்தினுற் கூறக்கிடந்தது.

(8) ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாசிதவ்ய:|

"(பரமான்மசிவபிரான்) கேட்கற்பாலர், சிந்திக்கற்பாலர், தெளியற்பாலர்" என்று பிருகதாரணியோபநிடதம் (உ. ச. ரு) கூற,

(9) ச்ரோதவ்ய: ஸததம் சம்பூர் மந்தவ்ய: சோபபத்திபி:|
ஜ்ஞாத்வாச ஸததம் த்யேயோ வேதாந்தைரிதி சங்கர:|

"சிவபெருமான் எஞ்ஞான்றும் கேட்கற்பாலர், பொருந்துமாற்ருற் சிந்திக்கற்பாலர், வேதாந்தங்களால் எஞ்ஞான்றும் அறிந்து அச்சிவபெருமான் தியானிக்கற்பாலர்" என்று (பிருகதாரணியோபநிடதத்துக்கிசைந்தே) உபதேசகாண்டம் (சஅ. அ, கூ) கூறுகின்றமையின், ஞானபாதம் சைவசித்தாந்தத்தினுற் கூறக்கிடந்தது.

---

* ஞானதியானம் எனினும், ஞானயோகம் எனினும், தியானயோகம் எனினும், பாசுபதயோகம் எனினும், அத்தியாசிரமயோகம் எனினும் பொருந்தும்.

(10) உபநிடதங்களுள்ளே சிறந்ததெனக் கூறப்படும் மாண்டூக்கியோபநிடதம் ஜாக்கிரம், சொப்பனம், சுழுப்தி என்னும் மூன்றுக்கும் மேலாகப் பிரணவப்பொருளாகிய சிவபெருமானைத் துரியநிலைக்கண்ணே (துவாதசாந்தத்தில்) வைத்துரைத்தமையால், அதற்குமேற் போதரும் துரியாதீதசொரூபசிவபோகம் உணர்த்தும் ஞானபாதம் சைவசித்தாந்தத்திற் கூறக்கிடந்தது.

## (௩) சைவசித்தாந்தத்துக்கடுத்துள்ளது வேதாந்தம்.

(11) சிவாத்துவித வேதாந்தமானது இருபத்தினான்கு சமயங்களுள்ளும் தலையாயது. அவ்விருபத்தினான்கு சமயங்கள் புறப்புறச்சமயம், புறச்சமயம், அகப்புறச்சமயம், அகச்சமயம் என நான்காக வகுக்கப்படும். அவற்றுள் லோகாயதரும், (மாத்மிகர், யோகசாரர், சௌத்திராந்திகர், வைபாடிகர் என்னும்) நால்வகைப் பவுத்தரும், க்ஷமணருமாகிய அறுவரும் புறப்புறச் சமயத்தவரேயாம்.

(12) தார்க்கிகர், மீமாஞ்சகர், சாங்கியர், யோகமதத்தினர், பாஞ்சராத்திரர் (வைஷ்ணவர்), ஏகான்மவாதியர் என்னும் அறுவரும் புறச்சமயத்தவரேயாம்.

(13) அவைதிகபாசுபதர் (நகுலீசபாசுபதர்), மாவிரதர், காபாலர், வாமமதத்தினர், வைரவர், ஐக்கியவாதசைவர் (லிங்கதாரணராகிய வீரசைவர்) என்னும் அறுவரும் அகப்புறச் சமயத்தவரேயாம்.

(14) பாடாணவாதசைவர், பேதவாதசைவர், சிவசமவாதசைவர், சிவசங்கிராந்தவாதசைவர், ஈசுரவவிகாரவாதசைவர், சிவாத்துவிதசைவர் (ஸ்ரீநீலகண்டசிவாசாரியர் ஸ்தாபித்த உண்மைவேதாந்தநிலையினர்) என்னும் அறுவரும் அகச்சமயத்தவரேயாம்.

(15) அகச்சமயத்தவராகிய பாடாணவாதசைவர்முதற் சிவாத்துவிதசைவர் ஈறுகிய அறுவரும் பதிபசுபாசப்பொருளுண்மையெல்லாம் சித்தாந்தசைவரோடொப்பக்கொள்ளும் அந்தர

ங்க உரிமையுடையர். சிவாத்துவிதசைவமானது லோகாயத முதல் ஈசுரவவிகாரவாதசைவம் இறுதியாகிய இருபத்துமூன்று சமயங்கட்கும் தலைமையாயிருத்தலின், "நிலவுலகாயதாதி நிகழ் சிவாத்துவிதாந்தம்" என்று உமாபதிசிவாசாரியசுவாமிகள் சிவப் பிரகாசத்தில் அருளிச்செய்தார்கள்.

(16) சிவஞானசித்தியார் பன்னிரண்டாஞ் சூத்திரத்து "ஞானயோகக்கிரியாசரியைநாலும்" என்றற்றொடக்கத்த செய் யுளானது சைவசித்தாந்தஞானி ஞானம் யோகமுதலியவற்றுக்கு உரியன் என்று சொல்லுதலானும்,

(17) சைவசித்தாந்தமார்க்கஸ்தா: சைவா: பாசுபதாஸ்ததா1 "சைவசித்தாந்த மார்க்கத்தினரும், பாசுபதசைவரும்" என்று (அ த்தியாசிரமபாசுபதயோகிகளாகிய பாசுபதசைவரைச் சைவ சித்தாந்தத்துக்கு அடுத்த படிக்கண்ணே நிறுத்திச்) சைவபுரா ணவாயுசங்கிதோபப்பிருங்கணம் (உத்தரபாகம், உடு: களஎ) கூறுகின்றமையானும், ஸ்ரீநீலகண்டசிவாசாரியரது சிவாத்துவித மதம் (இப்புஸ்தகத்து உ0உ-ம் பக்கத்து அஅ-ம் பிரிவிற் கூறப் பட்ட) மூன்றாவது பாவனாயோகநிலைக்கு உரியதாய், சைவசித்தாந் தத்தை அடுத்துநின்றது.

(18) இவ்விருபதினான்கு சமயங்களின் இலக்ஷணங்களைச் "சிவஞானபோதவசனாலங்காரதீப"த்துச் "சமயாதீதம்" என் னும் விஷயத்தின் கீழ்ப் பார்க்க.

## (ச) வேதாந்தத் தெளிவு சைவசித்தாந்தம் என்றமைக்குத் தென்மொழிப்பிரமாணம்.

(19) குடிலை யென்னுந் தடவய லுப்ப
னருள்வித் திட்டுக் கருணைநீர்ப் பாய்ச்சி
வேத மென்னும் பாதபம் வளர்த்தனை
பாதப மதனிற் படுபயன் பலவே

அவற்றுள்

இலைகொண் டுவந்தனர் பலரே யிலையொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர் பலரே தளிரொரீஇ
யரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரே

யவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப
யோரும்லே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
வாரா வின்ப வருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே யானவர்
நன்னிலே பெறுதற் கன்னிய னுயினு
மன்னவர் கமலப் பொன்னடி விளக்கிய
தீம்புன லமுத மார்ந்தன னதனல்
வேம்பெனக் கொண்டனன் விண்ணவரமுதே.

(20) "சுவாமீ! குடிலை எனப்படும் விசாலமாகிய வயலின் கண்ணே, அருள் என்னும் வித்தை விதைத்து, அதிற் கருணை என்னும் நீரைப் பாய்ச்சி, அதினின்றும் முளைத்துளதாம் வேதம் என்னும் விருக்ஷத்தை வளர்த்தீர்; அவ்விருக்ஷத்தின் கண்ணே உளவாம் பயன்கள் பலவே; அவற்றுட் பலர் (தார்க்கிகமதத்தினர்) இலையையே நன்றெனக்கொண்டு மகிழ்ந்தார்; வேறுபலர் (மீமாஞ்சகமதத்தினர்) தளிரையே நன்றெனக்கொண்டு மகிழ்ந்தார்; வேறுபலர் (சாங்கியமதத்தினர்) அரும்பையும், வேறுபலர் (யோகமதத்தினர்) மலரையும், வேறுபலர் (பாஞ்சராத்திரமதத்தினர்) பிஞ்சையும், வேறுபலர் (ஏகான்மவாதத்தினர்) காயையும் நன்றெனக்கொண்டு மகிழ்ந்தார்கள்; அந்த இலைமுதலிய ஆறு உறுப்புக்களும் அங்ஙனம் பலர்க்கும் பலபிரகாரம் பயன்படுவனவேயாக, பெரியோரால் ஆராயப்படும் (* சிவாத்துவித) வேதாந்தம் எனக் கூறப்படும் அந்த விருக்ஷத்தின் உச்சியிற் பழுத்த தெவிட்டாத சுவையையுடைய அரிய பழத்தைப் பிழிந்து சாரமாகக்கொண்ட சைவசித்தாந்தத் தேனமுதைப் பருகினோர் சிலரேயாம்; யான் அந்தச் சைவசித்தாந்தமதத்தினராகிய சிலரது உத்தமோத்தமநிலையை அடைதற்கு இயலாத அன்னியனுகவிருப்பினும், அவ்வியல்பினராகிய அவரது செந்தாமரைமலர்போலும்

* "சிவோபாசனுப்பிரகரண"த்து அ௯-ம் பிரிவில் வேதவிருக்ஷத்து உச்சியிற் பழுத்த வேதாந்தப்பழத்தைச் சிவோத்வைதம் என்றும், கல்கத்தா வங்கவாசி அச்சியந்திரசாலையில் அச்சிடப்பட்ட சிவபுராணகைலாசசங்கிதை க0-ம் அத்தியாயத்து ௬0-ம் சுலோகத்தினும், பம்பாயில் அச்சிடப்பட்ட சிவபுராணகைலாசசங்கிதை க௯-ம் அத்தியாயத்து கக-ம் சுலோகத்தினும் சிவாத்துவிதமஹாகற்பவிருக்ஷய் என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

அழகிய திருவடிகளைப் பிரக்ஷாளனஞ் செய்த திவ்ய தீர்த்தத்தை உள்ளே பூரித்தேனாதலினால், தேவாமிர்தத்தை வேம்பெனக் கசப்பாகக்கொண்டு வெறுத்தேன்" என்றார் திருச்செந்தூர்க் கலியுகவரதராகிய செந்திநாதப்பெருமானது அருள்பெற்ற குமரகுருபரசுவாமிகள்.

(21) புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்
பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற்
பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன
வுறத்திறனால் விளைவதா யுடலுயிர்கண் ணருக்க
னறிவொளி போற்பிறிவரு மத்துவித மாகுஞ்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றும்.

(22) புறச்சமயத்தவர்க்கிருளாய்—பதிப்பொருள் (லோகாயதமுதலிய அறுவகைப் புறப்புறச்சமயம், தார்க்கிகமுதலிய புறச்சமயம், அவைதிக பாசுபதமுதலிய ஐக்கியவாதசைவமீறாகிய அகப்புறச்சமயம் என்னும் மூவகைப்) புறச்சமயப்பதினெண்மரும் (பாசக்கட்டுடையராய்த் திரிபதார்த்தநிச்சயம் அறியமாட்டாமையின், அவர்கள் அறிவுக்குத் தோன்றாமல்) அந்தகாரத்திரவியமாயும்; அகச்சமயத்தொளியாய்—(அகச்சமயம் என்னும் பாடாணவாதசைவமுதலிய அறுவகைச்சமயங்களும் திரிபதார்த்தத்தைக் கொள்கின்றனவாய்ப் பாசநீக்கத்துக்குரியவாதலின்) அச்சமயத்தார் அறிவுக்கு (அளவாய்த் தோன்றும்) பிரகாசத்திரவியமாயும்; புகல் அளவைக்கு அளவாகி—(ஆக நாற்கூற்றுச் சமயத்தோர்க்கும்) அவரவர்கொண்ட அளவைப் பிரமாணங்கட்குத் தக்கதாய் அளவுபட்டு (அந்தந்த இடமே அவர்களுக்கு மோக்ஷஸ்தானமாய்க் கொடுப்பதாயும்);

பொற்பணிபோல் அபேதப் பிறப்பிலதாய்—(சைவசித்தாந்திகளுடைய முத்தி என்னும் பரமுத்தியில்) ஒரு பொன்பணியானது போல என்னும் (ஏகான்மவாதிகள் கூறும்) பேதப்பொருளுமல்லவாய்; இருள் வெளிபோற் பேதமும்—இருளும் ஒளியும் போல (மத்துவர் கூறும்) பேதப்பொருளுமல்லவாய்; சொற்பொருள்போற் பேதாபேதமுமின்றி—சொல்லும் பொருளும்

நோட்டுப்புத்தகம் பார

போல (வைஷ்ணவர் கூறும்) பேதாபேதப்பொருளுமல்லவாய்; பெருநூல் சொன்ன அறத்திறனல் விளைவதாய் - இங்ஙனம் கூறிய கேவலாத்துவிதம் (ஏகான்மவாதம்), துவிதாத்துவிதம் (மத்துவமதம்), விசிஷ்டாத்துவிதம் (வைஷ்ணவம்) இன்றிப் பெரிய சிவாகமத்துணிபாகிய சுத்தாத்துவிதப்பொருளாய்;

உடல் உயிர் - உடலும் உயிரும் ஒற்றுமைநயத்தால் ஒன்றுபட்டும், உடல் உயிராய் ஒழியாது, உயிர் உடலாய் ஒழியாது, உடல் உடலே, உயிர் உயிரேயாயினும், உடலுக்கோர் உண்டியை ஊட்டுமிடத்து, அஃது உண்டதென்றும், உயிர் உண்டதென்றும் பிரிக்கப்படாமையின், உயிர் உடலேயாயும் அஃதல்லதாயும் இருப்பதுபோலவும் (சைவசித்தாந்தத்துக் கூறப்படும் † அபேதமாய் நிற்பது); கண் அருக்கன் - கண்ணும் ஆதித்தனும் பேதப்பொருளாயினும், கண் ஒரு விடயத்தை அறியுமிடத்து, கண்ணொளி ஆதித்தன் ஒளியோடு விரவியல்லது காட்சிப்படாமையிற் கண்ணொளி கண்டதென்றும், ஆதித்தனொளி கண்டதென்றும் பிரிக்கப்படாதிருந்தும், கண்ணொளி ஆதித்தனொளி ஆகாது, ஆதித்தனொளி கண்ணொளி ஆகாது, ஆதித்தனொளி கண்ணொளியோடு விரவிக் காட்டியும், அதனோடு விரவாது இருளை நீக்கியும் நிற்பதுபோலவும் (சைவசித்தாந்தத்துக் கூறப்படும் பேதமாய் நிற்பது); அறிவொளிபோல்-ஒரு விடயத்தைக் காணுமிடத்து, ஆன்மசிற்சத்தி இந்திரியஞானத்தோடு விரவியல்லது காட்சிப்படாதிருந்தும் * மானதம், தன்வேதனை, யோகம், அநுமானம், உரைமுதலிய காட்சியிற் செல்லுங்காலத்து, அதைப் பிரிந்து வேறுயும் அதுவாயும் இருக்கும் ஆன்மசிற்சத்தி அவ்விந்திரிய ஞானத்தோடு விரவிக் காட்சிப்படுங்காலத்து, அது அறிந்ததென்றும், இது அறிந்ததென்றும் பிரிக்கப்படாதது போலவும் (சைவசித்தாந்தத்துக் கூறப்படும் உடனாய் நிற்பது);

---

† அபேதமாய் (தானாய்), பேதமாய் (வேறாய்), உடனாய் என்பவற்றைத் திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் "சடையார் புனலுடையான்" என்றற்றொடக்கத்த திருவீழிமிழலைத்தேவாரத் திருப்பதிகத்தில் "எட்டுத்திசை தானாய் வேறாயுடனானானிடம் வீழிம்மிழலையே" என்றருளிச்செய்தார்.

* சிவஞானசித்தியார்ப் பாயிரத்து சு, எ, அ, உ-ஞ் செய்யுட்களில் மானதமுதலியவற்றின் இலக்கணங்களை நோக்குக.

45

பிரிவறுமத்துவிதமாகுஞ் சிறப்பினதாய் - இவ்வாறு மூவிதமாய் அபேதம், பேதம், பேதாபேதங்களின் பொதுமையாய், "உலகெலாமாகி, வேருய், உடனுமாய்" நிற்பது கலப்பினுல் ஒன்றுயும், பொருட்டன்மையால் வேருயும், செயற்றன்மையால் உடனுயும் நிற்குஞ் சுத்தாத்துவிதநயத்தையுடைய; வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத் திறம் இங்கு தெரிக்கல் உற்ரும் - பதிபசுபாசம் என்னும் முப்பொருள்களைப் பிரதிபாதிக்கும் § வேதாந்தத்தின் தெளிவுப் போதமாகிய சைவசித்தாந்தவெற்றிப்பாட்டை இந்நூலகத்தே (இச்சிவப்பிரகாசசித்தாந்தசாஸ்திரத்தின் அகத்தே) கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று அவஸ்தையுள் அடக்கி, தொகை வகை விரிவென்னும் முத்திறப்படுத்திச் சொல்லத் தொடங்குவாம்" என்றருளினர் சந்தானகுரவருள் ஒருவராகிய உமாபதிசிவாசாரியசுவாமிகள். இச்சிவாசாரியசுவாமிகளும் குமரகுருபரசுவாமிகளும் (இப்பிரகரணத்து க-ம் பிரிவு முதலியவைகளில்) வேதசாரம் என்று சுப்பிரபேதாகமமுதலிய கூறிய போல, "வேதாந்தத் தேளிவாஞ் சைவசித்தாந்தம்" என்றும், "வேதசாரம்" என்றும் முறையே அருளிச்செய்தார்கள்.

## (ரு) பஞ்சகிருத்திய அதிகாரத்தினின்று நீங்கிய அகண்டாகாரசிவம் பரவஸ்துவே.

---

(23) ததிதம் த்ரிவிதம் ரூபம் ஸ்தூலம் சூட்சுமம் தத:பரம்। அஸ்மதாத்யமரைர் த்ருச்யம் ஸ்தூலம் சூட்சுமந்து யோகிபி:।
தத: பரந்து யந்நித்யம் ஜ்ஞாநமாநந்தமவ்யயம்।
தந்நிஷ்டைஸ் தத்பரைர் பக்தைர் த்ருச்யம் தத்ரூபமாஸ்திகை:।
பஹுநாத்ர கிமுக்தேந குஹ்யாத் குஹ்யதமம் பரம்।
சிவே பக்திர் ந ஸந்தேஹஸ் தயாயுக்தோ விமுச்யதே॥

"சிவபெருமானுக்கு ஸ்தூலவடிவம், சூக்குமவடிவம், பரவடிவம் என மூன்று வடிவங்கள் உள்ளன; காணற்பாலதாகிய ஸ்தூலவடிவம் (ஸ்ரீகண்டவடிவம்) அமரர்களாகிய எங்களாலும், சூக்குமவடிவம் (தாண்டவேசுவரவடிவம்) வைதிகபாசுபதஞானயோகிகளா

---

§ வேதாந்தத்திலே தடஸ்தமாகப் பேசப்பட்ட பதிபசுபாசமானது சொரூபத்திற் சிவம், ஆன்மா, மலம் எனக் கணிக்கப்படும்.

லும், ஞானானந்த அவ்யயமாகிய அந்தப் பரவடிவம் (பஞ்சகிருத்திய அதிகாரவர்ச்சிதசொரூபசிவம்) சிவவிஷ்டர்களாய்ச் சிவபரர்களாய்ச் சிவாஸ்திகர்களாயுள்ள அன்பர்களாலும் காணற்பாலன; ஈண்டு அதிகஞ்சொல்லி என்! பரவடிவம் (சொரூபசிவம்) மறைவினும் மறைவாயுள்ளது; எவனுக்குச் சிவனிடத்திலே அன்பு சந்தேகமின்றி உளதோ, அவன் அவ்வன்பினாலேயே அதனை விடுகின்றான்" என்று வாயுசங்கிதை (பூருவபாகம், உ: கூஉ, கூங, கூச) கூற,

(24) சிவவஸ்து பரம் தஸ்மாந் மந்த்ராதீதோ நிரம்ஜநः।
நிராமயோ நிராதாரோ வர்ணரூபவிவர்ஜிதः॥

"பஞ்சகிருத்திய அதிகாரநீங்கிய சொரூபசிவப்பொருளானது பரவடிவாகும்; ஆகலின், அச்சிவப்பொருள் மந்திராதீதமாய், மலமிலதாய், நிராமயமாய், நிராதாரமாய், வர்ணம் வடிவம் இல்லாததாய் உள்ளது" என்று சர்வஞ்ஞானோத்தராகமமும் கூறுகின்றது.

சைவபுராணவாயுசங்கிதையாலும் சர்வஞ்ஞானோத்தராகமத்தாலும் || சொரூபசிவமே சிவவஸ்து எனப் பெறப்பட்டது. அந்தச் சொரூபசிவத்தைப்பற்றி உமாபதிசிவாசாரியர் பவுட்கராகமவிருத்தியில்

(25) அகண்டாநந்த ஸச்சிதாநந்தாத்மகஸ்வரூபம் பரமசிவம்।

"அகண்டானந்தமாய்ச் சச்சிதானந்த சொரூபமாயுள்ளது பரமசிவம்" என்றருளிச்செய்திருக்கின்றார்.

(26) "இன்னவுருவின்னநிறமென்றறிவதேலரிது" என்று திருவைகாவூர்த் தேவாரத்தில் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும், "ஒப்புடையனல்லனொருவனல்லனோரூரனல்லனோருவமனில்லியப்படியுமந்நிறமுமவ்வண்ணமுமவனருளே கண்ணாகக்காணினல்லாலிப்படியனின்னிறத்தனிவ்வண்ணத்தனிவனிறைவனென்றெழுதிக்காட்டொணாதே" என்று வினாவிடைத் திருத்தாண்டகத்தில் திருநாவுக்கரசுநாயனாரும்,

அரிய காட்சிய ரென்பதவ் வாதியைத்
தெரிய லாகிலே யாற்றெரி யாரென

|| இந்தச் சிவத்துக்கு ஆனந்தசத்தி எனப்படும் இன்பசத்தி உளதாம் என்க.

வுரிய வன்பினிற் காண்பவர்க் குண்மையாம்
பெரிய நல்லடை யாளங்கள் பேசினர்.

பின்பு மாரறி வாரவர் பெற்றியை
யென்ப தியாருணர் வாழுஞ்சென் றெட்டொணு
மன்பெ ருந்தன்மை யாரென வாழ்த்தினு
ரன்பு சூழ்சண்பை யாண்டகை யாரவர்

என்று சேக்கிழார்நாயனுரும் அருளிச்செய்தார்கள்.

சர்க்கரைதா னுர்க்குந் தருமிரத மவ்விரதஞ்
சர்க்கரைதான் கொள்ளுமோ சாற்றுங்காற்-சர்க்கரைக்கின்
றின்புருவ மன்றி யெழிலுருவம் வேறுண்டோ
வின்புருவ மேயிறைக்கு மென்.

நாவா ரிரதமது நாவருந்த லல்லாதிங்
காவா விரத மறியுமோ—வோவாப்
பரம்சுக முன்பாற் பலிப்பதே யன்றிப்
பரம்சுகங் கொள்ளா பயன்.

"சர்க்கரையானது தன்னை நுகர்வோர்க்கு இனிமையைக் கொடுக்குமேயன்றி, தான் அந்த இனிமையை அறியாதது போலவும், நாக்கானது ஒரு பொருளின் இனிமையை அறிவதேயன்றி, அப்பொருள் அவ்வினிமையை அறியாதவாறுபோலவும், பேரானந்தம் ஆன்மாவை மகிழ்விக்குமேயன்றித் தனக்கு ஆதாரமாகிய சிவத்தை மகிழ்வியாதாம்; சர்க்கரைக்கு இனியசுவையே உருவமாம், அதுபோலச் சிவத்துக்கு இன்பமே சொரூபம்" என்று துகளறுபோதம் கூறுகின்றது. தமது இன்பசொருபத்தைத் தாம் அறியாமையாலன்றோ, "தம்பெருமைதானறியாத்தன்மையன் காண்" என்று திருவாசகமும், இன்னுந்தானுங்காண்கிலனின்னமுந்தன்பெருந்தலைமை" என்று கந்தபுராணமும் கூறின.

(27) ஏகான்மவாதத்தில் அசத்தைநோக்கிச் சத்தென்றும், அசித்தை நோக்கிச் சித்தென்றும், துக்கத்தை நோக்கி ஆனந்தமென்றும், எனவே சச்சிதானந்தம் என ஜீவான்மப்பிரஹ்மத்தைக் கூறுவதெல்லாம், மங்கலகாரியம் ஒன்றுக்கும் உதவாத செவ்வாய்க்கிழமையைச் சிறப்புற மங்கலவாரம் என்றாற்போற் பயனில் வெற்றுரையேயாம்; பெறுவானும் பேறும் ஆண்டில்லாமையின். அஃதாவது, இன்பத்தைக் கொடுக்குஞ் சிவமும், இன்பத்தைத் துய்க்கும் ஆன்மாவும் ஆண்டில்லையாமாதலின் என்க.

அந்தச் சொரூப அகண்டாகாரசிவம் "பரமானந்தக்கடல்" எனவும், "கருணைக்கடல்" எனவும், "பக்திக்கடல்" எனவும், "இன்பம்" எனவும், "அன்பு" எனவும் ஆங்காங்கு அருட்பாக்களிற் கூறப்பட்டிருத்தல் காண்க.

## (சு) பரவஸ்துவின் ஞானமுதம் மெய்யன்பினரால் நுகரப்படுதல்.

---

(28) பாஹ்யேப்யர்ச்ய சிவம் பச்சாதந்த்ர்யாகரதோ பவேத்।
ரதிரப்யந்தரே யஸ்ய ந பாஹ்யே புண்யகௌரவாத்।
ந கர்மகரணீயம் ஹி பஹிஸ்தஸ்ய மஹாத்மந:।
ஜ்ஞாநாம்ருதேந த்ருப்தஸ்ய பக்த்யாசைவ சிவாத்மந:।
நாந்தர் நச பஹி: க்ருஷ்ண க்ருத்யமஸ்தி கதாசந॥

"புறப்பூசையினாற் சிவனை வழிபடு; பின்னர் அந்தரியாகத்திலே விருப்பமுடையனாகின்றான்; புண்ணிய மிகுதியினால் அந்தரியாகத்தினும் புறப்பூசையினும் பற்றிலனாகின்றானே, அந்த மஹாத்துமாவுக்குப் புறத்தே செயற்பாலதொன்றுமின்று; ஞானமுதத்தினாலும் அன்பினாலும் திருத்தியுடையனாகிய ஜீவன்முக்தனுக்கு அகத்தும் புறத்தும் ஓர்காலும் செய்யவேண்டியதொன்றும் இன்று" என்று வாயுசங்கிதை (உத்தரபாகம், கக: கஉக, கஉஉ, கஉ௩) கூறுகின்றது.

(29) உள்ளும்புறம்புநினைப்பறின்னுள்ளே
மொள்ளாவமுதமென்றுந்தீபற
முளையாதுபந்தமென்றுந்தீபற.

"சகமார்க்கம்போலச் சொரூபசிவப்பொருளை ஏகதேசப்படுத்தி உள்ளே தியானிப்பதும், புத்திரமார்க்கம்போல அகத்தும் புறத்தும் வழிபடுவதும், தாதமார்க்கம்போற் புறத்தே வழிபடுவதும் ஒழித்து, அகண்டாகாரசொரூபநிலையையுடைய பரவஸ்துவை அறிந்து வழிபடின், அவ்வன்பர் அறிவின்கண்ணே பருகத்தொலையா அமுதமாய் விளையும்; அது விளையவே பாசம் முளையாது" என்று திருவுந்தியார் வாயுசங்கிதைக்கிசையக் கூறுகின்றது.

(30) ஜ்ஞாநாம்ருதரஸோ யேந ஸக்ருதாஸ்வாதிதோ பவேத்।
ஸ ஸர்வகார்யாண்யுத்ஸ்ருஜ்ய தத்ரைவ பரிதாவதி॥

"ஞானமுதரசமானது எவனால் ஒருமுறை உருசிக்கப்பட்டதோ, அவன் சமஸ்தகன்மங்களையும் விடுத்து, அந்த ஞானமுதரசத்திலேயே சென்றுகொண்டிருக்கின்றான்" என்று சிவதருமோத்தராகமமும்,

(31) யதா வாயு: சுசீக்ரோபி முக்த்வாகாசம் ந கச்சதி।
ஜ்ஞேயநிக்ஷிப்தசித்தஸ்து விஷயஸ்தோ ந முஞ்சதி॥

"வாயு வேகமாகச் சென்றுகொண்டிருந்தாலும், எங்ஙனம் ஆகாசத்தைவிட்டுப் போகின்றிலதோ, அங்ஙனம் சிவமாகிய ஞேய விஷயத்தில் வைக்கப்பட்ட சித்தமும் புற விஷயங்களிற் சென்றுகொண்டிருப்பினும், (அந்தச் சிவஞேயவிஷயத்தை) விடுகின்றிலது" என்று நிச்சுவாசகாரிகையும் கூறுகின்றன.

(32) இன்பி னினிதென்ற லின்றுண்டே லின்றுண்டா
மன்பு நிலையே யது.

"முன்பு ஈட்டிய தவத்தின் முதிர்ச்சியினால், ஒருவர்க்கு அன்பு என்பது இப்பொழுது உளதாயின், எல்லா இன்பங்களினும் இனிமையுடைத்தென்று சிறப்பித்துப் புகழப்படும் பேரின்பம் இப்பொழுதே உளதாம்; அது மிருந்த அன்பினது நிலையையே தனக்கு நிலையாகவுடையதாகலின் என்பது" என்று திருவருட்பயன் கூறுகின்றது.

## (எ) அன்புடையோரால் அடையப்படும் சிவம் அன்பெனப்படுதல்.

---

(33) ஹிஸி தாதோ: ஸிம்ஹசப்தோ வச காந்தௌ சிவ: ஸ்ம்ருத:।
வர்ணவ்யத்யயத: ஸித்தௌ பச்யக: கச்யபோ யதா॥

"பச்யக என்பதினாற் கச்யப என்னும் மொழியும், ஹிம்சித்தல் எனப் பொருட்படும் ஹிஸிதாதுவினின்று ஸிஹ்ம என்னும் மொழியும் எழுத்துமாறுதலினால் எய்தினாற்போல, அன்புறுதல் எனப் பொருட்படும் வச என்னும் பகுதியினின்று சிவ என்னும் மொழியும் எய்திற்று" எனப் பெறப்படலான், சிவ என்னும் மொழி அன்பு எனப் பொருட்படும். இது

(34) அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலா
ரன்பே சிவமாவ தாரு மறிகிலார்

ரன்பே சிவமாவ தாரு மறிந்தபி
னன்பே சிவமா யமர்ந்திருந் தாரே.

என்னுந் திருமந்திரத்தினல் உணரப்படும்.

கண்ணெளிக்கும் சூரியனெளிக்கும் ஒளியினற் சம்பந்தம் உளதாதல்போல, அன்புருவமாகிய இன்பசிவத்துக்கும் பசுக்களாகிய நம்மனோருடைய அன்புக்கும் சம்பந்தம் உளதாம். இன்பசிவத்தைக் குறிக்கும் பிரமாணங்கள் வருமாறு:—

பரமானந்தப்பழங்கடல், திருவாசகம், திருவண்டப்பகுதி.

கருணைக்கடல், பிரார்த்தனைப்பத்து, 2.

பத்திக்கடலுட் பதித்தபரஞ்சோதி, திருத்தெள்ளேணம், 12.

ஈறிலாப்பதங்கள்யாவையுங்கடந்த வின்பமேயென்னுடையன்பே, கோயிற்றிருப்பதிகம், 1.

இன்னதென்றறியாத்தேனையானையைக் கரும்பினின்றேறலைச்சிவனை, திருச்சதகம், 38.

தேனேயமுதேகரும்பின்றெளிவே சிவனே, திருச்சதகம், 55.

தேனேயமுதேசிந்தைக்கரியாய், திருச்சதகம், 85.

தெண்ணீரமுதப்பெருங்கடலே, நீத்தல்விண்ணப்பம், 12.

கருணைவெள்ளத்தழுத்தி, திருவம்மானை, 5.

ஞானக்கரும்பின்றெளி, திருப்பொற்சுண்ணம், 15.

ஆனந்தவெள்ளத்தழுத்துவித்த, திருச்சாழல், 10.

மாளாவின்பமாகடலே, பிரார்த்தனைப்பத்து, 6.

கடலேயனையவானந்தங் கண்டாரெல்லாங்கவர்ந்துண்ண, பிரார்த்தனைப்பத்து, 7.

நீரின்பவெள்ளத்துணிந்தி, திருப்பாண்டிப்பதிகம், 3.

இன்பமே, பிடித்தபத்து, 10

பருகியநின்பரங்கருணைத்தடங்கடல், திருவேசறவு, 9.

காயத்துள்ளமுதூறவூறநீகண்டுகொள், சென்னிப்பத்து, 5.

அதுபழச்சுவையெனவமுதெனவறிதற்கரிதெனவெளிதென வமரருமறியார், திருப்பள்ளியெழுச்சி, 7.

நின்னருட்பெருங்கடலிற்றிளைத்துந்தேக்கியும் பருகியுமுருகேன், செத்திலாப்பத்து, 10.

நெல்லிக்கனியைத்தேனைப்பாலை நிறையின்னமுதையமுதின்சுவையை, புணர்ச்சிப்பத்து, 4.

## (அ) ஆன்மா இன்பசிவத்தை அடைதற்கு வேண்டப்படும் அன்பு சிவன் திருவருளினால் எய்தும்.

(35) நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ நமேதயாந பஹுநா
ச்ருதேந| யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ்தஸ்
யைஷ ஆத்மா வ்ருணுதே தநூம் ஸ்வாம்||

— கடம், உ. உ௩.

— முண்டகம், ௩. உ. ௩.

"இந்தப் பரமான்மா வேதாப்பியாசத்தினாலும், புத்தியினாலும், அநேக நூல்களை ஆராய்தலினாலும் கிட்டாது; எவனை அவர் (பரமான்மா) அருளுகின்றாரோ, அவனால் அவர் அடையப்படுகின்றார்; இந்தப் பரமான்மா தமது சொரூபத்தை அவனுக்குப் புலப்படுத்துகின்றார்" இப்பொருள்கொண்டு சிவதத்துவவிவேகம்

(36) த்வயி ச்ரத்தா நாத ப்ரவசநபலாந் நைவசுலபா
நமேதா பாஹுல்யாந் நச விவிதசாஸ்த்ரேஷுகடநாத்|
ப்ரஸாதாதேவைநாம் பவ தவ லபந்தே சுக்ருதிநஸ்
ததஸ்தே துர்த்தாந்தா: கதமிவ லபேரந் குமதய:||

உன்றிரு வடிக்கீ ழுறுதியா மன்பு முன்றிரு வருளினாற் கிடைப்ப, தன்றி நூல் பலவு மாய்ந்ததா லுரைசெ யளப்பருந் திறமையான் மதியான், மன்றவே கிடைப்ப தன்றுமற் றதனை மாதவஞ் செய்திலாக் கயமை, துன்றிய புலையோர் யாங்ஙனம் பெறுவார் சோதியே கருணைவா ரிதியே

என்று கூறிற்று. அத்திருவடியிலே வைக்கும் பக்தியானது

(37) அநேகஜந்மஸித்தாநாம் ச்ரௌதஸ்மார்த்தாநுவர்த்திநாம்|
விரக்தாநாம் ப்ரபுத்தாநாம் ப்ரஸீததி மஹேச்வர:||

— வாயுசங்கிதை, உத்தரபாகம், அ: உ௯.

"அநேக சென்மங்களிலே செய்துமுடித்த சிரௌதஸ்மார்த்தநெறிகளினின்றவர்களாய், விரக்தர்களாய், அறிவுடையவர்களாயுள்ளோர்க்கே சிவபெருமான் அருள்பாலிக்கின்றார்" என்றும்,

(38) ப்ரஸாதாதேவ ஸா பக்தி: ப்ரஸாதோ பக்திஸம்பவ:।
ப்ரஸாதே சதி ஸா பக்திர் யஸ்மாத் கரதலே ஸ்திதா॥

—வாயுசங்கிதை, உத்தரபாகம், அ: உஉ, உசு.

"அந்த அன்பானது சிவபெருமானுடைய அருளினால் எய்தும்; அந்த அருளினாலே அன்பு உளதாம்; அருள் உண்டாயபோதே முத்தியானது கரதலத்தில் எய்தியதுபோலாம்" என்றும்,

"ஆங்கவனருளாற்பக்திநன்குண்டாம் பக்தியாலவனருளுண் டாம், வீங்கியபக்திபற்பல பிறப்பில்வேதங்களுரைத்திடும்படி யே, தீங்கறுகருமமியற்றிய பவத்தாற்சிவனருள் செய்திடவரு மா, லோங்கியபக்தியாற் சிவதரும மொழிவறப்புரிந்திடப்படு மால்" என்றும் வாயுசங்கிதை கூறிற்று.

(39) அநாதி உலகசிருஷ்டியிற் சிவபெருமான் தாமே தல மும் தீர்த்தமுமாகிநின்றமையாற் றலவாசத்தினாலும், தீர்த்தப் பரிசமுதலியவற்றாலும், சிவலிங்கமுதலிய திருமேனியைத்தரிசி த்தலாலும், ஏனைய சிவபுண்ணியங்களைச் செய்தலாலும் அன் புளதாகும்; அப்போது சிவபெருமான் திருமேனிகொண்டு திரு வருள்பாலிப்பர்" என்றறியப்படுகின்றது.

(40) அன்பேயென் னன்பேயென் றன்பா லழுதரற்றி
யன்பேயன் பாக வறிவழியு-மன்பன்றித்
தீர்த்தந்தி யானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை
சாற்றும் பழமன்றே தான்.

"தீர்த்தமாடல், சிவார்ச்சனைசெய்தல், சிவத்தியானஞ் செய்தல் என்னும் மூன்றும் முறையே பூ, அரும்பு, காயாக முடிதலின், அன்பே பழமாக எய்தும்."

## (கூ) வியாபக அறிவாகிய மெய்யுணர்வு தலைப்படுங்கால் ஐம்புலன்கள் அடக்கப்படும்.

---

(41) உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

— திருக்குறள், உச.

"மெய்யுணர்வாகிய (மெய்ஞ்ஞானம் என்னும்) தோட்டியினற் பொறிகளாகிய யானைகள் ஐந்தனையும் தத்தம் புலன்கண்மேற் செல்லாமற் காப்பவன் எல்லா உலகிற்கும் மேலாகிய சிவலோகத்திற்கு ஓர் † வித்தாம்."

ஆனைகளைந்துமடக்கியறிவென்னு
ஞானத்திரியைக்கொளுவியதனுட்புக்
கூனையிருளறநோக்குமொருவர்க்கு
வானகமேறவழியெளிதாமே.

— திருமந்திரம், எட்டாந்தந்திரம், நின்மலாவஸ்தை, களரு.

என்றார் திருமூலநாயனார்.

தொண்டரஞ்சுகளிறும்மடக்கி, தேவாரம், திருக்கேதாரம்.
அஞ்சுமொன்றியாறுவீசி, திருவாரூர், ஞான, திருவிராகம், ச.
புலன்களைந்தாலாட்டுண்டுபோது போக்கிப்புறம்புறமேதிரியாதே, ஆரூர், நாவு, திருத்தாண்டகம், க0.
ஒன்றியிருந்துநினைமின்கள், கோயில், நாவு, திருவிருத்தம், உ.
ஒருநெறியமனம்வைத்துணர்ஞானசம்பந்தன், பிரமபுரம், ஞான, க0.

பத்திப்பேர்வித்திட்டேபரந்தவைம்புலன்கள்வாய்ப்
பாலேபோகாமேகாவரப்பகையறுவகைநினையா
முத்திக்கேவிக்கத்தேமுடிக்குமுக்குணங்கள்வாய்
மூடாவூடாநாலந்தக்கரணமுமொருநெறியாய்

— ஞான, திருத்தாளச்சதி, எ.

உள்ளமொன்றியுள்குவாருளத்துளான், ஆரூர், ஞான, திருவிராகம், சூ.

திருகுசிந்தையைத்தீர்த்துச் செம்மைசெய்து
பருகியூறலைப்பற்றிப்பதமறிந்து, ஆனைக்கா, நாவு, திருக்குறுந்தொகை, உ.

பொறிப்புலன்களைப்போக்கறுத்துள்ளத்தை
நெறிப்படுத்துநினைந்தவர்சிந்தையுள்

— திருக்கச்சியேகம்பம், நாவு, திருக்குறுந்தொகை, ச.

---

† இவ்வுலகத்திலே பிறந்திறந்து வாராமையால் அவன் சிவலோகத்திற்கு ஓர் வித்து எனக் கூறப்பட்டான்.

§ நிறைவுவேண்டுவீரறவனன்னியூர்
மறையுளான்கழற்குறவுசெய்மினே
— திருவன்னியூர், இ.

பிறையார்சடையண்ணல்மறையார்மருதரை
§ நிறையாணினைபவர்குறையாரின்பமே.
— திருவிடைமருதூர், ஞான, எ.

* சுருங்காவுணர்ச்சித்துடுப்பினைத்துழாவி, திருவொற்றியூர், பட்டினத்தடிகள்.

அடியார்க்கென்றும்வழிப்பகைகளிறே, எறிபத்தநாயனார், உ0.

புலனொன்றும்படிதவத்திற்புரிந்தநெறிகொடுத்தருள, தடுத்தாட்கொண்டபுராணம், அ0.

ஐம்புலனுகியவைவகுமொன்றி, தடுத்தாட்கொண்டபுராணம், கஉசு

புலன்கரணமேவியவோன்றுயினவால், ஆனாயநாயனார்புராணம், ௩சு.

தம்மையைந்துபுலனும்பின்செல்லுந்தகையார், சண்டேசுவரநாயனார்புராணம், உ.

மன்னியவந்தக்கரணமருவுதலைப்பாட்டினால், திருநாவுக்கரசுநாயனார்புராணம், சஉசு.

நாலுகரணங்களுமொன்றாய்நல்லறிவுமேற்கொண்டு, பெருமிழலைக்குறும்பநாயனார்புராணம், க0.

சிந்தையொன்றியநோக்கின்மிக்கவுணர்வுகொண்டு, காரைக்காலம்மையார்புராணம், சஅ.

ஒருப்படுசிந்தை, திருநாவுக்கரசுநாயனார்புராணம், உசச.

ஒன்றுமனத்தால், சிறுத்தொண்டநாயனார்புராணம், சுஉ.

ஒன்றியமெய்யுணர்வினொடு, பரமனையேபாடுவார்புராணம், உ.

தருக்கியவைம்பொறியடக்கியொருக்கியநெஞ்சுடையவர், திருவாரூர்ப்பிறந்தார்புராணம், உ.

மெய்ம்மையாகிலன்பர்தஞ்சிந்தைபோல் விளங்கியவணிகிளர்மணிவாயில், வெள்ளானைச்சருக்கம், ச0.

ஆலுமன்புடையசிந்தை, குங்குலியக்கலயநாயனார்புராணம், கஎ.

என்னும் நாயன்மார் திருவாக்குகளால், ஐம்புலன்களை வியாபகக் காட்சியால் ஒருநெறிப்படுத்தல் கூறப்பட்டது.

---

§ நிறை நிறைவு என்பன வியாபகப்பொருட்டு.

* சுருங்காவுணர்ச்சி - வியாபகக்காட்சி.

## (க0) நடனம்.

(42) சிவஞானபோதத்து முதலாஞ் சூத்திரத்தினுல் தாண்டவேசுவரர் ஆன்மாக்களுக்குத் தனுகரணாதிகளைக் கொடுத்தல் முதலிய சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியமானது **ஸ்தூலநடனம்** எனப்படும்.

ஐந்தாஞ் சூத்திரத்தினுல் அத்தாண்டவேசுவரர் சங்கற்பமாத்திரையானே பெத்ததசையில் முதலுபகாரமாக ஆன்மாக்களுக்கு அறிவிக்கும் தொழில் (ஆகிய ஊனநடனம் எனப்படும்) **அதிசூக்குமநடனம்** உணர்த்தப்பட்டது. இதுபற்றியே சிவஞானசித்தியார் "ஐந்துநலமிகுதொழில்களோடு **நாடகநடிப்பனுதன்**" என்று கூறிற்று.

பதினொராஞ் சூத்திரத்தினுல் ஆன்மாக்களுக்கு முத்திதசையிற் சிவன் சிவப்பொருளைக் **காட்டிக் கண்டுகோண்டு** நிற்றலாகிய **பரநடனம்** (**ஞானநடனம்**) உணர்த்தப்பட்டது.

## (கக) சிவபுண்ணியம்.

(43) அபூத்திபூருவம், புத்திபூருவம், உபாயச்சரியை, உபாயக்கிரியை, உபாயயோகம், உபாயஞானம், உண்மைச்சரியை, உண்மைக்கிரியை, உண்மையோகம், உண்மைஞானம் என்னும் பதின்வகைச் சிவபுண்ணியங்களுள்ளே ஒன்று **உண்மைஞானம்**. இவ்**வுண்மைஞானமானது** * சிவஞானபோதத்து இரண்டாஞ் சூத்திரத்தினுல் தத்துவரூபமும், ஐந்தினுல் தத்துவதரிசனமும், ஆறினுல் தத்துவசுத்தியும், ஏழினுல் ஆன்மரூபமும், எட்டினுல் ஆன்மதரிசனமும் சிவரூபமும், ஒன்பதினுல் ஆன்மசுத்தியும் சிவதரிசனமும், பத்திறைற் சிவயோகமும், பதினொன்றினுற் சிவபோகமுமாகப் பத்துவகைப்படும். படவே, துரியத்து அருணிலைக்குப்பின், துரியாதீதத்து வரும் சிவபோகம் சிவபுண்ணியமேயாம். இச்சிவபுண்ணிய சிவபோகம் இன்பமாகிய அன்பு நிலையேயாம்.

---

* இரண்டினிலைந்திலாறிலேழினிலெட்டுத்தன்னிற்
றிரண்டிரண்டொன்றதாகத்திகழொன்பான்பத்துத்தன்னி
லிரண்டிலாப்பேறுதன்னிலிருத்தியபத்தோடொன்றிற்
றிரண்டெழுமுபதேசங்கள்சிவஞானபோதஞ்சித்தி.

— திருவண்ணாமலை ஐயர் தசகாரியம்.

பக்தி, காதல், பரிவு, அன்பு என்பன இச்சைமீதூர்தற் பொருளவாகலின், அது பரமுத்தியில் உளதாம். பரமுத்தியில் இச்சை நிகழாதவழிச் சிவபோகம் அநுபவமாதல் செல்லாது. உடலை வளர்த்தற்குரிய சிறுபோகமாகிய நெற்போகத்துக்கு வயலிலே ஈரம் வேண்டப்படுமாறுபோலவும், அற்பபோகமாகிய சிற்றின்பத்துக்கு அன்பாகிய ஈரம் வேண்டப்படுமாறுபோலவும், ஆன்மாவுக்குச் சிவானந்தத்தை நீடித்து விளைக்கும் பரபோகமாகிய பேரின்பசிவபோகத்துக்கும் அன்பாகிய ஈரம் இன்றியமையாததாயிற்று.

## (கஉ) சிவபோகம்.

(44) த்ருசோ தர்சயிதா சாத்மா தஸ்ய தர்சயிதா சிவ:।
தஸ்மாத் தஸ்மிந் பராம் பக்திம் குர்யாதாத்மோபகாரகே॥
— சிவஞானபோதம், கக.

"கண்களுக்கு (உருவத்தைக்) காட்டுபவனும் அவற்றோடு ஒற்றித்துநின்று காண்பவனும் ஆன்மாவேயாம்; (அதுபோல) அவ்வான்மாவுக்குச் (சிவவிஷயத்தைக்) காட்டுபவனும், (அவ்வான்மாவோடு ஒற்றித்துநின்று) காண்பவனுஞ் சிவனே; ஆகலின், ஆன்மாவுக்கு உபகாரியாம் அவரிடத்தில் (ஓர்காலும் மறவாத) பேரன்பைச் செய்க."

(45) காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண வுள்ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.
— சிவஞானபோதம், கக.

"காட்சியையுடைய கண்ணுக்கு (உருவத்தைக்) காட்டிக் (காண்கின்ற) ஆன்மாப்போல, (ஆன்மாவானது) சிவவிஷயத்தைக் காணுமாறு அவ்வான்மாவுக்குச் (சிவபிரான்) காட்டியும் கண்டும் நிற்றலின் * மறவாத அன்பினாற் சிவபிரான் திருவடியைத்தலைப்படும்."

(46) இஃது என் சொல்லியவாறோ எனின், ஆன்மாவையின்றியமையாத கண்ணானது ஓர் உருவத்தைக் காணும்போது ஆ

* மறவாத என்றமையினாற் பேரறிவாகிய ஞானமும், அன்பினால் என்றமையினாற் பேரிச்சையும், சேலும் (தலைப்படும்) என்றமையினாற் பெருங் கிரியையும் பெறப்படும்.

ன்மபோதம் கண்ணொளி எனத் தானெனப் பேதமில்லாமல் உடனாய்க் கலந்துநின்று கண்ணுக்குக் காட்டிய வடிவத்தைக் கண் கண்டதென்றும், கண்ணை அதிட்டித்துநின்ற ஆன்மாக் கண்டதென்றும் பிரித்தறியப்படாமற் கண்ணொளிக்காட்சியும் ஆன்மபோதமும் ஒன்றையொன்று விடாமல் ஒருங்கே நிகழும்;

இந்த முறையே முதல்வனையின்றியமையாத ஆன்மாவானது ஒரு விஷயத்தை அறியும்போது சிவபிரானுடைய சிற்சத்தி ஆன்மசிற்சத்தி எனத் தானென வேறுபாடின்றிக் கலந்து நிற்பச் சிவபிரானும் ஆன்மாவில் அவ்வாறே கலந்து நின்று அறிவித்துநின்று அறிவித்த விஷயத்தை ஆன்மா அறிந்ததென்றும் ஆன்மாவை அதிஷ்டித்துநின்ற தாம் அறிந்தேம் என்றும் பிரித்தறியப்படாமல், இருவகை அறிவும் ஒன்றையொன்று விடாமல் அத்துவிதமாய் ஒருங்கே விடயித்துச் செல்லுமாறு செய்துவரும் இவ்வுபகாரம் பெத்தகாலம் முத்திகாலம் இரண்டினும் ஒருதன்மையதாய் இருக்கும்;

ஆகலின், ஏனையவற்றையெல்லாம் விடுத்துச் சிவபிரானிடத்து (நின்மலதுரியத்தில்) ஏகனாகி அவனருளாலின்றி ஒன்றையுஞ் செய்யானாய் நின்ற ஆன்மா, சிவபிரான் அவ்வாறு அத்துவிதமாய் உடனின்று அருளினாலே உபகரித்துவரும் உரிமையை (அயராமையானாய பேரறிவினால்) நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அப்பொருளின்கண்ணே (சிவப்பொருளின்கண்ணே) செல்லும் இச்சையானது மேற்படுதலின், அவ்விச்சையே (அயராமையானாய பேரன்பே) தானாக விளங்கித் தோன்றும் பேரானந்தத்தை ‡ அநுபவிக்கப்பெறும்.

(47) காலமுண்டாகவேகாதல்செய்துய்மின்கருதரிய
ஞாலமுண்டானொடுநான்முகன்வானவர்நண்ணரிய
ஆலமுண்டானெங்கள்பாண்டிப்பிரான்றன்னடியவர்க்கு
மூலபண்டாரம்வழங்குகின்றான்வந்துமுந்துமினே.

— திருவாசகம்.

---

‡ பேரறிவு (அயராமை), பேரிச்சை (பேரன்பு), அநுபவிக்கப்பெறும் (பெருங்கிரியை) என்னும் மூன்றும் இம்முறையானே முதல்வனை ஒருங்கே விடயிக்குமாறு விளக்கப்பட்டது.

வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபி
னீண்டியற் பால பல.

— திருக்குறள்.

"(எல்லாப் பொருள்களையும் துறத்தலால் ஒருவர்க்கு இம்மைக் கண்ணே உளவாம் முறைமையையுடைய இன்பங்கள் பல; அவ் வின்பங்களை வேண்டின், அப்பொருள்களைக்) காலம் பெறவே துறந்து, சிவபெருமானிடத்து அன்பு செய்து உய்யுங்கள்; நினைத்தற்கரிய பூவுலகத்தை உண்டவராகிய நாராயணரோடு பிரமதேவரும் தேவர்களும் அடைதற்கரிய ஆலாகலவிஷத்தை எங்கள் பாண்டிப்பெருமானாகிய சோமசுந்தரக்கடவுள் உண்டார்; தமது அடியார்களுக்கோ எனின், அகண்டாகார சிவயோக பேரின்பத்தை வழங்குகின்றார்; (ஆகலின் அதனை நுகருமாறு விரைந்து) வந்து முற்படுங்கள்" என்று மாணிக்கவாசகசுவாமிகளும்,

(48) காக முறவு கலந்துண்ணக்
கண்டீ ரகண்டா காரசிவ
போக மெனும்பே ரின்பவெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமா
யேக வுருவாய்க் கிடக்குதையோ
வின்புற் றிடநா மினியெடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேர வாருஞ் செகத்தீரே.

— தாயுமானசுவாமிபாடல்.

"காகமானது (உணவொன்றைத்) தன்னினமாகிய காகங்களோடு கலந்து புசிக்கக் கண்டீர்களன்றோ; ஆகலின், அகண்டாகாரசிவ போகம் என்னும் பேரின்பவெள்ளமானது பொங்கித்ததும்பிப் பூரணமாய் ஏகவுருவாய்க் கிடக்கின்றது; ஐயோ! பிறந்த தேகம் நழுவுதற்கு முன்னர், இனி நாம் பேரானந்தமடையுமாறு அந்தப் பேரின்பவெள்ளத்தினை முகந்து பருகுதற்கு உலகத்தீரே! ஒருங்கே வாருங்கள்" என்று தாயுமானசுவாமிகளும் அழைக்கின்றார்கள்.

## (கங) சிவகாமித்தாயார் நடேசரது திருநிருத்தத்தைக் காண்டலின் காரணம்.

(49) சிவத்தைக் காட்டிக் காணுதலின் எய்தும் பரமானந்த சிவபோகத்தை அபக்குவர்களாகிய ஆன்மாக்கள் அநுபவிக்க இயலார் என்றோர்ந்தே, எங்கள் உலகமாதாவாகிய சிவகாமித் தாயார் பஞ்சப்பொறிகளையும் ஒருவழிப்படுத்தும் "ஒருமையாளர் வைப்பா"கிய சிதம்பரத்தில் எக்காலமும் ஆனந்தநடேசரது நடனத்தைப் பார்த்துக்கொண்டு நிற்பாராயினர்; இது சிறுபாலரின் பிணிநீக்கத்தின்பொருட்டுத் தாயார் மருந்து உண்பது போலாம். அம்மையார் அங்ஙனம் கண்டுகொண்டு நிற்கின்றாரென்பது, "பரந்தபராபரையாதி" என்ற செய்யுளில் "மணிமன்றுளாடல்காணுமன்னையருட்பாதமலர் சென்னிவைப்பாம்" என்னுஞ் சிவப்பிரகாசத்தானும்,

(50) இளங்குழவிப்பிணிக்கின்றதாய்மருந்துநுகர்வதுபோலிருளின்மாண்ட, களங்குலவுமலமுயிர்கட்கொழியவருணடங்காணுங்கடன்மீக்கொண்டு, வளங்குலவுதனதுபெருங்கற்புமொருகணவரிறைமாண்புந்தோன்ற, விளங்குமிரணியமன்றினின்றருளுமணிவிளக்கைவிளம்பிவாழ்வாம்.

என்னும் திருவானைக்காப்புராணத்தானும் அறியப்படும்.

சிவஞானபோதத்துப் பதினொராஞ் சூத்திரத்திற் சொல்லப்பட்டவாறு, நின்மலதுரியநிலையில் எய்தும் அருள்விளக்கத்துக்குப் பின், துரியாதீதத்துச் சிவபோக ஆனந்தவிளக்கம் உளதாம். அங்ஙனம் பெரியபுராணத்தில் மெய்யுணர்வுக்குப் பின் சிவபோகம் எய்துவதாகக் கூறப்பட்டிருக்கின்றது. அது ‡ உணர்வுநேர் பெறவருஞ்சிவபோகம் என்றமையினால் அறியப்படும்.

## (கச) சிவபோகமும் ஆனந்தக்கூத்தும் ஒன்று.

(51) மெய்யுணர்வு உரன் எனப்படும். ஆகலின் "† உரனுறு திருக்கூத்து" என்றது மெய்ஞ்ஞானமாகிய மெய்யுணர்வின்கண்ணே

‡ திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம், கஅக.
† ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணம், ககச.

வரும் கூத்து எனப் பொருட்படும். அங்ஙனம் "§ வவ்வியஃமெய் யுணர்வின்கண்வருமானந்தக்கூத்து" எனவும், "* பூண்டவைம் புலனிற்புலப்படாவின்பம்புணர்ந்துமெய்யுணர்வினிற்பொங்க" எனவும் கூறப்பட்டது. மெய்யுணர்விற் பொங்கிய ஐம்புலனிற் புலப்படா இன்பம் என்றது திருக்கூத்தின் மேற்றும். மெய்ஞ் ஞானமாகிய அருள்விளக்கமே மெய்யுணர்வாகும். அதன்பின் னிகழ்ந்த கூத்தே சிவபோகமாகும். அது [] "விண்ணுயகன் கூத்துவெட்டவெளியேதிளைத்து" என்றமையால் "திருக்கூத்தைச் (சிவபோகத்தை) திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் நின்மலதுரியாதீதத்திலே துய்த்து" என அறியப்படுகின்றது.

## (கரு) மெஞ்ஞானிகளுக்குச் சிவலிங்கமுதலிய திருமேனிகளிற் சிவம் வெளிப்பட்டருளுதல்.

(52) ஆலயங்கடோறும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர்முதலிய சைவசமயஸ்தாபனுசாரியர்களாகிய மெய்ஞ்ஞானிகள் போய்ச் சிவலிங்கமுதலிய திருமேனிகளைத் தரிசித்தார்களே; அவர்கள் வழிபாட்டுக்கும் ஏனையோர் வழிபாட்டுக்கும் பேதம் என்னை எனிற் கூறுதும்:—

சரியையாளர்க்குச் சிவபிரான் சிவலிங்கமுதலிய திருமேனிகளில் வெளிப்படாது நின்றருள்செய்வர். அன்புமாத்திரையால் வழிபடும் ஞானிகளுக்குக் கன்றைநினைந்த புனிற்றுவின் முலைப்பால்போல, கருணைமிகுதியாற் சிவபிரான் அவ்வன்பேதாமாக எப்போதும் அச்சிவலிங்கமுதலியவைகளிலே வெளிப்பட்டுநின்றருள்செய்வர். இது "இருஞ்சுரபிக் கெங்குமுருக்காணவொண்ணுதபால்விம்பி யொழுகுவதுபோல் வெளிப்பட்டருளுவனன் பர்க்கே" என்னுஞ் சிவஞானசித்தியார்ச் செய்யுட்பாகத்திஞல் அறியப்படும். ஆகலின், சிவாயைங்கடோறுஞ் சிவலிங்கப்பெருமானைத் தரிசனஞ்செய்துகொண்டுவந்த திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர் "† உமைதழுவக்குழைந்தவரைப்பருகிய மெய்யுணர்

§ திருமூலநாயனுர்புராணம், எ.

* ஏயர்கோன்கலிக்காமநாயனுர்புராணம், கo.

[] திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர்புராணம், கசகூ.

† திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர்புராணம், கூகஎ.

வினேமே பாவியேபுறத்தனைந்தார்" என்றும், திருநாவுக்கரசுநாயனர் "[] எய்தியபேரானந்தவின்பத்தினிடைமூழ்கி" என்றும், "§முன்புகண்டு கொண்டருளினாமுதுண்ண மூவாவன்புபெற்றவர்" என்றும், சுந்தரமூர்த்திநாயனர் "*இரண்கேண்ணுலுமம்பொற் புற்றினிடையெழுந்த செந்தண் பவழச்சிவகொழுந்தினருளைப்பருகித்திளைக்கின்றார்" என்றும், "‡திருமூலட்டானஞ்சேர் பிஞ்சகனைப்பருகாவின்னமுதத்தைகண்களாற் பருகுதற்கு" என்றும், "†வலங்கொண்டுதிருமுன் வணங்கிப் பருகாவின்னமுதத்தைக் கண்களாற்பருகினார்" என்றும் கூறப்படலான், வியாபகமாகிய மெய்யுணர்வோடியைந்த இரு கண்களானும் அந்தக்கரணங்கள் களிகூரப் பருகித் திளைந்தார் என உணரப்படும். இதுபற்றியே திருக்களிற்றுப்படியார் முன்வருமாறு கூறுகின்றது.

(53 கண்ணுங்கருத்துங்கடந்ததொருபேறேயுங்
கண்ணுங்கருத்துங்களிகூர—நண்ணி
வடமடக்கிநிற்கும்வடவித்தேபோல
வுடனடக்கிநிற்பார்கள்காணுற்று.

"கண்களுக்கும் மனசுக்கும் எட்டாத பெரிய சிவப்பேறுயிருப்பினும், கண்களும் அந்தக்கரணங்களும் ஆனந்தமடையுமாறு சிவத்துடனே இரண்டறப்பொருந்தி, ஆலவிருக்ஷமுழுதையும் தன்னுள்ளே அடக்கிநிற்கும் அதன விதைபோல, ஞானிகள் தமக்குள்ளே கரணங்களனைத்தையும் அடக்கிநிற்பார்கள்.

ஐம்பொறிகளை அடக்கி ஒருவழிப்படுத்திய அருள் வியாபகத்தோடு கூடிய கண்களால், அந்தக்கரணங்கள் களிகூரச் சிவானந்தத்தைப் பருகி ஆனந்தமுடையராயினர் என்று கூறப்பட்டது.

(54) இற்றைக்கு முன்னூறு வருஷங்களுக்குமுன்னே பாண்டிநாட்டிலே, தாமிரபர்ணிநதிதீரத்திலே, ஸ்ரீவைகுண்டம் என்று வழங்குகின்ற கைலாசபுரத்திலே, வேளாளர்குலத்திலே, சிவபக்தியிற் சிறந்தவரும் இல்லறவொழுக்கத்திலே

[] திருநாவுக்கரசுநாயனர்புராணம், ௪0௪.
§ திருநாவுக்கரசுநாயனர்புராணம், ௩அ௧.
* ஏயர்கோன்கலிக்காமநாயனர்புராணம், ௩௧௧.
‡ ஏயர்கோன்கலிக்காமநாயனர்புராணம், ௩0அ.
† ஏயர்கோன்கலிக்காமநாயனர்புராணம், ௩௬௪.

வழுவாதவருமாகிய சண்முகசிகாமணிக்கவிராயர் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் புத்திரப்பேறில்லாமையால் தமது மனைவியாராகிய சிவகாமிசுந்தரியாரோடு கவலையடைந்து, திருச்செந்தூர் முருகக்கடவுளை உபாசித்தார். அக்கடவுளுடைய திருவருளினாலே ஓர் புத்திரர் அவதரித்தார். பிறந்தும் ஐந்து வயசாகியும் அவர் பேசாது ஊமையாயிருக்கக் கண்டு, பின்னும் வதனாரம்பத்திலே ஸ்நானஞ் செய்து செந்திநாதசுவாமியைத் திரிகாலங்களினும் தரிசித்து வழிபட்டுவந்தார். முருகக்கடவுள் சண்முகவிலாசத்திலே அவர் புத்திரரிடத்தெழுந்தருளி "குமரகுருபரா" என்று தட்டி எழுப்பி, அவருடைய நாவிலே தம்முடைய ஷடாக்ஷரத்தை எழுதிவிட அவருடைய திருவருளினாலே தமிழ்ச்செய்யுள்பாடுஞ் சத்தி உண்டாகப்பெற்று, கந்தர் கலிவெண்பா என்னும் ஓர் பிரபந்தத்தை அருளிச்செய்தார். திருக்கோயிலை அடைந்து சுவாமியைத் தரிசித்து இனி ஞானாசாரியரைப் பெறவேண்டும் என்னும் விருப்பத்தோடு, அவர் திருவடிகளைத் தியானிக்கும்போது, அக்கடவுளுடைய திருவருளினால், ஆகாயத்திலே "அன்பனே! நீ உத்தரதேசயாத்திரை செய்யுங்கால், எவ்விடத்திலே உன்வாக்குத் தடைப்படுமோ, அவ்விடத்திலே ஞானோபதேசம் பெறக்கடவை என ஓர் அசரீரி வாக்கு எழுந்தது. ஸ்தலயாத்திரை செய்யுங்கால் வேதசிவாகமவிற்பன்னர்களும் சைவாசாரியர்களும் பிறரும் புடைசூழும்படி தருமபுரவாதீனத்தில் நான்காவது குருமூர்த்திகளாயிருந்த ஸ்ரீமாசிலாமணிதேசிகர் எழுந்தருளியிருந்தகாலத்திற் குமரகுருபரசுவாமிகள் விருதுகளோடும் அத்திருமடத்தினுள்ளே சென்று உத்தரீயத்தோடு ஆசனத்தின்மீதிருந்தார். அப்போது மாசிலாமணிதேசிகராற் பொறிக்கப்பட்ட வினாக்கள் பலவற்றுக்கும் உத்தரஞ் சொல்லிக்கொண்டுவந்தார். மாசிலாமணிதேசிகர் திருத்தொண்டர் பெரியபுராணத்தில் "ஐந்துபேரறிவு" என்றற்றொடக்கத்த திருவிருத்தத்தின் அநுபவப்பயனை வினவ, வாக்குத் தடைப்பட்டது. உடனே சுவாமிகள் இருக்கை விட்டெழுந்து ஆசனத்தை எடுத்தெறிந்துவிட்டு உத்தரீயத்தை இடையிலே கட்டிக்கொண்டு சந்நிதானத்திலே சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, எழுந்துநின்று

அஞ்சலியஸ்தராய்ச் சுவாமீ, ஆணவமலத்தினால் மறைக்கப்பட்ட தமியேன் அறியாமையாற் செய்த பெருங் குற்றத்தை மன்னித்து, என்னை அடிமைக்கொள்ளவேண்டும் எனப் பிரார்த்தித்தார். அப்பெரியபுராணச்செய்யுள் வருமாறு:—

(55) ஐந்துபே ரறிவுங் கண்களே கொள்ள வளப்பருங் கரணங்க ணான்குஞ், சிந்தையேயாகக் குணமொரு மூன்றுந் திருந்து சாத்துவிகமே யாக, விந்துவாழ் சடையா னாடுமானந்த வெல்லையி றனிப்பெருங் கூத்தின், வந்துபே ரின்ப வெள்ளத்துட் டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

(56) இத்திருச்செய்யுளில் "ஐந்து பேரறியும் கண்களே கொள்ள" என்பதை "ஐந்து அறிவும் பேர் கண்களே கொள்ள" எனவும், "அளப்பரும் கரணங்கள் நான்குஞ் சிந்தையேயாக" என்பதைக் "கரணங்கள் நான்கும் அளப்பருஞ் சிந்தையேயாக" எனவும் அந்நுவயிக்க.

(57) கண்முதலியன புத்தீந்திரியம் எனப்படும்; புத்தியானது அறிவு ஜீவித்தற்கும், சிந்தை அல்லது மனமானது அன்பு ஜீவித்தற்கும், குணமானது செயல் (கிரியை) ஜீவித்தற்கும் இடம் என்று ஞானசாஸ்திரம் கூறுகின்றது. கூறவே விரிந்த அறிவும் (வியாபக அறிவும்), விரிந்த அன்பும், விரிந்த செயலும் பெறப்பட்டன.

(58) ஐந்து (புலனையும்) அறிவையும் பெரியகண்களே கொள்ள, அஃதாவது, ஐம்புல அறிவையும் * விரிந்த அறிவோடு (சேர்ந்த இரு) கண்களே (தம்முள் ‖ அடக்கிக்) கொள்ள;

கரணங்கள் நான்கும் அளப்பருஞ் சிந்தையேயாக—அந்தக் கரணங்கள் நான்கும் விரிந்த அன்பேயாக;

குணம் ஒரு மூன்றும் திருந்து § சாத்துவிகமே ஆக-சாத்துவிகமுதலிய ஒப்பில்லாத குணங்கள் மூன்றும் விரிந்த கிரியையே ஆக, (எனவே, இங்ஙனம் மெய்யுணர்வு எனப்படும் மெய்ஞ்ஞானம் தலைப்படவே)

---

* சிவஞானசித்தியார் ௫-ம் சூத்திரத்து அ-ஞ் செய்யுளில், விரிந்த அறிவு "விரிந்திடும் அறிவின்" மேற்றாய், வியாபக அறிவை உணர்த்தும்.

‖ "அகனமர்ந்தவன்பினராய்" என்ற தேவாரத்தில் "ஐம்புலனுமடக்கிஞானப்புகலுடையார்தம்முள்ளப்புண்டரிகத்துள்ளிருக்கும் புராணர்" என்றமையால், ஐம்புலன்களும் அடக்குமிடத்து எய்துவர் சிவபிரான் என்பது பெறப்பட்டது.

§ சாத்துவிககுணமே.

இந்து வாழ்சடையான் ஆடும் ஆனந்த எல்லையில் தனிப் பெரும் கூத்தின் வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்-ஞானசந்திரன் வாழ்கின்ற சடையினையுடைய நடேசப்பெருமான நடனஞ் செய்கின்ற பரமானந்தத்தின் எல்லையில்லாத ஒப்பிறந்த பெரிய கூத்தினாற் பேரின்ப வெள்ளத்திலுள்ளே திளைத்து வேறுபடாத ஆனந்தத்தினால் மலர்ந்தார். எ-று.

## (கசு) விரிந்த அறிவு

அந்தமிலாவறிவுடைார், தண்டியடிகணாயனார்புராணம், அ.

அப்பதியில்வாழ்பெரியோருள்ளம்போல வோங்குநிலைத்தன்மையதாய், திருக்குறிப்புத்தொண்டநாயனார்புராணம், அஅ.

§ மருவியபிறவியாற்றின்மாதவர்மனஞ்சென்றற்போல், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம், அசசு.

அறிவினெல்லையாயதிருத்தில்லையெல்லை, சேரமான்பெருமாணாயனார்புராணம், சுக.

ஞானவரம்பின்றலைநின்றார், முருகநாயனார்புராணம், ரு.

தில்லைவட்டந்திசைதொழுவார்வினை, கோயில், நாவு.

பரவுந்தில்லைவட்டத்துப்பயில்வார், சேரமான்பெருமாணாயனார்புராணம், ருகூ.

திண்ணியவுணர்வு, ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணம், அஎ.

என்பவைகளால் விரிந்த அறிவு பெறப்படும்.

## (கஎ) விரிந்த அன்பு.

அன்பராலினசிந்தைபோலவலர்ந்தனகதிர்களெல்லாம், பெரியபுராணம், திருநாட்டுச்சிறப்பு, உக.

* ஆலுமன்புடையசிந்தை, குங்குலியக்கலயநாயனார்புராணம், கஎ.

சிந்தைமலரச் செவ்வியுணர்வுசிறந்ததால், சண்டேசுவரநாயனார்புராணம், கரு.

அன்பினுக்களவுகாணார், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம், ருஅரு.

என்பவற்றால் விரிந்தஅன்பு அறியப்படும்.

---

§ பெரியோருடைய மனம் ஏகதேசக்காட்சியிற் செல்லாது, வியாபக அறிவிற் செல்லும் என்பது.

* ஆலுதல் விரிதல்.

(59) ஓங்கிய அறிவும், ஓங்கிய அன்பும், ஓங்கிய செயலும், (மெய்யுணர்வு எனப்படும் மெய்ஞ்ஞானத்தினால்) தலைப்படுங்காற் சிவபோகமாகிய ஆனந்தக்கூத்து எய்துவதாக மேலே கூறப்பட்டது.

(60) மேலே திருக்களிற்றுப்படியார் கூறியவாறு, பெரிய, விரிந்த, ஓங்கிய, வியாபக அறிவோடு கூடிய இரு கண்களாலும் ஆனந்தக்கூத்தில் எய்திய பேரின்பவெள்ளத்தைத் திளைத்துப் பருகினர் என்று கூறப்பட்டது.

(61) ஏகதேசத்திற் செல்லும் புறக்கண்களால் ஆனந்த நடன இன்பத்தைப் பருக இயலாது. ஆகலின், கந்தபுராணத்துத் திருநகரப்படலத்திலே "ஐம்புலனொருங்குறநடாத்தியதொண்டர்" என்றமையினால், மெய்யுணர்வெனப்படும் மெய்ஞ்ஞானம் தலைப்பட்டவிடத்து, ஐம்புலன்களும் ஒருநெறிப்பட அடக்கப்பட்டொழியும்.

(62) "அவற்றை (ஐம்பொறிகளை) ஒருங்குற நடாத்தல்" என்றது ஓர் பொறிவழியே புலன் செல்லும்போது, மற்றைப் பொறிகள் நான்குஞ் செயலற்றிருத்தல்" என்று பருத்தித்துறைக் கந்தபுராணவுரையாசிரியரால் கூறப்பட்டிருக்கின்றது. ஒருபொறிவழியே புலன் செல்லுங்கால், மற்றைப் பொறிகள் செயலற்றிருத்தல் எவர்க்குந் தெரிந்தவிஷயமேயாம். இதனால் எய்திய விசேஷம் ஒன்றும் இன்றாம்.

## (கஅ) சன்மார்க்கம், பக்திமார்க்கம்.

உள்ளும்புறம்புநினைப்பொழியினின்னிடையே
வள்ளலெழுந்தருளிமாதினொடும்-தெள்ளி
யறிந்தொழியாயன்றியேயன்புடையையாயிற்
செறிந்தொழிவாயேதேனுஞ்செய்.

(63) உகூ-ம் பிரிவுரையிற் கூறப்பட்டவாறு, உள்ளும் புறம்பும் நினைப்பற்றாற் பரம்பொருள் உன்னிடத்திலே உமையம்மையாரோடு எழுந்தருளும்; அந்த நினைப்பொழியுமாறு, குருவருள் பெற்று, மெய்ஞ்ஞானத்தைத் தலைப்பட்டு, சன்மார்க்கமுறை ஒழுகி, அந்த நினைப்பை ஒழிக்க; அதுவன்றி அன்பு செய்யவருமாயின், சிவபெருமானிடத்து அன்பு செய்து, சிவத்தி

டைச்செறிந்து, அந்த நினைப்பை ஒழிக்கவுமாம். இந்தச் சன்மார்க்கநெறி அன்புநெறி என்னும் இரண்டனுள் இயன்ற தொன்றைச் செய்க.

இவ்விரண்டு மார்க்கங்களினும் அன்பே இன்பமாய் முடியும்.

## (கக) அன்பே இன்பம்.

இறவாதவின்பவன்புவேண்டி, காரைக்காலம்மையார்புராணம், சுo.

முடிவிலாவின்பமானவன்பினையெடுத்துக்காட்ட, கண்ணப்பநாயனார்புராணம், கOஉ.

அன்பாலின்புறுகுணம், திருநாவுக்கரசுநாயனார்புராணம், கசுசு.

அன்புபோங்கவானந்தக்கண்ணீர்மழைதூங்க, திருநாவுக்கரசுநாயனார்புராணம், ௩அஎ.

நீடுபூசனைநிரம்பியுமன்பினானிரம்பார், திருநீலநக்கநாயனார்புராணம், கO.

அன்பினுக்களவுகாணானந்தவெள்ளமூழ்கி, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம், ருஅரு.

ஈசனையேபணிந்துருகியின்பமிகக்களிப்பெய்தி, பத்தராய்ப்பணிவார்புராணம், சு.

என்பவற்றால் அன்பே இன்பம் என்பது அறியப்படும்.

(64) சன்மார்க்கநெறியால் எய்திய சிவபோகம் சா-ம் பிரிவு முதலியவைகளால் உணர்த்தப்பட்டது.

## (உo) இரு மார்க்கங்களையும் உணர்த்துஞ் செய்யுட்கள்.

(65) அறிவானுந்தானேயறிவிப்பான்றானே
யறிவாயறிகின்றான்றானே—யறிகின்ற
மெய்ப்பொருளுந்தானேவிரிசுடர்பாராகாச
மப்பொருளுந்தானேயவன்.

— அற்புதத்திருவந்தாதி; உo:

(66) ஈண்டு அறிவிப்பான்றானே என்றதும், அறிவாய் அறிகின்றான்றானே என்றதும் சிவஞானபோதத்துப் பதினொராஞ் சூத்திரத்திற் கூறப்பட்டவாறு, காட்டிக்காணுதலின் மேற்று. காணுதலா

கிய அறிவாய் அறிதல் சிவமாகிய விஷயத்தில் ஆன்மாவை அழுந்துவித்தலின்மேற்று. இதனாற் சன்மார்க்கநெறி உணர்த்தப்பட்டது.

(67) ஆர்வல்லார்காணவரனவனையன்பென்னும்
போர்வையதனாலேபோர்த்தமைத்துச்—சீர்வல்ல
தாயத்தானுமுந்தனிநெஞ்சினுள்ளடைத்து
மாயத்தால்வைத்தோமறைத்து.

— அற்புதத்திருவந்தாதி, கூகூ.

(68) ஈண்டு ஆன்மாவுடைய ஞானமும் கிரியையுமாகிய அறிவு செயல்கள் இழத்தலால் எய்துவது அன்புப்போர்வை. இந்த அன்பினுள்ளே அன்புருவமாகிய சிவத்தை அன்பர்கள் கொண்டு இன்பமார்வர். இங்ஙனம் காரைக்காலம்மையார் இரு மார்க்கங்களையும் எம்போலிகள் உய்யும்பொருட்டு உணர்த்தியருளினர்.

(69) ஏதுக்களாலுமெடுத்தமொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டாசுடர்விட்டுளனெங்கள்சோதி
மாதுக்கநீங்கலுறுவீர்மனம்பற்றிவாழ்மின்
சாதுக்கண்மிக்கீரிறையேவந்துசார்மின்களே.

— தேவாரம்.

(70) மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்று மென்ப
தாதிச் சுடர்சோ தியையன்பி னகத்துள் ளாக்கிப்
போதித்த நோக்குற் றொழியாமற் பொருந்தி வாழ்ந்து
பேதித்த பந்தப் பிறப்பின்னெறி பேர்மி னென்றும்.

— பெரியபுராணம்.

(71) சிவத்தை அன்பினகத்துட் கொள்ளுமாறு திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரால் அறிவுறுத்தப்பட்டது. தன் அறிவும் தன் சேயலும் இழக்கும்போது உண்டாகும் † அன்பு மெய்யன்பாகும். சிவத்தை அம்மெய்யன்பினுள்ளே கொண்டு இன்பமார்ந்து வாழ்ந்து பிறவியறுக்குமாறு சொல்லப்பட்டது.

---

† அறிவுசெயலிழத்தலால் துன்பமும், அதனாற் றுன்பக்கண்ணீரும் எய்துவது 84, 85-ம் பிரிவுகளிற் காட்டப்படும்.

(72) "அன்படைத்தேம்பெருமானையறிகிலார்" எனவும், "அன்பினுள்ளாகியமருமரும்பொருள்" எனவும், "பத்தர்தம்பத்தியிற் பாற்படினல்லதுமுத்தினையார்சொலமுந்துகின்றாரே" எனவும் திருமூலநாயனாரால் அருளிச்செய்யப்பட்டது.

(73) அறிவுசெயல் இழந்துநிற்றலால் அன்பு தலைப்படும் என்பது

அயர்த்தெழுமன்புபொங்க, குங்குலியக்கலயநாயனார்புராணம், கரு.
மெய்ம்மறந்தமெய்யன்பர், மானக்கஞ்சாறநாயனார்புராணம், ருஉ.
அறிவுமறந்தியானென்செய்கேன், திருக்குறிப்புத்தொண்டநாயனார்புராணம், கஉஉ.
நிலையழிந்தசிந்தையராய், அப்பூதியடிகணாயனார்புராணம், கரு.
நிறையழிந்தவுள்ளத்தால், இடங்கழிநாயனார்புராணம், கூ.
செய்வதொன்றுமறியாது, வெள்ளானைச்சருக்கம், கள.
அவிழ்ந்தமனத்தாலவிழ்க்க, திருக்களிற்றுப்படியார்.
தாழ்ந்தமனமுடையாள், திருக்களிற்றுப்படியார்.
அறிவழியுமன்பன்றி, திருக்களிற்றுப்படியார்.
என்பவற்றால் உணரப்படும்.

(ககூ) சன்மார்க்கமுறையினல் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் மெய்யுணர்வையும், அம்மெய்யுணர்வுட்பொருந்திய கூத்தையும் ஒருங்கு தரிசித்தாரென்பது.

---

(74) அண்ண லார்தமக் களித்தமெய்ஞ் ஞானமே யானவம் பலமுந்த, முண்ணி றைந்தஞா னத்தெழு மானந்த வொருபெருந் தனிக்கூத்துங், கண்ணின் முன்புறக் கண்டுகும் பிட்டெழுங் களிப் பொடுங் கடற்காழிப், புண்ணி யக்கொழுந் தனையவர் போற்றுவார் புனிதரா டியபொற்பு.

— திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம், கசுo.

மெய்ஞ்ஞானமே யானவம்பலமும் என்றமையால் அருள்விளக்க ஸ்தானமாகிய துரியமும், ஒருதனிக்கூத்தும் என்றமையினல் அவ்வருள் விளக்கத்தின் பின்னுகநிகழும் துரியாதீதத்துச் சிவபோகம் எனப்படும் தனிக்கூத்துமாகிய இரண்டும் ஒருங்கு நிகழப் பெற்றார்.

(உ0) அன்புமார்க்கமுறையினல் திருஞானசம்பந்தமூர்த்திநாயஞர் அன்பின் மெய்ம்மையுருவாகிய கண்ணப்பநாயஞரையும் அவ்வன்பினுள்ளே அமரும் விமலாரகிய சிவத்தையும் உடன்கண்டாரென்பது.

---

(75) உள்ளத்திற் றெளிகின்ற வன்பின் மெய்ம்மை யுருவி னையு மவ்வன்பி னுள்ளே மன்னும், வெள்ளைச்செஞ் சடைக்கற் றை நெற்றிச் செங்கண் விமலரையு முடன்கண்ட விருப்பும்பொ ங்கிப், பள்ளத்தி லிழிபுனல்போற் பரந்து செல்லப் பைம்பொன் மலை வல்லிபரிந் தளித்த செம்பொன், வள்ளத்தில் ஞானவா ரமுது முண்டார் மகிழ்ந்தெழுந்து பலமுறையும் வணங்குகின் ருர்.

— திருஞானசம்பந்தமூர்த்திநாயஞர்புராணம், க0உ௫.

(76) அகண்டாகாரசச்சிதானந்த சிவத்தை அன்பினுள்ளே ஆக்கி என்றமையால், அச்சிவம் கண்டிக்கப்பட்ட பொருளாயிற் றே எனின், அது ஓர்போதும் ஆகாது; பெரிய பாற்சமுத்திரத் துட் கலசம் மொண்டுகொண்டிருந்தால், அப்பாற்சமுத்திரம் கண்டிக்கப்பட்டொழியாமைபோலாம். கலசக்கபாலமுள்ளவி டத்திற் பால் இல்லாதுபோயிற்றே எனக் குதர்க்கஞ் செய்யின், அது கூடாது; கடம் சடப்பொருளேயாக, அன்பு அங்ஙனம் ஜடமாகாமை எவர்க்கும் தெரிந்தவிஷயமேயாம்.

(77) கடல் எவ்வாறு ஓர் பக்கத்துத் துறையிலே ஸ்நானஞ் செய்தவர்களுக்கு அளவுபடாதவாறுபோல, பரம்பொருளும் தன்னை அடைந்தவர்களால் அளவு படுத்தப்படாது இருக்கும் என்பதாம். இது பற்றியே திருமூலநாயஞர்

(78) கண்டறி வாரில்லை காயத்தி னந்தியை
யெண்டிசை யோரு மிறைவனென் றேத்துவ
ரண்டங் கடந்த வளவிலா வானந்தத்
தொண்டர் முகந்த துறையறி யோமே.

— திருமந்திரம்.

என்று அருளிச்செய்தார்.

(79) அடிசார்ந் தவர்க்கு முடியா வின்ப
நிறையக் கொடுப்பினுங் குறையாச் செல்வ

— திருவிடைமருதூர்மும்மணிக்கோவை.

(80) எத்தனையோவண்டத்திருந்தவர்களெத்தனைபேர்
அத்தனைபேருண்டாலுமணுவுங்குறையாண்டி.
— அருட்புலம்பல்.

என்றும் அருளிச்செய்தார் பட்டினத்தடிகள். மெய்யன்புடையார் நாவிலே சிவம் தேன்போன்றும், அமுதுபோன்றும், நெல்லிக்கனி போன்றும், கருப்பஞ்சாறு போன்றும் ஊறிக்கொண்டிருக்கும்.

(உக) சிவானந்தமடைந்தோர்க்கு எய்தும் மெய்ப்பாடு.

(81) கண்டே விகார: ப்ரதமோ கத்கதாக்ய சரீரஜ:।
ஜிஹ்வாஸ்பந்தோ த்விதீயஸ்து ஸ்புரணஞ்சோஷ்டயோரபி।
கம்பநஞ்ச சரீரஸ்ய சதுர்த்தம் பக்திலக்ஷணம்।
ரோமாஞ்ச: பஞ்சமோ ஜ்ஞேய: ஷஷ்ட: ச்வேதோபிகீர்த்தி
ஸ்கலநம் ஸப்தமம் ஜ்ஞேயமஷ்டமம் பாஷ்பநிர்கம:। [த:।
ரோதநம் நவமம் சிஹ்நம் தசமம் பாரவச்யகம்।
ஏதாநி தச சிஹ்நாநி பக்தாந்யுக்தாநி சூலிந:॥
— ஸ்காந்த உபதேசகாண்டம்.

"கண்டம் விம்முதல், நாக்குத் துடித்தல், உதடுதுடித்தல், சரீரம் நடுங்குதல், உரோமஞ் சிலிர்த்தல், குறுவேர்வை கொள்ளல், நாக்குத் தழுதழுத்தல், ஆனந்தக்கண்ணீர் சொரிதல், வாய்விட்டழுதல், பரவசமாய்த் தன்னை அயர்த்தல் என்னும் பத்தும் அன்பர்களுக்குரிய மெய்ப்பாடுகளாம் (எனச் சிவபிரானால்) அருளிச்செய்யப்பட்டது."

(உஉ) பாவசம்.

(82) பரம பரானந்தம் பார்கிழ்மேன் மற்று
மரவம்வா ராதே யகலும்—புரணமா
யாங்கே யமிழ்ந்தி யவசமா மானந்த
நீங்கா ததுவாகி நில்.

— துகளறுபோதம்.

(83) ஒன்றுறுமதனலொருபொருளாகாநிரண்டினல்லேறுமாகாது, தொன்றுறுநிலையேநிலையதாய்ச்சேர்ந்து துன்னலுந்துன்னுருமையுமற், றன்றுமாணவத்தினமுந்தியாங்கறிவாயறிவினுளமுந்தியங்கறிவு, பொன்றியும்பொன்றாதவசமாயின்பப்புணரிவாய்மடுப்பதுபோகம்.

— தணிகைப்புராணம்.

"‡ பாடியறிவு பரவசமாம்பரிவுபற்றப்புறம்போந்து" எனவும், "§வீழ்ந்துபோற்றிப்பரவசமாய்விம்மியெழுந்துமெய்யன்பால்" எனவும் போதரும் பெரியபுராணத்திருச்செய்யுட் பாகங்களால் மெய்யன்பர்களுக்கு எய்தும் பரவசவியல்பு கூறப்பட்டது.

(உரு) துன்பக்கண்ணீர்.

(84) இளிவே யிழவே யசைவே வறுமையென
விளிவில் கொள்கை யழுகை நான்கே.

—பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல்.

(85) "பிறரால் இகழப்பட்டு எளியனாதலாகிய இழிவும், தந்தைதாய்முதலிய சுற்றத்தாரையும் இன்பம் துய்க்கும் நுகர்ச்சிமுதலியவற்றையும் இழத்தலும், பழைய நிலைமை கெட்டு வேறொருவாறாகி வருந்துதலாகிய அசைவும், பொருளில்லாமையாலாகிய வறுமையும் எனப் பொருள்பற்றி உண்டாகும் கவலை நான்காம். இந்தக்கவலையினால் அழுகைக்கண்ணீர் தோன்றும்; அழுகைக் கண்ணீர்போல உவகைக்கண்ணீர் வீழ்தலும் உண்டு. இதுவும் அழுகைக்கண்ணீருள் அடங்குவதேயாம்.

(உசு) ஞானம் அன்பே.

(86) ஞானமும் அன்பும் ஒன்றென்பாராய்ச் சேக்கிழார்பெருமான் "ஞானமீசன்பாலன்பேயென்றனர் ஞானமுண்டார்" (திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம், அசரு) என்று அருளிச்செய்தார்.

(உசு) முத்தியில் ஆணவமலகுணம் எய்தாவண்ணம் திருவருளாற் பரிகரித்தல் வேண்டுமென்பது.

(87) "அன்பேசிவமாயமர்ந்திருந்தாரே" எனவருமாற்றால், முத்தர்கள் தம்மிடத்துள்ள அன்பைத் தமது பொருளாய்க் கருதாது, சிவமே அன்பாய்க் குறித்து அன்பு செய்தல்வேண்டும்.

(மூலமலத்தின் காரியமாகிய) புகழ்வரவு பொருள்வரவு என்னும் * இருவினையும் மூலமலமும் நீங்கப்பெற்றுச் சிவன் காட்டியும் கண்டும் உபகரித்துவரும் பேருதவியை மறவாது கடைப்பி

---

‡ ஏயர்கோன்கலிக்காமநாயனார்புராணம், உ0ரு. § ஏயர் -184.

* "இருவினைப்பாசமும்மலக்கலார்த்தலின்" திருநாவுக்கரசுநாயனார் புராணம், கஉக. உயிர்ச்சார்பு பொருட்சார்பென்றும், அகப்பற்று புறப்பற்று என்றும், புகழ்வரவு பொருள்வரவு என்றும் பெயர்படைத்தது மூலமலத்தின் காரியமாகிய இருவினையேயாம்.

டித்து, இவ்வாறு கடைப்பிடித்தற்கு நிலைக்களமாய் எவ்விடமும் நிறைந்த மெய்யுணர்வினிடத்துத் தமது ஞானக்கிரியைகளை அடக்கி, இப்பேறு பெற்றேம் என்கிற கெர்ச்சிதமும் இன்பசத்தியாலாயதென்றறிந்து அம்மெய்ஞான நிறைவிலே ஒடுங்க, இன்பபூரணத்திற் சிவமேயாய்நிற்கும் பூரணநிலையில் விசாரமற்றிருக்க. அன்பே சிவம் என்று கொள்ளாது அந்த அன்பு நம்முடையது என்று கருதியவிடத்தும், இந்தப் பேறுபெற்றேம் என்கிற கர்ச்சிதம் உண்டாகுமிடத்தும் ஆணவமலசம்பந்தம் உளதாகும். அதனை மேலே கூறியவாறு பரிகரித்துக்கொள்க.

(உரு) சைவசித்தாந்தமுத்தி.

(88) தேஹபாதே சிதாநந்தம் சிவைகரஸதாம் வ்ரஜேத்।
சிவாநந்த மநுப்ராப்யாவிபாகாயகல்ப்யதே॥

"தேகம் நழுவும் காலத்திற் சிவத்தோடு ஆன்மாவும் சேர்ந்து ஒரே இரசமாகும்; சிவானந்தத்தை அடைந்து வேறுபடாதிருக்கின்றான்" என்று இரௌரவாகமம் கூறிற்று.

(89) செறிந்தசோலைகள்சூழ்ந்தநள்ளாற்றெஞ்
சிவனைநாவலூர்ச்சிங்கடிதந்தை
மறந்துநான்மற்றுநினைப்பதேதென்று
வனப்பகையப்பனூரன்வன்றெண்டன்
சிறந்தமாலைகளஞ்சினொடஞ்சுஞ்
சிந்தையுள்ளுருகிச்செப்பவல்லார்க்
கிறந்துபோக்கில்லைவரவில்லையாகி
யின்பவெள்ளத்துளிருப்பர்களினிதே.

— தேவாரம்.

அகஸ்த்யகுருப்யோநம:

திருச்சிற்றம்பலம்

# முடிவுரை

ஈழமண்டலத்தில் எழுந்தருளிய கலியுகவரதராகிய கதிர்காமசுவாமியைத் தரிசனஞ் செய்தற்குச் சென்றிருந்தமையும், முன்னர்க் கோவை செய்து வைத்திருந்த உபநிடதமந்திரங்களோடு இருக்காதி வேதமந்திரப் பிரமாணங்கள் சேர்க்கவேண்டி நேர்ந்தமையும், அங்கங்கே பிரமாணமந்திரங்களைக் கூட்டியும் மாற்றியும் சுத்தப்பிரதி செய்ய நேர்ந்தமையுமே இப்புஸ்தகம் விரைந்து அச்சிடப்படாமைக்குக் காரணமாம்.

அன்பு, தயை, பொறைமுதலிய சற்குண சம்பன்னராய், ஒழுக்கநெறியினின்று வழுவாதவராய், வித்துவசிரோமணியாய், நிருவாணதீக்ஷைபெற்றுச் சைவசித்தாந்த நூலுணர்ச்சியுடையோராய், சைவசமயத்துக்காக நூல்கள் இயற்றுபவராய், சிவபுண்ணியகைங்கரியங்களைச் செய்தும் செய்வித்தும் வருபவராயுள்ள காரைக்குடி (வன்றொண்டப்புலவர் மாணவகராய்த் திகழும்) மகா-ா-ா-ஸ்ரீ ராம. சோ. சோக்கலிங்கப்புலவரவர்கள், தலைச்சங்கத்திறைவராகிய அருட்சத்திசமேத சோக்கலிங்கப்புலவர் பசி வருத்தமுற்றிருந்த வன்றொண்டவருட்புலவர்க்காகத் திருக்கச்சூர் மனைதோறுஞ் சென்று அடிசிலும் கறியும் யாசித்து உதவியருளினாற்போல, இப்புஸ்தகத்தை அச்சிடுமாறு யாசித்துப் பொருளுபகரிப்பித்தமைக்கு அச்சொக்கலிங்கப்புலவரே திருவருள் பாலிப்பாராக.

திருப்பரங்குன்றம் }
25. 8. 1920 }

இங்ஙனம்,
ஸ்ரீகாசிவாசி – செந்திநாதையர்.

அ.

# பிழைதிருத்தம்.



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 24 | ஈசா, | ஈசா |
| 7 | 3 | யிராது. | யிராது |
| 8 | 9 | பரதத்து | பாதத்து |
| 152 | 28 | உளவாய. | உளவாய், |
| 193 | 17 | சர்வஞு | சர்வஞ்ஞு |
| 199 | 4 | பரப்ர | பரப்ர |
| 200 | 24 | வைத்திகீ | வைதிகீ |
| 221 | 30 | குண்ணா | குண்ணர் |
| 236 | 16 | தாது | தாது: |
| 248 | 9 | * வசிகரி | ‡ வசிகரி |
| ,, | 14 | அற்புதரும் | அற்புதரும், |
| 272 | 1 | வாத்த | வர்த்த |
| 283 | 24 | தாரனியம் | தாரணியம் |
| 350 | 19 | பதினொன்கு | பத்தினொன்கு |
| 351 | 29 | 83-ம் | 82-ம் |

உ

# விக்கிரய புஸ்தகம்

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| 1. | ஸ்ரீநீலகண்டசிவாசாரியரருளிய பிரஹ்மசூத்திர சைவபாஷ்யத் தமிழ் மொழிபெயர்ப்பு ... | 6 | 0 |
| 2. | சிவஞானபோதவசனாலங்காரதீபம் ... ... | 4 | 0 |
| 3. | தேவாரம் வேதசாரம் ... ... ... | 4 | 0 |
| 4. | வைதிகசுத்தாத்துவித சைவசித்தாந்த தத்துவப் படம் ... ... ... ... ... | 3 | 0 |
| 5. | வைதிகசுத்தாத்துவித சைவ சித்தாந்த தத்துவப் பட வினாவிடை ... ... ... ... | 1 | 0 |
| 6. | திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருடைய நன்மாமனா ராகிய சம்பந்தசரணாலயரருளிய தத்துவவிளக் கம் (மூலமும் உரையும்) ... ... ... | 1 | 4 |
| 7. | வச்சிரதண்டமுந் தாந்திரிகதுண்டகண்டனகண்ட னமும் ... ... ... ... ... | 0 | 8 |
| 8. | மகாவுக்கிரவீரபத்திராஸ்திரம் ... ... ... | 1 | 0 |
| 9. | சிவலிங்கமகத்துவம் ... ... ... ... | 0 | 4 |
| 10. | திருநீற்றினுண்மை ... ... ... ... | 0 | 4 |
| 11. | ஸ்ரீசீகாழிப்பெருவாழ்வின்சிவகாருண்ணியமாட்சி... | 0 | 4 |
| 12. | சைவவேதாந்தம் ... ... ... ... | | |

(இவற்றிற்குத் தபாற்சார்ஜ் வேறு)

இங்ஙனம்,

சிவசம்புநாதையர்,

திருப்பரங்குன்றம் போஸ்டு.

(மதுரைஜில்லா)